தமிழினத் தலைவர்
முத்தமிழ் அறிஞர் டாக்டர் கலைஞர்

# அணிந்துரை

"கவலையில்லாமல் தூங்கிக் கொண்டிருப்பவர்கள் எல்லாம் விழித்து எழுகிற வேளை வரும் வரை கண்ணுறக்கம் ஏது காவலனுக்கு?"

"தஞ்சையில் புலிக்கொடி பறந்த போது என் பூங்கொடி இந்த பூமியிலிருந்தே பறந்து போய்விட்டது."

"வானத்தின் அழுக்குச் சுவர் மீது வெளிச்சம் வெள்ளையடித்துக் கொண்டிருந்தது. விடியற் காலைப் பொழுதின் அழகு, இதயங்களைக் கொள்ளையடித்துக் கொண்டிருந்தது."

"ஒரு மலர் வண்டைத் தேடிப் போனது; இதழ்களை விரித்தது; வண்டை அழைத்தது..

பூ, போர்வையானது

குங்குமம் வியர்வையானது

வண்டு திண்டாடியது

மலர் கொண்டாடியது!"

"உயர்ந்த இடத்தில் இருப்பவர்களுக்குக் கற்பைப் பற்றிக் கவலையில்லை. எங்களிடமோ கவலைபடுவதற்கு கற்பைத் தவிர எதுவுமில்லை"

"தோற்றுப் போனவர்கள் தூக்கி வந்த கொடி போல் அவள் துவண்டாள். வெட்டுண்ட வாழைத் தண்டாகக் கட்டிலிலே விழுந்தாள்."

இந்த சொல்லோவியங்கள் கவிஞர் மேத்தா அவர்களின் 'மகுட நிலா' எனும் வரலாற்று புதினத்தில் பக்கத்துக்குப் பக்கம் ஒளிவிடும் வைரப்பதக்கங்கள்!

அணிந்துரைக்காக என்னிடம் தரப்பட்ட இந்த நூலை முழுவதும் படித்து முடித்த பிறகே இதனை எழுதுகிறேன். படிக்கத் தொடங்கியவுடன், படித்து முடிக்காமல் வேறு பணியில் நாட்டம் செல்லவில்லை.

"கி.பி. 250ல் சோழரைத் துரத்திவிட்டு, தொண்டை நாட்டையும் பிறகு சோழ நாட்டையும் கைப்பற்றிக் கொண்ட பல்லவர், ஏறத்தாழ 650 வருடம் தமிழ்நாட்டை ஆண்டனர். அதன் பிறகு அச்சோழ மரபினர் பல்லவரைப் பழிதீர்த்துக் கொண்டனர் என்பது வரலாறு கூறும் உண்மை ஆயிற்று. என்னே உலகப் பேரரசுகளின் தோற்றமும், மறைவும்!"

என டாக்டர் இராசமாணிக்கனார் அவர்கள் எழுதிய பல்லவர் வரலாறு எனும் நூலில் காணப்படும் செய்தியை அடிப்படையாக வைத்து, தஞ்சையையும்-காஞ்சியையும் நமக்குச் காட்சியாக்கி, அற்புதமான கதாபாத்திரங்களை நடமாடவிட்டு- விறுவிறுப்பான ஒரு சரித்திரக் கற்பனைக் கதையை 'மகுட நிலா' என வழங்கியுள்ளார், மேத்தா!

மேத்தாவின் கவிதை இன்பத்தை நான் பருகித் திளைத்திருக்கிறேன். விகடன் நடத்திய வரலாற்றுப் புதினங்களின் போட்டியில் நடுவர்களில் ஒருவராக இருந்து மேத்தா எழுதிய 'சோழ நிலா'வைத் தேர்ந்தெடுத்த பொழுது, புதினத்துக்காக அவர் மேற்கொண்ட பாணியை மெத்தவும் சுவைத்திருக்கிறேன்.

'மகுட நிலா' ஒவ்வொரு திருப்பமும் நம்மைத் திடுக்கிட வைக்கிறது.

ஆதித்தன்

சாருமதி

தாமரை

இந்த இளம் புறாக்கள் சிறகடிக்கும் 'மகுட நிலா'வில் விஜயாலயச் சோழனின் போராட்டம் நிறைந்த வாழ்வு- அதனை ஆசிரியர் சித்தரித்திருக்கும் முறை மகிழத்தக்கது.

"காதலோடும் கண்ணீரோடும்
வாழ்க்கை முடிந்துவிடுவதில்லை.
கடமைகள் காத்திருக்கின்றன.
பாதைகளும் காத்திருக்கின்றன
உன் பாதங்களுக்காக!"

என்ற விஜயாலயச் சோழனின் வீர வாசகங்களுடன் நிறைவுறும் இந்த வரலாற்றுக் கற்பனையில் ஆதித்தனின் கதாபாத்திரம் சற்று இடறுகிறது என்பதையும் சுட்டிக்காட்டாமல் இருக்க முடியவில்லை.

குதிரை வீரனாகத் தஞ்சை வீதியில் பறக்கும் போது குறுக்கே வந்து அவன் இதயத்தில் குடியேறிக் கொண்ட தாமரை! நள்ளிரவில் கோயிலில் கண்ட ஆணுடை பூண்ட வீரனைக் கட்டிப்பிடிக்கும் போது அது ஆணல்ல பெண் என உணர்ந்து அவன் நெஞ்சில் புகுந்து கொள்ளும் பல்லவ இளவரசி சாருமதி! இருவரையுமே அவன் விரும்புகிறான். இந்தப் பாத்திரம் இடறுகிறது என்பதைவிட, ஆண்மகனின் பாத்திரம் தானே- அதனால் இயல்பு என விட்டுவிடலாம் போலும்!

காதலர்களின் சந்திப்புகள்- களக் காட்சிகள்- எதிர்பாராத திருப்புமுனைகள்- நடந்த நிகழ்வுகளை நவீன யுக்தியுடன் எடுத்துச் சொல்லும் முறை- இவையனைத்தும் மகுட நிலாவுக்கு மகுடங்களாகவே திகழ்கின்றன!

தமிழின உணர்வும்

தன்மான உணர்வும்

தலைதூக்கி நின்றிட எழுதும் ஆற்றல் வாய்ந்தவர் மேத்தா! நடைமுறையிலும் அவ்வாறே! அதற்கு இந்த மகுட நிலாவும் ஓர் எடுத்துக்காட்டு! வாழ்க அவரது தமிழ்ப்பணி! தமிழர்பணி!

சென்னை
19.08.1990

அன்புள்ள
மு. கருணாநிதி

# நன்றி நவில்..!

நிலவினை வாழ்த்துமாறு சூரியனை வேண்டினேன். உதய சூரியன் உடனே ஒப்புக் கொண்டது.

பரபரப்பான தன் பணிகளுக்கிடையே என் வரலாற்றுப் புதினத்தைப் படித்துப் பாராட்டி அற்புதமான ஓர் அணிந்துரை வழங்கிய முத்தமிழ் அறிஞர் கலைஞருக்கு என் முதல் வணக்கம்.

என் இலக்கிய வாழ்க்கையில் ஓர் இனிய திருப்பத்தை ஏற்படுத்தியது ஆனந்தவிகடன்.

'சோழ நிலா'வைச் சூடிக்கொண்ட விகடன், இந்த 'மகுட நிலா'வையும் தன் தலைமீது தரித்துக் கொண்டது.

அன்று தொட்டு இன்று வரை என் எழுத்தின் மீது அன்பும், அக்கறையும் காட்டி வரும் ஆனந்த விகடன் ஆசிரியர் திரு. எஸ். பாலசுப்பிரமணியம் அவர்களுக்கும், விகடன் ஆசிரியர் குழுவினருக்கும் என் இதயங்கனிந்த நன்றி.

மகுட நிலா விகடனில் தொடர்கதையாய் வெளிவந்து கொண்டிருந்த போது, தொலைபேசியில் வாரந்தோறும் வார்த்தை நீர் ஊற்றி இந்தப் புதினத்தை வளர்த்து வந்தவர் என் அன்புச் சகோதரர் மாவட்ட வருவாய் அலுவலர் திரு. வ.வை. மூர்த்தி.

நூலகங்களில் மூழ்கி இந்த வரலாற்றுப் புதினத்திற்கான ஆதாரப் புதையல்களையும் சரித்திரக் குறிப்புகளையும் எட்டாண்டுகட்கு முன்னரே எழுதிக் கொடுத்த, இந்த நாவலின் 'நதி மூலம்' பேராசிரியை டாக்டர். திருமதி. பொன்முடிச் சுடரொளி அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

மாறுவேடத்தில் வந்த சடையப்ப வள்ளலாய் என் மனதில் மலர்ந்த நண்பர் கோ. இருசன். எனக்கு விருப்பமான இந்த வேலூர்க் கவிஞருடன், அண்ணன் சோலைநாதன், திரைப்பட இயக்குநர் பெருமாள், சார்பதிவாளர் மாணிக்கம், தம்பி உமாகாந்த் ஆகியோர் என் எழுத்துப் பணிக்காகச் செய்த உதவிகளை எப்படிப் பாராட்டுவது?

வாரம் தவறாது ஓர் அஞ்சல் அட்டை என் வாயிலில் வந்து விழும். என் கண்கள் அதைத் தொழும். அது கடலூரிலிருந்து வரும் மடல். எழுதுபவர் திரு. ஆர்.வேலுமணி.

'மகுட நிலா' வெளிவந்த விகடனின் முதல் இதழைப் படித்த உடனே ஆனந்தப் பேருவகையோடு அமெரிக்காவிலிருந்து பாராட்டி எழுதியவர் நாமக்கல் கவிஞரின் அன்பு மகன் திரு. இரா. பாலு அவர்கள்.

அறிவிப்பு வெளிவந்த நாளிலிருந்தே பல்வேறு ஊர்களிலிருந்தும், நாடுகளிலிருந்தும் நடந்த கடிதப் படையெடுப்பு – ஆயிரக்கணக்கான ரசிகர்கள், ரசிகைகளின் அன்பினைக் கூறுவதற்கு வார்த்தைகளைத் தேட முயன்றால் எனக்கு வயதாகிப் போய்விடும்!

ஒவியங்கள் எவ்வாறு வரவேண்டும் என்பது உட்பட ஆலோசனை கூறியவர் என் நண்பர், திரைப்பட இயக்குநர் மனோபாலா.

'மகுட நிலா'வை நான் எழுதத் தொடங்குகிறேன் என்று கூறியவுடன், என் தாள்களைக் கையில் தழுவிக் கொண்டு என் முயற்சி வெற்றி பெற வேண்டுமென்று மனதார வாழ்த்தி மகிழ்ந்தவர் ஒருவர்.

அவர்– இராஜராஜ சோழன் போல் தேனிசையால் நாடெங்கும் திக்விஜயம் செய்பவர்!

அவர்தான் 'இசைஞானி' இளையராஜா!

என் இதயங்கனிந்த நன்றியினை இவர்களுக்கெல்லாம் பாச உணர்வோடு நான் படையலாக்குகிறேன்.

சென்னை, அன்புடன்,
5.9.1990 மு. மேத்தா

## மு. மேத்தாவின்

# முன்னுரை

பேரன்பு கொண்டோரே!

வணக்கம்.

'சோழ நிலாவுக்குப் பிறகு ஏன் வரலாற்றுத் தொடர்கதை எழுதவில்லை?' என்ற முனை மழுங்காத கேள்விகளால் இவ்வளவு காலமும் நான் முற்றுகையிடப்பட்டேன்.

எல்லாரும் விசாரித்தது இருக்கட்டும். இடையிடையே என்னை நானே விசாரித்துக் கொண்டேன்!

அந்த விசாரணையின் தீர்ப்பைத்தான் இப்போது உங்களிடம் தெரிவிக்கிறேன்.

சங்க காலம் முடிந்த பின்— சோழ கோபுரங்கள் சரிந்தன. அவர்களுடைய சாம்ராஜ்யக் கனவுகள் தகர்ந்தன!

ஆட்சியும் அதிகாரமும் இல்லாமல் அவர்கள் அடக்கப்பட்டார்கள்.

தங்களுக்கென்றொரு நாடு இல்லாமல் நலிவடைந்தார்கள். எவரெவருக்கோ ஏவல் கேட்கும் இழிநிலையை எண்ணி ஏங்கிக் கொண்டிருந்தது அந்த இனம்!

எத்தகைய கொடிய இருட்டையும் கிழக்கின் உறைவாள் கிழிக்காமல் விட்டதில்லை.

இருண்ட கண்டமாய் இருந்த இனத்துக்கு வெகு தொலைவில் ஒரு வெளிச்சம் தெரிந்தது.

அந்த வெளிச்சத்தின் பெயர்தான் — விஜயாலயன்!

அவன்தான்—

பிற்காலச் சோழர்களின் பெருவாழ்வுக்குத் தன்னை விதையாக்கிக் கொண்ட வீர நாயகன்.

தாழ்ந்து கிடந்த தன் குலத்தைத் தலை நிமிரச் செய்வதற்காக—

தன் மேனியை விழுப்புண்கள் வாழும் வீடாக்கிக் கொண்டவன்.

தன் இதயத்தை இலட்சியப் பறவைகள் வாழும் கூடாக்கிக் கொண்டவன்!

பல்லவர் ஒருபுறம் பயமுறுத்த—

பாண்டியர் ஒருபுறம் அச்சுறுத்த—

அவன் தன் வாழ்வையே அர்ப்பணித்துக் கொண்டான் – சோழர் குலத்தை நிலை நிறுத்த!

அவன் பட்ட காயங்களெல்லாம்— சோழர் குலத்தின் கௌரவங்களாயின.

அதோ, மேனியெல்லாம் விழுப்புண் தாங்கித் தன் இனத்தை மேன்மைப்படுத்திய வீராதி வீரன் விஜயாலயனின் மகன் ஆதித்தன், ஒரு வெள்ளைப் புரவியில் ஏறி வீதி உலா வருகிறான்! அவனைப் பின்தொடர்ந்து வருமாறு அன்புடன் உங்களை அழைக்கிறேன்.

தேர், குதிரை, பல்லக்கு எதுவுமே இல்லை என்று திகைக்கிறீர்களா?

ஆனந்த விகடன்தான் எல்லா இடத்திலும் கிடைக்குமே!

என்றும் உங்கள்

மு. மேத்தா

(2.7.1989 விகடனில் வெளிவந்த முன்னுரை)

# பதிப்புரை

மகுட நிலா..

சோழ நிலாவைத் தொடர்ந்து கவிஞர் மு. மேத்தா அவர்கள் ஆனந்த விகடனில் எழுதிய அருமையான வரலாற்றுப் புதினம்.

விஜயாலயன் என்னும் வீரமறவனின் வீரத்தைப் பறைசாற்றும் நாவல்.

சோழ சாம்ராஜ்யத்தை மறுபடியும் உருவாக்க தன்னந்தனியனாக சிறு படையுடன் மன உறுதியோடு முத்தரையரை எதிர்த்து வெற்றி பெற்று தஞ்சையில் புலிக் கொடியைப் பறக்கவிட்ட பேரரசன் விஜயாலயன்.

தந்தைக்கு வீரத்தில் எந்தவிதத்திலும் சளைக்காத தனயனாய் ஆதித்தன் விளங்குகிறான். இருப்பினும் அவனது அவசர புத்தி— காதலித்த நங்கையைக் கைப்பிடிக்க இயலாமல் செய்துவிடுகிறது.

42 அத்தியாயங்கள், ஆதாரபூர்வமான சரித்திரக் குறிப்புகள்!

ஆசிரியருடைய கவிநயமிக்க நடை 'மகுட நிலா'வுக்கு மகுடமாய் விளங்குகிறது.

அற்புதமான சரித்திர நாவலை கவிதா பப்ளிகேஷன் வெளியிட வாய்ப்பளித்த கவிஞர் மு.மேத்தா அவர்களுக்கு இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சேது. சொக்கலிங்கம்
கவிதா பப்ளிகேஷன்.




# தெருவில் ஒரு தேவதை

வெளிச்சம் வேக வேகமாக வந்து கொண்டிருந்தது. கதிரவனின் நெடிய கரங்கள், தம் பட்டு விரல்களால் உலகத்தைத் தொட்டுத் துயிலெழுப்பிக் கொண்டிருந்தன.

வானச் சுவடியில் வைகறைக் கவிதையை யாரோ வரைந்து கொண்டிருந்தார்கள். இயற்கை என்னும் நல்லாள் சூரியக் கிண்ணத்திலிருந்து சுடர்ப்பொடியை அள்ளி உலகமெங்கும் ஒளிக்கோலம் போட்டுக் கொண்டிருந்தாள்.

தஞ்சை நகரம் ஒரு திருமணப் பெண்ணைப் போலத் தன்னைச் சிங்காரித்துக் கொண்டிருந்தது.

ஒரு கல்யாண வீட்டின் கலகலப்புடன் கூடிய காட்சிகளையெல்லாம் வழிநெடுகிலும் கண்டு கொண்டே தன் புரவியைச் செலுத்திக் கொண்டிருந்தான் ஆதித்தன். அவனுடைய இதயச் சோலையில் மகிழ்ச்சிப் பூக்கள் மலர்ந்து கொண்டிருந்தன.

வெற்றி மேல் வெற்றியைத் தந்து கொண்டிருந்த வீரமாகாளிக்கு விழா!

ஒடுங்கிக் கிடந்த சோழர் குலத்தின் உதயத்தைப் பாருக்கெல்லாம் பறைசாற்றும் விழா!

ஐந்தாறு நாட்களுக்கு முன்பிருந்தே அலங்காரம் ஆரம்பமாகிவிட்டது. வெளியூர்களிலிருந்தெல்லாம் கூட்டங் கூட்டமாய் மக்கள் வந்து குவியத் தொடங்கிவிட்டனர்.

படை வீரர்கள் வாளும் வேலும் பளபளக்க, ஊரின் வீதிகளில் உற்சாகத்தோடு உலவிக் கொண்டிருந்தார்கள்.

தஞ்சைக் கோட்டையின் கிழக்கு வாயிலில் திருவிழா தேவியாகிய உக்கிரமா காளிக்குக் கட்டி முடிக்கப்பட்டிருந்த கோயிலில், சிற்பிகள் இறுதி ஒப்பனை செய்து கொண்டிருந்தார்கள்.

ஆதித்தனுடைய உள்ளத்துக்குள் ஆயிரம் பறவைகள் சிறகடித்தன. நெஞ்சம் மலை போல் நிமிர்ந்திருந்தது. அவன் அமர்ந்து செலுத்திய குதிரைகூடச் சற்றே பெருமிதத்தோடு தலையைத் தூக்கிக் கொண்டே ஓடியது.

இளவரசன் வருகிறான் என்று தெரிந்துவிட்டால்— மக்கள் கூட்டத்தின் மகிழ்ச்சியைக் கட்டுப்படுத்த முடியாது என்பதனால் ஆதித்தன் தன்னை ஒரு சாதாரணப் படை வீரனின் உடைக்குள் மறைத்துக் கொண்டிருந்தான்.

தங்களுடைய இளவரசன்தான் தங்களைத் தாண்டிச் செல்கின்றான் என்பதைச் சற்றும் அறியாமல், இயல்பான பணிகளில் தஞ்சை மக்கள் ஈடுபட்டிருந்தனர்.

அவன்தான் ஆதித்தன் என்பதை அறிந்து கொள்ளாமல் பொது மக்களில் சிலர் "அரசரும் இளவரசரும் கிழக்குக் கோட்டை வாயிலுக்கு இப்போது செல்வார்களா அய்யா?" என்று அவனிடமே விசாரித்த போது, "அரசர் வருவதாகத் தகவல் இல்லை. இளவரசர் இந்த வழியே போய்க் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன்" என்றான்.

"இந்த வழியாகப் போகிறாரா? நாங்கள் பார்க்கவில்லையே!" என்று வியப்படைந்த மக்களிடம், "உங்கள் பார்வையில் படாமல் போயிருப்பார்.." என்றான் ஆதித்தன்.

இளம் வயதினனாகக் காணப்பட்ட ஒருவன் ஆதித்தனிடம் கேட்டான்: "அப்படியானால் எங்களுடைய பார்வை சரியில்லை என்று சொல்கிறீர்களா?"

"இல்லை.. உங்கள் இளவரசர் மிகவும் சாமர்த்தியசாலி என்று சொல்கிறேன்!"

இளைஞனுக்குப் பக்கத்திலிருந்த பெரியவர் ஒருவர் கூறினார்: "அதிலென்ன ஐயம்! வரிப்புலிக்கு வண்ணம் பூசவா வேண்டும்?

எங்கள் விஜயாலயத் தேவருடைய சாமர்த்தியம் ஆதித்தருக்கும் இருக்கத்தானே செய்யும்!"

அவரைத் தொடர்ந்து அருகிலிருந்த இளைஞன் பேசினான்:

"விஜயாலயர் இல்லாவிட்டால் உறையூரிலும், பழையாறையிலும், குடந்தையிலுமாகச் சிதறிக்கிடந்த நமக்காக இப்படிப்பட்ட ஆற்றல் மிகுந்த ஆட்சியை அமைத்திருக்க இயலுமா? முத்தரையர்களிடமிருந்த இந்த தஞ்சை நகரைக் கைப்பற்றித் தலைநகராக ஆக்கியிருக்கத்தான் முடியுமா?"

"ஆமாம்.. தலைமறைவாய்த் திரிந்த சோழர்களுக்கு ஒரு தலைநகரத்தையே தந்தவராயிற்றே..?" என்று ஆமோதித்தார் இன்னொருவர்.

இந்த வார்த்தைகளைக் கேட்டு இளநகை சிந்திய ஆதித்தன், "ஓகோ! 'தலை'நகரம் என்பதால்தான் இதை இப்படிச் சீவிச் சிங்காரித்துக் கொண்டிருக்கிறீர்களோ?" என்றான்.

அவனுடைய பேச்சு அங்கிருந்த அனைவரிடமும் சிரிப்பலைகளைக் கிளப்பியது. உற்சாகத்தை அவர்களிடம் உண்டாக்கிவிட்டுத் தன் குதிரையை ஓடவிட்டான் ஆதித்தன்.

புலர்ந்த பொழுதின் சுகந்த நறுமணம் பூமியை மயக்கிக் கொண்டிருந்தது! சின்னச் சின்னச் சிறகுகளைச் சேர்த்து அடித்துக் கொண்டு, வைகறைக்கும் சூரிய குலத்தைச் சேர்ந்த சோழர்களின் வெற்றிகளுக்கும் வானத்துப் பறவைகள் வரவேற்புக் கொடுத்துக் கொண்டிருந்தன.

கிழக்கே ஒரு நெருப்புப் பிழம்பாய்த் தெரிந்து கொண்டிருந்த சூரியனை அவன் நிமிர்ந்து நோக்கினான். ஆகாயத்தின் மேனியில் ஏற்பட்ட காயத்தைப் போல் அது காட்சியளித்தது.

தன்னுடைய தந்தையின் உடம்பில் இப்படி எத்தனை காயங்கள்!

ஒவ்வொன்றும் போர்க்களத்தில் பெற்ற புகழ்ப் புண்கள்.

முத்தரையர்களோடும் பாண்டியர்களோடும் மோதி மோதிப் பெற்றுக் கொண்ட வெற்றி முத்திரைகள்!

தன் தந்தையின் உடம்பில் தெரிவதெல்லாம் புண்களல்ல— கண்கள்! புகழின் கண்கள்! ஆயிரங்காலத்துச் சோழர் குலத்தின்

மகோன்னதமான பேரரசை அந்தக் கண்களின் வழியாகத்தான் உலகம் காணப் போகிறது!

புரவி திடீரென்று உற்சாகமாக ஓடத் தொடங்கியதைக் கவனித்த ஆதித்தன், தான் கொல்லர்களுடைய தெருவில் போய்க் கொண்டிருப்பதை உணர்ந்தான்.

வாள்களும், வேல்களும் அடித்து உருவாக்கப்படும் ஓசையும், தீட்டிக் கூர்மைப்படுத்தப்படும் சத்தமும் தன் குதிரைக்கு உற்சாகம் தந்திருப்பதை உணர்ந்து கொண்டான்.

வீரர்களுக்கு மட்டுமல்ல— தஞ்சை அரண்மனையைச் சேர்ந்த குதிரைகளுக்குக்கூடச் சண்டை என்றால் கொண்டாட்டம்தான்!

கொல்லன் ஒருவனின் வீட்டின் முன் தனது குதிரையை நிறுத்திவிட்டு இறங்கிய ஆதித்தன் உள்ளே நுழைந்தான்.

வீட்டின் பின்புறமிருந்த உலைக்களத்தில் துருத்தியை கையில் அழுத்திக் கொண்டே, கனிந்திருந்த நெருப்பில் ஒரு நீண்ட வாளை உருக்கிக் கொண்டிருந்த கொல்லன், ஆதித்தனை யாரென்று அறியாமல் நிமிர்ந்து பார்த்தான். அருகே சென்ற ஆதித்தன், அவனிடம் பேசத் தொடங்கிய போது, வெளியே நின்று கொண்டிருந்த அவனது குதிரை ஏதோ வித்தியாசமாகக் கனைப்பதைக் கேட்டான்.

கொல்லனிடம் எதுவும் சொல்லாமலே விருட்டென்று திரும்பி வாயிலுக்கு வந்தான்.

அங்கே அவனுக்காக ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. வெளியே நிறுத்திவிட்டு வந்திருந்த அவனுடைய குதிரை வேக வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. அதன் முதுகில் அமர்ந்து அதைச் செலுத்திச் செல்பவன் யாரென்று ஆதித்தனால் அறிந்து கொள்ள முடியவில்லை.

பரபரப்புடன் திரும்பிய ஆதித்தனின் பார்வையில் அந்தச் சிறிய ஓலை நறுக்குத் தென்பட்டது. அவனுடைய குதிரை நின்றிருந்த இடத்தில் குத்திட்டு நின்ற அம்பு ஒன்றில் அந்த ஓலை நறுக்குக் கட்டப்பட்டிருந்தது. தரையில் ஊன்றியிருந்த அம்பை உருவி, ஓலை நறுக்கை எடுத்துப் படித்துப் பார்த்த அவனுடைய விழிகள் சினத்தால் சிவந்தன.

இந்தச் சவால் எங்கிருந்து வருகிறது? இந்த அம்பை ஏவிவிட்டவர் எவர்?

எத்தனை துணிச்சலிருந்தால்— அவர்கள் இத்தகைய அறைகூவல்விடுத்திருப்பார்கள்..?

'வெற்றிக் கொண்டாட்டம் நடத்தும் விஜயாலயன் மகனே! இன்று உன் குதிரையில் வேறொருவன். நாளை உன் சிம்மாசனத்தில்..?' என்று வினாக்குறியோடு அந்த ஓலை முடிந்திருந்தது

ஆத்திரம் பொங்கிவர, கோபம் கொப்பளிக்க அந்த ஓலையை மீண்டும் ஒருமுறை வாசித்து முடித்த ஆதித்தன், அம்பைத் தொலைவில் வீசி எறிந்துவிட்டுத் திரும்பிப் பார்த்த போது அவனுடைய குதிரையை அபகரித்துக் கொண்டு சென்றவன் வெகுதொலைவில் விரைந்து கொண்டிருந்தான்!

பரபரப்புடன் இருபுறமும் பார்த்தவன், அருகில் வந்து கொண்டிருந்த குதிரை வீரன் ஒருவனைக் கைதட்டி அழைத்தான். தன்னை அழைப்பவன் இளவரசன்தான் என்று அறிந்து கொள்ளாத படைவீரன் மிகவும் அலட்சியமாக "என்ன?" என்றான்.

"அவசரம்! உன் குதிரையைக் கொஞ்சம் கொடு. சீக்கிரம் இதே இடத்தில் கொண்டு வந்து சேர்த்துவிடுகிறேன்."

"எனக்கு அரண்மனை வேலை இருக்கிறது. அதோ அதில் போய் நீ ஏறிக்கொள்."

அவன் சுட்டிக்காட்டிய திசையை ஆதித்தன் பார்த்த போது அங்கே ஒரு கழுதை வந்து கொண்டிருந்தது.

சிரித்துக் கொண்டிருந்த வீரனுடைய முதுகில் தடாலென்று ஓர் அடி விழுந்தது. கண்ணிமைப் பொழுதில் அவன் தரையில் உருண்டான். குதிரையின் மீது தாவி அமர்ந்து கொண்ட ஆதித்தன், வலது காலால் அதன் வயிற்றுப் பகுதியில் ஓர் உதைவிட்டான். அடுத்த நொடியில் அந்தக் குதிரை பாய்ந்து பறந்தது!

கீழே விழுந்த வீரனுடைய கதி என்ன என்று திரும்பிப் பார்க்கக்கூட நேரமில்லாத ஆதித்தன், முன்னே ஓடிக் கொண்டிருந்த புரவியைப் பிடித்துவிடுவதில் முனைப்பாய் இருந்தான். வீதியில் கூடியிருந்த மக்கள் கூட்டம் அவனுடைய குதிரை வரும் வேகத்தைப் பார்த்து மிரண்டது; விலகிக் கொண்டது!

நான்கு கால் பாய்ச்சலில் காற்றைக் கிழித்துச் சீறிக் கொண்டு சென்ற அந்தப் புரவி, கிழக்கு வீதியின் கோடியில்— முன்னே சென்று

கொண்டிருந்த புரவியை ஏறக்குறைய நெருங்கிவிட்ட நிலையில் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது.

"நில்லு! நில்லு!" என்று கத்தியபடி ஒரு பெண் ஓடி வந்து கொண்டிருந்தாள். குறுகுறு நடந்து சிறுகை நீட்டிய வண்ணம் குழந்தையொன்று அவளுடைய கைகளில் அகப்படாமல் வீதியின் குறுக்கே ஓடி வந்து கொண்டிருந்தது. பாய்ந்து வந்து கொண்டிருந்த குதிரை, பால் மணம் மாறாத அந்தப் பச்சைக் குழந்தையின் பக்கத்தில் வந்துவிட்டது. கொஞ்சம் நகர்ந்தாலும் குதிரையின் காலடியில் குழந்தை மிதிபடக்கூடிய அபாயத்தை உணர்ந்தான் ஆதித்தன்.

"ஆ..!" என்று அந்தப் பெண் அலறினாள்.

சட்டென்று லகானைச் சுண்டியிழுத்துக் குதிரையின் முதுகில் ஒரு தட்டுத் தட்டினான் ஆதித்தன். குழந்தையின் மீது மோதிவிடாதபடி முன்னங்கால்கள் இரண்டையும் டக்கென்று மேலே தூக்கி அரைவட்டமாகத் திரும்பி நின்று உடலைச் சிலிர்த்துக் கொண்டது புரவி. குழந்தையைத் தூக்கி அணைத்துக் கொண்டாள் அந்தக் கோதை! ஆதித்தன் புரவியிலிருந்து கீழே குதித்தான்.

இந்தக் கலவரத்தில்— தான் துரத்திக் கொண்டு வந்த குதிரை தொலை தூரத்தில் சென்று மறைந்துவிட்டிருப்பதையும், அங்கே ஒரு புழுதிப்படலம் மட்டும் தெரிந்து கொண்டிருப்பதையும் கண்டான் ஆதித்தன்.

"அரண்மனை வீரர்களென்றால் கேள்வி முறை கிடையாதா? நகர வீதியில் இவ்வளவு வேகமாக வரக்கூடாதல்லவா? கொஞ்சம் தவறியிருந்தால் குழந்தை என்ன ஆகியிருக்கும்?" என்று அந்தப் பெண் கோபமாகக் கேட்டாள்.

நீலமலர் போன்ற அவளுடைய விழிகள் சுட்டெரித்துவிடுவது போல அவனைச் சூடாகப் பார்த்தன.

ஓடி வந்த பரபரப்பில் அவள் மூச்சு வாங்கிக் கொண்டிருந்தாள். எழும்பித் தணிந்து கொண்டிருந்த அவளுடைய இளமையின் நன்கொடைகள் ஏராளமான கற்பனைகளுக்கு இடமளிப்பதாய் இருந்தன.

மோகத்தைக் கிளறிவிடக் கூடிய அந்த வாலிப நங்கை அவனை முறைத்துக் கொண்டிருந்தாள். ஏற்கெனவே அழகின் இலக்கணமாய்

விளங்கிய அவளுக்குச் சினம் மேலும் அழகினைச் சேர்த்திருப்பது போல் தோன்றியது.

அந்த அழகிக்கு மறுமொழி சொல்லத் தொடங்கினான் ஆதித்தன்.

"மன்னித்துக் கொள் பெண்ணே! நம்முடைய நகரில் ஒற்றன் ஒருவன் உட்புகுந்து கோட்டைக் காவற்படையைச் சேர்ந்த குதிரையைத் திருடிக் கொண்டு போய்விட்டான். அவனைத் துரத்திக் கொண்டு வந்தேன். அதனால்தான்.." என்று அவளிடம் மன்னிப்புக் கேட்கிற தோரணையில் தலையைச் சற்றே தாழ்த்தினான்.

அவனுடைய பணிவான நடவடிக்கை மங்கையின் மனத்தில் நல்ல மாறுதலை ஏற்படுத்தியது.

அவளுடைய சீற்றம் குறைந்தது. "அடடா! உங்களைத் தடுத்துத் தாமதிக்க வைத்துவிட்டேனே.. உடனே புறப்படுங்கள்" என்றாள்.

"இனிமேல் புறப்பட்டுப் போய் எந்தப் பயனுமில்லை. சந்தடியில் தப்பிவிட்டான் சதிகாரன்" என்று கூறிக் குழந்தையின் கன்னத்தைத் தட்டிக் கொடுத்தான் ஆதித்தன்.

"என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். நான்தான் காரணம்" என்று வருந்தினாள் அந்த வனிதை.

"பரவாயில்லை.. எப்படியும் உச்சிப் பொழுதுக்குள் அவனைப் பிடித்து உள்ளே தள்ளிவிடுவோம்" என்று கூறிய ஆதித்தன், அதற்குள் அங்கு கூடிவிட்ட கூட்டத்தைப் பார்த்து, "ஐயா, தயவுசெய்து கலைந்து செல்லுங்கள்" என்று வேண்டினான்.

கூட்டம் கலையத் தொடங்கியது. ஒரு பெரியவர் கூறினார்: "என்னமோ தம்பி, கொஞ்ச நாட்களாகவே தஞ்சையில் குழப்பமாக இருக்கிறது. காளிக்குக் கோயில் கட்ட ஆரம்பித்ததிலிருந்தே இப்படிக் கலவரங்கள்.."

"உண்மைதான்! வீராதி வீரர் விஜயாலயச் சோழர் ஆட்சியில் கூட இப்படிச் சில விபரீதங்கள்.. தஞ்சைக் கோட்டைக்குள் நடமாடுகிற எல்லோரையும் நம்பிவிட முடியவில்லை" என்று சொல்லிக் கொண்டே ஆதித்தனை உற்றுப் பார்த்தபடி நகர்ந்தார் ஒருவர்.

"பெரியதேவர் பல்லவர்களுடன் அளவுக்கு மீறி உறவாடுவதைப் பார்த்தால் பயமாக இருக்கிறது" என்று ஆதித்தனிடமே கூறிவிட்டுப் போனான் ஓர் இளைஞன்.

அந்த இளைஞனுடைய வார்த்தைகளைக் கேட்டுச் சிந்தனை வயப்பட்ட ஆதித்தனின் கவனத்தை அவளுடைய குரல் தன் பக்கம் திருப்பியது.

"பார்த்தீர்களா, பொதுமக்கள் புழுங்குவதை?" என்று அவள் கேட்கவே,

"ஆமாம்.. சோழ நாட்டுக் குடிமக்கள் கொஞ்சம் சோர்ந்து போயிருப்பது உண்மைதான்! பல்லவர்களை நல்லவர்கள் என்று அவர்கள் நம்பவில்லை" என்று குரலைத் தணித்தபடி கூறினான் ஆதித்தன்.

குழந்தையை இறக்கிக் கீழே நிறுத்தி ஒரு கையில் பிடித்துக் கொண்டு அவள் சொன்னாள்:

"இளவரசரைப் பார்த்தால் சொல்லுங்கள்– பல்லவர்களுடன் நட்புக் கொள்வது நெருப்பை மடியில் கட்டிக் கொள்வது மாதிரி என்று."

"கட்டாயம் சொல்கிறேன். அதற்கு முன் நீயும் ஒன்று சொல்ல வேண்டுமே."

தன் கையைப் பிடித்து இழுத்த குழந்தையை "இருடா.." என்று அடக்கிவிட்டு, "நான் என்ன சொல்ல வேண்டும்? எனக்குத்தான் இளவரசரைத் தெரியாதே" என்றாள் அவள்.

"தெரிந்து கொண்டதாகவே நினைத்துக் கொள்ளலாம்.." என்று இழுத்த ஆதித்தன், "இப்போது!" என்று முடித்தான்.

"அதெப்படி தெரியாதவரைத் தெரிந்தவராக நினைத்துக் கொள்ள முடியும்? நான் ஓர் ஏழைப் பெண். இளவரசரைத் தெரிந்திருக்க முடியுமா?" என்று சிரித்தாள் அவள்.

ஆதித்தன் அவளுடைய அப்பாவித்தனத்தை ரசித்தபடி, "ஏன் முடியாது? அவரென்ன அந்தரத்திலிருந்து வந்து குதித்தவரா? இந்திர லோகத்திலிருந்து இறங்கியவரா? நம்மைப் போலத் தரையில் தவழ்ந்து வளர்ந்தவர்தானே.." என்றான்.

"ஐயா.. பெரிய இடத்துச் செய்திகளில் தகுதியை மீறித் தலைநீட்டக் கூடாது என்று என் தாத்தா சொல்வார். நல்லது. குதிரை மோதிவிடாமல் குழந்தையைக் காப்பாற்றியதற்கு நன்றி! நான் புறப்படுகிறேன்" என்று திரும்பி நடந்தாள்.

“சொல்லாமல் போகிறாயே..”

“எதை?”

“உன் பெயரை!”

“உங்களிடம் எதற்காகச் சொல்ல வேண்டும்?”

“கூப்பிடுவதற்குத்தான்.”

“நீங்கள் என்னைக் கூப்பிட வேண்டிய அவசியமே வராது..” என்று கூறிவிட்டு அவள் நடக்கத் தொடங்கினாள்.

“கொஞ்சம் நிற்கக்கூடாதா..?” என்றான், ஆதித்தன்.

நின்றாள்.

“பெயரைச் சொல்லத்தான் விருப்பமில்லை. வேறொரு செய்தியையாவது சொல்லிவிட்டுச் செல்லலாமே” என்று வேண்டிக் கொண்ட ஆதித்தனை அவள் திரும்பிப் பார்த்தாள்.

“இந்தக் குழந்தை உன்னுடைய குழந்தையல்ல என்று நினைக்கிறேன்.”

“ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?”

“நீயே ஒரு குழந்தை மாதிரி இருப்பதனால்.”

கலகலவென்று அவள் சிரித்துவிட்டாள்.

அவள் சிரித்து முடிப்பதற்கும், டக்டக்கென்று குதிரைகளின் குளம்படிச் சத்தம் பின்புறமிருந்து கேட்பதற்கும் சரியாக இருந்தது.

ஆதித்தன் திரும்பிப் பார்த்தான்.

“அதோ, அவன்தான்!”

“விடாதே, பிடி!”

“குதிரையைத் திருடிக் கொண்டு ஓடுகிறான். பிடித்து நிறுத்துங்கள்!”

“திருடன்! திருடன்!” என்று பலவிதமாகக் கூக்குரலிட்டபடி குதிரைகளில் வந்து கொண்டிருந்தார்கள் வீரர்கள்.

கலைந்து சென்றிருந்த மக்கள், அவர்களுடைய அலறலைக் கேட்டு ஆதித்தனைத் திரும்பிப் பார்த்தார்கள்.

சிரித்துக் கொண்டிருந்த அந்த அழகி சிரிப்பை நிறுத்தினாள். "இதென்ன?" என்று திகைப்புடன் கேட்டாள்.

"வேறொன்றுமில்லை. ஒரு விளையாட்டு!" என்றபடி தடாரென்று குதிரையின் மீது தாவியமர்ந்த ஆதித்தன், "மறுபடி சந்திக்கிறேன்" என்று அந்தப் பொற்சிலையைப் பார்த்துப் புன்னகை செய்துவிட்டு வேகமாகக் குதிரையை விரட்டினான்.

வீரர்கள் அவனை விரட்டிக் கொண்டு சென்றார்கள்.

புரவிகள் கிளப்பிச் சென்ற புழுதிப் படலத்தை வெறித்து நோக்கியபடி நின்றிருந்தாள் அந்தப் பூங்கொடி!









2



# வீர விழா

சூரியனின் பொற்கரங்கள் தொட்டு விளையாடியதால் அரண்மனை கோபுரம் ஜொலித்துக் கொண்டிருந்தது. மாவீரன் விஜயாலயனின் ஆட்சிக்கு இயற்கையே மகுடம் சூட்டியதைப் போல் அது காட்சியளித்தது. அரண்மனை வாசலில் பொது மக்கள் அரசருடைய தரிசனத்துக்காகக் காத்திருந்தனர். மேல்மாடத்தை நோக்கி எல்லோருடைய விழிகளும் உயர்ந்திருந்தன.

வேல்களைக் குறுக்கே நீட்டிய வீரர்கள், அரண்மனையின் உள்ளே நுழைந்துவிடாதபடி கூட்டத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தனர்.

"வீராதி வீரர் விஜயாலய சோழர்.."

"வாழ்க! வாழ்க!"

—முண்டியடித்த மக்கள் கூட்டம் முழக்கம் எழுப்பிக் கொண்டிருந்தது.

கோட்டைத் தளபதி குன்றத்தூர்க்கிழார் அரண்மனை மேல்மாடத்தில் தோன்றினார்.

ஆரவாரம் செய்து கொண்டிருந்த கூட்டத்தில் அவர் அறிவித்தார்:

"அரசர் பெருமான் அந்தரங்க ஆலோசனை சபையை அவசரமாகக் கூட்டியிருக்கிறார். ஆதலால் மன்னரைத் தரிசிக்க வந்திருக்கும் மக்கள் அமைதியாகக் கலைந்து போகுமாறு கேட்டுக் கொள்கிறேன்."

கோட்டைத் தளபதியின் அறிவிப்பு கூட்டத்தின் உற்சாகத்தைக் குறைத்தது. கலைந்து சென்றனர் சிலர். ஏமாற்றத்தால் முணுமுணுத்தனர் சிலர். 'அரசரைப் பார்க்காமல் போவதில்லை' என்று அடம்பிடித்தபடி கலைந்து செல்ல மறுத்துக் காத்துக் கிடந்தனர் பலர்!

வீரர்களின் வேல் முனைகளைத் தள்ளிக் கொண்டு மக்கள் கூட்டம் அரண்மனைக்குள் நுழையப் பார்த்தது. அரண்மனை வீரர் கூட்டமோ, அவர்களை அப்புறப்படுத்தும் அன்பான முயற்சிகளில் ஈடுபட்டது.

திரளாக நின்றிருந்த கூட்டத்தின் பின்புறத்தில் திடீரென்று, "தள்ளுங்கள்.. தள்ளுங்கள்.. இளவரசர் வருகிறார்" என்றும், "வழிவிடுங்கள்" என்றும் காவல் வீரர்கள் தங்கள் அதிகாரத்தைக் காட்டினார்கள்.

வேல்களைக் குறுக்கே நீட்டிக் கூட்டத்தை இரண்டாகப் பிளந்தார்கள். உள்ளே நுழைவதற்கு வழி உண்டாக்கினார்கள்.

கூட்டம் திரும்பிப் பார்த்தது.

அரச உடைகளையும் ஆபரணங்களையும் அணிந்து அரும்பு மீசையும் குறும்புப் புன்னகையுமாய் வந்து கொண்டிருந்தான் ஆதித்தன். காவலன் மகனைக் கண்ட மகிழ்ச்சியில் –கூட்டத்தின் கோபம் காணாமற் போனது. உணர்ச்சிவசப்பட்ட மக்கள் கூட்டம் உற்சாக முழக்கம் எழுப்பியது.

ஆதித்தன் அந்தரங்க ஆலோசனை மண்டபத்தை அடைந்த போது அங்கே சோழ மண்டலத்தின் தலைமை அமைச்சர் மாவலிவாணர், சிற்றரசர் செம்பியன் நம்பி, உறையூர் உத்தம சீலர், ஒற்றர்படைத் தலைவன் சாத்தன் பழியிலி உட்பட படைக்கோட்டத் தலைவர்களும் மந்திரிப் பிரதானிகளும் அரசரது வருகைக்காகக் காத்திருந்தார்கள்.

அகவையில் முதிர்ந்தவர்களும் அரசருக்கு ஆலோசனை சொல்லும் உரிமை படைத்தவர்களுமாகிய ஆன்றோர் கூடியிருந்த அவைக்கு வணக்கம் செலுத்தினான் ஆதித்தன். அந்தரங்க ஆலோசனைக் கூட்டத்தில் கலந்து கொள்ள முதல் முறையாக அழைப்புப் பெற்றிருக்கும் அவனை அன்போடு வரவேற்று அவர்கள் வாழ்த்துத் தெரிவித்துக் கொண்டிருந்தார்கள்.

சற்று நேரத்தில் வாயிற் காவலனின் அறிவிப்புக் கேட்டது:

"விழுப்புண் விஜயேந்திரர்— புண் கொண்ட வெற்றிப் புரவலர்—தஞ்சை கொண்ட தலைவர் —பகைவரைத் துண்டாடும் பரகேசரி —வீராதி வீர விஜயாலயச் சோழதேவர் வருகிறார்!"

'போர்க்கலத்துப் புரவி; பொங்கிப் பாய்ந்தால் புலி; சினந்தால் சிறுத்தை; சீறி எழுந்தால் சிங்கம்' என்று புலவர்களாலும் குடிமக்களாலும் போற்றப்படும் விஜயாலயர் நடந்து வந்த போது —இருபுறமும் திரும்பிப் பார்த்தபடி ஒரு களிறு எழுந்து வருவது போல் இருந்தது.

தீட்சண்யம் மிகுந்த அந்தக் கண்களின் ஒளி —திடமான அந்தக் கால்களின் நடை— தாள்களைத் தொடும் நீண்ட தடக்கை— வைரம் பாய்ந்த அந்த மார்பு— வடுக்களைத் தாங்கித் தாங்கி வனப்பேறிய தோள்கள்!

அவர் ஏறிட்டுப் பார்த்தால் போதும், எந்த அறிவாளியும் பணிந்துவிடுவான்! உறைவாளை உருவ வேண்டியதில்லை.. அவர் தொட்டாலே போதும், எதிரி தொலைந்துவிடுவான்.

தன் தந்தையை ஒரு மூன்றாம் மனிதனைப் போல் ரசித்துப் பார்த்தான் ஆதித்தன்.

ஆனால், இன்று அந்த அற்புதமான தந்தையிடம் விவாதம் செய்ய வேண்டிய அவசியம் தனக்கு ஏற்பட்டிருப்பதையும் நினைத்துப் பார்த்தான்.

மலையுடன் மோதுவதைப் போன்றதுதான். தலை சிதைந்துவிடக் கூடாது— அதே சமயத்தில் குன்றைக் குடைந்தாக வேண்டும்.

பாறையைப் பிளக்க உளி இருக்கும் போது, பாதையை வகுக்க வழி இல்லாமலா போய்விடும்? பார்த்துக் கொள்ளலாம்.

இவை தொடங்கிவிட்டது. கணீரென்ற அந்தக் குரல் கேட்டது. விஜயாலயர் பேசத் தொடங்கிவிட்டார்:

"சோழ மண்டலத்தின் தூண்களே! உங்களையெல்லாம் நம்பித்தான் பிரும்மாண்டமானதொரு கட்டடத்தைக் கட்டலாமென்று நான் கனவு கண்டு வருகிறேன். என்னுடைய சாம்பலின் மீதாவது சோழ சாமராஜ்யத்தின் அஸ்திவாரம் போடப்பட்டால் நான் அகமகிழ்வேன்!

சோழன் கோச்செங்கணானும், கோப்பெருஞ் சோழனும், கரிகாற் பெருவளத்தானும் நம்முடைய முன்னோர்கள். ஆனால், அவர்கள் இன்று ஏட்டில் இருக்கிறார்களே தவிர, நம்முடைய நாட்டில் இல்லை! பாட்டில் இருக்கிறார்களே தவிர நம் பக்கத்தில் இல்லை.

இருந்திருந்தால் நம்முடைய நிலைமை இப்படி இருக்குமா? முதலில் களப்பிரர்களால் நம் சரித்திரம் கறைபட்டது. பின், பல்லவர்களிடம் பாதி நாட்டைப் பறிகொடுத்தோம். பாண்டியர்களிடம் பாதி நாட்டைப் பகிர்ந்து கொடுத்தோம்.

நமக்கென்று ஒரு நாடு இல்லாதவராக நலிந்து கிடந்தோம். உறையூரிலும், பழையாறையிலும் ஒடுங்கிக் கிடந்தோம். குறுநில மன்னர்கள் என்ற பெயரில் யார் யாருக்கோ குற்றேவல் செய்தோம்.

அடையாளம் தெரியாமல் சோழர் குலம் அழிந்து போய்விடுமோ என்ற அவலநிலை வந்த போதுதான் ஆவேசப்பட்டோம்! அணி திரண்டோம்! ஆர்த்தெழுந்தோம்! முத்தரையர்களோடு மோதினோம். தஞ்சைக் கோட்டையின் மீது புலிக்கொடியைத் தவழவிட்டோம்.

முனகிக் கொண்டே இருந்த நம் இனத்திற்கு மூச்சுவிட நேரம் கிடைத்திருக்கிறது. இப்போது நாம் சுவாசிக்கிற காற்றுத்தான் சுத்தமான காற்று! சுதந்திரக் காற்று!

ஆனால், இந்த நிம்மதி நிரந்தரமானது என்று நாம் நினைத்துவிடலாகாது. எளியவர்களின் இந்த ஆட்சியை ஏப்பம்விடுவதற்கு எதிரிகள் காத்திருக்கிறார்கள். அவர்களின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வருமளவுக்கு இதனை வல்லமை மிக்கதாக வடிவமைக்க வேண்டும்.

புதிய சரித்திரத்தைப் படைப்பதற்காகப் புறப்பட வேண்டிய பொன்னான காலம் இது. உட்காரவோ, ஓய்வெடுக்கவோ, உல்லாசம் கொள்ளவோ நமக்கு நேரம் இல்லை. தஞ்சை நகரத்திற்குள் அந்நிய ஒற்றர்களின் நடமாட்டம் அண்மையில் அதிகரித்திருக்கிறது. கவனத்துக்கு வராமலே சின்னச் சின்னக் கலவரங்கள்— துரோகிகளால் தூண்டிவிடப்படுகின்றன.

அழிக்கப் பார்க்கும் பகைவர்களை அச்சுறுத்த வேண்டும். உடன் இருக்கும் இனத்தவரை ஒழுங்குபடுத்த வேண்டும். வீழ்ந்து கிடக்கும் மக்களையெல்லாம் வீரர்களாக்க வேண்டும். அதற்காகத்தான் வீர தேவதைக்கு விழா நடத்த ஏற்பாடு செய்தேன்.

களங்கள் தோறும் வெற்றியை நல்கி வரும் காளிக்கு நன்றி செலுத்த மட்டுமல்ல.. குனிந்தவர்கள் நிமிர வேண்டும். கோழைகள் குமுற வேண்டும் என்பதன் அடையாளமாகவும்தான் கொற்றவைக்குக் கோயில் கட்டினேன்.

இந்த வீர விழாவை வெற்றிகரமாக நடத்துவது குறித்துக் கலந்து பேசவே உங்களை அழைத்துள்ளேன். உங்கள் கருத்துகளை இனி உரைக்கலாம்" என்று முழங்கிவிட்டு மன்னர் அமர்ந்தார். மகுடியில் மயங்கியது போல், விஜயாலயரின் சொல் வீச்சில் மண்டபம் சொக்கிப் போயிருந்தது.

சோழ மண்டலத்தின் தலைமை அமைச்சர் மாவலிவாணர் மெதுவாக எழுந்தார்.

"அரசர் பெருமானே! விழாக்கோலம் பூண்டிருக்கிறது தஞ்சை! வெளியூர்களிலிருந்தெல்லாம் விருந்தினர்கள் கூட்டங் கூட்டமாய் வந்து குவிந்து கொண்டிருக்கிறார்கள். இந்தக் கூட்டத்தில் எதிரிகளும் கலந்து வரக்கூடும்.." என்றார்.

"வரக்கூடுமென்ன.. வந்தாகிவிட்டது. இன்று காலை நம் அரண்மனைக் குதிரையைக் களவாடிச் சென்ற ஒற்றன் சிறை செய்யப்பட்டிருக்கிறான். அவன் நம் இளவரசருக்கு எழுதிய எச்சரிக்கை ஓலை ஒன்றும் கைப்பற்றப்பட்டிருக்கிறது" என்றார் விஜயாலயர்.

ஆதித்தனுக்கு அப்போதுதான் நினைவுக்கு வந்தது— தான் ஓலை நறுக்கைத் தவறவிட்டு வந்தது.

சட்டென்று தன் இருக்கையைவிட்டு எழுந்த அவனை மன்னர் தன் தலையை அசைத்தே அமரச் செய்தார்.

அடடா..! எத்தனை முட்டாள்தனம் செய்துவிட்டோம். முக்கியமான ஓலை நறுக்கைத் தவறவிட்டது மட்டுமல்லாமல் அதுபற்றிய நினைவே இல்லாமல் இருந்துவிட்டோமே.. தந்தைக்கு எல்லா விவரமும் தெரிந்திருக்குமோ? தன்னைப் பற்றி என்ன நினைப்பார்?

ஆதித்தன் தற்செயலாக ஒற்றர்படைத் தலைவன் சாத்தன் பழியிலியைப் பார்த்த போது, அவன் தன்னைப் பார்த்துப் புன்னகை செய்வது போல் தோன்றியது.

உறையூர்ச் சிற்றரசர் உத்தமசிலர் உரைத்தார்: "வேந்தே! வெளி தேசங்களிலிருந்து அரச குடும்பத்தினர் யாராவது வந்தால் அவர்களுக்கு உரிய பாதுகாப்பு அளிக்குமாறு உத்தரவிட வேண்டும்."

விஜயாலய சோழர் விவரித்தார்: "கட்டளை பிறப்பிக்கப்பட்டுவிட்டது. வெளிநாட்டிலிருந்து அரச விருந்தினராக வருகிறவர்களைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு— கோட்டைத் தளபதி குன்றத்தூராருடையது."

எல்லா ஏற்பாடுகளையும் செய்து முடித்துவிட்டு ஆலோசனை சபையை எதற்காகக் கூட்டியிருக்கிறார் அரசர்?

சபையிலிருந்த எல்லோருக்கும் அந்தச் சந்தேகம் வந்தது.

விஜயாலயருடைய விவேகத்தை எடை போட எவராலும் இயலாது! எதையோ திட்டமிட்டிருக்கிறார்.. அது தற்செயலாக நடப்பது போல் காட்டிக் கொள்வதற்காகச் சபையைக் கூட்டியிருக்கிறார்.

இது சபையல்ல— சாட்சிக் கூடம்!

அவையிலிருந்தவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு அமைதியாய் இருந்தனர். ஆதித்தன் எழுந்து நின்றான்.

"ஆன்றோர் நிறைந்த அவைக்கு என் வணக்கம். கொற்றவை விழாவைப் பற்றி மன்னரிடத்தில் நானும் ஒரு கோரிக்கைவிடுக்க விரும்புகிறேன்.."

விஜயாலயர் முகம் சற்றே மாறுவது போல் தெரிந்தது. "நீ என்ன சொல்லப் போகிறாய் என்பது எனக்குத் தெரியும்" என்றார்.

"மன்னருக்குத் தெரிந்திருக்கலாம். மற்றவர்களுக்கும் தெரிய வேண்டாமா?" என்று மடக்கினான் ஆதித்தன்.

"அவசியமில்லை. நீ அறியாத பிள்ளை" என்றார் விஜயாலயர்.

அவருடைய சொற்களில் இருந்த சூட்டினை அங்கிருந்த வயது முதிர்ந்த பெரியவர்களால் கூடத் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

இளவரசனால் எப்படிப் பொறுத்துக் கொள்ள இயலும்?

"அறியாத பிள்ளை என்றால் என்னை ஆலோசனை சபைக்கு அழைத்தது ஏன்?" என்று கோபத்துடன் குமுறினான்.

“அழைத்தது– அரசியலை நீ கற்றுக் கொள்வதற்காக! கருத்துச் சொல்வதற்காக அல்ல” – விஜயாலயர் மீண்டும் இளவரசனை வார்த்தைகளால் வதைத்தார்.

எதிர்பாராத இந்தத் திருப்பத்தால் என்ன செய்வதென்றே தீர்மானிக்க முடியாமல் அந்த அவையிலிருந்தவர்கள் திணறினார்கள்.

“கருத்துக் கூற உரிமையில்லாத இடத்தில் என்னால் கற்றுக்கொள்ள இயலாது!” என்று சீற்றத்துடன் கூறிவிட்டு, அவையைவிட்டு வெளியேறத் தொடங்கினான் ஆதித்தன்.









3



# தாய்ப் புலி

கனவிலும் நடக்க முடியாத காரியங்கள் சில நேரங்களில்– நிஜ வாழ்வில் மிக எளிதாக நிகழ்ந்துவிடுகின்றன.

அத்தகைய ஆச்சரியமான நிகழ்ச்சிதான் அன்று அந்தரங்க ஆலோசனை சபையில் நடந்தது.

அவையிலிருந்து ஆதித்தன் வெளியேறத் தொடங்கியதும் அங்கிருந்த அனைவரும் அதிர்ச்சியடைந்தனர்.

பல்லவருடன் உறவாடுவது குறித்து மன்னருக்கும் இளவரசருக்கும் மாறுபட்ட கருத்து உண்டு என்பது எல்லோருக்கும் தெரியும்.

ஆனால், அது பொது இடத்தில் இவ்வாறு புகைந்து வெடித்ததுதான் புதிராக இருந்தது.

கோட்டைத் தளபதி குன்றத்தூர்க்கிழாரும், தலைமை அமைச்சர் மாவலிவாணரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

தந்தைக்கும் மகனுக்கும் இடையே தகராறு என்றால் யாரும் தலையிடத் தேவையில்லை. ஆனால், அரசருக்கும் இளவரசருக்கும் நடக்கும் அரசியல் போராட்டத்தில் குறுக்கிடாதிருப்பதும் குற்றமல்லவா?

மாவலிவாணர் எழுந்து நின்றார். வெளியேறிக் கொண்டிருந்த ஆதித்தனை நோக்கி, “இளவரசே! நில்லுங்கள்!” என்றார்.

நரைத்துப் பழுத்துக் கிடந்த தன் தலையைத் தடவியவாறே "ஆன்றோர் நிறைந்த இந்த அவையை நீங்கள் அவமதிக்கக் கூடாது" என்று அறிவுறுத்தினார்.

தலைமை அமைச்சரைத் திரும்பிப் பார்த்த ஆதித்தன் மெதுவாகச் சிரித்தான்.

"எதற்காகச் சிரிக்கிறீர்கள்?"

"பெரியவர்கள் செய்தால் பெருமாள் செய்த மாதிரி என்று பழமொழி சொன்னார்களே அவர்களின் பட்டறிவை நான் பாராட்டுகிறேன். மன்னர் என் மீது வார்த்தை நெருப்பை வாரி வாரி வீசினார். தலைமை அமைச்சர் உட்பட யாரும் அதைத் தடுக்கவில்லை. வேறு வழியின்றி மன்றத்தைவிட்டு வெளியேறுகிறேன் நான். அவையை அவமதிக்கிறேன் என்ற குற்றச்சாட்டு என் மீது கூறப்படுகிறது. சிரிக்காமல் என்ன செய்வது?"

"முதலில் ஆசனத்தில் வந்து அமருங்கள்."

"முதலில் அவையில் கருத்துரைக்க எனக்கு அனுமதி உண்டா என்பதை அறிந்து சொல்லுங்கள்."

தலைமை அமைச்சர் மன்னரை நோக்கினார். விஜயாலயரோ இந்த விவாதத்தில் தமக்குச் சம்பந்தமே இல்லாதவர் போல் வேறெங்கோ பார்த்துக் கொண்டிருந்தார்.

உறையூர் உத்தமசிலர் எழுந்து, "ஆலோசனை சபைக்கு இளவரசர் முதல் முறையாக அழைக்கப்பட்டிருப்பதால்.." என்று மேலே பேசுவதற்குத் தயங்கியபடி அரசரைப் பார்த்தார்.

வலது கை விரல்களால் மீசையை வருடிவிட்டுக் கொண்டிருந்த விஜயாலயரின் இதழ்களில் தெரிந்தது புன்னகையா, கேலியா என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. கணீரென்ற அவர் குரல் மட்டும் காதுகளில் ஒலித்தது.

"இளவரசர் தன் இடத்துக்கு வரலாம். சுருக்கமாகத் தன் கருத்தைச் சொல்லலாம்."

அவையில் ஒரு மகிழ்ச்சி நிலவியது. ஆதித்தன் பேசுவதற்கு அரசர் அனுமதி வழங்கியதில் அனைவருமே திருப்தியடைந்தது தெரிந்தது.

இடத்துக்குத் திரும்பிய இளவரசன் மன்னரை வணங்கிவிட்டுப் பேசத் தொடங்கினான்:

"வீரமாகாளிக்குக் கோயில் கட்டி விழா நடத்துவதை அறிந்து சொல்லொணா மகிழ்ச்சி கொள்கிறது சோழ மண்டலம். ஆனால்.." என்று அவன் நிறுத்திய போது, தலைமை அமைச்சர் தன் தொண்டையை இலேசாகச் செருமிக் கொண்டார்.

எதையாவது ஏடா கூடமாகப் பேசிவிடாதே என்ற எச்சரிக்கை அது.

"மட்டில்லா மகிழ்ச்சியடையும் மக்கள் மனதில் கடுகளவு கவலையும் ஏற்பட்டுள்ளது. பல்லவச் சக்கரவர்த்திக்கு அழைப்புவிடுத்திருக்கும் மன்னர், இந்த விழாவில் கலந்து கொள்ளப் பாண்டிய வேந்தனை ஏன் அழைக்கவில்லை?"

ஆதித்தனுடைய கேள்விக்கு அமைதியாகவே பதிலுரைத்தார் விஜயாலயர்:

"தேவையில்லை. அதனால் அழைக்கவில்லை."

"பல்லவர்க்கு மட்டும் அழைப்புவிடுத்துப் பாண்டியரை அழைக்காமல்விட்டால்..?"

"அழைக்காமல்விட்டால்..?" என்று அவனையே திருப்பிக் கேட்டார் விஜயாலயர்.

"என்றென்றும் பாண்டியர்கள் நமக்குப் பகைவர்களாகிவிடுவார்கள்."

"அதே சமயம் பல்லவர்கள் நமக்கு நண்பர்களாகிவிடுவார்கள்."

"இருவருக்குமே நாம் நண்பர்களாய் இருக்கலாமே."

"தேவையில்லை.. எல்லோருக்கும் நண்பனாக இருக்க நினைப்பவன் ஒருவருக்கும் உண்மையான நண்பனாய் இருக்க முடியாது!"

"இடவைப் போரில் ஏற்பட்ட இழப்பிற்குப் பிறகாவது உண்மையான நண்பன் நமக்கு ஒருவனுமில்லை என்பதை உணர்ந்து கொள்ள வேண்டாமா?"

"தற்காலிகமான இழப்புக்காக நிரந்தரமான நட்பையும் இழந்துவிட நினைப்பது ராஜதந்திரமாகாது."

"குடிமக்களே இப்போது குறை சொல்லத் தொடங்கிவிட்டார்கள்."

"என்னவென்று?"

"பல்லவர்களின் மேலாதிக்கம் சோழ நாட்டின் மீது பரவி வருவதாக."

ஆதித்தனின் குற்றச்சாட்டினைக் கேட்டதும் மன்னரின் முகத்திலிருந்த புன்னகை மறைந்தது.

ஆணித்தரமான வார்த்தைகளால் அவர் அறிவித்தார்:

"சரித்திரத்தை உருவாக்குகிற சம்பவங்கள் நிகழும் போது, அரசியல் தந்திரிகள் அப்பாவி மக்களின் அபிப்பிராயங்களைக் கேட்டுக் கொண்டிருப்பதில்லை."

அந்த வார்த்தைகள் ஆதித்தனுக்கு மட்டும் சொல்லப்படவில்லை. தங்களில் ஒரு சிலருக்கும் சேர்த்தே சொல்லப்படுகிறது என்பதை அவையிலிருந்தவர்கள் அறிந்து கொண்டார்கள்.

சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு தெளிவான குரலில் ஆதித்தன் தீர்மானமாகச் சொன்னான்:

"மன்னர் பெருமான் என்னை மன்னிக்க வேண்டும். வேற்று நாட்டவருக்குக் கட்டுப்பட்டு அவர்கள் விருப்பப்படி நடைபெறும் விழாவில் கலந்து கொள்ள என் இதயம் இடந்தரவில்லை. நாளை வைகறையில் பழையாறை நோக்கி நான் பயணமாகிறேன்."

அவையில் மீண்டும் பதற்றமான சூழ்நிலை உருவானது. ஆதித்தனுடைய கருத்தை மனத்தளவில் ஆதரித்தவர்கள் கூட அவன் எல்லை மீறி நடந்து கொள்வதாக எண்ணத் தொடங்கினர்.

மன்னருடைய கோபம் எப்படி வெளிப்படப் போகிறதோ என்ற அச்சம் மன்றத்தில் ஏற்பட்டது.

எதிர்பார்ப்புகளுக்கு நேர்மாறாக இருந்தது விஜயாலயர் நடந்து கொண்டவிதம்! இதழ்களில் புன்னகை தவழ இளவரசனைப் பார்த்து அவர் இனிய குரலில் பேசினார்:

"ஆதித்தா! நீ நடந்து கொள்வதெல்லாம் எனக்கு உன் பாட்டனாரையே நினைவுபடுத்துகிறது. உன்னைப் பெற்றதற்காக நான் பெருமை கொள்கிறேன். அஞ்சாத நெஞ்சமும், அடிபணிய மறுத்து ஆர்ப்பரிக்கும் குணமும் பாட்டனாரிடமிருந்து உனக்கு வந்த பரம்பரைச் சொத்து! விருப்பத்துக்கு மாறாக உன்னை விழாவில்

கலந்து கொள்ளச் சொல்லி நான் வற்புறுத்தமாட்டேன்” என்று கூறிவிட்டு, கம்பீரமாக எழுந்து வந்தவர், ஆதித்தனின் தோள்களில் தன் கையைப் போட்டுத் தழுவியபடி அவையிலிருந்து வெளியேறி நடக்கத் தொடங்கினார்.

தாய்ப்புலியொன்று தன் குட்டியைக் கவ்விக் கொண்டு செல்வது போல் இருந்தது அந்தக் காட்சி.

மஞ்சத்தில் படுத்துப் புரண்டு கொண்டிருந்தான் ஆதித்தன். தூக்கம் வரவில்லை.

காலை முதல் நடந்ததெல்லாம் ஒரு கனவு போல் இருந்தது.

விடிந்தால் பழையாறை நோக்கிப் பயணம் செய்ய வேண்டும்— விடியும்முன் காளியின் ஆலயத்துக்குச் சென்று தரிசித்து வரவேண்டும்.

ஆதித்தனின் உடல்தான் புரண்டு கொண்டிருந்தது. அவனுடைய ஞாபக ரதமோ பறந்து கொண்டிருந்தது. சோர்வில்லாமல் எங்கெங்கோ சுற்றி வந்தது. கடைசியில் தெருவில் சந்தித்த அந்தத் தேவதையிடம் வந்து நின்றுவிட்டது.

அடேயப்பா! எவ்வளவு பெரிய கண்கள். ஆளையே விழுங்கிவிடுவது போல் அப்படி ஒரு பார்வை!

தந்தை தழுவிக் கொண்டதுமே அவருடைய கடுமையான வார்த்தைகளால் இதயத்தில் ஏற்பட்டிருந்த காயம் ஆறிப் போய்விட்டது. ஆனால், அந்த அழகியின் கண்களால் ஏற்பட்ட காயம் இந்த இரவு நேரத்தில் வேதனையை அதிகமாக்குகிறதே! ஆம்— இது வேதனைதான்.. இன்ப வேதனை!

குறும்பு கொப்பளிக்கும் முகம்— உள்ளத்தில் இருப்பதை வெளியேவிடாமல் ஒளித்து வைத்துக் கொள்ளும் உதடுகள்— காற்றில் அலைபாயும் கருங்கூந்தல்—

பெயரைக்கூடச் சொல்ல மறுத்துவிட்டாளே அந்தப் பேரழகி!

ஆடம்பரமான அலங்காரங்கள் இல்லை! ஆனால், அடக்கமான அழகு, ஓர் ஆர்ப்பாட்டம் அல்லவா நடத்திக் கொண்டிருந்தது..!

இதயம் ஏன் இப்படி அவளை நோக்கியே இழுத்துச் செல்லப்படுகிறது?

பார்த்த உடனே மயங்க வைக்கிற பாவையா அவள்?

ஆம்! அவள் ஒரு மௌன மயக்கம்! மன்மத முழக்கம்! வாலிப வசீகரம்! வசந்த உற்சவம்!

அதோ— யார் அது? அவள்தான்! அரண்மனைக்குள்ளே எப்படி நுழைந்தாள்? இங்கும் குழந்தையைத் துரத்திக் கொண்டுதான் வருகிறாள்!

குழந்தையின் கையில் ஒரு கூடை நிறையப் பூக்கள்.

"ஒரே ஒரு பூ கொடுடா.." —கிண்கிணி நிலவு கெஞ்சுகிறது.

"குடுக்க மாத்தேன்" —குழந்தை நட்சத்திரம் கொஞ்சுகிறது.

"டேய், நில்லு" அவள் சத்தமிடுகிறாள்.

சிரித்துக் கொண்டே ஒடிவந்த குழந்தை ஆதித்தனின் முதுகுக்குப் பின்னால் ஒளிந்து கொள்கிறது.

துரத்திக் கொண்டே வந்தவள், "சற்று விலகிக் கொள்ளுங்கள். இந்தச் சுட்டிப் பயலைப் பிடித்துக் கட்டிப்போட வேண்டும்" என்று கூறுகிறாள்.

"கட்டளையிடு! நானே கட்டிப் போடுகிறேன். குழந்தையை மட்டுமல்ல, உன்னையும் சேர்த்து" என்று குறும்பாகக் கூறுகிறான் ஆதித்தன்.

"என்னை யாரும் கட்டிப்போட முடியாது" என்று அந்தக் கட்டழகி முறைக்கிறாள்.

"எப்படிப்பட்ட பெண்ணாக இருந்தாலும் ஓர் ஆடவனுடைய கட்டுக்குள் அகப்பட்டுத்தானே ஆக வேண்டும்."

"தயவு செய்து வம்பு பேசிக் கொண்டிருக்காதீர்கள். காவலர்களை ஏமாற்றிவிட்டு உள்ளே வந்திருக்கிறேன். கண்டு பிடிக்கும் முன் போய்விட வேண்டும். தள்ளுங்கள்."

"நான் தள்ளமாட்டேன். நீ வேண்டுமானால் என்னைத் தள்ளிவிட்டுப் பிள்ளையைப் பிடித்துக் கொள்."

ஆதித்தன் மீது படாமல் குழந்தையைப் பிடிக்கக் கைகளை நீட்டியபடி அவள் பாய்கிறாள். குழந்தை ஆதித்தனின் முதுகோடு ஒட்டிக் கொள்கிறது.

அவளுடைய பிடியில் குழந்தை அகப்படுவதற்குப் பதிலாக ஆதித்தன் அகப்பட்டுக் கொள்கிறான். வெட்கத்தோடு விலகிக் கொள்ள முயன்றவளை அவன் விடவில்லை.

குழந்தை அப்போது மஞ்சத்தில் ஏறி நிற்கிறது. அவர்களை நோக்கிக் கூடையைக் கவிழ்க்கிறது. ஆதித்தன் மீதும் அந்த அழகியின் மீதும் மலர்கள் மழையாய்ப் பொழிகின்றன.

‘டாண்’ ‘டாண்’ என்று ஆலயமணி ஒலித்தது.

சட்டென்று கண் விழித்தான். காலையில் சந்தித்த பெண்ணைப் பற்றி அன்றைய இரவிலேயே கனவு காணத் தொடங்கிவிட்ட பலவீனத்துக்காகத் தன்னைத் தானே கோபித்துக் கொண்டான்.

சயன மண்டபத்தில் எரிந்து கொண்டிருந்த தீபங்கள், சபல மண்டபத்தில் எரிந்து கொண்டிருக்கும் அவனைப் பார்த்துச் சிரித்தன.









4



# அழகிய ஆபத்து

நீலமேகங்களுக்கு நடுவே நிலவை மகுடமாகச் சூடிக்கொண்டிருந்த வானம், பூமியைத் தன் புன்சிரிப்பால் மயக்கிக் கொண்டிருந்தது. நட்சத்திரங்களின் நாட்டிய சாலையில்— அபிநய அசைவுகள் அரங்கேறிக் கொண்டிருந்தன.

செவி மடல்களைச் சில்லென்று வருடும் குளிர் காற்றின் குறும்பினால் செடி கொடிகள் சிலிர்த்தன.

அடர்ந்த மரக் கிளைகளில் கூடுகளிலிருந்த பறவைகள் யாரையோ அழைத்தன.

கோட்டைச் சுவரினையொட்டி வெட்டப்பட்டிருந்த அகழிக்குள் கிடந்த தவளைகள், யாருக்கோ தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ளத் துடித்தன.

நிமிர்ந்து நின்ற தஞ்சைக் கோட்டை நிலவொளியில் நீராடிக் கொண்டிருந்தது.

கோட்டை மதிலில் அங்கங்கே செருகப்பட்டிருந்த தீப்பந்தங்களின் நிழல் அகழியில் விழுந்து அசைந்து கொண்டிருந்த காட்சி, தெளிந்த நீரில் துள்ளிக் குதிக்கும் தீப மீன்களாய்த் தெரிந்தது.

இரவு மிகவும் இனிமையானது! எத்தனையோ ரகசியங்களை அது தன் உள்ளத்துக்குள்ளே ஒளித்து வைத்திருக்கிறது!

கோட்டையின் கிழக்கு வாசல் காவல் தலைவன் கோட்டை மதிலின் மீது உயர்த்திப் பிடித்த வேலுடன் உலவிக்

கொண்டிருந்தான். காவலுக்கு நின்றிருந்த வீரர்களைக் கண்காணித்தபடி சுறுசுறுப்பாய்ச் சுற்றி வந்து கொண்டிருந்தான்.

'டொக்.'

ஏதோ ஓசை எழுந்ததைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். எதுவுமில்லை!

'டொக்.'

அந்த ஓசைக்குரிய பொருள் அவன் உடலில் மோதிக் கீழே விழுந்தது.

குனிந்து எடுத்தான். தீப்பந்த வெளிச்சத்தில் உற்றுப் பார்த்தான்.

பூவரசங்காய்.

கீழே இருந்து யாரோ எறிகிறார்கள்! கோட்டையின் உட்புறத்தில் எட்டிப் பார்த்தான். எதுவும் தெரியவில்லை. மறுபடியும் அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே கீழே இருந்து விர்ரென்று மேலே கிளம்பி—

'டொக்.'

இம்முறை அவன் தலையில் விழுந்தது அந்தப் பூவரசங்காய்!

"ஆ..! என்று தலையைத் தடவிக் கொண்ட காவல் தலைவன், கடுகடுப்போடு காய் எறியப்பட்ட திசையைப் பார்த்தான்.

சுவரில் செருகியிருந்த தீப்பந்தத்தை எடுத்துக் கீழே காட்டினான். கொஞ்சம் வெளிச்சம் தெரிந்தது. அந்த மங்கலான வெளிச்சத்தில் ஓர் ஆள் நிற்பது தெரிந்தது. ஆனால், யாரென்று தெரியவில்லை.

ஊரெல்லாம் அடங்கி உறங்கிப் போயிருக்கும் இந்த அகாலத்தில் இங்கு வந்து, குறிபார்த்துப் பூவரசங்காயை எறிந்து கோட்டைக் காவலனைக் கூப்பிடுகிற தைரியம் யாருக்கு வரும்?

தன்னை இவ்வாறு 'அன்பாக' அழைப்பவன் யாராக இருக்கும்?

குழப்பமும் கோபமும் கொண்ட காவல் தலைவனை நோக்கிக் கீழே இருந்தவன் வலது கையை உயர்த்தி ஏதோ சைகை செய்தான்.

ஆ.. ஆக்ஞை! சோழ நாட்டில் இரண்டே இரண்டு பேர் மட்டும்தான் இப்படிக் கையை அசைத்துக் கட்டளையிட அதிகாரம் பெற்றவர்கள். அப்படியானால்..!

காவல் தலைவன் கண்ணிமைக்கும் நேரத்தில் கோட்டை மதில் மீதிருந்து கீழே இறங்கினான். மதிலோடு சாய்ந்து நின்றபடி மறைந்திருந்த ஆளை நெருங்கினான். கையிலிருந்த தீப்பந்தத்தின் வெளிச்சம் அந்த ஆளின் மீது விழுந்ததும் ஆச்சரியத்துடன்,

“இளவரசே!” என்று கூவியபடி குனிந்து வணங்கினான்.

“உஷ்” என்று தன் உதடுகளுக்கிடையில் விரலை வைத்துச் சாடை செய்த ஆதித்தன், “பேசாமல் என் பின்னால் வா” என்று கூறிவிட்டு நடந்தான். கோட்டைச் சுவர் மீதிருந்த வீரர்களின் பார்வையில் படாதபடி தொலைவில் சென்றதும், “காளி கோயில் திறவுகோல் கச்சையில் இருக்கிறதல்லவா?” என்று கேட்டான்.

“இருக்கிறது ஐயா” என்று தலையை ஆட்டிவிட்டு ஆதித்தனைத் தொடர்ந்தான் காவல் தலைவன்.

வேகமாக வீசிய காற்றில் எழுந்த ஓசை இரவின் பயங்கரத்தை அதிகப்படுத்தியது. மரங்கள் தலையைக் குலுக்கிக் கொண்ட போது, ஒவ்வொரு மரத்தின் மீதும் துர்க்கை உட்கார்ந்திருப்பது போலிருந்தது.

காலடிகளின் கீழே மிதிபட்ட சருகுகள் கூட வாயை மூடிக் கொண்டு மௌனமாயிருக்கவில்லை. சரசரவென்று ஓசையிட்டு எதிர்ப்புத் தெரிவித்தன. மீண்டும் அந்தக் கால்கள் மிதிக்கக்கூடுமே என்று அவை அஞ்சவில்லை.

‘எமனுடைய கால்கள் மிதித்த போதே கவலைப்படவில்லை. எவனுடைய கால்களைப் பற்றி நாங்கள் கவலைப்பட வேண்டும்’ என்று அவை எண்ணமிட்டனவோ?

*நிசும்பசூதனி ஆலயத்தை நெருங்கியதும் ஆதித்தன் கதவைத் திறக்குமாறு கட்டளையிட்டான்.

திறவுகோல் எடுத்துப் பூட்டின் மீது பொருத்தப் போன காவல் தலைவன் “ஆ..!” என்று அலறினான்.

“என்ன?” என்று ஆதித்தன் கேட்கவும்,

---

*துர்க்கைக்கு விஜயாலயன் கட்டிய ஆலயத்தின் பெயர் ‘நிசும்பசூதனி’ என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் தெரிவிக்கின்றன.

"பூட்டு திறந்திருக்கிறது ஐயா! உள்ளே யாரோ போயிருக்கிறார்கள்" என்று பதற்றத்துடன் கூறியபடி கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைய முயன்றான்.

அவனைத் தடுத்து நிறுத்திய ஆதித்தன் ரகசியமான குரலில், "நீ இங்கேயே இரு. நான் அழைத்தாலொழிய உள்ளே வராதே" என்று சொல்லிவிட்டு, ஓசையெழுப்பாமல் மெதுவாகக் கதவைத் திறந்தான்.

காவல் தலைவன் தீப்பந்தத்தையும் வேலினையும் நீட்டிய போது 'வேண்டாம்' என்று சைகை செய்துவிட்டு உள்ளே நுழைந்து கதவை மூடிக் கொண்டான் ஆதித்தன். கதவைத் திறந்ததும் ஆலயத்தினுள் விழுந்த சிறிது வெளிச்சமும் கதவை மூடியவுடன் காணாமல் போய்விட்டது.

அந்த அர்த்தஜாம நேரத்தில் ஆலயத்தின் உள்ளே நிலவிய அமைதியும் மண்டபப் பிரகாரங்களில் குடிகொண்டிருந்த மௌனமும் அச்சத்தை ஏற்படுத்துவதாய் அமைந்திருந்தன. கதவை மூடிவிட்டதால் வெளியே கேட்டுக் கொண்டிருந்த காற்றின் ஓசையும் இப்போது கேட்கவில்லை.

உள்ளே நுழைந்ததும் ஆதித்தனுக்கு ஒன்றுமே புலப்படவில்லை. தொட்டால் ஒட்டிக் கொள்வது போல் இருட்டு அப்பிக் கிடந்தது.

பூட்டியிருந்த பூட்டை உடைத்துக் கொண்டு உள்ளே போயிருப்பவர் யார்? என்ன சதி நடக்கிறது இங்கே?

ஆதித்தனுடைய கை அவனுடைய இடுப்பை நோக்கிச் சென்றது. உடைவாளைத் தொட்டுப் பார்த்து இருப்பிடத்தில் அது இருப்பதை உறுதி செய்து கொண்டது.

கும்மென்ற இருட்டில் மிக மெதுவாக நடந்து பிரகாரத்தைச் சுற்றி வந்தான். இடையிடையே எதிர்ப்பட்ட தூண்களில் மோதிவிடாமல், கைகளால் துழாவியபடி நிதானமாக நடந்தான்.

முகப்பு வாசலைக் கடந்து உள்ளே இருக்கும் மண்டப வாசலை நெருங்கிய போது தொலைவில் ஒரு தீப்பந்தத்தின் மெல்லிய வெளிச்சம் தெரிந்தது. உக்கிர மாகாளியின் பீடத்துக்குப் பக்கத்தில் அந்தத் தீப்பந்தம் ஊர்ந்து கொண்டிருந்தது.

உள்ளே இருப்பவர்கள் யார்? தெரியவில்லை. வெளியே அவர்களுக்குப் பாதுகாப்பாக யாரும் இருக்கிறார்களா? இருக்கக் கூடும்.

ஆதித்தன் பின்வாங்கினான்! அருகிலிருந்த தூணுக்குப் பின்புறம் மறைந்து நின்றபடி ஆலயத்தின் பிற பகுதிகளைக் கவனித்தான்.

எல்லாம் இருள் மயமாய் இருந்தது. கொஞ்சங் கொஞ்சமாய்ப் பின்னால் வந்த ஆதித்தன் ஆலயத்தின் வெளிக்கதவை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தான்.

பக்கத்தில் யாரோ தன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று உள்ளுணர்வு சொல்லியது.

'டமால்..!'

அவனுடைய கால்களில் மோதி ஒரு கலயம் உருண்டது. அலங்கரிப்பதற்காகச் சிற்பிகள் வைத்திருந்த வண்ணக் கலயமாக இருக்க வேண்டும்.

கலயம் உருண்ட ஓசையைக் கேட்டவுடன், அவன் நின்றிருந்த இடத்தை அனுமானித்துக் கொண்டு வேகமாக ஓர் உருவம் விரைந்து வந்தது.

கொடிய இருட்டிலும் ஏதோ கூர்மையாகப் பளிச்சிடுகிறதே..! ஆ..! கத்தி! பளபளக்கும் குறுவாளுடன் அந்த உருவம் பாய்கிறது.

மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டு தூணின் பின்புறம் ஒதுங்கிக் கொண்டான் ஆதித்தன். குத்துவதற்காக வந்த உருவம் அவனைக் காணாமல் திரும்பியது! தேடியது!

இதற்குள், ஆதித்தனின் விழிகள் ஓரளவு இருட்டுக்குப் பழக்கமாகியிருந்தன. தன்னைத் தேடிக் கொண்டிருந்த உருவத்தின் தோள்களைப் பின்புறமிருந்து இறுக்கிப் பிடித்துக் கொண்டான். உருவத்தின் வலது கையிலிருந்த குறுவாள் தன் மீது உராய்ந்துவிடாமல் கையை வளைத்து இறுக்கியபடி,

"யார் நீ?" என்று அதட்டலாகக் கேட்டான்.

அந்த உருவம் பதில் சொல்லவில்லை.

அடையாளம் தெரியாத அந்த உருவத்தின் முதுகு அவனுடைய மார்பில் அழுந்தியிருந்தது. இடது கையால் அதன் இரண்டு கைகளையும் சேர்த்து இறுக்கிக் கொண்ட ஆதித்தன் தன் வலது கையால் உறைவாளை உருவப் போனான்.

அகப்பட்டுக் கொண்டிருந்தவன் மிக மிக இளமையானவனாக இருக்க வேண்டும். அத்தனை மென்மையாக இருந்தன அந்த உருவத்தின் கைகள்!

சம பலமில்லாத எதிரியுடன் சண்டை செய்வதற்கு வாள் எதற்கு? உடைவாளை உருவாமல் திரும்பிய ஆதித்தனின் வலது கை, உருவத்தின் தலையை நோக்கிச் சென்றது.

தலையில் முடியில்லை. தலைப்பாகை இருந்தது.

"நீ யார்?" என்று மீண்டும் கேட்ட ஆதித்தனுக்கு, அந்த உருவம் வாய் திறந்து பதில் சொல்லவில்லை. ஆனால் அவ்வுருவத்தின் உடம்பில் ஒளிந்திருந்த பதில் மெள்ள மெள்ள வெளிப்படத் தொடங்கியது.





அப்படி வெளிப்பட்ட பதிலில் இளமை இருந்தது. மென்மையான இன்பமும் இருந்தது.

தலைப்பாகையிலிருந்து கீழே இறங்கிய ஆதித்தனின் கை, அந்த உருவத்தில் முகத்தில் பட்டபோது தாமரை இதழ்களை விரல்களால் தடவுவது போல் இருந்தது. விரல்கள் கொஞ்சம் இறங்கி உதடுகளை உராய்ந்ததும் ஆதித்தனின் உடலெங்கும் சிலீரென்ற ஓர் உணர்ச்சி பரவியது.

திமிறிக் கொண்டு அவனிடமிருந்து விடுபட அந்த உருவம் முயற்சி செய்ததால் ஆதித்தன் இன்னும் இறுக்கமாக அவ்வுருவத்தைத் தன்னோடு சேர்த்து நெருக்கிக் கொள்ள நேர்ந்தது.

அந்த நெருக்கத்தில் உடம்புக்குள் ஒளிந்திருந்த ரகசியம் உரையாடத் தொடங்கியது.

வாய் சொல்லாத பதிலை வாலிபம் சொல்லிவிட்டது. கண்கள் பார்வையை இழந்துவிட்டது போல் காட்சியளித்த அந்த இருட்டிலும், அழகிய இளம் பெண் ஒருத்தி தன்னிடம் அகப்பட்டுக்

கொண்டிருக்கிறாள் என்பதற்கு ஆதாரமாக, ஆதித்தனிடம் ஏராளமான தடயங்கள் அகப்பட்டன.

அவனுடைய மார்பிலும் விரல்களிலும்பட்டு உரசிக் கொண்டிருந்த அந்தத் தடயங்கள் விநோதமான அச்சூழ்நிலையிலும் அவன் மனத்தை வெகுவாக மயக்கிக் கொண்டிருந்தன.








# மர்ம இரவு

ஆலயத்தின் உள்ளே ஏதோ ஒரு விபரீதத்தை எதிர்பார்த்து வந்த ஆதித்தன் தற்போது வேறுவிதமான விபரீதத்தைத் தான் எதிர்கொள்ள வேண்டியிருப்பதை உணர்ந்தான். முரடர்களோடு மோத வேண்டியிருக்கும் என்று நினைத்திருந்தவன், அழகிய பெண்ணொருத்தியை இப்படி அணைத்துக் கொள்ள வேண்டியிருக்கும் என்பதை எதிர்பார்க்கவில்லை.

இவள் யார்?

சதிகாரியா அல்லது சாகசக்காரியா?

கோழியின் சிறகுக்குள் அடைபட்ட குஞ்சைப் போல் அவள் குறுகுறுத்துக் கொண்டிருந்தாள். இலவம் பஞ்சு போன்ற அவளுடைய இளைய உடல் ஏறத்தாழ ஆதித்தனிடம் முழுமையாக ஐக்கியமாகியிருந்தது.

அவனிடமிருந்து விடுபடுவதற்காகத் தீவிரமாய் அவள் திமிறிய போது, தற்செயலாக அவனுடைய கை பட்டு அவள் தலையில் கட்டியிருந்த தலைப்பாகை நெகிழ்ந்து தரையில் விழுந்தது.. பெட்டிக்குள்ளிருந்த நாகம் மூடியைத் திறந்ததும் சீறி எழுவது போல், கட்டி வைத்திருந்த அவளுடைய கருங்கூந்தல் துள்ளி விழுந்து, அவனுடைய தோள்களைத் தீண்டியது.

கூந்தலிலிருந்து பரவிய வாசனை அவனுடைய யோசனைகளையெல்லாம் சிதறடிக்கப் பார்த்தது.

கோயில் வாசலில் காவல் தலைவன் தீப்பந்தத்துடன் காத்திருக்கிறான். கோயிலின் உள்ளே காளி சிலையின் அருகே யாரோ நடமாடிக் கொண்டிருக்கிறார்கள்.

நடுவே இது என்ன நாடகம்..

விநோதமான சூழ்நிலையிலும் இதென்ன வெட்கக் கேடு!

செய்ய வேண்டிய காரியங்களை எல்லாம் மறந்துவிட்டுப் பித்துப் பிடித்துப் போய்ப் புத்தி பேதலிக்கிறதே!

ஆண் என்று நினைத்து இரண்டு கைகளையும் இறுக்கிப் பிடித்துக் கொண்டிருந்த போது இதயம் அலைபாயவில்லை. பெண் என்பதை உணர்ந்தவுடன் நெஞ்சுக்குள் இதென்ன பிரவாகம் பெருக்கெடுக்கிறது!

தொட்ட இடமெல்லாம் ஏன் இப்படித் துறுதுறுக்கிறது? பட்ட இடமெல்லாம் ஏன் இப்படிப் பரபரக்கிறது?

அறிவு என்னும் அங்குசம் எங்கோ நழுவிவிட்டது. ஆசை என்னும் மதயானை ஆர்ப்பாட்டம் செய்கிறது.

என்ன செய்வது இப்போது? இந்த மோகக் கடல் நம்மை மூழ்கடிக்கும் முன், இவளை நம் பிடியிலிருந்து விடுவித்துவிடலாமா?

யார், என்ன என்பதை அறிந்து கொள்ளாமல் எப்படி விடுவிப்பது? சதியைக் கண்டுபிடிப்பதற்குக் கிடைத்திருக்கும் ஒரே ஒரு சாட்சியையும் நழுவவிட்டுவிடுவதா? ஆதித்தன் வெகுவாகக் குழப்பமடைந்தான்.

ஆண் வீரர்கள் அணியும் முரட்டு ஆடையின் தடைகளையெல்லாம் தகர்த்துக் கொண்டு, அந்தப் பெண்மை தன் விஸ்வரூபத்தை வெளிப்படுத்தத் தொடங்கியது. இப்படியும், அப்படியும் தன் உடலைத் திருப்பி அவன் பிடியிலிருந்து விடுபடுவதற்கு அவள் முயற்சித்த போது, சுகமான பருவச்சுமை அவனுடைய அகன்ற மார்பில் அழுந்தியது.

அவளுடைய பட்டுப் போன்ற மென்மையான கன்னம் அவனுடைய கன்னத்தைத் தொட்டுப் பார்த்தது. காமதேவனுடைய கரும்பு வில் அந்த இருளில் எங்கிருந்தோ எட்டிப் பார்த்தது.

துணிச்சல் மிகுந்த அந்த வீரன் துவண்டான்.

தடுமாறும் நெஞ்சம் தடம் மாறாமல் தடுத்து நிறுத்துவது எப்படி?

தன்னிடமிருந்து அவளைச் சற்றுத் தள்ளி நிறுத்தினான். கைகளை மட்டும் இறுகப் பற்றியபடி, "யார் நீ?" என்று மீண்டும் கேட்டான்.

அவனுடைய கேள்வியில் மென்மை இழைந்திருந்தது. குரலில் கனிவு குழைந்திருந்தது. தன்னுடைய குரல்தானா என்று அவனுக்கே சந்தேகம் வந்தது.

"அதுதான் கண்டுபிடித்துவிட்டீர்களே..?" என்று அச்சமின்றிப் பதிலுரைத்தாள் அந்த ஆரணங்கு.

"என்ன கண்டுபிடித்துவிட்டேன்?"

"உங்களிடம் அகப்பட்டுக் கொண்டிருப்பது ஒரு பெண் என்பதைக் கண்டுபிடித்துவிட்டீர்களே!" என்று கேலியாக அவள் கூறிய பதில், கிறங்கிப் போயிருந்த அவனுடைய வாலிப நெஞ்சத்தை மீண்டும் கிறுகிறுக்க வைத்தது.

"பெண்தானா என்பதை முழுமையாகக் கண்டுபிடிக்க முயற்சித்துக் கொண்டிருக்கிறேன்" என்றபடி அவளுடைய நீண்ட கூந்தலைத் தன் வலது கையால் வருடினான்.

"உண்மையான கூந்தல்தான்.." என்று ஆதித்தனுடைய உதடுகள் முணுமுணுத்தன.

"போதும், நிறுத்துங்கள்."

"எதை?"

"எல்லை மீறி வந்து கொண்டிருக்கும் உங்கள் கைகளை.."

"எல்லை மீறியது என் கைகளல்ல. உன் கால்கள்!"

"கால்களா?"

"ஆமாம். இன்னும் குடிமக்களுக்காகத் திறந்துவிடப்படாத இந்தக் கோயிலில், நங்கை ஒருத்திக்கு நள்ளிரவில் என்ன வேலை? எல்லை மீறி எதற்கு வந்தாய்? உன்னோடு உடன் வந்திருப்பவர்கள் யார்?"

"இப்படியெல்லாம் கேட்பதற்கு உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? என்னைவிடுங்கள்" என்று அவள் திமிறினாள்.

“அவ்வளவு சுலபமாக உன்னை விட்டுவிட முடியுமா?” என்று கேட்ட ஆதித்தன், அவளை வெளியே இழுத்துச் செல்ல முயன்றான்.

இதுவரை அமைதியாக இருந்த அந்தப் பெண் உள் மண்டபத்தை நோக்கி, “நரசிங்கா..” என்று உரத்துக் குரல் கொடுத்தாள். குரல் கொடுத்த கொஞ்ச நேரத்தில் உள்ளேயிருந்து திடுதிடுவென்று ஆட்கள் ஓடிவரும் ஓசை கேட்டது.

அவளைப் பிடித்திருந்த பிடியைக் கொஞ்சம் தளரவிட்டு உறைவாளை உருவப் போனான் ஆதித்தன். சட்டென்று விசும்பிக் கையை விடுவித்துக் கொண்டவள், அவனை நோக்கித் தன் குறுவாளை ஓங்கினாள். ஓங்கிய கையைப் பிடித்துக் குறுவாள் தன் மீது படாமல் அவன் தடுத்த போது அவள் ஆவேசத்துடன் உதறவே— அவள் கையிலிருந்த குறுவாளே அவள் இடது கன்னத்தை இலேசாகக் கீறிவிட்டது. கீறிய இடத்தில் இரத்தம் குபுக்கென்று பொங்க, “ஆ..!” என்று சத்தமிட்டாள்.

இதற்குள் தடதடவென ஓடி வந்த நான்கைந்து பேர் அவனை நோக்கி வாளை நீட்டிக் கொண்டிருந்தார்கள். சட்டென்று ஆதித்தனின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்ட அவள்,

“இந்த அயோக்கியனைப் பிடித்துக் கட்டுங்கள்” என்று கட்டளையிட்டாள்.

ஒரு கையில் தீப்பந்தங்களையும் இன்னொரு கையில் உருவிய வாளையும் ஏந்தியபடி ஆதித்தனை நெருங்கிய வீரன் ஒருவன், “யாரடா நீ?” என்று அதட்டினான்.

“நானா? எமன்! உங்கள் ஆயுள் முடிந்துவிட்டது! அழைத்துப் போக வந்திருக்கிறேன்” என்று கூறிவிட்டுக் கடகடவென்று சிரித்த ஆதித்தன், தீப்பந்தத்தால் ஏற்பட்ட அந்தச் சிறிய வெளிச்சத்தில் அந்தப் பெண்ணின் முகத்தைப் பார்த்துவிட முயற்சி செய்தான். அதற்குள் அகன்ற தூணின் பின்புறத்தில் அவள் மறைந்திருந்தாள்.

தீப்பந்தத்தோடு ஓடிவந்த வீரனின் வாளை ஆதித்தனுடைய வாள் சந்தித்துக் கொண்டிருந்தது. அதே சமயத்தில் அவனைப் பின்புறமிருந்து மற்றவர்கள் தாக்கத் தொடங்கினார்கள். அதிவேகமாய்ச் சுழன்ற ஆதித்தனின் வாள் ‘கணீர்.. கணீர்’ என்ற ஒலி எழ, சுற்றியிருந்த பகைவர்களின் மீது சூறாவளியாய்ப் பாய்ந்து கொண்டிருந்தது.

ஆலயத்தின் வெளியே நெடுநேரமாக நின்று கொண்டிருந்த காவல் தலைவன், ஆதித்தனின் குரலும் அதைத் தொடர்ந்து வாள் முனைகள் உராயும் சத்தமும் கேட்கவே, கதவை அவசரமாகத் திறந்து கொண்டு நுழைந்தான். வெளிச்சமும் உள்ளே நுழைந்தது.

காவல் தலைவன் உள்ளே நுழையவும் டக்கென்று மேலேயிருந்து குண்டோதரன் ஒருவன் அவன் மீது குதித்தான். தடுமாறிப் போன காவல் தலைவனின் கையிலிருந்த தீப்பந்தமும் வேலும் எகிறி விழுந்தன.

தோளின் இருபுறமும் கால்களைப் போட்டுக் கொண்டு உற்சாகமாக உட்கார்ந்து கொண்ட முரடன், காவல் தலைவனின் கழுத்தைத் தன் கனமான கால்களால் இறுக்கத் தொடங்கினான்.

கொஞ்சங் கொஞ்சமாகக் கால்களின் அழுத்தம் கூடி வரவே, காவல் தலைவனின் கழுத்து நரம்புகள் புடைத்துக் கொண்டன. கண்கள் பிதுங்கத் தொடங்கின.

தன்னைச் சுற்றியிருந்த வீரர்களின் வாட்களோடு 'டணார்.. டணார்' என்று ஆதித்தனின் வாள் மோதிக் கொண்டிருந்தது.

அவனைச் சுற்றி வளைத்துக் கொண்டிருந்தவர்கள் வெகு சாதாரணமான ஒரு வீரனோடு சண்டையிடுவதாகத்தான் எண்ணிக் கொண்டிருந்தார்கள்.

போகப் போகத்தான் புரிந்தது– வாள் யுத்தத்தில் அவன் வல்லவன் என்பது. சண்டையிட்டு அவனை வெல்ல முடியாது என்பதும் சந்தேகமில்லாமல் விளங்கியது.

ஆதித்தனின் வாள் திருமாலின் சக்ராயுதம் போல் சுழன்று கொண்டிருக்கும் அழகையும் வேகத்தையும் பார்த்து அந்தப் பெண் அதிசயித்தாள். தான் சந்தித்த ஆடவன் எவ்வளவு பெரிய மாவீரன் என்பதை அவள் கண்கூடாகக் கண்டாள்.

பளபளத்த அவன் வாள் யாரையுமே பக்கத்தில் நெருங்கவிடவில்லை என்பதையும், தன்னுடன் வந்திருக்கும் தீரர்களெல்லாம் அவனிடம் திணறிக் கொண்டிருப்பதையும் தெரிந்து கொண்ட போது அவன் மீது அவளுக்கு ஒரு மரியாதை ஏற்பட்டது.

கன்னத்தில் குறுவாள் கீறியதால் ஏற்பட்ட காயத்தையும் மறந்து, ஆதித்தன் சண்டையிட்ட அழகை அவள் ரசித்துக் கொண்டிருந்தாள்.

ஆதித்தனுடைய வாள் முனைக்குப் பதில் சொல்ல முடியாமல் எதிரிகள் பின்வாங்கத் தொடங்கிய போது காவல் தலைவனின் அலறல் கேட்கவே, சத்தம் வந்த திசையை நோக்கித் தன் பார்வையைத் திருப்பினான் ஆதித்தன்.

தூண் மறைவிலிருந்த பெண், தன் வீரர்களை நோக்கிச் சைகை செய்துவிட்டுக் கோயிலின் வாயிலை நோக்கி நகரத் தொடங்கினாள்.

கால்களைத் தரையில் உதைத்து உந்தி மேலே எழும்பிய ஆதித்தன், காவல் தலைவனின் தோள் மீது உட்கார்ந்து கொண்டிருந்த முரடனுடைய முதுகில் தன் தலையால் ஒரு முட்டு முட்டினான்.





கழுத்தை நெருக்கிக் கொண்டிருந்த காதகன் நழுவிப் போய்த் தொலைவில் விழுந்தான். தள்ளாடித் தரையில் சாய்ந்த காவல் தலைவனை நெருங்கிய ஆதித்தன் அவனுக்கு என்னவாயிற்று என்று அறிந்து கொள்ள முயன்றான்.

அந்தப் பெண்ணும் அவளுடன் வந்திருந்த வீரர்களும் கீழே கிடந்த தீப்பந்தத்தையும் எடுத்துக் கொண்டு ஆலயத்தின் வாசலை நோக்கி ஓடிக் கொண்டிருந்தார்கள்.

தொலைவில் போய் விழுந்து சுவரில் மோதி முனகிக் கொண்டிருந்த முரட்டுக் குண்டோதரன் தன் இடுப்பிலிருந்த குறுவாளை எடுத்து ஆதித்தனை நோக்கிக் குறிபார்த்தான்.

ஆதித்தன் திரும்பினான்.

'பளீர்' என்று ஒரு கத்தி பாய்ந்து வந்து கொண்டிருந்தது.

'படார்.. படார்..' என்று ஆலயத்தின் கதவுகள் அறைந்து சாத்தப்பட்டன.

கும்மென்ற இருட்டு கோயிலின் உள்ளே குடிபுகுந்து கொண்டது.

"ஆ..!" என்று ஓர் அலறல்—

அடங்கப் போகும் உயிரின் ஆவேசம் அந்த அலறலில் வெளிப்பட்டது.

காளிதேவி தனக்குக் காணிக்கையாக்கப்பட்ட முதற் பலியை கம்பீரமாக ஏற்றுக் கொண்டாள்.








# திருவிழா தேவி

அந்தகாரம் ஓர் உயிரைத் தன் ஆகாரமாக்கிக் கொண்டுவிட்டதா..?

எதிரே என்ன இருக்கிறது என்று புலப்படாத இருளில், அருகில் நடந்தது என்ன என்பதையே ஆதித்தனால் அறிந்து கொள்ள முடியவில்லை!

காவல் தலைவனைத் தன் கைகளிலிருந்து அகற்றித் தரையில் விட்டுவிட்டு, மெள்ள மெள்ள நடந்து ஆலயத்தின் வாசலை அடைந்த ஆதித்தன், கைகளால் தடவிப் பார்த்துக் கதவுகளைக் கண்டு பிடித்தான்.

பலங் கொண்ட மட்டும் முயன்று இழுத்த போது பிரும்மாண்டமான அந்தப் பெரிய கதவுகள் திறந்து கொண்டன. வெளியே காய்ந்து கொண்டிருந்த வெண்ணிலவு, கோயிலின் உள்ளே தன் வெளிச்சக் கதிர்களை வீசியது.

கத்தியால் குத்தப்பட்டுக் கடைசி மூச்சைவிட்டுக் கொண்டிருக்கும் குண்டோதரனைக் கண்டதும் அவன் அருகில் நெருங்கினான் ஆதித்தன்.

எந்த நாட்டு வீரனோ தெரியவில்லை— கொற்றவையின் கோயில் வாயிலைக் குருதியால் மெழுகிக் கொண்டிருந்தான்.

கத்தி மார்புக்குக் கீழே அடிவயிற்றில் ஆழமாகப் பாய்ந்திருந்தது. இவன் மீது கத்தியை எறிந்தவர் யார்?

தோள்களைப் பிடித்து ஆதித்தன் தூக்க முயன்ற போது, ஆவி அடங்கிக் கொண்டிருந்த அந்த உடல் நழுவிச் சரிந்தது. வெறித்துப் பார்த்த அந்த விழிகள் அப்படியே அசைவில்லாமல் நின்றுவிட்டன.

காவல் தலைவனை நோக்கிச் செல்வதற்காக ஆதித்தன் காலெடுத்து வைத்த போது, காதுகளைக் கிழித்துவிடுவது போல் கர்ணகடூரமான ஓர் அலறல் திடீரென்று கேட்கவே திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

'பிணமா எழுந்து நிற்கிறது? ஆ..! இதென்ன விந்தை? செத்துக் கொண்டிருந்த முரடன் சீறி எழுந்து இரண்டு கைகளையும் உயர்த்தி எக்காளமிடுகிறானே?'

அஞ்சாத வீரனாகிய ஆதித்தனின் நெஞ்சும் படக்.. படக்— என்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. அந்த முரட்டு உருவம் மீண்டும் பயங்கரமாகக் கூச்சலிட்டபடி ஆதித்தனை நோக்கி முன்னேறியது.

என்ன செய்வதென்று ஒரு முடிவுக்கு வரும் முன்பே அந்த முரட்டு உருவம் அவனுடைய கழுத்தைத் தன் இரண்டு கைகளாலும் கட்டிப் பிடித்துக் கொண்டது.

நினைத்துக்கூடப் பார்க்க முடியாத இந்த நிகழ்ச்சியினால், அதிர்ச்சியும் திகைப்பும் ஆட்கொள்ள யோசனையை அறவே இழக்கும் நிலையிலும், சட்டென்று சுதாரித்துக் கொண்ட ஆதித்தன் தாங்க முடியாத சினத்துடன் அந்த உருவத்தைத் தாக்க முயன்றான்.

அவனுடைய தாக்குதலுக்கு அவசியமே இல்லாமல், கழுத்தில் பதிந்திருந்த அந்த உருவத்தின் கைகள் கொஞ்சங் கொஞ்சமாக நழுவவும், எதிர்பாராத வகையில் தடாலென்று அந்த உருவம் தரையில் சாய்ந்தது.

அதன் பிறகு துள்ளவும் இல்லை— துடிக்கவும் இல்லை. எல்லாம் முடிந்துவிட்டது!

அணையும் முன் அந்த உயிர் நடத்திய ஆர்ப்பாட்டத்தை எண்ணி ஆச்சரியம் கொண்ட ஆதித்தன் மேலும் தாமதிக்காமல், மூர்ச்சையடைந்து கிடந்த காவல் தலைவனைத் தன் தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டு ஆலயத்தைவிட்டு வெளியேறினான். சிறிது தொலைவு நடந்து ஒரு மகிழ மரத்தடியை அடைந்தான்.

மரத்தடியில் அவனைப் போட்டுவிட்டு எங்கோ விரைந்தவன், திரும்பி வந்த போது— அவனுடைய கையில் தீப்பந்தமும் ஒரு குடுவையும் இருந்தன.

குடுவையிலிருந்து கொஞ்சம் தண்ணீரை ஊற்றி மயங்கிக் கிடந்த காவல் தலைவனின் முகத்தில் தெளித்தான்.

கண் விழித்துப் பார்த்த காவல் தலைவன் "இளவரசே!" என்றபடி எழ முயன்றான்.

"இங்கேயே இரு.. இதோ வந்துவிடுகிறேன்" என்று கூறிய ஆதித்தன், தீப்பந்தத்தைக் கையில் எடுத்துக் கொண்டு மீண்டும் ஆலயத்தை நோக்கி விரைந்தான்.

காளி கோயிலின் கதவுகள் வெளியே இழுத்துச் சாத்தப்பட்டிருந்தன!

திறந்து போட்டுவிட்டுத்தானே போனோம்?

யார் சாத்தியது?

கதவைத் திறந்து தீப்பந்தத்தை உயர்த்திப் பிடித்தபடியே ஆலயத்தினுள் பிரவேசித்தான் ஆதித்தன்.

செத்துக் கிடந்த குண்டோதரனைக் காணவில்லை!

ஆதித்தனைக் குறிபார்த்த குறுவாளும் அகப்படவில்லை!

வேக வேகமாய் ஆதித்தன் வெளியே ஓடினான்.

தொலைவில்.. வெகு தொலைவில் ஓர் ஒற்றைக் குதிரை நின்று நின்று போய்க் கொண்டிருக்கும் காலடிச் சத்தம் மட்டும் அவன் காதில் விழுந்தது.

தஞ்சை நகரம் பரபரப்பாகக் காணப்பட்டது. வீர விழாவுக்காக விழாக்கோலம் பூண்டிருந்த நகரத்தின் வீதிகளில் குறுக்கும் நெடுக்குமாகக் குதிரைகள் ஓடிக் கொண்டிருந்தன. பல்லக்குகள் ஊர்ந்து கொண்டிருந்தன.

இடையிடையே ஓரிரு ரதங்களும் பவனி வந்தன! இல்லை.. இல்லை.. பறந்து வந்தன.

வாள் பிடித்த மறவர்களும், வேல் பிடித்த வீரர்களும் வரிசை வரிசையாய் நகரை வலம் வந்து கொண்டிருந்தார்கள்.

வெளியூர்களிலிருந்து வந்தவர்களுக்கும், தஞ்சையின் சுற்றுப்புறக் கிராமத்தைச் சேர்ந்தவர்களுக்கும்— வீதிகள், வீதிகளில் போய்க் கொண்டிருந்த மனிதர்கள்— அவர்கள் ஏறிச் சென்ற வாகனங்கள்— எல்லாமே வேடிக்கையாய் இருந்தன.

“அதோ போகிறாரே— அவர்தான் உறையூர்ச் சிற்றரசர்.”

“யார்.. உத்தமசிலரா?”

“ஆமாம்.”

“இதோ.. இவ்வளவு ஆர்ப்பாட்டமாகப் போகிறாரே இவர் யார்?”

“மெதுவாகப் பேசு. காதில் விழுந்ததோ தொலைந்தாய்.. காராக்ருகத்திலேயே நீ காலம் கழிக்க வேண்டியிருக்கும்.”

“அவ்வளவு செல்வாக்கு உள்ளவரா?”

“ஆமாம்.. அவர்தான் இந்தத் தஞ்சைக் கோட்டைக்கே அதிகாரி. கோட்டைத் தளபதி குன்றத்தூர்க் கிழாரென்றால் அழுத பிள்ளை வாய் மூடும்.”

“சும்மா இருக்கும் பிள்ளை அழ ஆரம்பித்துவிடுமாக்கும்..”

“இந்தக் குறும்புதானே வேண்டாம் என்கிறேன். பழையாறையிலிருந்து வரும் வழியிலேயே பல்லை உடைத்துக் கொண்டு வந்திருக்கிறாய்.. தஞ்சையிலிருந்து திரும்பிப் போகும் போது தலையோடு போக வேண்டாமா?”

“தலையோடு திரும்பிப் போக வேண்டும் என்றுதான் தலைப்பாகை கட்டிக் கொண்டு வந்திருக்கிறேன்.”

“எதற்கு?”

“தலைக்கு வருவது தலைப்பாகையோடு போய்விடுமல்லவா? அதற்காகத்தான்..”

இப்போது இருவருமே சிரிக்கத் தொடங்கினார்கள். சிறிது நேரம் கழித்து முதலில் பேசியவன் எச்சரித்தான்.

“பார்த்துப் பேசு! எதிரி நாட்டு ஒற்றன் என நினைத்து இழுத்துக் கொண்டு போய்விடப் போகிறார்கள். அதோ பார்— அந்த வாலிபன் நம்மையே கவனித்துக் கொண்டிருப்பதை..”

அந்த வாலிபன் நகரத்துக்காரனைப் போலவும் இல்லை. நாட்டுப்புறத்தானாகவும் இல்லை. சிறிய தாடியும் பெரிய மீசையுமாய் முகம் முழுக்க முடி வளர்த்திருந்தான்.

அந்த வாலிபன் அவர்களைக் கவனித்துக் கொண்டிருக்கவில்லை. அவர்களுக்குப் பின்னால் தெரிந்த ஒரு பெண்ணின் முகத்தை ஆராய்ந்து கொண்டிருந்தான்.

வீதியை ஒட்டியிருந்த வீட்டின் திண்ணையில் நின்றபடி வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள் அவள். கையில் தூக்கி வைத்திருந்த குழந்தைக்கு எதை எதையோ காட்டி விளக்கம் சொல்லிக் கொண்டிருந்தாள். இடையிடையே அவள் சிரித்த போது— முல்லை மலர்களால் நெருக்கமாகத் தொடுத்த மாலையிலிருந்து கண்ணிகள் இரண்டினைக் கழற்றி முகத்தின் நடுவே முறுவலென்று வைத்தது போல் இருந்தது.

நீண்ட நேரமாக அவளையே கவனித்துக் கொண்டிருந்த போதும், அந்தப் பாவையின் பார்வை வாலிபனின் பக்கம் திரும்புவதாயில்லை. மெள்ள மெள்ள நகர்ந்த வாலிபன் அங்கே பேசிக் கொண்டிருந்த ஆட்களின் அருகே சென்று நின்றான்.

"ஏனப்பா, எங்களையே கவனித்துக் கொண்டிருக்கிறாய்? நீ சோழ நாட்டு ஒற்றனா?"

"இல்லை ஐயா, நான் ஆனைமங்கலத்திலிருந்து வந்திருக்கிறேன். என் பெயர் கிள்ளி. தஞ்சை நகரின் திக்குத் திசை எதுவுமே எனக்குத் தெரியாது. உங்களுடன் சேர்ந்து விழாவைப் பார்க்க விரும்புகிறேன்."

"வேண்டாம் ஐயா, வேண்டாம். விழாவைப் பார்க்க விரும்புவாய் அழைத்துக் கொண்டு போய்க் காட்ட வேண்டும். சாப்பிட விரும்புவாய்; உணவுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். தூங்க விரும்புவாய்; எந்த வீட்டுத் திண்ணையிலாவது இடம் பிடித்துக் கொடுக்க வேண்டும். ஆகாதய்யா. எங்களால் ஆகாது!" என்று அந்தக் குறும்புக்காரன் பேசிக் கொண்டிருந்த போது, கிள்ளியின் பார்வை தங்கள் பக்கம் இல்லாமல் தங்களுக்குப் பின்னாலிருந்த பெண்களின் பக்கம் பிரவேசித்துக் கொண்டிருப்பதைப் புரிந்து கொண்டான்.

“அடே..! பொல்லாதவனாய் இருக்கிறானே.. கண்களாலேயே கலகம் செய்வான் போலிருக்கிறது. இவன் விழாவைப் பார்க்க விரும்பவில்லை. வேறு எதையோ பார்க்க விரும்புகிறான்! உதை வாங்குவதற்கு வலிமை கிடையாதய்யா நம் உடம்பில்” என்று கூறியபடி தன் சிநேகிதனைத் தள்ளிக் கொண்டு அங்கிருந்து நகர்ந்தான் அந்தக் குறும்புக்காரன்.

பெண்கள் மெதுவாகப் பேசிக் கொண்டிருப்பது கிள்ளியின் செவிகளுக்கும் கேட்டது.

“ஏண்டி! அரசர் இந்தப் பக்கம் வருவாரா?” என்று கேட்டாள் ஒருத்தி.

“வரமாட்டார்.. வரமாட்டார்.. என்று எத்தனை தடவை சொல்லுவது? காலையிலிருந்தே கோட்டை வாசலில் காத்துக் கொண்டிருப்பவர்— உன்னையும் என்னையும் பார்க்கவா ஓடிவரப் போகிறார்?” என்று பக்கத்திலிருந்தவள் பதில் சொன்னாள்.

“நகரத்துக்குள் விழா நடக்கிறது. கொற்றவர் எதற்காகக் கோட்டை வாசலில் நிற்கிறார்?”

“பல்லவச் சக்கரவர்த்தி வருகிறாராம். வாசலில் நின்று அவரை வரவேற்க வேண்டாமா?”

“அதற்காக நம் அரசர் ஏன் காலையிலிருந்தே காத்திருக்க வேண்டும்?”

“அவர்— சக்கரவர்த்தி! இவர் அரசர்! அதனால்தான்.”

“சக்கரவர்த்தி வரப்போவதில்லை. பல்லவ இளவரசர்தான் வரப்போகிறார் என்று சொல்லிக் கொள்கிறார்களே?”

“யார் வந்தால் உனக்கென்னடி? பேசாமல் இரு” என்று அவளை அடக்கினாள் ஒருத்தி.

“அப்படியில்லையடி.. நம் அரசர் அழைத்திருக்கிறார். சக்கரவர்த்தி வருவதுதானே சம்பிரதாயம்! இளவரசரை அனுப்பினால் அது மரியாதையாகுமா? அதனால்தான் ஆதித்தர் கோபித்துக் கொண்டு ஊரைவிட்டே போய்விட்டாராம்.”

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் குழந்தையைத் தூக்கி வேடிக்கை காட்டிக் கொண்டிருந்த பெண் ஆர்வத்துடன்

திரும்பினாள். யாராவது தன்னைப் பார்க்கிறார்களா என்று சுற்றிலும் பார்வையைப் படரவிட்ட போது கிள்ளி தன்னையே கவனித்துக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

அவனை எங்கேயோ பார்த்திருப்பது போல் தோன்றியது.

அவன்தான்! அவனேதான்!

தப்பிச் செல்வது எப்படி என்று யோசித்தாள் அந்தத் தையல்1

கிள்ளியோ, மங்கையை நோக்கி ஒரு புன்னகையை மலரவிட்டான்.

தூக்கி வைத்திருந்த குழந்தையைக் கீழே இறக்கிவிட்டவள், தன் தலையை உள்ளே இழுத்துக் கொண்டாள்.

தாமரைப் பூக்களுக்கு மத்தியில் ஒரு மல்லிகை மறைந்து கொண்டது.

கோட்டையின் வாசலில் வேந்தர் விஜயாலயர் மந்திரிப் பிரதானிகளுடனும் தன் பரிவாரங்களுடனும் பல்லவ நாட்டின் பிரதிநிதியை வரவேற்கக் காத்திருந்தார்.

புலிக்கொடியைக் கையில் ஏந்திக் கொண்டு ஒரு சிறிய குதிரைப் படையினர் அவருக்குப் பின்னால் அணி வகுத்திருந்தனர்.

தொலைவில் மக்கள் கூட்டமும் நெருக்கியடித்துக் கொண்டிருந்தது. அதன் முன்னணியில் கிள்ளி நின்று கொண்டிருந்தான்.

கோட்டை மதில் மீது வைத்திருந்த பிரும்மாண்டமான முரசு முழங்கத் தொடங்கியது. துந்துபி ஊதியது. பேரிகை அதிர்ந்தது.

பல்லவ நாட்டின் பிரதிநிதி வந்துவிட்டார்! குதிரைகளும் அணிவகுத்த வீரர்களும் புடைசூழ, நடுவே நந்திக்கொடி பறக்க, யானை நடந்து வந்து கொண்டிருந்தது.

அம்பாரியின் உள்ளே அமர்ந்திருப்பது யார்? சக்கரவர்த்தி நிருபதுங்கனா? இளவரசன் அபராஜிதனா?

மக்கள் கூட்டத்தின் ஆர்வம் மிகுந்த கண்கள் அலை பாய்ந்தன.

யானை தனது துதிக்கையைத் தூக்கிப் பிளிறியது. தாழ்ந்து வணங்கித் தரை மீது படுத்துக் கொண்டது.

முரசுகளின் ஓசை இடைவிடாது முழங்க— மத்தளம் கொட்ட— வரி சங்கம் நின்றூத—

அம்பாரியிலிருந்து தாவிக் குதித்து இறங்கியது யார்?

சக்கரவர்த்தி நிருபதுங்கனா?

இல்லை!

இளவரசன் அபராஜிதனா?

இல்லை!

பொற்சிலை ஒன்று உயிர் பெற்று வந்தது போல், பூங்கொடி ஒருத்தி பூமியில் இறங்கினாள்.

பாதங்கள் பூமியில் பட்டும் படாமலும் அவள் பவனி தொடங்கியது.

வானவில் வந்து மண்ணில் நடந்தது.

திருவிழாவைக் காண வந்த அந்த தேவி— அசைந்த இடங்களிலெல்லாம் ஓர் அழகின் திருவிழா ஆரம்பமாவது போலிருந்தது!

அந்த ஓவியப் பாவையை உற்றுப் பார்த்த கிள்ளி அளவிட முடியாத அதிர்ச்சிக்கு ஆளானான்.









7



# மல்லிகைப் பந்தல்

அம்பாரியிலிருந்து இறங்கிய அழகி, வீரர்கள் பயபக்தியுடன் விலகி நிற்க.. விஜயாலயரை நோக்கி நடந்தாள்.

சந்திரனும் சூரியனும் சந்தித்துக் கொள்ளும் அந்திப் பொழுதைப் போல் அவளுடைய மதர்ப்பான அழகு ஒரு மயக்கத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தது.

பெண்மையின் நளினம்— ஆண்மையின் கம்பீரம் இரண்டும் அவளிடம் இணைந்தே இருந்தன.

அச்சமும் இல்லை.. நாணமும் இல்லை.. அவளுடைய நடையில் அலட்சியம் இருந்தது!

கோட்டை வாயிலில் கூடியிருந்த மக்கள் கூட்டத்துக்குப் பார்த்த முதற் பார்வையிலேயே பல்லவ இளவரசியைப் பிடிக்காமல் போய்விட்டது.

என்ன ஆணவம்!

வரவேற்பதற்காக விஜயாலயரே வாயிலுக்கு வந்திருக்கிறார். பார்வையில் இவளிடம் பணிவு தெரியவில்லையே!

அகங்காரம்தான் இவள் செய்து கொள்ளும் அலங்காரமோ?

கிள்ளியின் மனநிலையையோ கேட்கவே வேண்டியதில்லை.. அம்பாரியிலிருந்து ஒரு பெண் இறங்குவதைப் பார்த்ததுமே அவனுக்கு ஆவேசம் வந்தது. அலட்சியமான அவளுடைய

நடவடிக்கைகளைக் கண்டதும் சினத்தால் அவனுடைய கண்கள் சிவந்தன.

"பல்லவ நாட்டு இளவரசி.."

"வாழ்க!"

"தஞ்சை கொண்ட கோப்பரகேசரி வர்மர்.."

"வாழ்க!"

பல்லவ வீரர்களும் சோழ வீரர்களும் எழுப்பிய வாழ்த்து முழக்கங்கள் கோட்டைச் சுவரைத் தாண்டி, தஞ்சை நகரத்தின் வீதிகளிலும் சென்று எதிரொலித்தன.

அதோ—

குவிந்த கையும், குளிர்ந்த பார்வையுமாய் நிற்கும் கொற்றவர், இளவரசியை வரவேற்று எதிர்கொள்கிறார்.

பல்லவ நாட்டுப் பைங்கிளி தன் பார்வையை அவர் மீது படரவிடுகிறாள்.

'இவரா அந்த இணையற்ற வீரர்?'

அறுபது வயதைக் கடந்த அரசர் இவர்தானா? முகத்தில் சுருக்கமில்லாமல், முடியில் வெளுப்புமில்லாமல், ஆஜானுபாகுவாய், ராஜ கம்பீரமாய் நிற்கும் வீராதி வீரர் விஜயாலய சோழர் இவர்தானா?

கம்பீரமான அவருடைய தோற்றத்தைக் கண்டதும், பல்லவ இளவரசி வானத்திலிருந்து பூமிக்கு இறங்கி வந்தாள்.

அலட்சியம் அவளிடமிருந்து விடைபெற்றுக் கொள்ள, ஆச்சரியம் அவள் விழிகளில் குடியேறியது.

மாமல்லபுரத்தில் எத்தனையோ மகா வீரர்களின் சிற்பங்களைப் பார்த்து அந்த அழகி அதிசயித்திருக்கிறாள். ஆனால், இதோ கண்ணெதிரே விஜயாலயரின் வீரத்திருமேனி செதுக்கப்படாத ஒரு சிற்பமாய் நிற்கிறதே!

அவளறியாமலே அவளுடைய கைகள் குவிந்து அந்த மகாவீரருக்கு வணக்கம் செலுத்தின. தன்னையறியாமல் அவள் தலையும் தாழ்ந்து பணிந்தது.

பல்லவ இளவரசி தங்கள் மன்னனுக்குச் செலுத்திய மரியாதையைக் கண்டவுடன், மக்கள் கூட்டம் மகிழ்ச்சியால்

ஆரவாரம் செய்தது. திகைப்பிலிருந்து விடுபட்ட இளவரசி சுற்றிலும் தன் கண்களைச் சுழலவிட்டாள்.

“வரவேண்டும் இளவரசி! வரவேண்டும்” —வெண்கலக் குரலில் வரவேற்றார் விஜயாலயர்.

“சக்கரவர்த்தியை எதிர்பார்த்திருப்பீர்கள்..” என்று சமத்காரமாகப் பேசினாள் இளவரசி.

விஜயாலயர் தன் வலது கையை மெல்ல உயர்த்தினார். அவரது கட்டளையைப் புரிந்து கொண்டு வீரர்களின் கூட்டம் விலகி நின்றது. தங்கள் பேச்சு சுற்றியிருப்பவர்களுக்குக் கேட்காது என்பதை உறுதி செய்து கொண்ட பின்,

“என்ன கேட்டீர்கள் இளவரசி..?” என்று விநயமாக வினவினார் விஜயாலயர்.

“வீரத்திருவிழாவிற்குப் பல்லவச் சக்கரவர்த்தி வருகை புரிவார் என்று நீங்கள் நினைத்திருப்பீர்கள்!”

“இல்லை” என்று புன்னகை புரிந்தார் விஜயாலயர்.

“இளவரசர் அபராஜிதனாவது வருவார் என்று எதிர் பார்த்திருப்பீர்கள்..” என்றாள்.

“இல்லை” என்று விஜயாலயர் கம்பீரமாகத் தலையசைத்ததும் அவளுக்கு ஏமாற்றமாகப் போய்விட்டது.

“பல்லவ நாட்டின் பிரதிநிதியாக இளவரசி வருவாள் என்று கனவிலும் நீங்கள் கருதியிருக்கமாட்டீர்கள்” —இந்த வார்த்தைகளைக் கூறிய போது, விஜயாலயர் இதை மறுக்கவே முடியாது என்ற உறுதி அவள் முகபாவத்தில் முகாமிட்டிருந்தது.

“அதுவுமில்லை!” என்று சொல்லிவிட்டுச் சிரித்தார் சோழ மன்னர்.

பல்லவ இளவரசி இந்தப் பதிலைக் கேட்டதும் வியப்புக்குள்ளானாள்.

“அப்படியானால் நான்தான் வரப்போகிறேன் என்பது தங்களுக்குத் தெரியுமா?”

“தெரியும்!”

ஐயத்துடன் அவரை ஏறிட்டுப் பார்த்தாள்.

"நம்பிக்கை வரவில்லை போலிருக்கிறது ராஜகுமாரிக்கு!" என்ற விஜயாலயர் விவரித்தார்.

"பல்லவ அரச குடும்பத்தினர் தங்குவதற்கு நாங்கள் ஒதுக்கியிருக்கும் மாளிகையின் பெயர் என்ன தெரியுமா?"

என்ன? என்று அவள் கேட்கவில்லை. விஜயாலயரே விளக்கினார்.

"மல்லிகைப் பந்தல்! ஆம், அதுதான் அந்த மாளிகையின் பெயர். பந்தல் எதற்கு? கொடி படர்வதற்கு! புலிக்கொடி பறக்கும் தஞ்சைக்குப் பூங்கொடி வரப்போகிறது என்பதைப் புரிந்து கொண்டுதான் மல்லிகைப் பந்தலை ஏற்பாடு செய்தேன்."

"வரப்போவது யார் என்பது குறித்து ஓலை எதுவும் வரையப்படவில்லையே.."

"ஓலை அனுப்பப்படவில்லை. ஆனால், சேலை அனுப்பப்பட்டது" என்று புதிர் போட்டுவிட்டு விஜயாலயர் புன்னகைத்தார்.

"சேலை அனுப்பப்பட்டதா?" என்று திகைப்புடன் கேட்டாள் இளவரசி.

கொஞ்சநேரம் அவளைக் குழப்பத்தில் ஆழ்த்திய பின் விஜயாலயரே புதிரை விடுவித்தார்.

"சக்கரவர்த்தி வரமாட்டார் என்பதை ஓரளவு நானே ஊகித்திருந்தேன். இளவரசர் அபராஜிதனைத்தான் எதிர்பார்த்தேன். இரண்டு நாட்களுக்கு முன்பே உங்கள் பரிவாரங்கள் வந்து இறங்கிவிட்டன. தஞ்சை அரண்மனையைச் சேர்ந்த விருந்தினர் மாளிகையில் அவர்கள் தங்கினார்கள்.

பல்லவ இளவரசருக்காகத் தனியே ஒரு மாளிகை தயாராக இருந்தது.

காஞ்சியிலிருந்து வந்திருந்த இரண்டு பெரிய பேழைகள் அந்த மாளிகைக்குக் கொண்டு செல்லப்பட்டன. அரச குடும்பத்தினரின் ஆடைகளும் அணிமணிகளும் அடங்கிய அந்தப் பேழைகள் காஞ்சியிலிருந்து வரும் வழியில் எங்கோ சேதம் அடைந்திருக்க வேண்டும்.

எங்கள் வீரர்கள் அவற்றை இறக்கி வைக்கும் போது தற்செயலாகப் பேழைகள் திறந்து கொண்டன. உள்ளே.."என்று சொல்லிவிட்டு நிறுத்தினார் விஜயாலயர்.

"என்ன இருந்தது?" என்று ஆர்வத்துடன் கேட்டாள் இளவரசி.

தன் பிடிவாதத்திலிருந்து இறங்கி வந்த பிரியமான குழந்தையைப் பார்ப்பது போல் இளவரசியைப் பார்த்துக் குறுநகை செய்த விஜயாலயர் கூறினார்: "அந்தப் பேழைகளில் அரசகுமாரர்கள் அணியும் அங்கிகள் இல்லை; எண்ணத்தைக் கவரும் வண்ணத் துகில்கள் இருந்தன! உடை வாள் முதலிய ஆயுதங்கள் இல்லை. ஒய்யாரமாக அணிந்து கொள்ளும் ஆபரணங்கள் இருந்தன. செய்தி காதுகளுக்கு வந்து சேர்ந்த போதே முடிவு செய்துவிட்டேன் பல்லவ நாட்டுப் பிரதிநிதியாக வரப்போவது யாரென்று" இளவரசியை உற்றுப் பார்த்தன விஜயாலயரின் விழிகள்.

தன் கண்களை அவள் தாழ்த்திக் கொண்டாள். "ஐயா! வீரத்திலும் விவேகத்திலும் விஜயாலயரை வெல்ல முடியாதென்பது பல்லவ நாட்டிலும் பரவியிருக்கிறது! உண்மைதான், நானும் இப்போது ஒப்புக் கொள்கிறேன்!" என்று அவள் புகழ்ந்த போது, அவள் அணிந்திருந்த அதிகார தோரணையைக் கொஞ்சம் அகற்றியது போலிருந்தது.

"புறப்படலாமா இளவரசி?" என்று புன்னகையுடன் கேட்டார் மன்னர்.

தயாராக நின்று கொண்டிருந்த ரதத்தில் இளவரசி ஏறிக்கொள்ள, இருபுறமும் குதிரை வீரர்கள் அணிவகுத்துச் செல்ல, ரதத்தின் முன்னே விஜயாலயர் தன் புரவியின் மீது கம்பீரமாக வீற்றிருந்தார்.

முரசுகள் மீண்டும் முழங்கின. பல்லவ இளவரசியின் பவனி தொடங்கியது.

நெருங்கி நெருங்கி முன்புறமாக வந்த கிள்ளி, கூட்டத்தோடு கூட்டமாய்ப் பக்கத்தில் நின்றபடி பல்லவ இளவரசியைப் பார்வையிட்டான்.

அப்போது விஜயாலயரின் விழிகள் ஓரிரு முறை அவனை உற்றுப் பார்த்ததைக் கிள்ளி உணரவில்லை.

பளிங்கில் செதுக்கி வைத்தது போல் பல்லவ இளவரசியின் முகம் பளபளப்பாக இருந்தது. பௌர்ணமி நிலவைப் போல் ஒளிவீசிக் கொண்டிருந்த பாவையின் முகத்தில்.. இடது கன்னத்தில்..

என்ன அது..?

செம்பஞ்சுக் குழம்பெடுத்துச் சித்திரத்தில் இழுத்தது போல் ஒரு சிவப்புக் கோடு!

'செவ்வரியோடிய கண்' என்று அவன் படித்திருக்கிறான். 'செவ்வரியோடிய கன்னம்' என்று எந்த இலக்கியத்திலும் இல்லையே..

கோதையின் கன்னத்தில் இட்ட குங்குமக் கோலமா இது?

இல்லை..

இது—

கத்தியால் ஏற்பட்ட காயம்!

குறுவாள் கிழித்த கோடு!

அப்படியானால்..?

அளவில்லாத அதிர்ச்சியடைந்தான் கிள்ளி!

"டேய்.. நில்லு!"

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

அவள்தான்! அந்த அழகிதான்!

குழந்தையைத் துரத்தியபடி ஓடிக் கொண்டிருந்தாள். குழந்தையோ கூட்டத்தின் நடுவில் புகுந்து கொண்டு கையில் அகப்படாமல் அவளுடன் கண்ணாமூச்சி ஆடியது.

ஆவேசம், அதிர்ச்சி எல்லாம் மறைந்து அவளைப் பார்த்தவுடன் தன் உடலெங்கும் ஓர் உற்சாகம் ஊடுருவுவதைக் கிள்ளி உணர்ந்தான்.

"பல்லவ நாட்டு மோகினியைப் பார்த்தவுடன் பயலுக்குத் தலைகால் புரியவில்லை போலிருக்கு. அளவு மீறி ஆட்டம் போடுகிறான்" —அன்பாகக் குழந்தையை அர்ச்சனை செய்து கொண்டிருந்தாள் அவள்.

குழந்தையை மட்டும் சொல்கிறாளா அல்லது தன்னையும் சேர்த்துக் கிண்டல் செய்கிறாளா என்று கிள்ளி குழப்பம் அடைந்தான்.

கலைந்து கொண்டிருந்த கூட்டம் அவளுடைய வார்த்தைகளைக் கேட்டு ரசித்துச் சிரித்துவிட்டுச் சென்றது.

எதிரில் வந்தவர்களை விலக்கிக் கொண்டு கிள்ளி வேகமாகப் பாய்ந்தான். ஓடிப்போய் அந்தக் குழந்தையைத் தூக்கிக் கொண்டான்.

கிள்ளியின் தோளில் உயரமாக உட்கார்ந்து கொண்டு சிறுவன் அவளைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தான். கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு வந்தவள் கிள்ளியைப் பார்த்ததும் திகைத்து நின்றாள். நெருங்க முடியாமல் அவள் அங்கேயே நிற்பதைப் பார்த்தவுடன் குழந்தைக்கு ஒரே கொண்டாட்டமாகப் போய்விட்டது.

"இரு உன்னை அப்புறம் பேசிக் கொள்கிறேன்" என்பது போல் அவள் சைகை செய்தாள். குழந்தையோ "வா.. பார்க்கலாம், வா.. பார்க்கலாம்" என்று சரியான நேரம் பார்த்துச் சவால்விட்டது.

கூட்டத்திலிருந்து கொஞ்சம் ஒதுங்கி நின்று, குழந்தையை முறைத்துக் கொண்டிருந்தாள்.

கிள்ளி அவளை நெருங்கினான்.

"உனக்குக் குழந்தை வேண்டுமா?" என்று கேட்டான் கண்களைச் சிமிட்டியபடி.

"என்ன..?" என்ற அவள் எரித்துவிடுவது போல் பார்த்தாள்.

"இந்தக் குழந்தை உனக்கு வேண்டுமா என்று கேட்டேன்!" என்று சிறுவனைக் காட்டினான் கிள்ளி.

"பொருத்தமாகத்தான் இருக்கிறது" என்றாள்.

"எது?"

"போட்டுக் கொண்டிருக்கும் புதிய வேடம்" என்று கூறிவிட்டு அவனையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தவள், "தொடக்கத்தில் செய்து கொண்டிருந்த தொழில் துலங்கவில்லை போலிருக்கிறது. இந்தத் தொழிலை எப்போது தொடங்கினீர்கள்?" என்று இடக்காகக் கேட்டாள்.

"தொழிலா?" என்று விவரம் புரியாமல் கேட்ட கிள்ளி, அவள் எத்தனை பெரிய ஆபத்தில் தன்னை இழுத்துவிடப் பார்க்கிறாள் என்பதை அப்போது அறியவில்லை.

வேண்டுமென்றே அவள் சத்தமாகப் பேசினாள்:

"குதிரைகளைத் திருடுவதில் வருவாய் குறைந்துவிட்டதா? அடடா..! அதனால்தான் குழந்தைகளைத் திருட ஆரம்பித்துவிட்டீர்களாக்கும்.." என்று அவள் அனுதாபமாகக் கேட்ட போது, வழக்கம் போல் அவள் கிண்டல் செய்வதாகத்தான் கிள்ளி நினைத்தான்.

ஆனால், அவளுடைய வார்த்தைகள் எப்படிப்பட்ட விபரீதத்தை ஏற்படுத்தக் கூடியவை என்பதை அடுத்து நடந்த நிகழ்ச்சிகள் அவனுக்கு அறிவித்தன.



உரத்த குரலில் பேசியதால்— அருகில் போய்க் கொண்டிருந்தவர்களும் அவளுடைய வார்த்தைகளை அரைகுறையாகக் கேட்க நேர்ந்தது. சிலர் அவர்களைத் திரும்பிப் பார்த்தார்கள். ஒரு சிலர் அவனை நெருங்கியும் வந்தனர்.

வேலேந்திச் சென்று கொண்டிருந்த காவல் வீரன் ஒருவனும் அவர்களைக் கவனிக்கத் தொடங்கினான்.

ஆபத்தை உருவாக்கிவிட்டாள் அழகி என்பதை அறிந்து கொண்ட கிள்ளி, தோளிலிருந்த குழந்தையைத் தூக்கி அவளிடம் நீட்டினான்.

குழந்தையை வாங்கிக் கொள்ள அவள் எந்த முயற்சியிலும் ஈடுபடவில்லை.

கிள்ளி, குழந்தையை இறக்கி அவள் அருகில் விட்டுவிட்டு அங்கிருந்து நழுவ முயன்றான். குழந்தையோ அவனைவிட்டுப் போகமாட்டேன் என்று அடம் பிடித்தது.

ஆட்கள் நெருங்கிக் கொண்டிருந்தார்கள். வேலேந்திய வீரனும் அவர்களை நோக்கி விரைந்து வந்து கொண்டிருந்தான்.

"உமக்குக் குழந்தை வேண்டுமா?" என்று கிள்ளியைப் பார்த்துக் கண்களைச் சிமிட்டியபடி கிண்டலாய்க் கேட்டாள் அவள்.

குப்புறத் தள்ளிய குதிரை குழியையும் பறித்துவிட்டதென்பதை உணர்ந்து கொண்ட கிள்ளி, தப்பிச் செல்ல வழியறியாது தவித்தான்.









8



# இதயக் கதவு

விஜயாலயர் பல்லவ இளவரசியை எதிர்கொண்டு கோட்டையின் உள்ளே அழைத்துச் சென்றவுடன் திரளாகக் கூடியிருந்த மக்கள் கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துவிட்ட போதிலும், முழுவதும் கலையாமல் அங்கங்கே திட்டுத் திட்டாக இன்னும் தேங்கியிருந்தது. அந்தக் கூட்டத்தைச் சுற்றிலும் பார்வையைப் படரவிட்டபடி கிள்ளி பரிதாபமாக விழித்துக் கொண்டிருப்பதையும், அவனை நோக்கி ஆட்கள் வேகமாக வந்து கொண்டிருப்பதையும் பார்த்துக் குறும்பு நகை செய்தாள் அந்தக் கோதை.

"ஐயா! அரண்மனை வீரரே! குதிரைமேல் வந்த குபேரரே! குழந்தையைக் காப்பாற்றிய குணாளரே! புதிய வேடத்தில் வந்திருக்கும் புருஷோத்தமரே! அன்று என் பெயர் என்ன என்று கேட்டீர்களே.. இதோ வருகிறார்கள்.. உங்கள் பெயர் என்ன என்பதைச் சொல்லுங்கள். நானும் தெரிந்து கொள்கிறேன்.." என்று மெல்லிய குரலில் கூறிவிட்டுச் சிரிக்கத் தொடங்கினாள் அவள்.

அதற்குள் அவர்களைச் சுற்றிச் சூழ்ந்து கொண்ட கூட்டத்தில் ஒருவன், "என்னம்மா.. குழந்தையைத் திருடுகிறான் என்று சத்தம் போட்டாயே!" என்று அவளிடம் கேட்கவும், "அவரையே கேளுங்கள்" என்று கிள்ளியைச் சுட்டிக்காட்டினாள் அவள்.

வேலேந்தி வந்த வீரனோ விரைந்து நெருங்கி, "குதிரைத் திருடன் என்று காதில் விழுந்ததே.. இவன்தானா?" என்று அதிகாரமாகக்

கேட்டபடி கிள்ளியை ஒரு கையால் பற்றினான். கிள்ளியை வீரன் பற்றியதும் கூட்டம் விலகிக் கொண்டது. பரபரப்போடு வேடிக்கை பார்க்கத் தொடங்கியது.

காவல் வீரன் தன் மீது கை வைத்தவுடன் கிள்ளிக்கு எங்கிருந்துதான் அந்த ஆவேசம் வந்ததோ தெரியவில்லை. "கையை எடு" என்று கர்ஜித்தான்.

அதிகாரமான அந்தக் குரலைக் கேட்டதும் காவல் வீரன் சற்றுத் திகைத்தாலும், விஜயாலயருடைய படை வீரனாகிய தன்னை, வீதியில் போகிற ஒருவன் மிரட்டுவதா என்ற வீம்பு மேலோங்க, "கையை எடுக்காவிட்டால்..?" என்று கேட்டான்.

"தொட்ட கை துண்டிக்கப்படும்! ஒற்றைக் கை மனிதனாக நாளை நீ உலவ வேண்டி வரும்" என்ற கிள்ளி, தன்னைப் பற்றிக் கொண்டிருந்த வீரனின் கையை ஓங்கி உதறிவிட்டான்.

கிள்ளியின் நடவடிக்கைகளால் காவல் வீரன் கடுங்கோபம் கொண்டாலும், அலட்சியமும் அதிகாரமும் கொண்ட கிள்ளியின் தோரணை அவனைச் சற்றே தயங்க வைத்தது.

கூட்டத்திலிருந்தவர்களோ கிள்ளியின் துணிவைப் பார்த்துப் பிரமிப்பில் மூழ்கியிருந்தார்கள்.

தொலைவிலிருந்த காவலர்களைக் கூவி அழைக்க முயன்றான் காவல் வீரன்!

கிள்ளி அவனுடைய கையிலிருந்த வேலைச் சட்டென்று பிடுங்கி அதன் கூரிய முனையை அவன் கழுத்தில் வைத்தபடி,

"பிற காவல் வீரர்களை அழைக்க முயற்சி செய்யாதே. இது குடும்பச் சண்டை. நீ தலையிடுவது தகாது. வீரத்திருவிழா நடைபெறும் மகிழ்ச்சியான வேளையில் கோட்டை வாயிலின் முன் ஒரு குழப்பத்தை உண்டாக்கினால் மன்னர் பெருமான் உன்னை மன்னிக்கமாட்டார்" என்று எச்சரித்துவிட்டு, வேலை மேலே தூக்கி வீசினான். சுழன்று வந்த வேலை லாவகமாகத் தன் கையில் பிடித்து ஒரு சுழற்றுச் சுழற்றிவிட்டுக் காவல் வீரனின் கைகளிலேயே அதைக் கொடுத்துவிட்டான்.

கூட்டம் அவனை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தது. குழந்தையைக் கையில் தூக்கிக் கொண்டிருந்த கோதையோ அவனைப் பார்த்து ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தாள்.

சுவாரஸ்யமாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த மக்களைப் பார்த்து, “ஐயா, நீங்களே இந்த அநியாயத்தைக் கேளுங்கள்..” என்று கிள்ளி ஆரம்பித்ததும், அவளுடைய ஆச்சரியமும் அதிகரித்தது. அவன் என்ன சொல்லப் போகிறான் என்று அறிந்து கொள்வதில் அந்த அழகிக்கும் ஆர்வம் ஏற்பட்டது.

“ஐயா! குழந்தைதான் விவரமில்லாமல் குதிரை வேண்டும் என்று கேட்கிறது. எங்கிருந்து நான் வாங்கிக் கொடுப்பது? சின்னப் பிள்ளை போல் இந்தப் பெண்ணும் அடம் பிடித்தால் என்ன செய்வது? திருடியாவது குதிரையைக் கொண்டு வந்து குழந்தைக்குக் கொடு என்று இவள் கூறுகிறாள். தவறல்லவா..?” என்று கிள்ளி கேட்டதும் அந்த அழகி அப்படியே அயர்ந்துவிட்டாள்.

கூட்டத்திலிருந்தவர்கள் “தவறு தாயே.. தவறு! குழந்தை கேட்கிறது என்பதற்காகக் குதிரையைத் திருடச் சொல்வது மாபெரும் தவறு” என்றார்கள்.

எதுவும் செய்ய இயலாத எரிச்சலுடன் கிள்ளியை முறைத்துப் பார்த்தபடியே அங்கிருந்து நகர்ந்தான் காவல் வீரன்.

“ஐயா, இந்த ஆளை நம்பாதீர்கள்! திருவிழாக் கூட்டத்தில் குழந்தையைத் திருடிச் செல்லப் பார்த்தார். அகப்பட்டுக் கொண்டதால்– அப்படி இப்படி அளந்துவிடுகிறார்” என்று மறுபடியும் கிள்ளியை மடக்க முயன்றாள் மங்கை.

“அப்படியா! இந்தப் பிள்ளையாண்டானைப் பார்த்தால் பிள்ளை பிடிக்கிறவன் மாதிரி தெரியவில்லையே!” என்று கூட்டத்திலிருந்த பெரியவர் ஒருவர் பரிந்து பேசினார்.

“ஐயா, யாராவது தங்களுக்குச் சொந்தமுள்ள குழந்தையைத் தாங்களே திருடுவார்களா? கோபத்தில் இவள் இப்படிக் குற்றம் சாட்டலாமா?” என்று கிள்ளி அந்தப் பெரியவரிடம் பரிதாபமாகக் கேட்டான்.

கிள்ளியைப் பற்றிப் புகார் சொன்ன போதுகூட ‘அவர்’, ‘இவர்’ என்றே அவள் மரியாதையுடன் பேசியதைக் கவனித்து ஐயமுற்றிருந்த கூட்டத்தினர், அவனுடைய வார்த்தைகளைக் கேட்டவுடன், “என்னம்மா இது..? வீட்டுச் சண்டையை இப்படி வீதிக்குக் கொண்டு வரலாமா?” என்று அவளைக் குற்றம் சாட்டினார்கள்.

கோபம் கொண்டது போல் நடித்த குறுநகையாள், “இந்தக் குழந்தை அவருடைய குழந்தையா என்று நீங்களே கேளுங்கள்” என்று ஒரு போடு போட்டாள்.

பதில் சொல்ல இயலாமல் அவன் திணறிப் போவான் என்று பாவை எதிர்பார்த்தாள்.

கிள்ளியோ எவ்விதத் தயக்கமும் இல்லாமல், “இந்தக் குழந்தை எனக்கும் குழந்தைதான்! இவளுக்கும் குழந்தைதான்!” என்று கூறிவிட்டு, அவளுடைய காதில் மட்டும் கேட்கும்படி, “குழந்தை என்றால் எல்லோருக்குமே குழந்தைதான். எனக்கு மட்டும் அது வாலிபனாகிவிடுமா?” என்று முணுமுணுத்தான்.

சமத்காரமான அவனுடைய வார்த்தைகளை உள்ளூர ரசித்தாலும், “இந்தக் குழந்தைக்கும் இந்த ஆளுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை” என்று உறுதியாக அவள் உரைத்தாள்.

“உனக்கும் எனக்கும் வேண்டுமானால் இப்போது சம்பந்தம் இல்லாமல் இருக்கலாம். ஆனால், எனக்கும் குழந்தைக்கும் சம்பந்தம் இல்லை என்று நீ எப்படிச் சொல்லலாம்?” என்று கிள்ளி கோபமாகக் கேட்டான்.

கூட்டத்திலிருந்த இளைஞன் ஒருவன், “ஒரே குழப்பமாக இருக்கிறதே!” என்றான்.

“பெண் என்றாலே குழப்பம்தானே!” என்று கிள்ளி கூறவும், கூடியிருந்த கூட்டம் கொல்லென்று சிரித்தது.

அந்த அழகி கிள்ளியை முறைத்துவிட்டுக் கூட்டத்தினரிடம் முறையிட்டாள். “குழந்தைக்கும் இவருக்கும் சம்பந்தம் இருந்தால் அதை நிரூபிக்கச் சொல்லுங்கள்!”

“நிருபித்துவிட்டால்..?” என்று சவால்விட்டான் கிள்ளி.

“நிரூபித்துவிட்டால் உங்கள் வார்த்தைகளுக்கு நான் கட்டுப்படுகிறேன்” என்று அவளும் சவால்விட்டாள்! எப்படி இவன் நிரூபிக்க முடியும் என்ற அலட்சியம் அவளிடம் தெரிந்தது.

இருவரும் சவால்விட்டுக் கொண்டவுடன் கூட்டம் மிகவும் உற்சாகமடைந்தது. ஒரு மல்யுத்தத்தைப் பார்க்கும் ஆர்வம் ஏற்பட்டது அந்தச் சொல்யுத்தத்தில்.

"இதோ நிரூபிக்கிறேன்" என்று கூறிய கிள்ளி, சுற்றியிருப்பவர்களை நோக்கிக் கம்பீரமாகத் தன் விழிகளைச் சுழலவிட்டான். அவள் மீதும் ஓர் அலட்சியப் பார்வையை வீசினான். ஆரம்பத்திலிருந்தே அவனுடைய சாமர்த்தியத்தையும், சாதுரியத்தையும் மனத்துக்குள் ரசித்துக் கொண்டிருந்த மங்கை, இந்தச் சவாலை எப்படி அவன் எதிர்கொள்ளப் போகிறான் என்று மிகுந்த எதிர்பார்ப்புடன் காத்திருந்தாள்.

அவனோ அந்த இறுதிச் சோதனையை மிக எளிதாக வெற்றி கொண்டான்.

அவளுடைய இடுப்பிலிருந்த குழந்தையை நோக்கித் தன் இரு கைகளையும் நீட்டினான். கூட்டம் பரபரப்புடன் கவனித்துக் கொண்டிருந்த போதே குழந்தை தாவி வந்து அவனுடைய கழுத்தைக் கட்டிக் கொண்டது.

"குழந்தைக்கும் எனக்கும் சம்பந்தம் உண்டு என்பதை இப்போதாவது ஒப்புக்கொள்கிறாயா?" என்று வெற்றிப் பெருமிதத்துடன் அவள் மீது விழிகளைச் செலுத்திய கிள்ளியிடம் வேறு வழியின்றி அவள் தன் தோல்வியை ஒப்புக்கொள்ள நேர்ந்தது. இருப்பினும், அந்த அழகி ஆத்திரம் கொண்டவள் போல் குழந்தையைத் தன்னிடம் அழைத்துப் பார்த்தாள்; அதட்டிப் பார்த்தாள். 'வரமாத்தேன்' என்று குழந்தை தலையை ஆட்டி அவளிடம் போக மறுத்தது.

"சரி, புறப்படம்மா. வீட்டுக்குப் போய் மற்ற விவகாரத்தையெல்லாம் வைத்துக் கொள்! கட்டிய கணவனோடு இப்படிக் கலகம் செய்யக்கூடாது" என்று அவளைப் பார்த்து அறிவுரை சொல்லிவிட்டு அனைவரும் அங்கிருந்து நகர ஆரம்பித்தனர். சுற்றியிருந்தவர்கள் கலைந்து சென்று நீண்ட நேரமாகியும், தன் நீலோற்பல விழிகளால் கிள்ளியை நிமிர்ந்து பார்ப்பதும், அவன் பார்வை தன் மீது படும்போது குனிந்து கொள்வதுமாய்த் திருக்குறளின் இன்பத்துப் பாலுக்குக் கண்களால் உரை எழுதிக் கொண்டிருந்தாள் அந்தக் காரிகை.

"பெண்ணே! பெரியவர்கள் கூறியதைக் கேட்டாய் அல்லவா? கணவனோடு கலகம் செய்யக் கூடாது" என்று கிண்டல் செய்தான் கிள்ளி.

"என்ன?" என்று அவள் கோபமுற்றவள் போல் கேட்கவே, "இல்லை.. கனவானோடு கலகம் செய்யக் கூடாது" என்று அவன் மாற்றிச் சொன்னதும் அவளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

கோட்டையின் உட்புறத்திலிருந்து பலத்த ஆரவாரங்களும் முழக்கங்களும் கேட்டன. பேரிகைகள் அதிர்ந்தன. திடீரென்று எழுந்த ஒலிகளில் கவனத்தைச் செலுத்திய அழகியிடம், "வேந்தரும் பல்லவ இளவரசியும் கொற்றவை கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்துவிட்டுப் பட்டத்து யானையின் மீதேறி நகர் உலா வருகிறார்கள் போலிருக்கிறது. உள்ளே சென்று பார்க்கலாமா?" என்று பரிவுடன் கேட்டான் கிள்ளி.

"வேண்டாம்! உங்களையும் என்னையும் சம்பந்தப்படுத்தி ஊரார் ஏதேதோ உளறிவிட்டுப் போயிருக்கிறார்கள். உங்களுடன் சேர்ந்து திருவிழாக் காண வந்தால்— உளறல்களை நானும் ஒப்புக் கொண்டது போல் ஆகிவிடும்" என்று ரகசியமான குரலில் அவள் கூறிய போது.. அவளுடைய குங்கும முகத்தில் நாணம் கோலமிடுவதை அவன் உணர முடிந்தது.

கிள்ளியிடமிருந்த குழந்தை, கோட்டையின் உட்புறத்தே எழுந்த முழக்கங்களைக் கேட்டுவிட்டுக் கீழே இறங்கிக் கைகளைக் கொட்டிக் கொண்டு குதித்தது. குழந்தையின் கையைப் பற்றி அழைத்துக் கொண்டு அவள் புறப்படத் தயாரானாள்.

கனிவான குரலில் கிள்ளி அவளிடம் கேட்டான்: "பெண்ணே! இன்றாவது உன் பெயரைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு எனக்கு வழங்கப்படுமா?"

வீர வாலிபனின் வேண்டுதலில் நேரிழை நெகிழ்ந்தாள். கொஞ்ச நேரத்துக்கு முன் அவனிடம் கோபம் கொண்டது போல் காட்டிக் கொண்டிருந்தவள், வசந்தத்தை எதிர்கொள்ளும் ஒரு சின்ன மலர்ச் செடிபோல் இப்போது சிலிர்த்தாள்.

இறுக்கிப் பூட்டப்பட்டிருந்த அவளுடைய இதயக்கதவின் தாழ்ப்பாள்கள் மெதுவாகத் தளரத் தொடங்கின.

"பெயரை மட்டுமல்ல.. என் கதையையே சொல்கிறேன். அதற்கு முன் நீங்கள் யார் என்ற உண்மையைச் சொல்ல வேண்டும்."

"என் பெயர் கிள்ளி. வீர விழாவைக் காண்பதற்காக ஆனைமங்கலத்திலிருந்து வந்திருக்கிறேன்."

“பொய்! நீங்கள் புனைந்திருக்கும் இந்த வேடத்தை நான் நம்பவில்லை. அரண்மனை வீரன் என்று சொல்லிக் கொண்டு அன்று வேகவேகமாகக் குதிரையை விரட்டிக் கொண்டு வந்தீர்களே அந்த வேடத்தையும் நம்பவில்லை” என்று புன்னகை பூத்தாள் பூவை.

“பெண்ணே! அதோ தொலைவில் தெரிகிறதே தோப்பு— அங்கே போய்ப் பேசலாமா? ஆள் நடமாட்டம் இருக்காது..” என்றான் கிள்ளி.

“வேண்டாம். ஆள்நடமாட்டம் இருக்கும் இடத்திலேயே ஆள் மாறாட்டம் செய்பவரை நம்பி ஒரு பருவப்பெண் தனியாக வரக்கூடாது.”

“நானொன்றும் உன்னைக் கடித்து விழுங்கிவிடமாட்டேன்.”

“வாய்தான் வாக்குறுதியளிக்கிறது. கண்கள் அதைப்பற்றிக் கவலைப்படவில்லையே!”

“என் கண்கள் உன்னை என்ன செய்துவிட்டன?”

“எதைச் செய்யமாட்டேன் என்று உங்கள் வாய் உரைத்ததோ அதை உங்கள் கண்கள் செய்து கொண்டிருக்கின்றன” என்று கூறிவிட்டுக் காற்றில் அலைபாய்ந்த தன் கூந்தலைக் கையால் ஒதுக்கிவிட்டாள்.

ஒரு கையை உயர்த்திக் கூந்தலை அவள் ஒதுக்கிக் கொண்ட போது அவளுடைய உடலழகு தன் ஒய்யாரத்தைக் காட்டியது. குனிந்து பேசிக் கொண்டிருந்தவள் கொஞ்சம் நிமிர்ந்ததனால் தன் எழுச்சியைப் புலப்படுத்திய இளமை அந்த இளைஞனின் உள்ளத்தை ஏங்க வைத்தது.

தன் கண்களை அவள் குற்றம் சாட்டியதில் தவறில்லை என்பதை அவனே உணர்ந்து கொண்ட போதும், செழிப்புடன் வீறாப்பாக நின்ற அந்த அழகைவிட்டுத் தன் விழிகளை அவனால் விலக்க முடியவில்லை.

“இதோ! உங்கள் கண்களைப் பாருங்களேன்.. இமைக்கிற போது இமைகளால் என்னைக் கடிக்கின்றன! இமைக்காமலிருக்கும் போது விழிகளால் என்னை விழுங்குகின்றன!” என்று நாணத்துடன் கூறினாள் அந்த நங்கை.

“ஆகா! என்ன அற்புதமான கவிதை!” என்று அவளை வியந்து நோக்கினான்.

தான் பேசிய வார்த்தையைச் சொல்கிறானா அல்லது தன்னைச் சொல்கிறானா என்று தடுமாறினாள் தையல்.

“ஆனால், கண்களால் உன்னைக் கடித்து விழுங்குகிறேன் என்று நீ சொல்வது தவறு!” என்று மீண்டும் ஆரம்பித்தான்.

“ஏன்?”

“காலமெல்லாம் பார்த்துக் கொண்டிருக்க வேண்டிய உன் கட்டழகை ஒரே மூச்சில் கடித்து விழுங்கிவிட்டால் வாழ்நாளெல்லாம் நான் என்ன செய்வது?” என்று அவன் விளக்கம் கூறிய போது, அவள் முகத்தாமரை மலர்ந்து செந்தாமரையானது.

தானிய மணிகள் முற்றிய நெற்கதிரைப் போல் தலையும் குனிந்து கொண்டது.

நீண்ட நேரமாக எதுவுமே பேச முடியாமல் அவள் நின்றிருந்தாள். அருகில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தையைத் தூக்கித் தன்னோடு சேர்த்துத் தழுவிக் கொண்ட கிள்ளி,

“இப்போதாவது உன் பெயரை நான் தெரிந்து கொள்ளலாமா?” என்று கேட்டான்.

சிறிது நேரத் தயக்கத்துக்குப் பின் அவள் பேசினாள், “என் இதயத்தையே தெரிந்து கொண்டுவிட்டீர்கள். அப்புறம் பெயர் எதற்கு?”

“தேவையில்லைதான்.. ‘என் இதயமே’ என்று உன்னை அழைப்பது எனக்கும் மகிழ்ச்சியாகத்தான் இருக்கும். ஆனால், நான்கு பேர் கூடியுள்ள இடத்திலும் உன்னை அப்படி நான் அழைக்கலாமா?” என்று கிள்ளி கேட்டதும்,

“வேண்டாம்.. வேண்டாம். என் பெயரைச் சொல்லிவிடுகிறேன்..” ஆரம்பித்தாள் அவள்.

அப்போது—

கோட்டை வாயிலருகே ஏதோ குழப்பமான சத்தங்கள் கேட்டன. திரும்பிப் பார்த்த இருவருமே திடுக்கிட்டனர்.





# 9



# அரண்மனையும் அந்தப்புரமும்

பவனி வந்து கொண்டிருந்த பட்டத்து யானையின் மீது வீரநாயகராய் வீற்றிருந்தார் விஜயாலயர். யானை தன் துதிக்கையில் ஒரு மூங்கில் கழியினைத் தூக்கிப் பிடித்திருந்தது. பளபளவென்று ஒளி வீசியபடி புலிக்கொடி அதில் பறந்து கொண்டிருந்தது.

மன்னரது மெய்க்காவற் படையைச் சேர்ந்த வீரர்கள் யானையின் முன்னே புலிக்கொடியை உயர்த்திப் பிடித்த வண்ணம் புரவிகளைச் செலுத்திக் கொண்டிருந்தார்கள். கோட்டைத் தளபதி குன்றத்தூர்க் கிழார் அமர்ந்திருந்த குதிரை, எல்லோருக்கும் முன்னே எடுப்பாகச் சென்றது.

விஜயாலயரின் பட்டத்து யானைக்குப் பின்னே.. நந்திக் கொடியை ஏந்திய பன்னிரு பல்லவ வீரர்கள் அணிவகுத்துச் செல்ல, அவ்வீரர்களின் தலைவன் உயர்த்திப் பிடித்த வாளோடு தன் குதிரையில் உட்கார்ந்திருந்தான்.

பல்லவ வீரர்களின் அணிவகுப்பைத் தொடர்ந்து வந்த யானையின் அம்பாரியில் ஆடம்பரமாக அமர்ந்திருந்தாள் பல்லவ அரசகுமாரி. முத்துத் தொங்கலும், மோகனப் புன்னகையும், வைர மேகலையும், வைடூரிய ஆபரணங்களும் ஜொலித்துக் கொண்டிருந்த அவளுடைய மேனியில் கதிரவனின் மஞ்சள் நிறக் கதிர்கள்பட்டுத் தெறித்தன.

கார்முகிலையொத்த யானையின் மீது கட்டழகி அமர்ந்து சென்ற காட்சி கரிய சேற்றுக்குள் ஒரு சிறிய தங்கத் தாமரை பூத்திருப்பது போல் தகதகத்தது.

தஞ்சை நகரத்தின் பிரதான வீதிகளின் வழியே ஊர்வலம் சென்ற போது, வீதிகளின் இருபுறமும் நெருக்கியடித்துக் கொண்டு நின்றிருந்தது மக்கள் கூட்டம்.

ஒன்றன் மீது ஒன்று உராய்ந்து கொண்டிருந்த வேல்களைக் குறுக்கே நீட்டிக் கூட்டத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்த வீரர்கள், மக்கள் கூட்டத்திற்கும் ஊர்வலத்திற்கும் நடுவே 'மனிதச் சுவர்' எழுப்பியிருந்தனர்.

"விஜயாலய சோழ தேவர்.."

"வாழ்க!"

"தஞ்சை கொண்ட கோப்பரகேசரி.."

"வாழ்க!"

மக்கள் கூட்டத்திலிருந்து கிளம்பிய வீர முழக்கங்கள் செவிகளைத் தட்டிப் பார்த்தன. மேகத்தை முட்டிப் பார்த்தன. வானத்தை எட்டிப் பார்த்தன.

வேந்தர் விஜயாலயரின் தோற்றத்தைத் தொலைவில் கண்டவுடனேயே உவகை பெருக, உற்சாகம் பரவ, அடக்கி வைக்க முடியாத அலைகடலாய் மக்கள் கூட்டம் ஆரவாரித்தது. அவர் திரும்பிய பக்கமெல்லாம் மக்கள் தெண்டனிட்டார்கள். அவருடைய கண்ணசைந்த திசையெல்லாம் கை குவித்தார்கள். அவர் கை உயர்த்தியதைக் கண்ட போதெல்லாம் கள்வெறி கொண்டார்கள்.

விஜயாலயருக்கு அவருடைய மக்களிடத்தில் இருக்கும் அன்பையும் செல்வாக்கையும் அபிமானத்தையும் பல்லவ நாட்டுப் பைங்கிளி பார்வையிட்டுக் கொண்டே வந்தாள்.

ஊர்வலம்– வாணிகர் வாழ்ந்த வீதியில் மலைபோல் ஓங்கி உயர்ந்திருந்த ஒரு மாளிகையை நெருங்கிய போது, அதன் வாயிலை நோக்கி விஜயாலயர் தன் விழிகளைத் திருப்பினார். தள்ளாடித் தளர்ந்து, தலையெல்லாம் வெளுத்து, உடலெல்லாம் இளைத்த மூதாட்டி ஒருத்தி மாளிகையின் முன்புறத்தில் நின்றிருந்தாள்.

அந்த மாதரசியைக் கூட்டம் நெருக்கிவிடாதபடி காவல் வீரர்கள் தங்கள் கைகளைக் கோத்து அரண் அமைத்திருந்தனர். மூதாட்டியின் மாளிகையை அடைந்ததும் விஜயாலயர் தன் கைகளை உயர்த்தி ஊர்வலத்தை நிறுத்துமாறு கட்டளையிட்டார்.

பட்டத்து யானையின் மீது வீற்றிருந்த வேந்தர் தரையில் தாவிக் குதித்தார். வீரர்களும் கூட்டமும் மடமடவென்று விலகி வழிவிட, முகமெல்லாம் சுருக்கம் விழுந்த மூதாட்டியை அவர் நெருங்கினார்.

அந்தப் பெண்மணி நூறு அகவையையாவது கடந்திருக்க வேண்டும். காலம் வரி வரியாய் அவள் உடலில் எழுதிய கதையைக் கூனிக்குறுகி நின்ற மூதாட்டியின் கோலம் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தது.

கதையின் கடைசி அத்தியாயத்திற்கான முன்னுரையின் சுருக்கம்தான் அவள் முகச்சுருக்கமோ?

மரணம் அவளை நோக்கி அம்பை எய்வதற்காக வில்லை வளைத்துவிட்டது.. அடடா, அவளையே அல்லவா வில்லாக வளைத்துவிட்டது.

அலட்சியமாக யானையின் அம்பாரியில் அமர்ந்திருந்த பல்லவ இளவரசியால் அங்கு நடந்த நிகழ்ச்சிகளை நம்ப முடியவில்லை.

கோட்டையை ஆளும் கொற்றவர்கள் யாராவது பாதி வழியில் பவனியை நிறுத்தி, பட்டத்து யானையிலிருந்து குதித்து ஒரு பாட்டியைப் பார்க்கப் போவார்களா?

பல்லவ நாட்டுப் பைங்கிளி விவரங்களைத் தெரிந்து கொள்ள விரும்பினாலும், தன் வியப்பை வெளிக்காட்டிக் கொள்ள விரும்பவில்லை. இளவரசியின் கௌரவம் அதற்கு இடந்தரவில்லை.

மூதாட்டியின் அருகில் சென்ற மன்னர், வயதான அந்தப் பெண்மணியை வணங்கினார். குவிந்த கைகளும் கும்பிட்ட தலையுமாய் அவர் குனிந்து நின்ற போதும் மூதாட்டியால் அவருடைய முகத்தைப் பார்க்க முடியவில்லை. அரசரின் இடுப்பளவு உயரமே அவள் இருந்தாள்.

மூதாட்டியுடைய கண்களின் ஊற்று கசிந்துவிட்டது. விஜயாலயரின் காலில் வீரக்கழலருகே இரண்டு விழிநீர்ச் சொட்டுகள்..

மன்னரின் கண்களிலும் மதகு திறக்குமோ?

எவருமே எதிர்பாராதபடி விஜயாலயர் செய்த செயல் பார்த்தவர்களின் கண்களையெல்லாம் பணிக்கச் செய்துவிட்டது. தன் பாதங்களை மடக்கி முழந்தாளிட்டுத் தரையில் அமர்ந்தார் அந்தத் தார்வேந்தர். அப்போது நேருக்கு நேராக அந்த மூதாட்டியால் அவர் முகம் பார்க்க முடிந்தது.

அந்தக் காட்சியைக் கண்டவுடன் இளவரசியின் இறுக்கமான இதயத்தையும் யாரோ இறுக்கிப் பிழிவது போலிருந்தது. விஜயாலயரின் செயல் என்னவென்றே புரிந்துகொள்ள முடியாத ஓர் உணர்ச்சியை அவளிடம் உண்டாக்கியது.

மூதாட்டியோ.. ஆடி மாதத்தில் அலைகடலெனப் புரண்டு வரும் வெள்ளத்தை அடக்க முடியாத காவிரியாற்றின் கரைகளைப் போல் அப்போது கரைந்து கொண்டிருந்தாள்.

விஜயாலயருடைய வீரத் தழும்புடைய கைகளைப் பற்றித் தன் கன்னத்தில் ஒற்றிக் கொண்டாள். ஆறாகப் பெருகிய அவளுடைய ஆனந்தக் கண்ணீரில் அரசருடைய நீண்ட விரல்கள் நீராடின.

"எதற்காக அழுகிறீர்கள்? கொற்றவை வணக்கம் முடிந்தது. இது பெற்றவள் வணக்கம்!" என்று புன்னகை பூத்த மன்னர், அந்தத் தாயின் தளர்ந்த கைகளைத் தடவிக் கொடுத்தார்.

தலைமறைவாய்த் திரிந்த அந்த நாட்களில் தனக்குத் தலைவாழை இலை போட்டு அன்னமிட்ட கைகள் அல்லவா அவை—

நினைவுகள் அவர் நெஞ்சில் நிமிர்ந்தன. தன் அருகிலிருந்த வீரனிடம் அவர் ஏதோ ஆணையிட்டார். சிறிது நேரத்தில் தந்தத்தால் செய்யப்பட்ட சிவிகை ஒன்று வந்து சேர்ந்தது.

விஜயாலயர் அந்த மூதாட்டியை வேண்டினார். "தாயே! வெற்றியைத் தந்தவள் கொற்றவையென்றால் எனக்கு வேல்களையும் வாள்களையும் பெற்றுத் தந்தது வீரத்தாயாகிய நீங்களல்லவா? இந்த நகருலாவில் நீங்களும் எம்முடன் எழுந்தருள வேண்டும்!"

மூதாட்டி தன் தலையசைப்பின் மூலமே அதை மறுதலித்தாள்.

"தாயே! உங்களைப் போன்ற வீரத் தாய்மார்களின், லட்சிய மறவர்களின்— சிந்தனைகளும் செயல்களுமே என்னைச் சிம்மாசனத்தில் ஏற்றி வைத்தன. பதிலுக்கு உங்களைப் பல்லக்கில் ஏற்றிப் பவனி வரச் செய்கிற பாக்கியத்தையாவது கொடுக்கக் கூடாதா?" என்று விஜயாலயர் வினவிய போது, அந்தத் தாய் அவருடைய கூற்றினை மறுத்தாள்.

நடுங்கும் கைகளால் விஜயாலயரின் வீரத்தோள்களைத் தொட்டுக் காட்டினாள். அவருடைய இடுப்பிலிருந்த உறைவாளைச் சுட்டிக்காட்டினாள்.

கவிதைகளால் சொல்ல முடியாத உணர்ச்சிகளை எல்லாம் அவளுடைய கண்ணீர் சொல்லிக் கொண்டிருந்தது.

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்?

விஜயாலயர் மீண்டும் அந்தப் பெருமாட்டியை வணங்கி எழுந்தார். திண்தோள்கள் அசையத் திரும்பி நடந்து சென்று யானையின் மீது ஏறிக் கொண்டார்.

"அதோ.."

"அவன்தான்.."

"அவனேதான்.."

"விடாதே.."

குதிரைகளின் காலடி ஓசைகள்—

குழப்பமான சத்தங்கள்—

முரட்டுக் குரல்கள்—

கிள்ளியும், தன் பெயரைச் சொல்வதாகத் தொடங்கி சொல்லாமலே விட்டுவிட்ட அந்த அழகியும் கோட்டை வாயிலைத் திரும்பிப் பார்த்த போது— பத்துப் பதினைந்து குதிரைகள் பாய்ந்து வந்து கொண்டிருந்தன. ஓங்கிய வேலுடன் யமகிங்கரர்கள் போன்ற படை வீரர்கள் புரவிகளின் மேல் உட்கார்ந்திருந்தார்கள்.

முன்னரே கிள்ளியிடம் முறைத்துவிட்டுப் போன காவல் வீரன், முதலாவதாக வந்த குதிரையில் ஆங்காரத்தோடு அமர்ந்திருந்தான்.

குதிரைகள் தடால் தடாலென்று தாவி வந்த போது, அங்கங்கே கும்பல் கும்பலாக நின்றிருந்த கூட்டம் கூக்குரலிட்டபடி விலகிக் கொண்டது.

"என்ன இது?" என்று திடுக்கிட்டாள் அந்த இளம் பெண்.

குழந்தையை அவள் கையில் கொடுத்த கிள்ளி, "அடிபட்ட பாம்பு ஆள் திரட்டிக் கொண்டு வருகிறது" என்றான். "கவலைப்படாதே! பிறகு சந்திக்கிறேன்" என்று சொல்லிவிட்டுக் காற்றைப் போல் அங்கிருந்து நழுவினான். கூட்டத்தின் இடையே புகுந்து அவன் ஓட ஆரம்பித்ததும், குதிரை வீரர்கள் வெகுவேகமாக அவனை விரட்டத் தொடங்கினர்.

இதயங் கவர்ந்த இனிய இளைஞனை அநியாயமாக ஓர் ஆபத்துக்கு ஆளாக்கிவிட்டோமே என்று அல்லலுற்றாள் அழகி!

விளையாட்டாகத் தான் செய்த காரியம் வினையாகிவிட்டதே என்று வருந்தினாள் அந்த வனிதை.

அவனை மறுபடியும் சந்திக்க முடியுமா என்று நினைத்து நினைத்துக் கிழிந்த இதயத்துடன் தவித்துக் கொண்டிருந்தாள் அந்தத் தையல்.

அரண்மனையின் உள்ளே பல்லவ இளவரசியை அழைத்துக் கொண்டு நுழைந்த விஜயாலயர், அந்தப்புரத்தில் இருந்த மங்கையர் கூட்டத்திற்கு அவளை அறிமுகப்படுத்தினார்.

“இவர்கள்தான் பல்லவ நாட்டு இளவரசி சாருமதி தேவி!”

சிற்றரசர்களும், அதிகாரிகளுடைய மனைவிமார்களும் பெண் பிள்ளைகளும் இளவரசிக்கு வணக்கம் செலுத்தி வரவேற்றனர்.

அவர்களைத் தன் சுழல் விழிகளால் அலட்சியமாக ஒருமுறை சுற்றி வந்த இளவரசி, விஜயாலயரை நோக்கி வினவினாள்:

“அரசே! இது தங்கள் அரண்மனைதானே?”

“ஆமாம்! பெரும்பிடுகு முத்தரையனிடமிருந்து நான் பிடுங்கிக் கொண்டதாயிற்றே!” என்று விஜயாலயர் சிரித்தார்.

“தாங்கள் இங்குதானே தங்குவீர்கள்?”

“அதிலென்ன சந்தேகம்?”

“அப்படியானால் இதன் உள்ளேதானே அந்தப்புரம் இருக்கும்?”

“இருக்கிறது.”

“மகாராணிகள் அந்தப்புரத்தில் இருப்பதுதான் மரபு!”

“உண்மை! மரபை நாங்கள் மதிப்பவர்கள் தேவி! தேவையான மரபுகளைக் கட்டிக் காப்பதும் தேவையற்ற மரபுகளை வெட்டிச் சாய்ப்பதும் எங்கள் இயல்பு. கரிகாற் பெருவளத்தான் சோழ குலத்துக்கு காட்டிய நெறி அது!”

“மரபை நீங்கள் மதிப்பதாகத் தெரியவில்லையே?” என்ற இளவரசியின் வார்த்தைகளைக் கேட்டதும் சுற்றிலுமிருந்த பெண்மணிகள் திடுக்கிட்டனர். விஜயாலயரிடம் எவருமே இப்படிப்

பேசி அவர்கள் கேட்டதில்லையாதலால் அந்த வார்த்தைகள் அவர்களை அதிர்ச்சியடைய வைத்தன.

விஜயலாயரோ சிறிதும் அந்த வார்த்தைகளால் சீற்றமுறவில்லை.

"பல்லவ நாட்டு இளவரசி உள்ளம் திறந்து உரையாடலாமே!" என்றார்.

"பல்லவ நாட்டு இளவரசி வீடு தேடி விருந்தினராய் வந்திருக்கிறாள். சோழ நாட்டு மகாராணி.. திரிபுவன மாதேவி.. தன் அரண்மனையின் வாயிலில் வந்தாவது வரவேற்க வேண்டாமோ? அரச மரபை அறியாதவரா நீங்கள்?"

இளவரசியின் வார்த்தைகளைக் கேட்டதும் சுற்றிலுமிருந்த பெண்மணிகள் திகைத்து நிற்க, விஜயலாயர் புன்னகையுடன் வினவினார்.

"பல்லவ இளவரசியை வரவேற்க வந்திருக்கும் பாவையர் கூட்டத்தில், என்னுடைய தேவி இல்லை என்பதை எப்படித் தெரிந்து கொண்டீர்கள்?"

"எளிது! சோழ மாதேவி வந்திருந்தால் இப்படி ஓரமாகத் தொலைவில் ஒதுங்கி நின்றிருக்கமாட்டார்கள். உரிமையுடன் வந்து என் தோள்களைத் தழுவி உள்ளே அழைத்துச் சென்றிருப்பார்கள்."

"ஆகா! தெள்ளாறெறிந்த நந்திவர்மப் போத்தரையரின் பேத்தியல்லவா. அதுதான் தெள்ளத் தெளிவாக அரசியல் சம்பிரதாயங்களை அலசுகிறீர்கள்.." என்று சாருமதியைப் பாராட்டிய விஜயாலயர், "மன்னிக்க வேண்டும் இளவரசி! சோழ நாட்டின் மகாராணி தங்களை வாயிலில் வந்து வரவேற்க முடியாமைக்காக வருந்துகிறேன்" என்று கூறிவிட்டு, கண்ணிமைப் பொழுது தன் கண்களை மூடிக் கொண்டார்.

சுற்றிலுமிருந்த பெண்மணிகள் ஒன்றும் செய்யத் தோன்றாதவர்களாய் ஒதுங்கி நின்றனர். அவர்களிடையே ஓர் அசாதாரணமான அமைதி நிலவியது.

"வாயிலில் வந்து என்னை வரவேற்க மனமில்லை போலிருக்கிறது மகாராணிக்கு, பரவாயில்லை. அந்தப்புரம் சென்று நானே சந்தித்து வருகிறேன்" என்று ஏளனமாகக் கூறிய இளவரசி, "வாருங்கள்..

வழிகாட்டுங்கள்..” என்று தொலைவில் இருந்த பெண்மணிகளைத் துணைக்கு அழைத்தாள்.

அங்கிருந்த பெண்களோ அரசரையே பார்த்தபடி அசையாமல் இருந்தார்கள்.

“கட்டாயம் மகாராணியை நீங்கள் காண வேண்டுமா?” என்று இளவரசியைக் கேட்ட விஜயாலயர், “வாருங்கள்” என்று சொல்லிவிட்டு, விடுவிடுவென வேகமாய் நடந்தார். அவரைப் பின்தொடர்ந்து செல்வதற்கே பெரு முயற்சி தேவைப்பட்டது.

பெரிய முற்றத்தைத் தாண்டி, இரண்டு மண்டபங்களையும் கடந்து அந்தப்புரத்திற்குள் அவளை அழைத்துச் சென்றார் அரசர். எந்த அலங்காரமும் இன்றி அந்தப்புரம் எளிமையாக இருந்தது.

இதுவா அந்தப்புரம்?

பொன்னும் மணியும் தூண்களில் மின்ன, அலைகளைப் போல் திரைத் துகில்கள் அசைந்து கொண்டிருக்க, வண்ணச் சுவர்களிலும் விதானத்திலும் ரதி மன்மத ஓவியங்கள் உயிருள்ள மாந்தர்களோ என்று உள்ளத்தை மயக்க, பொன்னாலான மஞ்சத்தில் பூ மெத்தை விரிந்திருக்க, சொர்க்கமோ பூமியோ என்று பார்ப்பவரைத் தர்க்கம் புரிய வைத்துக் கொண்டிருக்கும் காஞ்சி அரண்மனையின் அந்தப்புரம் எங்கே? இது எங்கே..?

“தேவி! மஞ்சத்தில் தூசி படிந்திருக்கிறதே என்று திகைக்கிறீர்களா? எங்கள் வரலாற்றில் படிந்த தூசியையே இப்போதுதான் துடைத்துக் கொண்டிருக்கிறேன். வெகு நாளாயிற்று— நான் தூங்கி..” என்ற விஜயாலயர், அழுத்தமான குரலில் தனக்குத்தானே பேசிக் கொண்டார்.

“கவலையில்லாமல் தூங்கிக் கொண்டிருப்பவர்களெல்லாம் விழித்து எழுகிற வேளை வரும்வரை, கண்ணுறக்கம் ஏது காவலனுக்கு?”

சட்டென்று அவளை நோக்கித் திரும்பிய விஜயாலயர் “ஓ! மகாராணியைப் பார்க்க வேண்டுமென்றீர்களே.. இதோ..” என்றார்.

அந்தப்புரத்தின் நடுக்கூடத்தில் அவர்கள் நின்றிருந்தார்கள். உட்புறமிருந்து கூடத்திற்கு வருவதற்கு இரண்டு வாயில்கள்

இருந்தன. அரசருடைய வார்த்தைகளைக் கேட்டதும் இளவரசி அந்த இரண்டு வாயில்களையும் மாறி மாறிப் பார்த்தாள்.

எவரும் வரவில்லை. நடந்து வருகிற காலடிகளின் ஓசையும் காதில் விழவில்லை.

"அங்கே இல்லை.. இங்கே பாருங்கள்.." என்றார் அவர். திரும்பினாள் அவள்.

"இவள்தான் சோழ மகாராணி— திரிபுவன மாதேவி. ஆற்றல் மறவன் ஆதித்தனை ஈன்றெடுத்த அன்னை. வீரத்தின் விளைநிலம். என் வாழ்க்கைத் துணைநலம்.. இவள் நினைவே என் பலம்!" என்று கூறிய விஜயாலயர், தன் தாள்தோய் தடக்கைகளால் தன் தோள்களைத் தட்டிக்கொடுத்துக் கொண்டு கடகடவென்று வாய்விட்டுச் சிரித்தார்.

விஜயாலயருடைய சிரிப்பு வித்தியாசமாக இருந்தது.

"சிரிப்பாள்.. சிரிப்பாள்.. எப்போதும் இப்படித்தான் சிரித்துக் கொண்டே இருப்பாள்.." என்று ஆவேசமாக முழங்கிய விஜயாலயர், "என் கத்தியின் காதலி!" என்று சத்தமிட்டவாறே 'சரக்'கென்று உறையிலிருந்து தன் வாளை உருவினார்.








10



# வாளைக் காதலித்த வனிதை

பல்லவ நாட்டுப் பைங்கிளியின் பார்வை விஜயாலயர் சுட்டிக்காட்டிய ஓவியத்திலேயே பதிந்து கிடந்தது. 'இவளா சோழ மகாராணி?' என்ற கேள்வியும் அவள் இதயத்தில் எழுந்தது.

களங்கமில்லாத வெள்ளைச் சிரிப்புடன் ஓர் ஏழைப் பெண் அந்த ஓவியத்தில் இடம் பெற்றிருந்தாள். உன்னதமான அழகு அவளிடம் ஒளிவீசிக் கொண்டிருந்தது. கிராமத்துப் பெண் போல் தென்பட்ட அவளுடைய முகத்தில் அரசலட்சணங்கள் அனைத்தும் அபூர்வமாக அமைந்திருந்தன.

இடது கன்னத்தில் மூக்கின் அருகே கரிய நிறத்துடன் உருண்டையாய்த் திரண்டிருந்த மரு– அந்த யுவதியின் கன்னத்துக்கு இயற்கை சூட்டிய கறுப்பு மகுடமாய்க் காட்சியளித்தது.

கிராமத்துப் பெண்ணின் காலடிகளின் கீழே ஒரு கிரீடம் வரையப்பட்டிருந்தது.

ஓவியத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த சாருமதி தேவி, உறைவாள் உருவப்பட்ட ஓசை கேட்டவுடன் திடுக்கிட்டவளாய்த் திரும்பிப் பார்த்தாள்.

விஜயாலயர் தன் வீரவாளை ஓவியத்தை நோக்கி உயர்த்திப் பிடித்தபடி தனக்குத்தானே பேசிக் கொண்டிருந்தார்.

"கத்தியின் காதலி! ஆமாம்.. என் கத்தியின் காதலி! ஒரு முத்துமாலைகூட வாங்கிக் கொடுக்க முடியாத என் மார்பில்

நாள்தோறும் முத்த மாலை அணிவித்தவள். அள்ளி இறைத்த மல்லிகைப் பூக்களாய் அப்படி ஒரு சிரிப்பு– அவளுக்கு!”

பல்லவ இளவரசி தன்னைப் பார்த்து மிரள்வது போல் அவருக்குத் தோன்றியிருக்க வேண்டும். பார்வையில் கனிவைப் படரவிட்டுக் குரலைக் கொஞ்சம் தணித்து அவளிடம் கூறினார்:

“அஞ்சாதீர்கள் இளவரசி! அச்சத்தை உடைத்தெறிந்த அழகு தெய்வத்தை உயிரோடு பார்க்காவிட்டாலும் ஓவியமாகவேனும் பார்த்துவிட்டீர்களே! நீங்கள் அஞ்சலாமா?”

உயர்த்தியிருந்த வாளை உறையில் போட்டுக் கொண்டு, இளவரசியின் எதிரே வந்து அமர்ந்தார். கண்களைச் சிறிது நேரம் மூடித் திறந்தார். அவருடைய ஆவேசம், படபடப்பு அத்தனையும் அடங்கியிருந்தன.

நினைவுகளில் பரவசப்படுவது போல் மீண்டும் தொடர்ந்தார்:

“பாண்டிய நாட்டின் வாணிகர்கள் விலை மதிக்க முடியாத முத்துக்களைக் கொண்டு வருவார்கள். ஆழ்கடலில் மூழ்கினால்தான் அந்த முத்துக்கள் அகப்படும். அதுபோலவே, கடந்த கால ஞாபகங்களில் மூழ்கினால்தான் உள்ளத்தின் இலட்சியத்திற்கு வலிமை சேர்க்கும் உணர்ச்சி முத்துக்களை அள்ளி வரமுடியும்! பல்லவ இளவரசியால் எனக்கு அந்தப் பாக்கியம் கிடைத்தது.”

“ஐயா! அரச உடைகளோ ஆபரணங்களோ இல்லாமல் ஒரு கிராமத்துப் பெண் போல் மகாராணியின் ஓவியம் வரையப்பட்டிருக்கிறது..” என்று குறுக்கிட்டாள் இளவரசி.

“ஆமாம்” —அவர் தலையசைத்தார்.

“காலடிகளின் கீழே கிரீடம் வரையப்பட்டிருக்கிறது.”

“ஆமாம்.”

“காரணம் புரியவில்லையே..”

“மகாராணியாக ஆகும்வரை காத்திருக்க அவளுக்கு மனமில்லை தாயே! என் மன ராணியாகவே வாழ்ந்து மறைந்துவிட்டாள். அந்தத் தியாக தேவதையின் காலடிகளுக்கு என் கிரீடத்தைக் காணிக்கை ஆக்கியிருக்கிறேன்..”

"வியப்பாக இருக்கிறது வேந்தே.. உங்கள் செயல் ஒவ்வொன்றும்!" என்று உரைத்தாள் அவள். அவர் தன் இதழ்களின் மீது புன்முறுவலைப் படரவிட்டார்.

"கத்தியின் காதலி என்று சத்தமிட்டீர்களே..?" என்று மறுபடியும் ஆரம்பித்தாள்.

"ஆமாம். என் கத்தியைத்தான் காதலித்தாள் அந்தக் காரிகை! என் வாளைத்தான் நேசித்தாள் அந்த வனிதை!" என்று கூறியவர், "என்னை நேசிப்பதற்கு என்னிடம் வேறு என்ன இருந்தது?" என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டார். அவர் கேள்வியில் பெருமிதம் இருந்தது.

பல்லவ இளவரசி பனியாய் உருகிக் கொண்டிருந்தாள். "அரசே! நீங்கள் சொல்வதைக் கேட்கக் கேட்க என் ஆர்வம் அதிகமாகிறது. மகாராணியின் கதையை எனக்குச் சொல்வீர்களா?" என்று அடக்க முடியாத ஆவலுடன் கேட்டாள்.

"கதையல்ல இளவரசி! அது ஒரு காவியம்.." என்று கூறிப் பெருமூச்சுவிட்ட விஜயாலயர், காதலும் வீரமும் கைகோர்த்து நடந்த அந்த வீர காவியத்தை விவரிக்கத் தொடங்கினார்.

&&&

ஓவியத்தில் நிற்பது போலவே அந்தக் கிராமத்துக் கிளி நேரிலும் நின்று கொண்டிருந்தாள்.

தண்ணீர் எடுக்கக் குடங்களோடு வந்த கோதையர் கூட்டம்! துடுக்குத்தனமான காற்று– அச்சமில்லாமல் எல்லாப் பெண்களையும் தொட்டுத் தொட்டுப் பேசிக் கொண்டிருக்கிறது.

ஆற்றங்கரையிலிருந்த தென்னை மரத்தில் சாய்ந்தபடி அவள் நிற்கிறாள். வனிதையர் கூட்டம் அவளை வம்புக்கு இழுத்தது.

"வள்ளி நிற்கிற வடிவழகைப் பாரடீ. அசப்பில் பார்த்தால் அரசகுமாரி போலவே இருக்கிறாள்."

"எந்த நாட்டுக்கு ராஜகுமாரியோ?"

"தேசம் எது என்று இன்னும் தீர்மானிக்கவில்லை. ஆனால்.. அரசன் யாரென்று அறிவிக்கப்பட்டுவிட்டது!"

"மங்கையைக் கவர்ந்த மன்னவன் யாரோ?" என்றொருத்தி கிளறினாள்.

“விஜயன் விஜயன் என்றொரு வீரன்..” என ராகம் போட்டாள் ஒருத்தி.

“தேவியைத் தேடி வந்த தீரன்” என்று சுருதி கூட்டினாள் இன்னொருத்தி.

“சோழர் கொடி உயர்த்தும் சூரன்” என்று பாடினாள் இன்னொருத்தி.

“குடிசையில் வாழும் குபேரன்” என்று வேறொருத்தி சொல்லவும், எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

வள்ளியோ இந்தக் கிண்டல்கள் எதையும் கண்டு கொள்ளாமல், கற்பனைத் தேரேறி வான வீதியெங்கும் வலம் வந்து கொண்டிருந்தாள்.

அப்போது ‘டக்..டக்..டக்..’ என்று ஒரு குதிரையின் குளம்படி ஓசை கேட்டது.

தலைவன் போலிருந்த ஒருவன் குதிரையில் வர.. அவனைத் தொடர்ந்து, வேலேந்திய நான்கு வீரர்கள் நடந்து வந்தனர். படித்துறையில் இருந்த பாவையர் தங்கள் குறும்புப் பேச்சுக்களை நிறுத்திவிட்டுக் குனிந்து நடக்கத் தொடங்கினர்.

குதிரை வீரன் அவர்களுக்குக் குறுக்கே வந்து நின்றான்.

“வள்ளி என்பது யார்?” என்று மிரட்டும் குரலில் கேட்டான்.

“நீங்களெல்லாம் யார்?” என்று அவனைத் திருப்பிக் கேட்டாள் வள்ளி.

“ஓகோ.. நீதான் வள்ளியா? பெரும்பிடுகு முத்தரையரின் படை வீரர்கள் நாங்கள். உன்னைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று பெரிய ராஜா பெண் கேட்டு அனுப்பினாராம். நீயும் உன் தந்தையும் மறுத்துவிட்டீர்களாமே?” என்று கிண்டலாகக் கேட்டான் அவன்.

“ஆமாம், மன்னாதி மன்னனாக இருந்தாலும் மனதுக்குப் பிடித்திருந்தால் தானே மணந்து கொள்ள முடியும்?” என்றாள் வள்ளி.

“அடேயப்பா! பெரிய அரச பரம்பரையில் பிறந்தவள். என்ன நெஞ்சழுத்தம் இவளுக்கு” என்ற வீரன், “உன்னைச் சிறைப்பிடித்து வரும்படி முத்தரையர் உத்தரவு!” என்றான் அதிகாரமாக.

“எதற்காக என்னைச் சிறைப்பிடிக்க வேண்டும்?”

“சிறையெடுத்துச் செல்ல வேண்டுமென்றால் அரசரே வரவேண்டும்! அதனால்தான்— சிறைப்பிடிக்க வந்தோம்.”

“என்னைச் சிறைப்பிடித்துச் செல்வதற்கு என்ன காரணம் என்று சொல்லுங்கள்!”

“டேய்! காரணம் கேட்கிறாளடா.”

“சொல்லிவிடுவோமா..?”

“எனக்கே கூச்சமாக இருக்கிறது.”

“பரவாயில்லை சொல்.”

“கேட்டுக்கொள் பெண்ணே!” என்றான் ஒருவன்.

“சந்திரலேகைச் சதுர்வேதி மங்கலம் என்றொரு ஊர் இருக்கிறது.”

“அது முத்தரைய மன்னரின் தலைநகரமாக இருக்கிறது.”

“அங்கே அரண்மனை இருக்கிறது.”

“அரண்மனையில் அந்தப்புரம் இருக்கிறது.”

“அந்தப்புரத்தில்.. மன்னனுடைய மனைவிமார்கள் இருக்கிறார்கள்.”

“நிறைய இருக்கிறார்கள்.”

“இருந்தாலும் இன்னும் அங்கே இடம் இருக்கிறது.”

“அதில் உனக்கு இடம் தரவேண்டும் என்று மன்னருக்கு எண்ணம் இருக்கிறது!”

“தாமதப்படுத்த வேண்டாம். நீயாக வந்துவிட்டால் ராணியைப் போலக் குதிரையில் உட்கார வைத்து அழைத்துச் செல்வோம்.”

“இல்லாவிட்டால்— தெருவில் கையைப் பிடித்து இழுத்துச் செல்வோம்.”

“இதுவும் கூட..”

“முத்தரையர் உத்தரவு!” என்று கிண்டல் செய்தவாறு வள்ளியை நெருங்கினான் ஒருவன். உடன் வந்த பெண்களெல்லாம் நடுக்கமுற்று ஒதுங்கி நிற்க, வள்ளி சினத்துடன் சீறினாள்:

"முத்தரையன்! பல்லவர்களின் தயவால் பதவியில் இருப்பவன்! அரச அதிகாரங்களைக் காட்டி நாட்டை ஆளலாம். ஏழைப்பெண்களின் இதயத்தை ஆளமுடியாது என்பதை மமதை பிடித்த உங்கள் மன்னனிடம் போய்ச் சொல்லுங்கள்.." என்று அவள் பேசி முடிக்கும் முன்பே, அவளை இழுத்துச் செல்ல முற்பட்டனர் இருவர்.

"நெருப்பு நான்! நெருங்காதீர்கள்!" என்று எச்சரித்தபடி அவள் பின்புறம் நகர்ந்தாள்.

"சுடுகிறதா இல்லையா என்று தொட்டுப் பார்த்துத் தெரிந்து கொள்கிறோம்" என்று திமிராகக் கூறி அவள் கைகளைப் பற்றினான் ஒருவன்.

இடுப்பிலிருந்த குடம் நழுவித் தரையில் விழுந்தது.

"தொடாதே!" என்று கத்தியபடி கைகளை உதறினாள் அந்தக் காரிகை.

அவளுடைய அலறல் கேட்ட அடுத்த நொடியில் 'விர்'ரென்று காற்றைக் கிழித்துக் கொண்டு பறந்து வந்தது ஒரு வேல். வீரர்களுக்கும் அவளுக்கும் குறுக்கே தரையின் மேல் குத்தி நின்றபடி அந்த வேல் தலையசைத்துக் கொண்டிருந்தது.

வெறியோடு திரும்பிப் பார்த்தார்கள் முத்தரையன் அனுப்பியிருந்த முரடர்கள்!

"குறுக்கே நிற்கும் வேலினைத் தாண்டி நீளும் விரல்கூட வெட்டப்படும்" என்று எங்கிருந்தோ ஓர் எச்சரிக்கை கேட்டது.

நான்கு புறமும் பார்த்தபடி, குதிரையின் மேலிருந்த வீரன் "யார் நீ?" என்று கோபத்துடன் கேட்டான்.

"என்னை யாரென்று கேட்க எவனுக்கும் அதிகாரமில்லை" என்று அந்தக் குரல் அலட்சியமாக ஒலித்தது.

"இருக்கிற அதிகாரத்தைக் காட்டுகிறேன். எங்கிருந்து பேசுகிறாய் என்று சொல்" என்று குதிரையிலிருந்த வீரன் கொக்கரித்தான்.

"அரச மரத்தின் மேடையில் அமர்ந்து கொண்டு ஆணையிடுகிறேன்" என்று கம்பீரமாய் அறிவித்தது அந்தக் குரல்.

சீற்றத்துடன் வீரர்கள் திரும்பிப் பார்த்தார்கள். அரச மரத்தின் மீது அலட்சியமாகச் சாய்ந்து கொண்டு ஆற்றைப் பார்த்தபடி யாரோ அமர்ந்திருப்பது தெரிந்தது.

"முத்தரைய வீரர்களிடம் மோத வந்தவனே.. உன் முகத்தைத் திருப்பு" என்றான் குதிரை வீரன்.

"தகுதியற்றவர்களுக்கு நான் தரிசனம் தருவதில்லை" என்று சொல்லிவிட்டுச் சிரித்த அந்த மனிதன், "தேவையானால் என் பெயரை மட்டும் தெரிவிக்கிறேன்" என்றான்.

குதிரை வீரனுக்கு அந்த வார்த்தைகள் மேலும் கோபத்தை மிகுதியாக்கியதோடு, வள்ளியும் மற்ற பெண்களும் துள்ளிக் குதிக்கத் தொடங்கியிருந்த காட்சி வேறு அவனிடம் ஏகப்பட்ட எரிச்சலை ஏற்படுத்தியது. வீரர்களிடம் சைகை செய்துவிட்டு அரசமர மேடையை நோக்கி புரவியைச் செலுத்தத் தொடங்கினான் ஆவேசத்துடன்.

ஆற்றைப் பார்த்தபடி அமர்ந்திருந்த அந்த மனிதன், தன்னை நோக்கி வீரர்கள் தாவி வரும் ஒலியையோ, 'சர்.. சர்'ரென்று அவர்களின் உறைகளிலிருந்து வாட்கள் உருவப்படும் ஓசையையோ சற்றும் பொருட்படுத்தவில்லை. அப்படியே அசையாமல் அமர்ந்திருந்தவன் தன் கைகளை மட்டும் மெதுவாகத் தட்டினான். ஒதுங்கி நின்றிருந்த அவனுடைய குதிரை ஓடி வந்தது. உருவிய வாளைக் குதிரையின் முதுகின் மேல் வைத்துத் தன் புரவியை மெதுவாகத் தட்டிக் கொடுத்தான்.

முதுகில் வாளைச் சுமந்து வந்த குதிரை முத்தரைய வீரர்களின் முன்னே நின்றது.

"முட்டாள்களே! புரவியின் முதுகிலிருக்கும் வாளை எடுத்து வாசித்துப் பாருங்கள். அதன் பொற்பிடியில் என் பெயர் பொறித்திருக்கிறது" என்று அலட்சியமாகவே கூறினான் அந்த மனிதன்.

கோபமும் குமுறலுமாகக் குழப்பத்திலிருந்த முத்தரைய வீரர்களின் தலைவன், எதிரே வந்து நின்ற குதிரையின் முதுகிலிருந்து வாளை எடுத்து அதன் பிடியை திருப்பித் திருப்பிப் பார்த்தான்.

அவன் கண்களில் ஒரு கலவரம் படர்ந்தது. அச்சத்தால் அவன் கைகள் நடுங்கியதை அருகிலிருந்த மற்ற வீரர்களும் கவனித்துக் கொண்டுதான் இருந்தார்கள். வாளினை மிகவும் மரியாதையுடன்

குதிரையின் முதுகிலேயே வைத்துவிட்டு நிமிர்ந்த அவனுடைய உதடுகள் "விஜயன்.." என்று மெதுவாக முணுமுணுத்தன.

"ஆ.. விஜயன்!" என்று மற்ற வீரர்களும் நடுக்கத்துடன் அந்தப் பெயரை உச்சரித்தார்கள்.

"ஆம்! நான்தான் விஜயன்!" என்று அரச மரத்தின் மேடையில் எழுந்து நின்று கம்பீரமாக அந்த மனிதன் கர்ஜித்தான்.

அவ்வளவுதான்..

முத்தரையனுடைய 'மாவீரர்கள்' மூலைக்கொருவராய் ஓடத் தொடங்கினார்கள். பின்னங்கால்கள் பிடரியில்பட வெலவெலத்து ஓடும் அந்த வீரசிகாமணிகளைப் பார்த்துப் பெண்களெல்லாம் கைகொட்டிச் சிரித்தார்கள்.

வள்ளியோ—

புரவியின் முதுகில் ஒளிவீசிக் கொண்டிருந்த வாளை எடுத்துத் தன் பவள இதழ்களினால் அதற்குப் பாராட்டு முத்திரை பதித்துக் கொண்டிருந்தாள்.

"இப்படித்தான் என்னுடைய பெயர் முத்தரையர் குலத்திற்கே ஒரு சிம்ம சொப்பனமாக இருந்தது. ஆனால்.." என்று நிறுத்தினார் விஜயாலயர்.

"ஆனால்..?" என்று அவர் நிறுத்திவிட்டதை மீண்டும் நினைவுறுத்தினாள் பல்லவ இளவரசி.

"முத்தரையர் குலத்துக்கே சிம்ம சொப்பனமாய் என்னுடைய பெயர் விளங்கியது. ஆனால், வள்ளியின் பெயரோ— எனக்கே ஒரு சிம்ம சொப்பனமாகிவிட்டது."

"என்ன..?"

"ஆமாம்! மலையையே தூக்கிக் கொள்ளும் வல்லமை படைத்த என் மனத்திற்கு ஒரு மலரைச் சுமப்பதற்குச் சக்தியில்லாமல் போய்விட்டது."

"புரியவில்லை ஐயா!"

"கற்பாறை போல் இறுக்கி வைத்திருந்த என் இதயத்தில் காதலின் நீரூற்று கசியத் தொடங்கிவிட்டது.

நீண்ட நெடுந்தொலைவில்— என் லட்சியப் பயணத்தின் இலக்கு காதல் எனக்குக் கால்விலங்கு ஆவதா?

வள்ளியின் ஞாபகம் ஓர் அசுர சக்தி போல் என்னை ஆக்ரமித்துக் கொள்ள.. எனக்குள்ளிருந்த கடமை வீரன் என்னைக் கண்டிக்கத் தொடங்கினான். என் இனத்தின் எழுச்சிக் கவிஞரும் வெண்பாவில் என்னை விளாசினார்."

"வெண்பாவில் விளாசினாரா.."

"ஆம்! 'பொன்முடி' என்பது அந்தப் புலவருடைய பெயர்! போர்க்களங்களில் நான் புண்படும் போதெல்லாம் தன்னுடைய கவிதைகளால் எனக்குக் கவரி வீசுவார். காதலில் நான் கண்பட்டு வந்தபோது என் மீது ஒரு வெண்பாவைத் தூக்கி வீசினார்.

**"வானையும் வில்லாய்**
**வளைக்க முடிந்தவன் நீ!**
**மானை நினைத்தா**
**மயங்குகிறாய்? —தேனொத்த**
**செவ்விதழார் மேனி**
**சிறையன்றோ? சோழகுலம்**
**எவ்விதமோ உய்வ(து)**
**இனி?"**

என்று அவர் எழுதி அனுப்பிய ஓலை என்னைச் சிந்திக்க வைத்தது. என் நெஞ்சில் வளர்ந்த நேசச் செடியை வேரோடு பிடுங்கி வீச நினைத்தேன். என்னை மறந்துவிடுமாறு வள்ளியை நானே வற்புறுத்தத் தொடங்கினேன்.

நேரில் பேசும்போதெல்லாம் அவள் விழிகளால் என்னை வீழ்த்திக் கொண்டிருந்தாள். அதனால் ஓர் ஓலையில் அவளுக்கு என் உள்ளத்தை உணர்த்தினேன்.

'தஞ்சைக் கோட்டையில் புலிக்கொடியை உயர்த்தும் வரை— நாம் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்வதில்லை என்று சபதம் ஏற்கிறோம்!'

நான் எழுதிய ஓலை அவளுடைய கைகளில் கிடைத்த போதுதான் நெஞ்சைப் பிளக்கும் அந்த நிகழ்ச்சி நடந்தது.." என்று கூறிவிட்டுச் சிறிது நேரம் தன் விழிகளை மூடிக் கொண்டார் விஜயாலயர்.

'என்ன நடந்தது.. என்ன நடந்தது?' என்ற படபடப்போடு துடித்துக் கொண்டிருந்தது பல்லவ இளவரசியின் இதயம்.









# 11



## 'நடக்கக்கூடாதது நடந்தது'

வெற்றி வேந்தர்— வீரவேந்தர்— சுற்றி வரும் பகையைத் தூளாக்கும் தோள்வேந்தர்— வரலாற்றின் திசை மாற்றும் வாள் வேந்தர் என்றெல்லாம் புலவர் பெருமக்களும் பொதுமக்களும் போற்றிப் புகழ்கின்ற விஜயாலயரின் எதிரே அவள் ஓர் ஆச்சரியக் குறி போல் அமர்ந்திருந்தாள்.

அவர் சொல்லி வந்த வீர காவியத்தில்— பல்லவ இளவரசியின் உள்ளம் பறிபோயிருந்தது.

"நெஞ்சைப் பிளக்கும் அந்த நிகழ்ச்சி நடந்தது" என்று கூறி அவர் நிறுத்திய போது துடித்துக் கொண்டிருந்த அவளுடைய இதயம், 'என்ன நடந்தது..? என்ன நடந்தது..?' என்று துடிதுடிக்கத் தொடங்கியது.

"என் இலட்சியத்தையும் சோழர் குலத்தின் நல்வாழ்வையும் எண்ணிப் பார்த்தேனே தவிர என்னைக் காதலித்த அந்தப் பெண்ணின் கதியைப் பற்றியோ, அவளுடைய எதிர்காலத்தைப் பற்றியோ நான் கவலைப்படவில்லை.

பொன்முடியின் வெண்பாவை அந்தப் பெண் பாவை படித்தாள்; என்னைப் போலவே இதயம் துடித்தாள்; என் கோரிக்கைக்கு இணங்கினாள்.

ஆனால்— மனிதர்களின் ஆசைகளும் வாழ்க்கையின் முடிவுகளும் வெவ்வேறுவிதமாய் அமைந்துவிடுகின்றன இளவரசி! ஏற்றுக்

கொண்ட இலட்சியத்திற்காக நாங்கள் செய்திருந்த சபதத்திற்கே ஒரு சவால் வந்தது."

"சவாலா?"

"ஆம்! அந்தப்புரத்திற்குள் வள்ளியை அடைத்து வைக்க ஆசைப்பட்டு அது முடியாமற் போனதால் ஆத்திரம் கொண்ட முத்தரையன், அவளுடைய தந்தையை இழுத்து வரச் செய்தான். அவருடைய தலையை யானையின் இடது கால் இடறியது. தந்தையை இழந்து வள்ளி தனியானாள். அவளை மறைத்து வைக்க முயன்ற குற்றத்திற்காக அந்தச் சின்னஞ்சிறு கிராமமே தீயிட்டுக் கொளுத்தப்பட்டது. என் அன்புக்குரிய அந்த அபலை, அடைக்கலமும் இழுந்து ஆதரவற்றவளானாள். சபதத்தைக் கைவிட்டு, வள்ளியை மணந்து கொள்ளுமாறு என் வீரர்களே என்னை வேண்டினார்கள். அதுமட்டுமல்ல.. அந்தக் கவிஞர் பொன்முடியும் உறைந்து கிடந்த என் உள்ளத்தை உருகவைத்தார். எந்த வெண்பாவினால் என் இதயத்தை இறுக வைத்தாரோ அதைக் கொண்டே என்னை உருக வைக்கவும் அந்தக் கவிஞரால் முடிந்தது!" என்றார் விஜயாலயர்.

இளவரசி ஆர்வம் பொங்க, "அந்த வெண்பாவைக் கூறுவீர்களா?" என்று கேட்டாள்.

விஜயாலாயர் கூறினார்:

"வானுக்கே வில்லை
வழங்கும் மழைமுகில் நீ!
மானுக்கே வாழ்க்கை
மறுப்பதோ? —மீனுக்கும்
நந்திக்கும் அஞ்சாத
நாயகனே! உன் நிலையைச்
சிந்திக்க வேண்டும்
சிறிது!"

"ஆகா! அற்புதம்!" என்று துள்ளினாள் அரசகுமாரி. "எத்தனை நுட்பமாக உங்கள் மனத்தை அந்தக் கவிஞர் மடக்கியிருக்கிறார்!" என்று வியந்தாள்.

"முதலில் ஒரு வெண்பாவின் மூலம் உங்கள் காதலைத் தடுக்கிறார். பெண்ணெனும் மாய மான் மீது கொண்ட மையலால் கடமையை மறக்கலாமா? என்று கவிதைக் கணை தொடுக்கிறார்.

அடுத்த வெண்பாவில் தன்னுடைய கருத்துகளைத் தானே எத்தனை அற்புதமாய் மறுக்கிறார்!

'வானத்துக்கே வான வில்லினைப் பரிசளிக்கும் மழை மேகம் போன்றவன் நீ! மருண்டு நிற்கும் ஒரு பெண் மானுக்கு வாழ்வு தா மறுக்கலாமா? பல்லவருக்கும் பாண்டியருக்குமே அஞ்சாத நீ– ஒரு பாவையிடமா அஞ்சுகிறாய்?' என்று கேட்டு, ஆதரவற்ற ஓர் அபலைக்காக உங்களிடம் அவர் வாதாடிய அழகே அழகு!" என்று பாராட்டினாள் பல்லவ இளவரசி.

விஜயாலயர் தொடர்ந்தார்:

"இந்த வெண்பாவைப் படித்ததும் நானே சிரித்துவிட்டேன். அடடா.. இந்தக் கவிஞர்கள் எப்படியெல்லாம் தமிழால் விளையாடுகிறார்கள்" என்று நகைத்துவிட்டு,

"அதில் தவறொன்றுமில்லை. தமிழால் விளையாடலாம். தமிழோடுதான் விளையாடக் கூடாது.." என்று நிறுத்தினார்.

"அப்புறம் என்ன நடந்தது அரசே?"

"அவள் எனக்கு மனைவியானாள். சோழ குலத்தை நிலைநிறுத்தும் என் முயற்சிகளுக்குத் துணைவியானாள்! காட்டிலும் மேட்டிலும் கல்லிலும் முள்ளிலும் என் கனவுகளைத் தன் கண்களில் சுமந்து கொண்டு நடந்தாள். போராட்டத்தையே வாழ்க்கையாகக் கொண்ட ஓர் இலட்சியவாதியின் வீர வேள்விக்கு அந்த அழகு மயில் தன்னை ஆகுதியாய் ஆக்கிக் கொண்டாள்.

பாழடைந்த மண்டபங்களிலும், பழையாறையின் சிதைந்த கட்டிடங்களிலும் குடிசைகளிலும் என்னோடு குடும்பம் நடத்தினாள் அந்தக் குலவிளக்கு!

'என்னைக் கைப்பிடித்ததனால் அல்லவா இந்த நிலை உனக்கு?' என்று நான் கேட்பேன்!

'நம்முடைய இனத்திற்காக உங்களைச் சுட்டெரித்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுடன் சேர்ந்து சாம்பலாவதும் எனக்குச் சம்மதமே!' என்று அவள் கூறுவாள்.

'ஒரு முத்து மாலை கூட உனக்கு வாங்கிக் கொடுக்க முடியவில்லையே' என்பேன்.

'முத்து மாலைக்கு விலை உண்டு. எப்போதாவது என் இதழ்களில் நீங்கள் அணிவிக்கும் முத்த மாலையை விலை மதிக்க முடியுமா?' என்பாள்.

'வசதியாக என்னை வைத்துக் கொள்ள முடியவில்லையே என்று வருந்துவதுகூட உங்கள் தூய இலட்சியத்திற்கு நீங்களே செய்யும் துரோகம்' என்பாள்.

போர்க்களத்திற்கு நான் புறப்படும் போதெல்லாம் என் வாளை முத்தமிட்டுத்தான் வழியனுப்பி வைப்பாள்.

..என்னையும் என் இலட்சியங்களையும் இதயத்தில் சுமந்தவள், ஆதித்தனை வயிற்றில் சுமந்து கொண்டிருந்தாள் அப்போது!

'பெண்ணே, உனக்கு எதன் மீதாவது ஆசையிருந்தால் சொல்! வாங்கிக் கொடுக்கிறேன்' என்று வள்ளியிடம் நான் கேட்டேன்.

"நான் ஆசைப்பட்டதைத்தான் கொடுத்துவிட்டீர்களே!' என்றாள்.

'எதைச் சொல்கிறாய்?'

'உங்கள் மீது ஆசைப்பட்டேன். உங்களைத்தான் கொடுத்துவிட்டீர்களே..'

'இல்லை வள்ளி. கருவுற்ற மகளிர் கணவனிடம் ஆசையாய் எதையாவது கேட்க வேண்டுமாம். அவன் அதை வாங்கிக் கொடுக்க வேண்டுமாம்..'

'கேட்டது கிடைக்குமா?'

'உறுதியாக..'

'எனக்குத் தஞ்சை மாநகரின் கோட்டை வேண்டும்! அதில் நம் கொடி பறக்க வேண்டும். அங்கு நீங்கள் கொலுவீற்றிருக்க வேண்டும்!' என்றாள்.

—கோட்டையும் கிடைத்தது! கொடியும் பறந்தது! ஆனால்.." என்று நிறுத்திய விஜயாலயர், தன் கண்களின் எதிரே விரிந்த அந்தப் பழைய காட்சியை விவரித்தார்.

காவிரி நதியின் கரையை ஒட்டி ஓர் ஒற்றையடிப் பாதை. கார்மேக வேளாண் காட்டிலிருந்து அதற்கு வழி பிரிகிறது. ஒரு காத தூரம் அதில் உள்ளே சென்றால் அடர்ந்து, நெருங்கியிருந்த மரங்களுக்கு மத்தியில் அமைந்திருந்தது அந்தத் தோப்பு.

காவிரியில் வெள்ளம் பெருக்கெடுக்கும் போது தோப்பின் மூன்று புறங்களையும் அலைகள் முத்தமிட ஆரம்பிக்கும். வெளியே இருந்து பார்ப்பவர்களின் விழிகளுக்கு அந்தத் தோப்போ அதன் மூலையிலிருந்த சிறு குடிசையோ பார்வையில் படாது.

குடிசையின் நடுவே இருக்கும் கயிற்றுக் கட்டிலில் வள்ளி படுத்திருக்கிறாள். முகமெல்லாம் வெளிறிப் போயிருக்கிறது. உடல் வெடவெடத்து நடுங்கிக் கொண்டிருக்கிறது. பேச முடியாமல் ஏதேதோ பிதற்றிக் கொண்டிருக்கிறாள்.

அருகே கிழவி ஒருத்தி கட்டிலின் கீழே அமர்ந்து பச்சிலையையும் சில மூலிகைகளையும் சேர்த்து அரைத்துக் கொண்டிருக்கிறாள். வைத்தியர் ஒருவர் வள்ளியின் வலது கையைப் பற்றி, நாடி பார்த்துக் கொண்டிருக்கிறார். வாயிலையும் வைத்தியரையும் வள்ளியையும் மாறி மாறிப் பார்த்தபடி வேதனையுடன் நின்று கொண்டிருக்கிறான் விஜயன்.

வைத்தியர் அவனருகில் வருகிறார், அவருடைய முகத்திலும் குரலிலும் பதற்றம்; பரபரப்பு!

“கடுமையான விஷக் காய்ச்சல். ஏன் இதுவரை கவனிக்காமல்விட்டீர்கள்? உடனடியாக ஆனைமங்கலத்துக்குக் கொண்டு செல்வது நல்லது. அங்கு சங்கு வைத்தியர் இருக்கிறார். அனுபவம் மிகுந்தவர். அவரிடம் காட்டினால்..” என்று அவர் முடிக்கும் முன்பே மெதுவாகச் சிரித்தான் விஜயன். “வைத்தியரே! திசை எட்டிலும் எங்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். ரகசியமான இந்த இடத்தைவிட்டு வெளியேறினால் எதிரிகளால் ஆபத்து! வெளியேறாவிட்டால் விஷக் காய்ச்சலால் ஆபத்து! என் கண்மணியின் நிலைமையைக் கவனித்தீர்களா?” என்று வருத்தத்துடன் கூறிய போது அவன் முகம் வறண்டிருந்தது.

வாயிலில் ஏதோ நிழலாடவே விஜயன் திரும்பிப் பார்த்தான்.

உடல் முழுதும் தண்ணீரில் நனைந்து மேல் மூச்சுக் கீழ்மூச்சு வாங்கியபடி ஓடி வந்திருந்தான் ஒரு வீரன்.

“சாத்தா! என்ன கோலம் இது? குதிரை எங்கே?”

“தலைவரே! வந்து சேரக்கூடிய வழியெல்லாம் அடைபட்டுவிட்டது. அதனால் ஆற்றில் குதித்து நீந்தி வந்தேன். அக்கரையில் நிற்கிறது குதிரை.”

"வழி அடைபட்டுவிட்டதா?"

"ஆம் தலைவா! ஒற்றையடிப் பாதை முழுவதும் எதிரிகள் உலாவிக் கொண்டிருக்கிறார்கள். பாதைகளிலெல்லாம் எதிரிகளின் பாசறைகள்! இந்தப் பகுதியில்தான் நீங்கள் இருக்க வேண்டும் என்று எப்படியோ அவர்களுக்குச் சந்தேகம் வந்துவிட்டது.

புல்லுக் கட்டுச் சுமந்து செல்கிறவர்களைக் கூடக் கடுமையாகச் சோதனையிடுகிறார்கள். உள்ளே வாளைச் செலுத்தி யாராவது ஒளிந்திருக்கிறார்களா என்று பார்க்கிறார்கள்" என்று கூறிய சாத்தனிடம், "அடடா..! வள்ளியை வைத்தியரிடம் அழைத்துச் செல்ல வேண்டுமே.. ஒரு வண்டி கிடைக்காதா?" என்று கேட்டான் விஜயன்.

"கிடைக்காது ஐயா, கிடைத்தாலும் அன்னையை இப்போது அழைத்துச் செல்வது ஆபத்து" என்று தீர்மானமாகக் கூறினான் சாத்தன்.

"சாலையில் மாங்காய் மூட்டைகளை ஏற்றிச் சென்ற மாட்டு வண்டி ஒன்றைப் பகைவர்கள் உடைத்து நொறுக்கிவிட்டார்கள்."

"ஏன்?"

"மூட்டைகளை அவிழ்த்துக் காட்டச் சொன்னார்களாம். 'மூட்டைகளுக்குள் ஒளிந்து கொண்டு போக முத்தரையனல்ல எங்கள் தலைவன்! கொடி பிடித்துக் கொண்டு அவன் குதிரையில் போவான்!' என்று சூடாகச் சொல்லியிருக்கிறான் வண்டிக் காரன். கோபம் வந்துவிட்டது அந்தக் கோழைகளுக்கு!"

"அடடா.." என்று அனுதாபம் கொண்ட விஜயன், "காட்டுப் பகுதியிலிருந்த நம் காவல் வீரர்கள் என்ன ஆனார்கள்?" என்று கோபமாகக் கேட்டான்.

"தஞ்சை முற்றுகைக்கு எல்லோரையும் போய்விடச் சொல்லித் தாங்கள்தான் கட்டளையிட்டீர்கள்."

"ஆமாம், இறுதித் தாக்குதல் இது. ஒரு வாள் கூட உறையிலிருக்கக் கூடாது" என்று தனக்குத்தானே பேசிக் கொண்ட விஜயன், "அதனால்தான் ஆதித்தனைக் கூடக் களத்திற்கு அனுப்பி வைத்தேன்" என்றான்.

“தலைவரே! ஆதித்தரை நீங்கள் அனுப்பி வைத்ததனால் ஆச்சரியம் ஒன்று நடந்திருக்கிறது..” என்று மகிழ்ச்சியான குரலில் கூறினான் சாத்தன்.

“எட்டு வயது இளம்பிள்ளை புலிக்கொடியை ஏந்தியபடி புரவியில் ஏறுகிறது. ‘தஞ்சை நமதே..” என்று தலை நிமிர்ந்து முழுங்குகிறது. அதைப் பார்த்த நம் வீரர்களிடம் உற்சாகம் பரவுகிறது. ‘வீர வாள். வெற்றி வேல்’ என்று முழக்கம் வீறுநடை போடுகிறது. போகும் வழியிலிருந்த பொதுமக்களெல்லாம் அந்தக் காட்சியைப் பார்த்து மெய்சிலிர்க்கின்றனர்..

அடடா..! அங்கங்கே கிராமங்களிலிருந்த சாதாரண ஜனங்களும் சண்டைக்குக் கிளம்பிவிட்டார்கள். கத்தி, கடப்பாரை, கோடரி என்று கிடைத்த ஆயுதங்களை எடுத்துக் கொண்டு பொதுமக்களும் ஆதித்தருடன் சேர்ந்து போருக்குப் போய்க் கொண்டிருக்கிறார்கள்” என்று உரத்த குரலில் அவன் உரைத்தான்.

‘ஆதித்தன்’ என்ற பெயர் காதில் விழுந்ததுமே உற்சாகமடைந்து எழுந்து உட்கார்ந்த வள்ளி, அவன் கூறிய செய்தியைக் கேட்டு முகம் மலர்ந்தாள்.

எழ முடியாத நிலையில் படுத்திருந்த வள்ளியிடம் ஏற்பட்ட இந்த மாற்றத்தைப் பார்த்து மகிழ்ச்சியடைந்த விஜயன், குடிசையின் உள்ளே சாத்தனைக் கூப்பிட்டுச் சென்றான்.

“வள்ளி! வள்ளி! சாத்தன் கூறியதைக் கேட்டாயா? உன் மகனின் போர்க் கோலத்தைப் பார்த்துப் பொது மக்களும் அவனுடன் புறப்பட்டுவிட்டார்களாம்..” என்று பெருமையுடன் கூறினான்.

“சாத்தா.. விவரமாகச் சொல், ஆதித்தனை நீ எங்கே பார்த்தாய்?” என்று ஆர்வத்துடன் கேட்டாள் வள்ளி.

வள்ளியிருந்த கோலத்தைப் பார்த்த சாத்தன், “தாயே, ரொம்பவும் தளர்ந்து காணப்படுகிறீர்களே. உடம்புக்கு..” என்று தயங்கினான்.

“ஒன்றுமில்லை சாத்தா. நீ சொல்” என்று வள்ளி தூண்டினாள்.

வாளை உயர்த்திப் பிடித்தபடி வீரர்களின் நடுவே ஆதித்தன் சென்ற காட்சியை மீண்டும் விவரித்தான் சாத்தன்.

கேட்கக் கேட்க அவளுடைய முகம் மலர்ந்து பிரகாசிப்பதைக் கண்டு விஜயனின் உள்ளம் உவகை கொண்டது.

"பட்டத்து இளவரசரின் பவனி போல் ஆதித்தர் போகிற அந்த அற்புதக் காட்சியைக் கட்டாயம் தாங்கள் காண வேண்டும் தாயே! ஆனால், இந்த நிலைமையில் இருக்கிறீர்களே.." என்று கூறிய சாத்தன் தொடர்ந்தான்.

"பழையாறையிலிருந்து புறப்பட்ட நம் படை தஞ்சையின் அரைக் காத தூரத்தில் தயாராக இருக்கிறது. ஆதித்தரும் இந்நேரம் அவர்களுடன் சேர்ந்திருப்பார். அடையப் போகிற வெற்றியைப் பற்றி ஐயமே இல்லை. எப்போதும் இல்லாத வாய்ப்பு இப்போது என்னவென்றால் பொதுமக்களிடம் ஏற்பட்டிருக்கும் புரட்சி!

'விஜயன்' என்று சொன்னாலே மக்கள் வீறு கொண்டெழுகிறார்கள். தலைவருடைய பெயரே முத்தரையர்களை அடித்துச் செல்லும் பிரளயமாகிவிட்டது.

போர்க்களத்தில் இவர் வந்தால் போதும், படை வீரர்கள் இவரைப் பார்த்தால் போதும்.. தஞ்சைக் கோட்டை தகர்ந்து விழும்! கையில் கட்டிய வாகை மாலையுடன் ஜெயதேவி இவருக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாள்" என்றான் சாத்தன்.

வள்ளி திடீரென்று வாய்விட்டுச் சிரித்தாள், விஜயனின் முகம் மலர்ந்தது. வைத்தியரின் முகமோ வாடத் தொடங்கியது.

"களத்தில் ஜெயதேவி இவருக்காகக் காத்திருக்கிறாள். ஆனால், சொந்த தேவியல்லவா இவரை இங்கு காக்க வைத்துக் கொண்டிருக்கிறாள்" என்று கூறினாள் வள்ளி.

"அம்மா, நீங்கள் அதிகம் பேசக்கூடாது. நாம் உடனே ஆனைமங்கலம் போக வேண்டும்" என்று வைத்தியர் நினைவுறுத்தினார்.

"ஐயா, இனிமேல் எனக்கு வைத்தியம் தேவையில்லை. நாளையே நான் நலம் அடைந்துவிடுவேன். என் கனவு நனவாகும் காலம் வந்துவிட்டது" என்று வைத்தியரைப் பார்த்துக் கூறிய வள்ளி, "உடனே புறப்படுங்கள்.. நீங்கள் தாமதிக்கும் ஒவ்வொரு நொடியும் தஞ்சையின் வெற்றி தள்ளிப் போய்க் கொண்டிருக்கிறது" என்று விஜயனிடம் உறுதியான குரலில் உரைத்தாள்.

"சோழ ராணியின் வீரம் என்னைச் சிலிர்க்க வைக்கிறது" என்று கூறிய பல்லவ இளவரசி, "அப்புறம் என்ன நடந்தது?" என்று ஆர்வத்துடன் கேட்டாள்.

"நடக்கக் கூடாதது நடந்தது" என்று விழிகளை மூடிக் கொண்டார் விஜயாலயர்.








12



# புலிக்கொடியும் பூங்கொடியும்

விஜயாலயர் விழிகளைத் திறந்தார். ஆடாமல் அசையாமல் ஆடகப் பொற்பாவை போல் அவரையே கவனித்துக் கொண்டிருந்தாள் அரசகுமாரி.

"என் இனத்திற்கும் நாட்டிற்கும் நான் தலை சிறந்த தலைவனாய் இருக்கலாம். ஆனால், என்னை நம்பி வந்தவளிடம் ஒரு நல்ல தலைவனாக நான் நடந்து கொள்ளவில்லை.." என்று வேதனையுடன் கூறினார் விஜயாலயர்.

"தஞ்சையின் சிம்மாசனம் என்னை அழைக்கிறது. மரணமோ, என் மனைவியை நோக்கி வலை விரிக்கிறது. வலையை அறுத்தெறியப் புறப்படுவதா? பகைவர்களின் தலையை அறுத்தெறியப் புறப்படுவதா என்ற கேள்வி என் முன் எழுகிறது.

பல்லவ நாட்டின் மாபெரும் படை காஞ்சியைவிட்டு நகரவில்லை என்ற நல்ல செய்தியையும் ஒற்றர்கள் கொண்டு வந்திருந்தனர்.

பல்லவர் துணைக்கு வராத நிலையில் முத்தரையர்களை எளிதாக முறியடிக்க முடியும்.

கையில் கிடைத்திருக்கும் இந்த வெற்றியைக் கை நழுவவிடுவதென்பது ஒரு போராளியின் தற்கொலை!

வள்ளியைக் காப்பாற்ற வழி பார்க்காமல் புறப்படுவதென்பதோ ஒரு கொலை!

நான் என்ன செய்வது?

வீரர்கள் தற்கொலையை விரும்புவதில்லை. ஆதலால் நான் கொலை செய்தேன்" என்றவர், "ஆனால், பழி என் மீது விழாமல் அவள் பார்த்துக் கொண்டாள்" என்று கூறிவிட்டு, அந்தத் தூயவளின் கதையைத் தொடர்ந்தார் விஜயாலயர்.

"புறப்படுங்கள்.. தாமதம் செய்ய வேண்டாம்" என்று வள்ளி அவசரப்படுத்தினாள்.

"உன்னை இந்த நிலையில்விட்டுச் செல்ல எனக்கு மனம் வருமா வள்ளி? எப்படியாவது ஒரு தெப்பம் கட்டி நதியைக் கடந்துவிடுவோம். உன்னை ஆனைமங்கலத்திற்குக் கொண்டு போய்ச் சங்கு வைத்தியரிடம் சேர்ப்பித்துவிட்டுப் பிறகு நான் போர்க்களம் போகிறேன்" என்று விஜயன் குரல் நெகிழ்ந்து கூறினான்.

வள்ளி தலையசைத்து அவன் வார்த்தைகளை மறுத்தாள்.

"மனைவிக்காகத் தாமதித்ததால் ஒரு மாவீரன் தோல்வியடைந்தான் என்று வரலாறு என்னை வசை பாடக்கூடாது..

"இதோ இந்த வைத்தியர் இருக்கிறார். சாத்தன் இருக்கிறான். தெப்பம் தயார் செய்து ஆற்றைக் கடந்து ஆனைமங்கலத்திற்கு என்னை அழைத்துச் செல்வார்கள். நீங்கள் உடனே புறப்படுங்கள்."

விஜயனுடைய இடுப்பிலிருந்த உறைவாளை உருவி அதைத் தன் உலர்ந்து போன இதழ்களால் முத்தமிட்டு, அவனுடைய கைகளில் கொடுத்தாள்.

"ஒரு மகா வீரனை என் மனத்தில் சுமந்தேன். எட்டு வயதிலேயே போர்க்களம் காணும் மைந்தனை என் மடியில் சுமந்தேன். பெண்களில் என்னைப் போலப் பெருமை பெற்றவள் யார்?" என்று பேசிய போது, வள்ளியின் முகம் பிரகாசித்தது.

விஜயன் அவளுடைய விரல்களை வருடியபடி முழங்கினான்.

"முத்தரையர்களுக்கும் எனக்கும் நடக்கும் இந்த மோதலில் பல்லவர்கள் எனக்கு எதிராகப் படை அனுப்பமாட்டார்கள்! என் நம்பிக்கை சரியானால், நாளை இதே நேரத்தில் வெற்றிச் செய்தியோடு உன்னைக் காண ஓடோடி வருவேன். ஒருக்கால் பல்லவர்களின் படைபலம் முத்தரையர்களுக்கு உதவியாக வந்தால், கடைசி மூச்சு வரை களத்தில் போராடினான் உன் கணவன் என்ற

வீரச் செய்தி உனக்கு வரும். என் இலட்சியப் போராட்டத்தின் இறுதித் தீர்ப்பு நாள் இது!”

“நான் இல்லாமல் நீங்கள் இருக்கலாம். ஆனால், நீங்கள் இல்லாமல் நான் இருக்கக் கூடாது” என்று அவள் புன்னகை பூத்தாள். அந்தப் புன்னகையில் ஏதோ பொருள் பொதிந்திருந்தது.

“என் கனவுகளின் கலங்கரை விளக்கமே! என்னைக் கலங்க வைத்துவிடாதே” என்று சொல்லிவிட்டு சட்டென்று உணர்ச்சிவசப்பட்ட விஜயனின் உடல் ஒருமுறை குலுங்கி நின்றது.

கம்பீரமான மலை போல் அவன் நின்றிருக்க, இரண்டு அருவிகள் இறங்கத் தொடங்கின கண்களிலிருந்து!

ஒரு குழந்தையைத் தட்டிக் கொடுப்பது போல் வள்ளி அந்த வீராதி வீரனைத் தட்டிக் கொடுத்தாள்; சமாதானப்படுத்தினாள்.

குடிசையின் வாயிலுக்கு அவனை அழைத்து வந்தவள் “நேரமாகிவிட்டது.. புறப்படுங்கள். எனக்கும் நேரம் நெருங்கிவிட்டது” என்றாள். “என்ன!” என்று விஜயன் துணுக்குற்றான்.

அவனுடைய அச்சத்தை, அந்த அச்சத்தில் இருந்த அன்பை ரசித்தபடி, “ஆனைமங்கலம் புறப்படுவதற்கு நேரம் நெருங்கிவிட்டது” என்று சொல்லிவிட்டுச் சிரித்தாள், சிரித்தாள், அப்படிச் சிரித்தாள்.. அதிசயமாகச் சிரித்தாள்..

&&&

“அவள் ஆனைமங்கலத்திற்குப் புறப்படவில்லை இளவரசி! இந்த உலகத்தைவிட்டே புறப்பட்டுவிட்டாள்” என்று விஜயாலயர் கூறிய போது பல்லவ இளவரசி கண் கலங்கினாள்.

“தஞ்சையில் புலிக்கொடி பறந்த போது.. என் பூங்கொடி இந்த பூமியிலிருந்தே பறந்து போய்விட்டது.

போர்க்களத்தில் நான் தோற்று வரும்போதெல்லாம் அவள் தைரியம் சொல்வாள்! ‘அடுத்த போரில் உங்களுக்குத்தான் வெற்றி’ என்று ஆறுதல் கூறுவாள்!

‘ஆட்சியைக் கைப்பற்றிவிட்டான். இனிமேல் இவனுக்கு ஆறுதல் கூறுவதற்கு ஆயிரம் பேர் வருவார்கள்’ என்று முடிவு செய்துவிட்டாள் போலும் அதுதான் முடிந்துவிட்டாள்” என்று விஜயாலயர், கதையை

முடித்த போது, பேசுவது என்னவென்று தெரியாமல் பிரமித்துப் போயிருந்தாள் இளவரசி.

"ஐயா, இது கதையல்ல, காவியமும் அல்ல. சரித்திரம்! ஒரு தேசத்தின் சரித்திரம்!"

"ஆம் இளவரசி! வள்ளி என் காதலியல்ல. என் மனைவியும் அல்ல. வீழ்ந்து கிடந்த ஓர் இனத்திற்குக் கிடைத்த வீரத் தாய்! பெண்கள் எல்லோரும் பிள்ளையை வளர்ப்பார்கள். அவளோ சோழ நாட்டின் எல்லையை வளர்த்தாள்! கடல் கடந்த தேசங்களிலும் ஒரு நாள் புலிக்கொடி பறக்கும்! அவளுடைய வீர மகன் ஆதித்தனால் அது நடக்கும். அப்போது உலகம் அவளை நினைக்கும்" என்று முழங்கிய விஜயாலயர், சற்றுநேரம் மௌனமாய் இருந்தார்.

"நீண்ட நேரமாகிவிட்டது போலிருக்கிறதே! புறப்படலாமா இளவரசி?" என்று எழுந்தார்.

அவருடன் எழுந்து அந்தப்புரத்திலிருந்து அவரைத் தொடர்ந்து வெளியேறிய இளவரசி, "ஐயா! உங்கள் வீரமைந்தனைப் பற்றி நானும் கேள்விப்பட்டிருக்கிறேன்! இன்னும் அவரைப் பார்க்கவில்லையே.." என்றாள்.

"ஆதித்தனே உங்களைத் தேடிக் கொண்டு வருவான்" என்று விஜயாலயர் புன்னகை பூத்தார்.

கோட்டை வாசலில் அந்தக் கோதையிடம் விடைபெற்றுக் கொண்ட கிள்ளி, குதிரை வீரர்களின் துரத்துதலிலிருந்து தப்பிப்பதற்காகக் கூட்டத்தின் மத்தியில் நுழைந்து வளைந்து ஓடிக் கொண்டிருந்தான். காவல் வீரர்களோ கடுஞ்சினத்தோடு அவனைத் துரத்திக் கொண்டிருந்தார்கள்.

நாலு பேருக்குத் தெரியாமல் நழுவிவிடுவதிலேயே குறியாக இருந்தான் கிள்ளி. வீதியில் சண்டையிட்டு ஒரு குழப்பத்தை உண்டாக்கவோ, வீரர்களிடம் தான் யாரென்று வெளிப்படுத்திக் கொள்ளவோ அவன் விரும்பவில்லை.

கூட்டத்தின் நடுவே உள்ளே புகுந்து ஓடிச் செல்வது கிள்ளிக்குத் தொல்லையாய் இருந்ததென்றால், பொது மக்களின் மீது மோதிவிடாமல் புரவியைச் செலுத்திச் செல்வது காவல் வீரர்களுக்கு மிகவும் கடினமானதொரு காரியமாய் இருந்தது.

பகலெனும் துகிலைக் களைந்து மலைகளின் அடுக்குகளில் மடித்து வைத்துவிட்டு, நீல வண்ணமும் கறுப்பு வண்ணமும் சேர்த்து நெய்திருந்த இரவுப் புடவையைப் பூமிப் பெண் தன் மேனியில் போர்த்திக் கொண்டாள்.

ஆசையைத் தூண்டிவிடும் அந்த அழகைப் பார்ப்பதற்காக வானம் தன் ஆயிரம் கண்களையும் அகலத் திறந்தது.

அத்தனை கண்களால் பார்த்தும் ஆவல் குறையாமல் உருண்டையாய் ஒளிவட்டமாய் இருந்த தன் நெற்றிக் கண்ணாகிய நிலவுக் கண்ணாலும் அது உற்றுப் பார்த்து உவகை கொண்டது.

கொண்டாட்டங்களும், கோலாகலங்களும் முடிந்து தஞ்சை அரண்மனை கண்ணுறங்கத் தொடங்கியிருந்தது.

அரண்மனை நந்தவனத்தில் முல்லை, கொன்றை, இருவாட்சி முதலிய அருமண மலர்களின் நறுமண அணி வகுப்பு கைவீசி நடந்து கொண்டிருந்த காற்றை மடக்கித் தம் வாசனையால் மயக்கிக் கொண்டிருக்கும் மனோரஞ்சிதப் பூக்களின் சுறுசுறுப்பு!

நந்தவனத்தின் நடுவே நெஞ்சைக் குளிரவைக்கும் நிலா முற்றம். அதையடுத்து– நினைவுகளை மூழ்கடிக்கும் நீராழி மண்டபம்.

நீராழி மண்டபத்தின் படிக்கட்டுகளில் அமர்ந்திருந்த காஞ்சி அரண்மனையின் செல்லக்கிளி, கன்னத்தில் பட்டிருந்த காயத்தினை ஒற்றை விரலால் உரசிப் பார்க்கிறது. கனவுகளில் லயிக்கிறது!

நேரம் நீண்டு கொண்டே போக, நிலவு– மேக நோயால் நோக, இருள் பரவுவதைக் கவனித்த இளவரசி எழுந்தாள், தன் மாளிகையை நோக்கி நடந்தாள்.

கிள்ளியைத் துரத்தி வந்த வீரர்கள், அத்தனை நேரம் அல்லலுற்றும் அவனைப் பிடிக்க முடியவில்லை. கடைசியில் அரண்மனை நந்தவனத்திற்குள்ளேயே புகுந்துவிட்டான் அந்தப் பொல்லாதவன்.

குதிரைகளிலிருந்து இறங்கி நந்தவனத்தினுள் நுழைந்த வீரர்கள் கிள்ளியை விரட்டினார்கள். தொலைவிலிருந்து மகிழ மரத்தடியில் கிள்ளி பதுங்குவதையும் பார்த்துவிட்டார்கள். ‘அகப்பட்டுக் கொண்டான்’ என்று ஆனந்தமுற்றார்கள்.

வேகமாய் ஓடிய வீரர்களை டக்கென்று பத்துப் பன்னிரண்டு வாள்முனைகள் வழிமறித்தன. வாளை நீட்டியபடி வழிமறித்த பல்லவ

வீரர்களிடம், “விலகுங்கள். தொலைதூரத்திலிருந்து ஒரு திருடனைத் துரத்தி வருகிறோம். தடுத்து நிறுத்தாதீர்கள். அவன் தப்பித்துவிடுவான்” என்று அதிகாரமாகக் கூறினார்கள் சோழ வீரர்கள்.

வழியை மறித்து நின்றவன் கேலி செய்தான் “திருடனைத் துரத்திக் கொண்டு வந்தவர்கள் மாதிரி தெரியவில்லையே! உங்களைப் பார்த்தால்தான் திருடர்கள் மாதிரி இருக்கிறது.”

எரிச்சலடைந்த சோழ வீரன் ஒருவன் கூறினான் “வழியைவிடுங்கள்! பேசிக் கொள்ளலாம் பிறகு, முதலில் அவனைப் பிடிக்க வேண்டும்.”

“நீங்கள் யார்?”

“மிகவும் நன்றாக இருக்கிறது! எங்கள் நாட்டுக்கு வந்து, எங்கள் அரண்மனை நந்தவனத்தில் நின்று கொண்டு எங்களை யார் என்று கேட்பது.. கோப்பரகேசரி விஜயலாய சோழ தேவரின் கோட்டைக் காவற் படையைச் சேர்ந்த வீரர்கள் நாங்கள்.”

“அப்படியா? மகிழ்ச்சி. சத்துரு மல்லர் பல்லவச் சக்கரவர்த்தியால் அனுப்பி வைக்கப்பட்டுள்ள பாதுகாப்புப் படை வீரர்கள் நாங்கள். கள்வன் புகுந்திருந்தால் அவனை நாங்களே கவனித்துக் கொள்வோம். உங்களை உள்ளே நுழையவிடமாட்டோம்.”

“எங்கள் இடத்தில் எங்கும் நுழைய எங்களுக்கு அதிகாரம் உண்டு.”

“இந்த இடம் இப்போது எங்கள் அதிகாரத்திலிருக்கிறது.”

“நாங்கள் உள்ளே போக வேண்டும்.”

“எங்களை மீறி யாரும் போக முடியாது.”

“நந்தி– மறைக்கிறது.”

“பாய முடியாத போது, புலி பதுங்க வேண்டியதுதானே..”

சோழ நாட்டு வீரர்களுக்குச் சொல்லொணாக் கோபம் வந்தாலும் எதுவும் செய்ய முடியாத எரிச்சலுடன், பல்லவ வீரர்களை முறைத்துப் பார்த்துவிட்டு வந்த வழியே திரும்பினார்கள்.

அவர்கள் போனதும், பல்லவ வீரர்களில் இருவர் அங்கேயே நின்று கொள்ள மற்றவர்கள் நந்தவனத்திலும் பிற இடங்களிலும் திருடனைத் தேட முற்பட்டார்கள்.

கிள்ளி, தான் அணிந்திருந்த மேலங்கியைக் கழற்றினான். முகத்தை மறைத்துக் கொண்டிருந்த பெரிய மீசையையும், தாடியையும் அகற்றி உட்புறமாய் அணிந்திருந்த அங்கியினுள் பத்திரப்படுத்திவிட்டு வெளியே வந்தான்.

அப்போது கிள்ளி— ஆதித்தனாகியிருந்தான்.

பல்லவ நாட்டு வீரர்கள் தன்னைத் தேடத் தொடங்கியிருப்பதை அறிந்து, அருகிலிருந்த மாளிகையை நோக்கி விரைந்தான் அவன்.

மாளிகையின் பின்புறமாய் உள்ளே நுழைந்து ஒவ்வொரு மண்டபமாய்க் கடந்து சயன மண்டபத்தை நெருங்கிய போது, ஒரு பெண்ணின் இனிய குரல் கேட்டது.

"கதவுகளைத் தாழிட்டுக் கொள்ளுங்கள். நான் உறங்கப் போகிறேன்."

கதவைத் திறந்து கொண்டு யாரோ உள்ளே நுழையும் காலடி ஓசையும் ஆதித்தனின் காதில் விழுந்தது. உடனடியாகச் சுவரினை ஒட்டிக் தொங்கிக் கொண்டிருந்த திரைச் சீலைகளின் உள்ளே புகுந்து மறைந்து கொண்டான்.

தீபங்களின் ஒளிமழையில் ஓர் உயிருள்ள தீபம் ஊர்ந்து வருவது போல் அவள் உள்ளே வருவதைப் பரபரப்போடு அவன் பார்த்துக் கொண்டிருந்தான்.

கூடத்தில் மலர்களால் மூடியிருந்த மஞ்சம் அந்த மங்கையின் பொன்மேனி வந்து புரள்வதற்காகக் காத்திருப்பதையும், அப்படிக் காக்க வைத்துக் கொண்டிருந்த அந்தப் பெண் மேனி, காண்பவரின் இதயங்களைக் கவர்ந்திழுத்து கொள்ளும் காந்தமாய் இருப்பதையும் கண்டவன், அருகில் நெருங்கியதும்தான்— அவள் பல்லவ இளவரசி என்பதை அறிந்து கொண்டான்.

உள்ளே நுழைந்த இளவரசியோ கள்ளூறும் இதழ்களில் ஒரு கவிதையைச் சொல்லிக் கொண்டு வந்தாள்.

"வானுக்கே வில்லை வழங்கும் மழை முகில் நீ! மானுக்கே வாழ்க்கை மறுப்பதோ..? —ஆகா.. என்ன அற்புதமான கவிதை!

பொன்முடி! என் இனிய கவிஞனே! நீ எங்கே இருக்கிறாய்? வா.. பல்லவ சாம்ராஜ்யத்தில் பாரிஜாதப் பூத்தூவி உனக்குப் பன்னீரபிஷேகம் நடத்துகிறேன்..” என்று மெதுவாக முணுமுணுத்தாள்.

திரைச்சீலையின் உள்ளே மறைந்திருந்த ஆதித்தனுக்கு இரண்டு இனிய அதிர்ச்சிகள்.

ஒன்று சோழ நாட்டு வீரர்களிடமிருந்து தப்பிப் பல்லவ இளவரசியின் சயன மண்டபத்திற்குள் அகப்பட்டுக் கொண்டது. மற்றொன்று– தனக்குப் பிடித்தமான கவிஞராகிய பொன்முடியின் கவிதையையும், அவர் பெயரையும் அவளுடைய ஓவிய இதழ்களால் உச்சரிக்கக் கேட்டது.

பல்லவ இளவரசி மஞ்சத்தில் அமர்ந்து, தன் அழகிய உடலைச் சிறை வைத்திருந்த ஆபரணங்களைக் கழற்றி அருகிலிருந்த தேக்குமரப் பேழையின் மீது குவிக்கத் தொடங்கினாள்.

மேலாடைக்கு மேலே அழகாகத் தவழ்ந்து கொண்டிருந்த மெல்லிய நூலாடைக்கும் தன் தோள்களிலிருந்து விடுதலை கொடுத்தாள்.

கவிதையை உச்சரித்த மங்கையின் அசைவுகளே கவிதைகளாய் மலர்வதையும், அருகிலிருந்த தேக்குமரப் பேழையைப் போலவே அவளுடைய தேகமும் உறுதியாய், அழகாய் ஒளி வீசிக் கொண்டிருப்பதையும் அவனுடைய கண்கள் திருட்டுத்தனமாகக் கவனிக்கவே செய்தன.

கள்ளத்தனமாய் இரண்டு கண்கள் தன் மேனியை அள்ளிப் பருகிக் கொண்டிருப்பதை அறியாமல், பல்லவ நாட்டுப் பருவமயில் தன் அழகெனும் தோகையைச் சுதந்திரமாகவே அசைத்துக் கொண்டிருந்தது.









13



# காதலும் மோதலும்

கொத்துக் கொத்தாய்ப் பூத்திருக்கும் கொடி மலர்களைப் போல் காற்றில் அசைந்த தீபங்கள், அந்தக் கன்னிப் பெண்ணின் அழகை உண்ணத் தொடங்கிய நாக்குகளைப் போல் காட்சியளித்தன.

சிவப்பு நிறமும் மஞ்சள் நிறமும் சேர்ந்து ஜொலிக்கும் தீபச்சுடர் போல்– கலவையான ஒரு நிறத்தில் பல்லவ இளவரசியின் கட்டுடல் ஜொலித்துக் கொண்டிருந்தது.

அந்த ஒளிவீச்சு, திரைச்சீலையின் மறைவில் ஒளிந்திருந்த ஆதித்தனின் கூர்மையான கண்களையும் கூச வைத்துக் கொண்டிருந்தது.

உறங்கச் செல்வதற்கு முன் ஒரு பெண் தன்னை எப்படி நெகிழச் செய்வாள் என்பதையும், அணிமணிகளையும், ஆபரணங்களையும் மட்டுமல்லாமல் தன் அதிகார பாவனைகளையும் கூட எப்படி அகற்றத் தொடங்குவாள் என்பதையும் திருட்டுத்தனமாகக் கவனித்துக் கொண்டிருந்த அவனுடைய கண்கள் தெளிவாகத் தெரிந்து கொள்ளவும் நேர்ந்தது.

ஒரு மலர் தன் இதழ்களை அவிழ்க்கிற போது அதன் உள்ளே வெவ்வேறுவிதமான மலர்கள் மலர்ந்து குலுங்கும் விந்தையை இயற்கை பெண்ணிடம் தான் ஏற்படுத்தியுள்ளதோ..?

பாவை ஒருத்தியின் படுக்கைக் கூடத்தில் பதுங்கியிருப்பது மாவீரனுக்கு அழகல்ல என்று மனம் வருந்தினாலும், தற்செயலாக

நேர்ந்துவிட்ட நிகழ்ச்சிக்குத் தானென்ன செய்ய முடியும் என்று தன்னைத் தானே சமாதானப்படுத்திக் கொண்டான் ஆதித்தன்.

கதவுகள் ‘படபட’வென்று தட்டப்பட்டன. ஆபரணங்களைக் கழற்றிக் கொண்டிருந்த அழகி சட்டென்று தன்னைச் சரிசெய்து கொண்டு கதவினை நோக்கி நகர்ந்தாள். பெரிய விபத்திலிருந்து தப்பிய நிம்மதியுடன் ஆதித்தன் பெருமூச்சுவிட்டான்.

ஆடைகளை ஒழுங்குபடுத்திக் கொண்டு கதவைத் திறக்கும் முன், அந்தப் பெருமூச்சின் ஒலி அவள் செவிகளிலும் விழவே, சற்றுத் தயங்கிவிட்டுத் தாழினைத் திறந்தவள், கதவைத் திறக்காமல் சட்டென்று திரும்பிப் பின்புறம் பார்த்தாள். இளவரசி கதவைத் திறக்கப் போகிறாள் என்று எதிர்பார்த்து ஓட முயன்ற ஆதித்தன், மறுபடியும் தன்னை மறைத்துக் கொண்டான்.

உள்ளே திரும்பி வந்த இளவரசி ஒரு முத்து மாலையை எடுத்துக் கழுத்தில் அணிந்து கொண்டு கதவைத் திறந்தாள். வெளியே சேடிப் பெண்கள் நின்றிருந்தனர்.

“யாரோ திருடன் உள்ளே நுழைந்துவிட்டானாம் இளவரசி! துரத்திக் கொண்டு வந்த சோழ வீரர்களைத் தடுத்து நிறுத்திவிட்டு, திருடனை நம் வீரர்கள் தேடிக் கொண்டிருக்கிறார்கள். செய்தியைத் தங்களிடம் தெரிவிக்க வந்திருக்கிறார்கள்” என்று சேடிப் பெண்கள் கூறியதும்,

“மாளிகையின் பின்புற வாயிலுக்கு இரண்டு வீரர்களை அனுப்பு. இருவர் மட்டும் இங்கேயே காவல்புரியட்டும். மற்ற வீரர்கள் வேறு பகுதியில் சென்று தேடட்டும்” என்று இளவரசி பல்லவ வீரர்களின் தலைவனுக்குக் கட்டளையிடுவது ஆதித்தனின் காதுகளில் விழவே பின்புறம் தப்பிச் செல்ல முயன்றால் பிடிபடுவோம் என்பதையும் உணர்ந்து கொண்டான். கதவுகளை மீண்டும் தாழிட்டுவிட்டு உள்ளே வந்த இளவரசி பரபரப்போ, பதற்றமோ இல்லாமல் மஞ்சத்தில் அமர்ந்து கொண்டாள். கழற்றி வைத்திருந்த முத்தாரங்களையும் மணிமாலைகளையும் கழுத்தில் அணிந்து கொள்ளத் தொடங்கினாள்.

களைந்த ஆபரணங்களைக் காரிகை எதற்காக அணிந்து கொள்கிறாள்? உறங்கப் போகிறாளா? உலவப் போகிறாளா?

ஒவ்வோர் ஆபரணத்தையும் அவள் நிதானமாக அணிந்து கொண்டிருந்த போது திரைச் சீலையின் மறைவில் நின்றிருந்த ஆதித்தனின் மனதினைக் கவலைகள் ஆக்கிரமிக்கத் தொடங்கின.

விருந்தினராய் வந்திருக்கும் இளவரசியின் சயன மண்டபத்தில், நாடே உறங்கும் நள்ளிரவு நேரத்தில், விநோதமான இந்தச் சூழ்நிலையில் பல்லவ வீரர்களின் கையில் தான் அகப்பட்டுக் கொள்ள நேர்ந்தால் ஏற்படக்கூடிய அபவாதங்களை நினைத்துப் பார்த்தான் அவன்.

மஞ்சத்தில் சாய்ந்தபடி தன்னைச் சுற்றிலும் ஒரு மயக்கத்தைப் படரவிட்டுக் கொண்டிருந்த மயில், கவலை ஏதுமின்றித் தன் அலங்காரத்தைப் பூர்த்தி செய்து கொண்டிருந்தாள் பொறுமையாக.

அலங்காரங்களை முடித்ததும் எழுந்து நின்று மெதுவாகச் சிரித்தாள். திரைச்சீலைகளை நோக்கியும் திரும்பினாள். “மறைந்து நின்றது போதும், வெளியே வரலாம்” என்று ஆதித்தனுக்கு அழைப்பும்விடுத்தாள்.

திரைச்சீலைகள் மௌனத்தைப் போர்த்தியிருந்தன.

“உண்மை வெகுகாலம் ஒளிந்திருக்க முடியாது” என்று கூறினாள் அந்தக் கோமகள்.

அப்போதும் ஆதித்தன் வெளிப்படாமல் இருக்கவே “மனத்தை மறைத்துக் கொள்ளலாம், ஆனால், உடலை எப்படி மறைத்துக் கொள்ள முடியும்?” என்று கிண்டலாகக் கேட்டாள். திரைச்சீலையின் வெளியே தெரிந்த அவன் கால்களைக் கவனித்தபடி.

வேறு வழியில்லாமல் ஆதித்தன் வெளியே வந்தான். சுடர் விழியாளைப் பார்த்த வண்ணம் சுவரோரமாய் நின்றான்.

“ஒரு பெண் தனியாக இருக்கும் போது சயன மண்டபம் வரை வந்தது தவறு. தூங்கப் போகிற பெண்ணைத் துறுதுறுத்த கண்களால் பார்த்துக் கொண்டிருந்தது பாவம். அலங்காரங்களையெல்லாம் முடித்துக் கொண்டு அவள் அழைப்புவிடுத்த பின்னும்— நெருங்கி வராமல் நின்று கொண்டிருப்பது மன்னிக்க முடியாத மாபெரும் குற்றம்!” என்று அடுக்கடுக்காய் வார்த்தைகளை அள்ளி வீசத் தொடங்கினாள் அவள்.

பருவத்தின் படிக்கட்டுகள் பளபளத்துக் கொண்டிருப்பதைப் பார்வையிட்டன ஆதித்தனின் விழிகள்.

பரபரப்பும் பதற்றமும் ‘முகத்தில்’ பரவியிருந்தாலும், அவன் கண்களில் வாலிபத்தின் ஆசைகளும் வலம் வந்து கொண்டிருப்பதை அறிந்து கொண்டாள் அந்த ஆரணங்கு.

ஒரு சின்னப் புன்னகையையும் சிந்தினாள்.

அச்சம் என்னும் கடலில் தவித்துக் கொண்டிருந்த ஆதித்தன் என்ற கப்பலுக்குக் கன்னியின் புன்னகை ஒரு கலங்கரை விளக்கமாய்க் காட்சியளித்தது.

“பல்லவ இளவரசி என்னை மன்னிக்க வேண்டும். ஒரு பெண்ணின் அந்தரங்கமான இடத்திற்கு அவள் அனுமதியின்றி வருவது சோழ நாட்டு வழக்கமல்ல. எதிர்பாராமல் இப்படி நடந்துவிட்டது. தண்டனை எதுவானாலும் ஏற்றுக் கொள்ளத் தயாராய் இருக்கிறேன்” என்றான்.

“கவலைப்படாதீர்கள். நான் உங்களைக் கண்டிக்கவும்மாட்டேன். தண்டிக்கவும்மாட்டேன். காப்பாற்றுவேன்” என்றாள் இளவரசி.

“என்னை எதற்காகக் காப்பாற்ற வேண்டும்?” என்று வியப்புடன் கேட்ட போது,

“கருணையினால் ஒருவரை ஒருமுறை காப்பாற்றிவிட்டால், கடைசிவரை அவரைக் காப்பாற்ற வேண்டியது கடமையாகிவிடுகிறது” என்று பதிலுரைத்தாள் இளவரசி.

ஆதித்தன் மெதுவாகச் சிரித்தான். அவளுடைய கன்னத்தில் தென்பட்ட காயத்தையும் ஒருமுறை கவனித்துக் கொண்டான். “காளி கோயிலில் கட்டிப் போடுமாறு ஆணையிட்ட அரசகுமாரி, என்னைக் காப்பாற்றுவாள் என்பதை எப்படி எதிர்பார்க்க முடியும்?” என்று கேள்வியையும் எழுப்பினான்.

“கட்டிப் போடச் சொல்லிக் கட்டளையிட்டது உண்மைதான். ஏனென்றால், அதற்கு முன் நீங்கள்தான் என்னைக் கட்டிப் போட்டுவிட்டீர்களே..”

“நானா..? உங்களைக் கட்டிப் போட்டேனா?”

“ஆமாம்.”

“கயிறா.. சங்கிலியா.. எதைக் கொண்டு தங்களைக் கட்டிப் போட்டேன்?” என்று அறியாதவன் போல் கேட்டான் ஆதித்தன்.

“கைகளால் கட்டிப் போட்டீர்கள்” என்று கூறிவிட்டு வேறுபுறமாகத் தன் விழிகளைத் திருப்பியவாறு, “ஆணா.. பெண்ணா என்ற ஆராய்ச்சியிலும் ஈடுபட்டீர்கள்” என்றாள் அரசகுமாரி.

இளவரசியின் இதயத்தில் ஒரு பூ மலர்வதையும், அதன் நறுமணம் அவள் எண்ணத்தில் கமழ்வதையும், அந்த வாசனைக்கு அவள் வசப்படுவதையும் பார்த்துக் கொண்டிருந்த ஆதித்தனுக்கும், கடந்த போன அந்த இரவு– நடந்து போன ‘தடங்கள்’ ஞாபகம் வந்தன.

இரவும், அந்த இரவிற்குச் சிறகு முளைக்க வைத்த இளமையும், அந்த இளமையை உணரக் கிடைத்த தனிமையும் ஆதித்தனின் இதயத்தை மயக்கிக் கொண்டிருந்தன.

அவள் பல்லவ நாட்டு இளவரசி என்பதும், பல்லவர்களின் மீது கொண்டிருந்த பகைமையும் அப்போது அவனுக்கு மறந்துவிட்டது. இருவருமே பேச்சிழந்து மௌனத்தில் மூழ்கியிருந்தார்கள்.

ஒரு குயில் இருவருடைய உள்ளத்திலும் ஒரே சமயத்தில் கூவியது.

உயிருள்ள இரு சிலைகள்.’

உள்ளத்தில் பல அலைகள்..

பாவம்..

காம தேவனின் கை வலைகள்..

கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னை நிதானித்துக் கொண்ட இளவரசி, பிரமையிலிருந்து விடுபட்டவளாய்ப் பேசினாள்.

“பெருமூச்சின் ஓசை கேட்டுத் திரும்பிப் பார்த்த போதே தெரிந்து கொண்டேன்– திரைச்சீலையின் உள்ளே திருடன் போல் நீங்கள் நின்றிருந்ததை. காப்பாற்ற வேண்டும் என்பதால்தான் காட்டிக் கொடுக்கவில்லை” என்றவள், “அதுமட்டுமல்ல.. காளிகோயிலில் உங்கள் உயிரைக் காப்பாற்றுவதற்காகக் குண்டோதரன் மீது என் குறுவாளை வீசினேன். பல்லவ வீரர்களில் ஒருவனை நானே பலிகொடுத்தேன்” என்றும் கூறினாள்.

“திடீரென்று சந்தித்த என் மீது இத்தனை அக்கறை ஏன்?” என்று ஆதித்தன் கேட்கவும், “எனக்கும் அதுதான் தெரியவில்லை” என்று தலை கவிழ்ந்தாள் தையல்.

“அன்று— அத்தனை வீரர்களின் ஆவேசத் தாக்குதலையும் அஞ்சாமல் முறியடித்த உங்கள் ஆண்மை என் இதயத்தை அசைத்திருக்கலாம். அல்லது நான் பெண் என்று தெரிந்தவுடன், தழுவிக் கொண்டிருந்த என்னைத் தள்ளி நிறுத்திப் பேசினீர்களே.. அந்த நேர்மையில் என் நெஞ்சம் நெகிழ்ந்திருக்கலாம்..” என்று அவள் விளக்கிய போது ஆதித்தனும் அதை ஆமோதித்தான்.

“இப்போதாவது என் வார்த்தைகளை நம்புகிறீர்களா?”

“நம்புகிறேன் இளவரசி.”

“உங்களைப் போன்ற வீரர்களைக் கண்டால் என் அண்ணன் அபராஜிதனுக்கு மிகவும் பிடிக்கும்.”

“நானும் உண்மையைச் சொல்லிவிட வேண்டும். பல்லவர்கள் என்றால் எனக்குக் கொஞ்சமும் பிடிக்காது.”

“கொஞ்சத்தான் பிடிக்குமோ..?” என்று குறும்பாகக் கேட்டாள் கோமகள்.

“கொஞ்சுவதில் ஏதும் குற்றமில்லை இளவரசி..” என்ற ஆதித்தன், “ஆனால், கெஞ்சவும்மாட்டேன். பல்லவர்களைக் கண்டு அஞ்சவும்மாட்டேன்” என்றான். அவனுடைய வார்த்தைகளிலிருந்த அழுத்தமும் ஆவேசமும் அவளைக் கவரவே செய்தன.

“இளவரசி இளவரசி என்று எத்தனை முறை அழைப்பது? என்னைச் சாருமதி என்றே கூப்பிடலாம்..” என்று கூறிய போது அவள் குரல் குழைந்திருந்தது.

“அப்படியானால் நீங்கள் என்னை ஆதித்தன் என்றே அழைக்கலாமே..” என்று அவன் கூறியவுடன், இளவரசியின் புருவங்கள் மேலே உயர்ந்து விரிந்தன. விழிகளும் அவனை வியப்புடன் நோக்கின. “யார்? சோழ நாட்டின் இளவரசரா?” என்ற கேள்வியும் எழுந்தது. அந்தக் கேள்வியில் ஓர் இகழ்ச்சியும் இருந்தது.

இந்த ஆணழகன் ஆதித்தனாக இருப்பான் என்று பல்லவ இளவரசி கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை என்பதை அவளுடைய திகைப்பும் அதிர்ச்சியும் தெளிவாகவே காட்டின.

மயக்கத்தில் இருந்த அந்த மங்கை நிதானமடைந்துவிட்டதையும், நாணம் படர்ந்திருந்த அவளுடைய முகத்தில் சற்றே வெறுப்பின் சாயல் படியத் தொடங்குவதையும் பார்த்த ஆதித்தன், மௌனமாய்

இருந்த மங்கையை நெருங்கி, "ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"யோசித்துக் கொண்டிருக்கிறேன்.." என்று பட்டும் படாமலும் அவள் பதில் உரைத்தாள்.

"எதை யோசிக்கிறீர்கள்?"

"தங்களுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம் என்பதை!"

வேடிக்கையாகச் சொல்கிறாளா என்ற ஐயத்துடன் இளவரசியை ஏறிட்டுப் பார்த்த ஆதித்தன், அவள் முகத்தில் தென்பட்ட கோபத்தையும் குரோதத்தையும் பூரணமாகவே புரிந்து கொண்டான்.

இமைப் பொழுதிற்குள் நிலைமை தலை கீழாக மாறிவிட்டதையும், தலைப்பாகையோடு போனதென்று நினைத்துக் கொண்டிருந்த ஆபத்து மறுபடியும் தலைக்கு வந்துவிட்டதையும் ஆதித்தனின் உள்ளம் தெளிவாகவே உணர்ந்து கொண்டது.









14



# காஞ்சிக் கிளியும் தஞ்சைப் புலியும்

காவிரியாற்றின் பாதையைக் கண்டு கொள்வது எளிது. ஆனால், காட்டாற்றின் பாதையை மட்டும் தீர்மானமாக யாரும் தெரிந்து சொல்ல முடியாது.

சிந்தையைச் சிலிர்க்கச் செய்த தென்றல் திடீரென்று சீறத் தொடங்கியதைப் பார்த்து ஆதித்தன் சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டாள் இளவரசி.

"மண்குதிரையை நம்பலாம்; பெண்களின் மனக் குதிரையை நம்பிவிடக் கூடாது" என்றான் ஆதித்தன்.

"ஏன்?"

"சற்றுமுன் நீங்கள்தான் கூறினீர்கள், என்னைக் காப்பாற்றப் போவதாக.."

"ஆமாம்.."

"தற்போது சொல்கிறீர்கள் தண்டனை கொடுக்கப் போவதாக."

"உண்மைதான்!"

"முன்னுக்குப்பின் முரணாக இல்லையா?"

"இல்லை!" என்று அலட்சியமாகக் கூறிவிட்டு அவள் விளக்கினாள்:

"இளவரசே! காளி கோயிலில் உங்களைச் சந்தித்தேன். உங்கள் இணையற்ற வீரத்தைக் கண்டு இதயத்தைப் பறிகொடுத்தேன். உண்மைதான்.. ஒப்புக்கொள்கிறேன். ஆனால், நீங்கள்தான் சோழ நாட்டின் இளவரசர் என்பதை எப்போது அறிந்து கொண்டேனோ அப்போதே உங்களை என் உள்ளம் ஒதுக்கத் தொடங்கிவிட்டது" என்றவள், "குற்றச்சாட்டுகளையும் அடுக்கத் தொடங்கிவிட்டது" என்று கூறினாள்.

"குற்றச்சாட்டுகளா..?" என்று குறுக்கிட்டான் ஆதித்தன்.

"ஆமாம்! ஒன்றல்ல, இரண்டல்ல. மூன்று குற்றச்சாட்டுகள்" என்று கம்பீரமாய்க் கூறினாள் காரிகை.

செல்லக்கிளியாய், சிங்கார மோகினியாய்ச் சிறிது நேரத்திற்கு முன் நின்றவள், தற்போது சீற்றத்தின் சுந்தரியாய் மாறிவிட்டதை ஆச்சரியத்துடன் கவனித்த ஆதித்தன், "மூன்று குற்றச்சாட்டுகளா?" என்று வியப்புடன் கேட்டான்.

"ஆமாம். முதற்குற்றம். கோயிலில் கத்தியை வீசிப் பல்லவ வீரனைக் கொலை செய்தது."

"நானா?" என்றான் ஆதித்தன் ஆவேசமாக.

"இரண்டாவது குற்றம்— தடுக்க முற்பட்ட இளவரசியிடம் தகாத முறையில் நடந்து கொள்ள முயற்சித்தது."

"அடடே!"

"மூன்றாவது குற்றம்— பல்லவ இளவரசியை அவளுடைய படுக்கையறைக்குள்ளேயே நுழைந்து பலாத்காரம் செய்யப் பார்த்தது" என்று கூறிவிட்டு, ஆதித்தனின் முகபாவங்களை அளக்க முற்பட்டாள் அந்த மோகினி.

இளவரசியின் குற்றச்சாட்டுகளைக் கேட்டு ஆதித்தன் இடிந்து போய்விடவில்லை. இளநகை சிந்தினான்.

"கல்வியிற் சிறந்த காஞ்சி என்று கேள்விப்பட்டிருக்கிறேன். காஞ்சியிலிருக்கும் கடிகைகளில் என்ன கற்றுத் தருகிறார்கள் என்கிற உண்மையை உங்களைப் பார்த்த பிறகுதான் உணர்ந்து கொள்கிறேன்."

"என்ன கற்றுத் தருகிறார்கள்?"

“பொய்யும்.. புனைந்துரையும்” என்று கூறிவிட்டுப் புன்னகைத்தான் ஆதித்தன்.

அவனுக்கு எந்த பதிலும் சொல்லாமல் எழுந்து கதவுகளின் அருகே சென்றாள் இளவரசி.

“சில கேள்விகளுக்குப் பதில் சொல்லிவிட்டுக் கதவுகளைத் திறக்கலாம்! வீரர்களை அழைக்கலாம்; தண்டனை கொடுக்கலாம்” என்ற ஆதித்தனை திரும்பிப் பார்த்தாள் இளவரசி.

“வீரத் திருவிழாவிற்கு விருந்தினராய் வந்த பல்லவ இளவரசி, முதல் நாள் இரவே பூட்டிய பூட்டுகளை உடைத்துக் கொண்டு கோயிலுக்குள் புகுந்தது ஏன்? பல்லவ வீரர்களுக்கு நள்ளிரவில் அங்கென்ன வேலை? தீப்பந்தங்களோடு எதைத் தேடிக் கொண்டிருந்தீர்கள்? சொல்லுங்கள் இளவரசி!” என்று அடுத்தடுத்துக் கேட்டாலும் அமைதியாகவே கேள்விகளை எழுப்பினான் ஆதித்தன்.

ஆணித்தரமாக அவனுடைய கேள்விகளையெல்லாம் அலட்சியப்படுத்திவிட்டுக் கதவைத் திறந்தாள் இளவரசி.

மண்டபத்தின் வெளியே அதிகாரமான அவளுடைய குரலும், பணிவுடன் பல்லவ வீரர்கள் உரைத்த பதிலும் ஆதித்தனுடைய செவிகளுக்குக் கேட்டன.

“திருடனைக் கண்டுபிடித்துவிட்டீர்களா?”

“தேடிக் கொண்டிருக்கிறார்கள் தேவி!”

“சோழ நாட்டுக்காரர்கள் பல்லவ வீரர்களின் சுறுசுறுப்பைச் சோதித்துப் பார்த்திருக்கிறார்கள். திருடனுமில்லை, ஒன்றுமில்லை. நம் வீரர்களை அவரவர்களுடைய காவல் தலங்களுக்குப் போகச் சொல்லுங்கள்” என்று கூறியவள், ஆதித்தனுடைய காதுகளில் விழவேண்டும் என்பதற்காகவே சற்று உரத்த குரலில், “மாளிகையின் பின்புறத்தில் காவல் இருக்கும் வீரர்களையும் அனுப்பிவிடலாம்” என்று கட்டளையிட்டாள்.

நீண்டநேரம் கழித்துத் தன் சயன மண்டபத்தின் உள்ளே வந்த இளவரசி, அலட்சியமாகக் கதவைத் தாழிட்டுவிட்டுத் தன் மஞ்சத்தை நோக்கி நடந்தாள். தற்செயலாக அவள் திரும்பிப் பார்த்த போதுதான்

செதுக்கி வைத்த சிலையைப் போல் ஆதித்தன் நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருப்பது தெரிந்தது.

அலட்சியமாக ஒரு புன்னகையை உதிர்த்தாள். "இன்னும் தப்பி ஓடவில்லை போலிருக்கிறது தஞ்சை இளவரசர்!" என்று வார்த்தைகளையும் வீசினாள் ஏளனமாக.

"தண்டனை கொடுப்பதாகக் கூறினீர்கள்; ஏற்றுக் கொள்வதாக நானும் வாக்களித்துவிட்டேன். தப்பிச் செல்ல நினைப்பது தவறல்லவா?" என்று ஆதித்தனும் அலட்சியமாகவே பதிலுரைத்தான்.

"தண்டனை எதுவானாலும் தயங்காமல் ஏற்பீர்களா?"

"செய்த குற்றத்திற்குத் தரப்படுகிற தண்டனை என்றால்.. தாராளமாக ஏற்றுக் கொள்வேன்."

"இல்லாவிட்டால்..?"

"தண்டிக்க முற்பட்டவர்களுக்கு நானே தண்டனை வழங்குவேன்."

"சக்கரவர்த்தித் திருமகளுக்குத் தண்டனை கொடுக்கவும் உங்களுக்குத் தைரியம் வருமா..?" என்று சிரித்தாள் இளவரசி.

"ஏன் வராது.?" என்ற ஆதித்தன், அவளை அருகில் நெருங்கி, "இப்போது நீங்கள் சக்கரவர்த்தித் திருமகளும் இல்லை. நான் தஞ்சை இளவரசனும் இல்லை" என்றான்.

"வேறு யார்?"

"அடக்கமில்லாமல் நடந்து கொண்ட பெண் நீ! ஆத்திரம் கொண்ட ஆண் நான்!"

"என்ன..!" என்று அதிர்ச்சியுடன் கேட்டாள் இளவரசி.

பாதாதிகேசம் அந்தப் பருவ மயிலின் மீது பார்வையைப் படரவிட்டான் ஆதித்தன். அவனுடைய விழிகள் தன் உடலெங்கும் ஊர்வலம் போவதை அவள் உணர்ந்தாள்.

எந்தத் திசையில் அவனுடைய எண்ணங்கள் ஓடுகின்றன என்பதை ஓரளவு அனுமானம் செய்து கொண்ட அரசிளங்குமரி, முதல் முறையாக ஆதித்தனைப் பார்த்து அஞ்சத் தொடங்கினாள். பதற்றத்தை வெளிக்காட்டிக் கொள்ளாதவளாய், "பாவையின் கேள்விக்குப் பார்வைதான் பதிலா?" என்று கேட்டாள்.

"இது பதிலல்ல! பதில் எப்படியிருக்கும் என்பதற்கு ஒரு சின்ன முன்னுரை" என்று சிரித்தான் ஆதித்தன்.

"பல்லவ இளவரசி இதற்கெல்லாம் பயந்துவிடமாட்டாள்."

"பயப்பட வேண்டியதில்லை. ஆனால், பதில் சொல்ல வேண்டும். நள்ளிரவு வேளையில் காளி கோயிலுக்குள் நுழைந்த காரணம் என்ன?" என்று அதிகாரமாகவே கேட்டான் ஆதித்தன்.

"சொல்ல முடியாது" என்று அவளும் ஆணவமாகவே கூறினாள்.

"சொல்லாவிட்டால்.."

"என்னை என்ன செய்துவிடுவீர்கள்?"

"எதுவும் செய்யமாட்டேன். ஆனால், நடந்துவிட்டது ஏதோ என்று அனைவரையும் நம்ப வைத்துவிடுவேன்."

"எப்படி?" என்று திகைப்புடன் கேட்டாள் இளவரசி.

"விடியும்வரை இங்கேயே இருப்பேன்! உங்களைத் தொடமாட்டேன், வீரர்களை அழைக்கவும் உங்களைவிடமாட்டேன். நான் படுக்கமாட்டேன்; மஞ்சத்தில் நீங்கள் படுத்துத் தூங்கினால் அதைத் தடுக்கவும்மாட்டேன்" என்றான் ஆதித்தன்.

கோபமும் குழப்பமும் கொண்ட இளவரசியின் இதயத்தில் எத்தனையோ எண்ணங்கள்.

"கவலைப்படாதீர்கள். விடியும்வரைதான் இந்த நிலைமை" என்ற ஆதித்தனின் குரல் கேட்டுத் திகைப்பிலிருந்துவிடுபட்ட இளவரசி,

"விடிந்த பிறகு.?" என்றாள் அதிர்ச்சியுடன்.

"வெளியேறிவிடுவேன். ஆனால்.."

"ஆனால்..?"

"போகும் வழியெல்லாம் ஒரு செய்தியைச் சொல்லிக் கொண்டே போவேன்."

"என்ன செய்தி?"

"அரசகுமாரி ரகசியமாக அழைத்தாள். சயன மண்டபத்தில் சந்தித்தேன். எத்தனை இன்பமான இரவு..! இதுதான் நான் சொல்லப் போகும் சுவையான செய்தி."

பல்லவ இளவரசி மெள்ள மெள்ளத் தன் பரிதாபமான நிலைமையைப் புரிந்து கொள்ளத் தொடங்கினாள். அடுக்கடுக்காய்க் குற்றச்சாட்டுகளைக் கூறி அவனை அச்சுறுத்த முயன்றது தவறுதான். அதற்காகப் பெண்ணென்றும் பாராமல் இப்படிப் பிழை செய்யலாமா? கொற்றவன் பெற்ற குலமகன் இவ்வாறு குரூரமாக நடந்து கொள்ளலாமா?

வீரமும் கருணையும் நிறைந்த விஜயாலயர் எங்கே.. கோபமும் குரூரமும் சபலமும் கொண்ட இந்த ஆதித்தன் எங்கே..

இளவரசியின் இதழ்கள் துடித்தன. சிநேகத்தால் சிவக்க வேண்டிய கண்கள் சினத்தால் சிவந்தன.

"யார் நம்புவார்கள்.?" என்று ஆவேசமாகக் கேட்டாள் அவள்.

"ஏன் நம்பமாட்டார்கள்..?" என்று கேட்ட ஆதித்தன் அவளிடம் விளக்கினான்.

"மாறுவேடத்தில் இருந்த என்னைச் சோழ வீரர்கள் துரத்திக் கொண்டு வந்தார்கள். அவர்களுக்குத் தெரியும் ஒரு திருடன் உள்ளே புகுந்தது. சோழ வீரர்களைத் தடுத்து நிறுத்திவிட்டு நந்தவனத்திற்குள் புகுந்த திருடனைப் பல இடங்களிலும் தேடினார்கள் பல்லவ வீரர்கள். திருடன் யாரும் வந்திருக்க முடியாது என்று தெரிவித்து அவர்களை நீங்கள்தான் திருப்பி அனுப்பினீர்கள். சயன மண்டபத்திற்குள் நுழைந்து சோதனையிடக் கூட அவர்களை நீங்கள் அனுமதிக்கவில்லை. காஞ்சியிலிருந்து வந்திருக்கிற உங்கள் சேடிப் பெண்கள் உட்பட எல்லோருக்கும் தெரிந்த செய்தி இது. போதாதா? சந்தேகத்தை உறுதிப்படுத்துவதற்கு வேறு சான்று வேண்டுமா?" என்று ஆதித்தன் பேசி முடித்துவிட்டுப் பல்லவ இளவரசியின் முகத்தைப் பார்த்த போது, அது பரிதாபமாக இருந்தது.

"ஒரே ஒரு காரியத்தை மட்டும் உங்கள் விருப்பம் போலவே விட்டுவிடுகிறேன்" என்று அவன் மீண்டும் கூறிய போது, அவனுடைய இதயத்தில் இரக்கம் சுரக்கும் என்று ஒரு நம்பிக்கை துளிர்விட்டது இளவரசியின் இதயத்தில்.

"எதை?" என்ற ஆவலோடு கேட்டாள்.

"கொண்டைச் சேவல் கூவியவுடன்— இளவரசியின் மானம் கொடிகட்டிப் பறக்கப் போகிறது. அதை ரதத்தில் பறக்கவிடுவதா, யானையின் அம்பாரியில் பறக்கவிடுவதா அல்லது குதிரையில்

பறக்கவிடுவதா என்பதை மட்டும் நீங்களே முடிவு செய்து கொள்ளலாம்” என்று கூறிவிட்டு ஆதித்தன் அவளைப் பார்த்துச் சிரிக்கத் தொடங்கினான்.

பல்லவ இளவரசியின் பார்வைக்கு அது சிரிப்பாகத் தெரியவில்லை. தன் உடல் முழுவதையும் பற்றி எரிக்கும் நெருப்பாகத் தெரிந்தது.

இரவு முழுவதும் அந்த நெருப்பு எரிந்து கொண்டே இருந்தது– இதயத்தில் மஞ்சத்தில் அவளும் எதிரேயிருந்த ஆசனத்தில் அவனும் அமர்ந்து கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டிருந்தார்கள் கொட்டாவிவிட்டபடி.

உறக்கம் இமைகளைப் பிடித்து இழுத்தது. களைப்போ கண்களுக்குத் தொட்டில் கட்டியது. லேசாகத் தன்னை மீறி ஒருமுறை கண்ணயர்ந்தவள் திடுக்கிட்டு விழித்துப் பார்த்த போது– எதிரே ஆனந்தப் புன்னகை சிந்தியபடி அமர்ந்திருந்தான் ஆதித்தன்.








15



# பெருமனைத் தாய்

இரவெல்லாம் தூங்காமலும், எதிரே அமர்ந்திருந்த ஆதித்தனின் ஏளனப் புன்னகையைத் தாங்காமலும் தவித்துக் கொண்டிருந்த இளவரசி, கண்ணிமைகள் வாலாட்டக் காற்று வந்து தாலாட்ட, விடிவதற்கு ஒரு நாழிகைக்கு முன் தன்னை அறியாமல் உறங்கிப் போனாள்.

சேவல் தன் கொண்டையைக் குலுக்கிக் கொண்டு கூவியது.

வானத்தின் அழுக்குச் சுவர் மீது வெளிச்சம் வந்து வெள்ளையடித்துக் கொண்டிருந்தது. விடியற்காலைப் பொழுதின் அழகு— இதயங்களைக் கொள்ளையடித்துக் கொண்டிருந்தது.

தன்னை மறந்து உறங்கிக் கொண்டிருந்த பல்லவ இளவரசி, 'தட தட'வென்று கதவுகள் தட்டப்படுவதைக் கேட்டுக் கண் விழித்தாள். இதயம் படபடக்க எதிரே பார்த்தாள்— ஆசனத்தில் இல்லை அவன்!

சாளரங்களின் வழியே உட்புகுந்த சூரிய வெளிச்சத்திலிருந்தும், தீபங்களில் எண்ணெய் தீர்ந்து போய் அவை தாமாகவே அணைந்துவிட்டதிலிருந்தும் விடிந்து வெகு நேரமாகிவிட்டது என்பதை விளங்கிக் கொண்டாள்.

எப்படித் தூக்கம் வந்தது என்பதே வேல் விழியாளுக்கு வியப்பாக இருந்தது.

அவளுடைய இதயத்தில் அடித்தளத்தில் ஆதித்தன் மீது நம்பிக்கையும் நல்லெண்ணமும் இருந்திருக்க வேண்டும்.

இல்லாவிட்டால்— இரவில், தனிமையில், ஓர் அந்நிய வாலிபன் எதிரே இருக்கும் போது தோகை ஒருத்தியால் தூங்கியிருக்க முடியாது.

ஆதித்தன் எங்கே? இரவில் ஒவ்வொரு துளிப்பொழுதிலும் தன்னை அக்கினிப் பிரவேசத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்தவன் எங்கே? சுற்றிலும் தன் கண்களைச் சுழலவிட்டாள். மாளிகையின் பின்புறக் கதவு திறந்திருந்தது.

பத்துப் பேருக்குப் பகிரங்கப்படுத்த நினைப்பவன் பின்புறமாகவா போவான்?

கடுமையான ஓர் அபவாதத்திலிருந்து தன்னை அவன் காப்பாற்றிவிட்டான் என்பதைப் புரிந்து கொண்டாள் அந்தப் பூவை. நெஞ்சில் ஒரு நிம்மதி ஏற்பட்டுவிட்டதென்பதைப் பெண்ணிடமிருந்து வந்த பெருமூச்சு பிரகடனப்படுத்தியது.

மாளிகையின் பின்புறக் கதவின் தாழ்ப்பாளில் ஓர் ஓலை நறுக்கு செருகப்பட்டிருந்தது. அவசர அவசரமாக அதை எடுத்துப் படித்துப் பார்த்தாள்.

**‘ஒரு மர்மத்தைக் கண்டு பிடிக்க வந்தேன்.**

**நானே மர்மமாகிவிட்டேன்.’**

இதற்கு என்ன பொருள்? மர்மமாய் அவன் மறைந்து போனதைச் சொல்கிறானா? அல்லது இங்கு நடந்த எதையும் மற்றவர்களிடம் சொல்லமாட்டேன் என்று வாக்குறுதி வழங்குகிறானா?

கடைசிவரை அவன் கண்ணியம் தவறி நடந்து கொள்ளவில்லை என்பதை மட்டும் அந்தக் காரிகையால் புரிந்து கொள்ள முடிந்தது. அதனால் ஆதித்தன் மீது கொண்டிருந்த கோபமும் வெறுப்பும் கொஞ்சம் குறைந்தாலும், கொஞ்சமும் கருணையின்றித் தன்னைக் கொடுமைப்படுத்திவிட்டானே என்று நினைத்த போது அவள் இதயம் குமுறியது. கொந்தளித்தது.

‘நடந்ததற்கெல்லாம் அவன் மட்டும் காரணமல்ல’ என்று உள்ளத்திற்குள் ஒரு குரலும் ஒலித்துக் கொண்டிருந்தது.

‘தட தட’வென்று கதவுகள் தட்டப்பட்டதால் எண்ணங்களிலிருந்து விடுபட்ட இளவரசி, கதவுகளைத் திறந்த போது வெளியே நிலவிய பரபரப்பையும் பதற்றத்தையும் கவனித்தாள். சேடிப் பெண்களில்

ஒருத்தி இளவரசியை நெருங்கி வந்து மெல்லிய குரலில், "அம்மா! உடனே நாம் புறப்படவேண்டும்.." என்றாள்.

"எங்கே புறப்பட வேண்டும்? ஏன் இப்படி இடிவிழுந்தது போல் இருக்கின்றீர்கள்? என்ன நடந்தது?"

"பெருமனைத்தாய் இறந்துவிட்டார்களாம்!"

தாங்கொணாத் துயரத்தில் தஞ்சை நகரமே தவித்துக் கொண்டிருந்தது! சோழ நாடெங்கும் சோகம் சூழ்ந்திருந்தது.

கோட்டைத் தளபதி குன்றத்தூர்க்கிழார் எதிர்கொண்டு அழைத்துச் செல்ல, அலட்சியமாகவே உள்ளே நுழைந்த இளவரசியின் இதயத்திலும் அங்கு தென்பட்ட சோகமான சூழ்நிலை ஓர் அதிர்வை உண்டாக்கவே செய்தது.

பெருமனைத்தாயின் உடல் மல்லிகைப் பூக்கள் பரப்பிய மஞ்சத்தில் கிடத்தப்பட்டிருந்தது. மரணத்திற்குப் பின் மூதாட்டியின் முகம் மேலும் மலர்ந்திருந்தது. ஏற்கெனவே கூனிக் குறுகியிருந்த உடல், இன்னும் குறுகிக் குழந்தையைப் போல் மாறியிருந்தாலும், தேகமெங்கும் தென்பட்ட தேஜஸ் தேம்பிக் கொண்டிருந்தவர்களையும் திகைக்க வைத்தது. உருக்கிய தங்கத்தைப் போல் அந்த உடல் ஒளிவீசிக் கொண்டிருந்தது. பெருமனைத்தாயின் உடலை நெருங்கி வணங்கி நிமிர்ந்தவளின் பார்வையில் அந்தக் காட்சி வியப்பை விதைத்தது.

யார்..? வீரமாமன்னர் விஜயாலயரா விழிகளில் நீர் வடிய வீற்றிருக்கிறார்?

ஆம்! தாள்தோய் தடக்கை– தலையைத் தாங்கிப் பிடித்திருக்க, வழியும் கண்ணீரைத் துடைக்கவும் மனமின்றிப் பெருமனைத்தாயின் உடலருகே அரசர் பெருமான் அமர்ந்திருக்கிறார்.

இளவரசி மெள்ள நகர்ந்து அவரை நெருங்கிய போது, கோட்டைத் தளபதி அவளைத் தடுத்து அந்த மண்டபத்தின் மூலைக்கு அழைத்துச் சென்றார்.

"மனம் உடைந்து போயிருக்கிறார் மன்னர். எதுவும் பேச வேண்டாம் இப்போது."

"அரசரிடம் நான் அவசரமாகப் பேச வேண்டும்."

"காரியங்களெல்லாம் முடிந்த பிறகு நானே தங்களைக் காண வருகிறேன்" என்றார் கோட்டைத் தளபதி குன்றத்தூர்க் கிழார்.

“பித்துப் பிடித்தவர் போல் இருந்தாரே மன்னர். பெருமனைத்தாய் அவரைப் பெற்றெடுத்த அன்னையா?” என்று மாலைப்பொழுதில் தன் தோழிப் பெண்ணிடம் இளவரசி வினவிக் கொண்டிருந்த போது, வார்த்தை தவறாத கோட்டைத் தளபதி அங்கு வந்து சேர்ந்துவிட்டார். “இல்லை. அதைவிடவும் உயர்ந்தவர்கள்” என்று விளக்கவும் முற்பட்டார்.

“உறவுகளையெல்லாம்விட உயர்ந்தது அந்த உத்தமத் தாயின் அன்பு! காடுகளில் மறைந்து வாழ்ந்து கொண்டிருந்த எங்கள் காவலனின் தலையைக் கொய்து வருவோர்க்கு ஆயிரம் பொற்கழஞ்சுகளை அள்ளித் தருவதாக முத்தரையன் அப்போது முரசறைந்திருந்தான்.

இந்தத் தாய்தான் தலைமறைவுக் காலத்தில் எங்கள் மன்னருக்குத் தங்க இடம் தந்தவர்கள். பெற்ற மகனைப் போல் அவரைப் பேணிக் காத்தவர்கள்!

பெருமனைத்தாயின் கணவர் பிற தேசங்களுக்குச் சென்று வர்த்தகம் நடத்தும் பெருவாணிகர். ‘மரக்கல மன்னர்’ என்றுதான் அவரை மரியாதையுடன் அழைப்பார்கள். பெரும்பிடுகு முத்தரையன் கூடப் பெயர் சொல்லி அழைத்ததில்லை.

ஐம்பதே ஐம்பது வீரர்களை வைத்துக் கொண்டு, முத்தரையர் குலத்தையே அலற வைத்துக் கொண்டிருந்த விஜயாலயருக்கு, அவ்விருவரின் அன்பும் உதவியும் கிட்டாமற் போயிருந்தால்— படைபலம் ஏது? ஆயுதம் ஏது? இந்த ஆட்சிதான் ஏது? கணவனும் மனைவியும் சேர்ந்து கடல் போன்ற தங்கள் செல்வத்தையெல்லாம் ஒரு கடமை வீரருக்குக் காணிக்கையாக்கினார்கள்” என்ற கோட்டைத் தளபதி, பல்லவ இளவரசியின் வேண்டுகோளைத் தட்ட முடியாததால் அந்தத் தியாக தீபங்களின் வரலாற்றைத் தெரிவித்தார்.

&&&

பெருவாணிகராகிய மரக்கல மன்னர் தம்முடைய வணிகக் கூட்டத்துடன் வந்து கொண்டிருந்தார்.

நடுத்தர வயதைக் கடந்து கொண்டிருந்தாலும் அவருடைய தோற்றம் எடுப்பாக இருந்தது. தலையில் பட்டுத் தலைப்பாகையும், இடையில் பட்டாடையும் அணிந்திருந்தார். கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்த விலை மதிக்கவொண்ணா மாணிக்க மாலை

சூரியனின் ஒளியில் ஜொலித்துக் கொண்டிருந்த காட்சியானது, சூரியனே தன் சுடர்க் கைகளை நீட்டி அந்த மாணிக்க மாலையின் விலை என்ன என்று வியப்புடன் விசாரிப்பது போல் இருந்தது.

தொலைவில் தென்பட்ட நிகழ்ச்சி அவருக்கு வேடிக்கையாகவும் விநோதமாகவும் இருக்கவே பல்லக்கை நிறுத்தச் சொல்லிக் கீழே இறங்கிக் கொண்டு, வீரர்களையும் தொடர்ந்து வந்த வாகனங்களையும் அங்கேயே நிறுத்தச் சொல்லிக் கட்டளையிட்டார். தன் உதவியாளை மட்டும் உடனழைத்துக் கொண்டு ஒரு மரத்தின் பின்னே மறைந்து நின்று அந்த வேடிக்கையை ரசிக்கத் தொடங்கினார்.

பாழடைந்த மண்டபம் ஒன்றின் வெளியே பத்துப் பதினைந்து வீரர்கள் பரபரப்புடன் நின்றிருந்தார்கள். உருவிய வாட்களை ஓங்கிப் பிடித்திருந்தார்கள்.

"நீ உள்ளே போ."

"இல்லை. நீ போ.."

"நான் மாட்டேன்."

"பயப்பட வேண்டியதில்லை. தூங்கிக் கொண்டுதான் இருக்கிறான்."

"இல்லை, லேசாக அசைவது மாதிரி தெரிகிறது."

"எப்படியாவது பிடித்துவிட்டால், ஆயிரம் பொற்கழஞ்சுகளுக்கு அதிபதியாகிவிடலாம்" என்று ஒரு வீரன் தன் ஆசையைத் தெரிவித்தான்.

"உயிரோடு இருந்தால்தானே.." என்று மற்றொரு வீரன் அச்சத்தைத் தெரிவித்தான்.

ஒருவருக்கொருவர் பலவிதமாகப் பேசிக் கொண்டிருந்தார்களே தவிர மண்டபத்திற்குள் நுழைவதற்குத் தைரியமில்லாதவர்களாய் அனைவருமே தயங்கிக் கொண்டிருந்தார்கள்.

வீரர்களின் தோற்றத்திலிருந்து அவர்கள் முத்தரையர் படையைச் சேர்ந்தவர்கள் என்பதை மரக்கல மன்னர் புரிந்து கொண்டார். அவர்கள் பேசிய வார்த்தைகள் அரைகுறையாகக் காதில் விழுந்ததிலிருந்து மண்டபத்தின் உள்ளே யாரோ ஒரு வீரன் உறங்கிக் கொண்டிருக்கிறான் என்பதையும் அறிந்து கொண்டார். மிதமிஞ்சிய

அவர்களுடைய அச்சத்திலிருந்து உள்ளே இருக்கும் வீரன் சாமான்யமானவனாய் இருக்க முடியாது என்பதையும் உணர்ந்து கொண்டார்.

உருவிய வாளுடன் உடலெல்லாம் நடுங்கியபடி அவர்கள் நின்று கொண்டிருந்த காட்சி மரக்கல மன்னருக்கு நகைப்பை உண்டாக்கியது.

சிறிது நேரத்தில் மண்டபத்தின் வாயிலில் நின்றிருந்த வீரர்கள், கொத்தாகத் துள்ளி வெளியே விழுந்ததையும் அப்படி விழுந்தவர்கள் எழுந்து ஒடித் தொலைவிலிருந்த மரங்களின் முதுகுக்குப் பின்னால் மறைந்து கொண்டதையும் கண்டார்.





மண்டபத்தின் உள்ளிருந்து ஓர் இளைஞன் வெளியே வந்தான். வாட்டசாட்டமாக ராஜ கம்பீரத்துடன் காட்சியளித்த அவன், குறுகிய அந்த வாசலில் தன் தலையைக் குனிந்து கொண்டு வரவேண்டியிருந்தது. வெளியே வந்தவன் சிறிது தொலைவு நடந்த போதுதான் அவனது உடல் தள்ளாடிக் கொண்டிருப்பது தெரிந்தது.

நான்கு புறமும் தன் பார்வையைச் சுழலவிட்ட இளைஞன், "யாரது?" என்று உறுமிய போது, சிங்கம் கர்ஜிப்பது போல் இருந்தது. அந்தக் குரலைக் கேட்டுச் சுற்றிலுமிருந்த மரங்களும் நடுநடுங்குவது போல் தெரியவே முத்தரைய வீரர்கள் ஒழுங்கு மரியாதையுடன் தலைகளை உள்ளே இழுத்துக் கொண்டனர்.

"யாரது?" என்று மீண்டும் குரலெழுப்பிய இளைஞன் பட்டென்று யாரோ வெட்டிவிட்டது போல் நிலத்தில் சாய்ந்தான்.

"மூர்ச்சையடைந்துவிட்டான்!" என்று பெருவாணிகரிடம் உரைத்தான் உதவியாள்.

மயக்கமடைந்து அவன் விழுந்துவிட்டான் என்பதை ஐயந்திரிபற அறிந்து கொண்டபின், மரங்களின் மறைவிலிருந்த முத்தரைய வீரர்களுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகத் துணிச்சல் வந்தது. இருந்தாலும் நிதானமாகவே அவனை நெருங்கினார்கள். மண்ணில் வீழ்ந்து மயங்கிக் கிடந்த இளைஞனைச் சுற்றிலும் வளைத்துச் சூழ்ந்து கொண்ட அவர்கள் தங்கள் வாட்களின் கூரிய நுனிகளை அவனை நோக்கிக் கொண்டு சென்றனர்.








16



# மரக்கல மன்னர்

மயங்கிக் கிடந்த இளைஞனைச் சூழ்ந்து கொண்டு அவனை நோக்கி முத்தரைய வீரர்கள் வாட்களை நீட்டிய காட்சி, மரக்கல மன்னர் பெருவாணிகருக்கு அருவருப்பை அளித்தது.

"நிறுத்துங்கள்..!" என்று அவர் எழுப்பிய கடுமையான குரல் காதில் விழவே, முத்தரைய வீரர்கள் முகத்தைத் திருப்பினர்.

மரத்தின் மறைவிலிருந்து வெளியே வந்த அவர், "வெட்கமாக இல்லை உங்களுக்கு..? மயங்கிக் கிடக்கும் மனிதனின் மார்பிலா வாளைச் செலுத்துவது?" என்று சினத்துடன் கேட்டார்.

மரக்கல மன்னரைப் பார்த்தவுடன் விலகி வெளியே வந்த வீரனொருவன் அவரைப் பணிந்து வணங்கிய பின், "ஐயா..! இவன் யார் என்று தெரிந்தால்.." என்று மெதுவாகத் தொடங்கினான்.

"யாராயிருந்தால் என்ன..? முதலில் அவன் மூர்ச்சை தெளியட்டும்" என்று அதிகாரமான குரலில் அவர் அறிவித்தார்.

"இவன் பயங்கரமானவன்..!"

"எதுவும் பேச வேண்டாம். 'யாரது' என்று கம்பீரமாக அவன் கேட்ட போது தலையைக் காட்ட உங்களுக்குத் தைரியமில்லை. மயங்கி விழுந்தவனிடத்தில் காட்டுகிறீர்கள் மாவீரத்தை! பெரும்பிடுகு முத்தரையருக்கே நீங்கள் பெரிய அவமானத்தை உண்டாக்கிவிட்டீர்கள்.." என்று சீறிய பெருவாணிகர், தன்

உதவியாளை நோக்கி "தண்ணீர் கொண்டு வா.." என்று கட்டளையிட்டார்.

முத்தரைய வீரன் பெருவாணிகரை நோக்கிப் பணிவான குரலில், "அய்யா..!" என்று மீண்டும் ஏதோ சொல்ல முனைந்தான்.

"நிறுத்து. உன்னிடம் நான் பேச வேண்டியதில்லை. உன் மன்னனுடன் பேசிக் கொள்கிறேன்."

அவருடைய வார்த்தைகளைக் கேட்டவுடன் முத்தரைய வீரர்கள் வாயடைத்துப் போனதிலிருந்து மன்னரிடம் பெருவாணிகருக்கு இருந்த செல்வாக்குப் புலப்பட்டது.

நீர் தெளிக்கச் சென்ற உதவியாள் மயங்கிக் கிடந்த இளைஞனின் முகத்தைப் பார்த்ததும் திகைப்புடன் நிமிர்ந்தான். தன் எஜமானரை நோக்கித் திரும்பினான். பெருவாணிகர் பெருஞ்சினத்துடன் நின்றிருக்கவே, தனக்கிடப்பட்ட கட்டளையில் கவனம் செலுத்தினான்.

முகத்தில் நீர் தெளிக்கப்பட்டவுடன் முனங்கிக் கொண்டே கண்களைத் திறந்தான் இளைஞன்.

முத்தரைய வீரர்கள் பின்வாங்கத் தொடங்கவே, "யாரும் அசையக் கூடாது" என்று ஆணையிட்டார் மரக்கல மன்னர்.

மயக்கம் தெளிந்து எழுந்த இளைஞன் மண்ணில் அமர்ந்தபடியே மெதுவாகத் தலையை உயர்த்திப் பெருவாணிகரையும், அச்சத்தோடு தொலைவில் நின்றிருந்த முத்தரைய வீரர்களையும் கவனித்தான்.

மரக்கல மன்னரின் உதவியாள் குவளையை நீட்டிய போது, மறுக்காமல் அதை வாங்கித் தண்ணீரைப் பருகிவிட்டு எழுந்து நின்றான்.

இப்போது இளைஞனிடம் ஓர் வலிமை வந்திருப்பதையும் முத்தரைய வீரர்களைப் பார்த்து அவன் முறைத்துக் கொண்டிருப்பதையும் கவனித்த பெருவாணிகர், "தம்பி! நீ யாரென்று எனக்குத் தெரியாது. மயங்கிக் கிடந்த உன்னை முறையின்றிக் கொன்றுவிட முயற்சி செய்து கொண்டிருந்தார்கள். தக்க சமயத்தில் வந்து தடுத்தேன்.." என்று கூறிவிட்டு முத்தரைய வீரர்களைப் பார்த்து முழங்கினார்:

“இதோ, இந்த இளைஞன் எழுந்துவிட்டான். இப்போது காட்டுங்கள் உங்கள் வீரத்தை! அடியேனுக்கு ஆட்சேபணை இல்லை!”

பேசி முடித்த அடுத்த கணமே பெருவாணிகர் அங்கிருந்து திரும்பி விடுவிடுவென்று தன் வாணிகக் கூட்டத்தை நோக்கி விரைந்தார்.

உதவியாள் பின்தொடர அவர் நடக்கத் தொடங்கிய சில நொடிகளிலேயே ஒரு முத்தரைய வீரனின் உடல் தலைக்கு மேலே சுழற்றி வேகமாக வீசி எறியப்பட்டது.

மரக்கல மன்னர் திரும்பிப் பார்த்தார். வீராவேசத்தோடு அந்த இளைஞன் விளையாடிக் கொண்டிருந்தான். ஒரு மின்னலின் நாட்டியம் போல் அவனுடைய வாள் ‘பளிச் பளிச்‘சென்ப் பாய்ந்து கொண்டிருந்தது.

பதினைந்து வீரர்களையும் அவன் பதற வைத்துக் கொண்டிருப்பதை அவர் விழிகள் பரவசத்துடன் பார்வையிட்டன. முற்றுகையிட்டிருந்த வாள் முனைகளின் நடுவே பம்பரம் போல் சுழன்று கொண்டிருந்த இளைஞனின் பெருவீரம் அவரைப் பிரமிக்க வைத்துக் கொண்டிருந்தது.

அவனுடைய வாளோடு மோதிய நான்கு வாட்கள் அடுத்தடுத்து ஆகாய தரிசனம் அடைந்தன. தூக்கியெறியப்பட்ட ஒரு வீரன் இன்னொருவன் மீது விழுந்து இருவருக்கும் முறிந்தது இடுப்பு. ஒரு வீரனின் கால்களைப் பிடித்துச் சுழற்றி வீரர்களின் மேல் தலையடித் தாக்குதல் நடத்திக் கொண்டிருந்தான் அந்த இளைஞன்.

ஓடியவர்களை அவன் துரத்தவில்லை. வாளைப் பறி கொடுத்தவர்களின் மீது தன் வாளை அவன் பயன்படுத்தவில்லை. அந்த இளைஞனின் வீரத்தையும் நேர்மையையும் பார்த்துப் பார்த்து வியந்து கொண்டிருந்தார் மரக்கல மன்னர்.

சிறிது நேரத்திற்குள் அடிபட்டவர்களும் அறுபட்டவர்களும், அலறியடித்துக் கொண்டு அங்கிருந்து ஓட்டமெடுக்கவே, வாளை உறையில் போட்டுக் கொண்டு வாணிகரை நெருங்கினான் இளைஞன்.

இரு கரங்களையும் நீட்டியபடி புன்னகையுடன் எதிர்கொண்டார் மரக்கல மன்னர்.

"அய்யா..! தக்க தருணத்தில் எனக்கு உதவி செய்தீர்கள். தங்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்."

பெருவாணிகர் அவனைப் பார்த்துப் பெருமிதத்துடன் பேசினார்: "தம்பி! யாருடைய உதவியும் உனக்குத் தேவைப்படாது, உன்னதமான வீரன் நீ! உணர்விழந்து கிடந்ததால் உனக்கு உதவும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது" என்றவர், "உடல் நலமில்லையோ..?" என்று கேட்டபடி அவனைத் தழுவிக் கொண்டார்.

மார்பில் சாய்ந்த இளைஞன் பதிலெதுவும் பேசாமலும், வாணிகருடைய தழுவலிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளாமலும் இருக்கவே, அய்யமுற்ற அவர், இளைஞனின் முகத்தை நிமிர்த்திப் பார்த்த போது மறுபடியும் அவன் மயக்கமுற்றிருப்பதை அறிந்தார்.

தரையில் அவனைப் படுக்க வைத்து நாடித் துடிப்பையும் கண்களையும் பரிசோதித்துப் பார்த்தவர், "கடுமையான காமாலை நோய் கண்டிருக்கிறது. கவனமாகச் சிகிச்சையளித்தாலன்றி உயிரைக் காப்பாற்ற முடியாது. பத்து தினங்களாவது பராமரிக்க வேண்டுமே.." என்று கூறிவிட்டு, சிறிது நேரம் சிந்தனை வயப்பட்டார்.

"பத்திரமாகக் கொண்டு சென்று வண்டியில் படுக்க வை. தஞ்சைக்குக் கொண்டு போய்விடுவோம்" என்று மரக்கல மன்னர் கூறிய போது, "தஞ்சைக்கா?" என்று அதிர்ச்சியுடன் கேட்டான் உதவியாள்.

"ஆமாம்."

"அய்யா! இந்த இளைஞன் யாரென்று தெரியுமா?"

"தெரியாது! ஆனால், எதிர்காலத்தில் இவன் என்ன செய்வான் என்பது தெரியும்" என்று மந்தகாசப் புன்னகையுடன் கூறிய மரக்கல மன்னர், "சரித்திரம் படைப்பான்.." என்றும் உறுதியான குரலில் உரைத்தார்.

"அய்யா! தூர தூர தேசங்களிலிருந்தெல்லாம் நீங்கள் பொருள்களை இறக்குமதி செய்வீர்கள். இப்போது.."

"இப்போது?"

“வம்பை இறக்குமதி செய்திருக்கிறீர்கள்.”

“வம்பா..?”

“ஆம், ஐயா! பெரும்பிடுகு முத்தரைய மன்னரின் தீராப் பகையைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள்.”

“என்ன..?”

“அரசருடைய ஜென்ம விரோதிக்கு நீங்கள் அடைக்கலம் கொடுத்திருக்கிறீர்கள்.”

பெருவாணிகரின் முகம் பிரகாசித்தது. “அப்படியானால்.. இந்த இளைஞன்தான்..” என்று உற்சாகமான குரலில் அவர் உரைக்கவும், உதவியாள், “விஜயன்!” என்று வார்த்தையைப் பூர்த்தி செய்தான் வறண்ட குரலில்.

மரக்கல மன்னரின் முகத்தில் அளவிலா ஆனந்தம் தெரிந்தது. “அடடே..!” என்று ஓர் அர்த்தமில்லாத ஒலியும் அவருடைய உதடுகளிலிருந்து உதிர்ந்தது. “நினைத்தேன்..” என்ற ஒற்றைச் சொல்லையும் அதோடு உடன் இணைத்துக் கொண்டார். தரையில் படுக்க வைத்திருந்த இளைஞனுடைய முகத்தையே உற்றுப் பார்த்தவராய் யோசனையில் மூழ்கினார்.

“எப்பாடுபட்டேனும் இந்த இளைஞனின் உயிரைக் காப்பாற்றியாக வேண்டும். பல்லக்கிலிருக்கும் மூலிகைப் பையைக் கொண்டு வா முதலில்!”

சிகிச்சையளித்து முடிந்ததும் “தற்போதைக்கு இது போதும். தஞ்சைக்குக் கொண்டு சென்றதும் தகுந்த வைத்தியத்தை மேற்கொள்ளலாம்” என்று மரக்கல மன்னர் கூறியபடியே எழுந்து நின்றதும், அதுவரையிலும் மௌனமாகவே இருந்த உதவியாள் பணிவுடன் பகர்ந்தான்: “விஜயனைத் தஞ்சைக்குக் கொண்டு சென்றால் முத்தரைய மன்னரோடு நீங்கள் மோத வேண்டியிருக்கும். பசலையூர் வைத்தியரிடம் பாதுகாப்பாக அனுப்பி வைத்துவிடுவோம். நீங்கள் இதில் நேரடியாகத் தலையிடாமல் இருப்பது நல்லது.”

மரக்கல மன்னர் மறுத்துரைத்தார்: “அது மாவீரன் ஒருவனுக்குச் செய்யும் மரியாதையல்ல. ஓர் இனத்தின் தலைவன் இவன். உடனழைத்துச் செல்வதுதான் முறை!”

"சூழ்நிலையைத் தங்களுக்குச் சொல்ல வேண்டியது என் கடமை. விஜயனுடைய தலையைக் கொண்டு வருகிறவர்களுக்கு ஆயிரம் பொற்கழஞ்சுகள் வழங்குவதாக அறிவித்திருக்கிறார் அரசர்!"

"அதனால்தான் சொல்கிறேன். வேறு யாரையும் நம்பி விஜயனை ஒப்படைக்க முடியாது. கழஞ்சுகளுக்கு ஆசைப்பட்டுக் காட்டிக் கொடுத்துவிடுவார்கள்" என்று கூறிய மரக்கல மன்னர், "உடனே விஜயனை நம் வண்டியில் ஏற்று. பயணத்தைத் துரிதப்படுத்து. நம்முடன் வருகிறவர்களுக்குக் கூட இந்த இளைஞன் யாரென்று தெரிய வேண்டாம்! நீயே கவனித்துக் கொள்" என்று கட்டளையிட்டார்.

"தஞ்சையில் இவரை எங்கே தங்க வைப்பது?" என்று தன் கடைசி அஸ்திரத்தைப் பிரயோகித்தான் உதவியாள்.

"கடல் போன்ற மாளிகையை எதற்காகக் கட்டி வைத்திருக்கிறேன்? உள்ளே பல மரக்கலங்களையே ஒளித்து வைக்கலாமே!" என்று அவர் சிரித்தார்.

பெருவாணிகர் நினைத்தது போல் விஜயனை அவரது மாளிகைக்குள் கொண்டு சேர்ப்பது அத்தனை எளிதில் நடப்பதாக இல்லை. தஞ்சையின் கோட்டை வாயிலிலேயே அவர்கள் தடுத்து நிறுத்தப்பட்டார்கள்.

காதலன் பிரிந்து செல்கிற போது கன்னிப் பெண்ணின் கன்னம் சிவப்பதில்லை. ஆனால், ஆகாய நங்கையின் அழகிய கன்னம் சூரியன் விடைபெற்றுக் கொள்ளும் வேளையில், அவன் செய்த குறும்புகளையெல்லாம் எண்ணிப் பார்த்ததாலோ என்னவோ செவ்வானமாகிச் சிவந்து கிடந்தது.

ஒரு படையெடுப்பை எதிர்பார்ப்பதைப் போல் கோட்டை வாயிலில் ஏராளமான வீரர்கள் குவித்து வைக்கப்பட்டிருந்தனர். வருகிறவர்களையும் அவர்களது வாகனங்களையும் கடுமையான சோதனைக்குப் பின்னரே அகழிப் பாலத்தைத் தாண்டி வர அனுமதித்தனர்.

"நில்லுங்கள்! எங்கிருந்து வருகிறீர்கள்?"

"டேய்! இந்த வண்டிக்குள் ஒளிந்து கொண்டிருப்பது யார்?"

கோட்டை மதிலின் மீது கொடி பறந்து கொண்டிருப்பது போதாதென்று வீரர்களின் தோரணையிலும் அதிகாரம் கொடி கட்டிப் பறந்தது.

"என்ன ஒரே பரபரப்பாக இருக்கிறதே...? சந்திரலேகைச் சதுர்வேதி மங்கலத்திலிருந்து மன்னர் வந்திருந்திருக்கிறாரா?" என்றான் இரவுப் பணியை ஏற்பதற்காகச் சற்று முன்னரே வந்துவிட்ட காவல் வீரனொருவன்.

"மெதுவாகப் பேசு. விஜயன் நம் வீரர்களைத் தாக்கிவிட்டுத் தப்பித்துவிட்டானாம். ஒரு பெரிய கையே அதற்கு உடந்தை என்று பேசிக் கொள்கிறார்கள்."

"அப்படியென்றால்..?"

"ஆமாம்! தஞ்சையை நோக்கி விஜயன் வரலாம் என்று தளபதி எதிர்பார்க்கிறார்."

"அப்படியா?" என்று இப்போது அதிர்ச்சியடைந்தான் கேள்வி கேட்டவன்.

வீரர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே மரக்கல மன்னரின் வணிகக்குழு வாகனங்களோடு கோட்டை வாயிலை வந்தடைந்தது. இன்னும் உணர்வு திரும்பாத நிலையிலிருந்த விஜயனும் அந்தக் குழுவில் இடம் பெற்றிருந்தான்.

'மரக்கல மன்னர்' என்ற பெயரைக் கேட்டவுடனேயே வணங்கிப் பணிந்து வழிவிடுகிற கோட்டைக் காவலர்கள், அன்று அவ்வாறு நடந்து கொள்ளவில்லை. அகழிப் பாலத்திற்கு வெகு தொலைவிலேயே அவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். கடுமையாகச் சோதனையிடவும் தொடங்கினார்கள்.









17



# மண்ணில் ஒரு மாவீரன்

தஞ்சையின் கோட்டை வாயிலில் தங்களைத் தடுத்து நிறுத்தியது மட்டுமல்லாமல், விசாரிக்கவும் சோதனையிடவும் முற்பட்ட வீரர்களைப் பார்த்து வியப்படைந்தனர் மரக்கல மன்னரின் வாணிகக் குழுவினர். இத்தகைய துணிச்சல் இவர்களுக்கு எப்படி வந்தது என்று எண்ணமிட்டபடியே பின்புறம் திரும்பியும் பார்த்தனர்.

கூட்டத்தை விலக்கிக் கொண்டு கோபத்துடன் முன்னே வந்த மரக்கல மன்னரின் உதவியாள், கோட்டைக் காவல் வீரர்களை முறைத்துப் பார்த்தபடி, "யாரைத் தடுத்து நிறுத்தியிருக்கிறீர்களென்று உங்களுக்குத் தெரியுமா..?" என்று அதிகாரமாகக் கேட்டான்.

கோட்டைக் காவல் வீரர்களில் ஒருவன் அமைதியாகவே கூறினான்: "மன்னிக்க வேண்டும். யாராக இருந்தாலும் சோதனையிடும்படி உத்தரவு."

"யாருடைய உத்தரவு?"

"தளபதியின் உத்தரவு."

"கூப்பிடுங்கள் உங்கள் கோட்டைத் தளபதியை! மரக்கல மன்னரையே தடுத்து நிறுத்துகிற அளவுக்குத் தைரியம் வந்துவிட்டதா..?" என்று உதவியாள் சீறிக் கொண்டிருந்த போது உபதளபதி ஓடி வந்தான்.

“கோபிக்க வேண்டாம்! மரக்கல மன்னரைப் பார்த்து நானே பேசுகிறேன்” என்று கூறிய உபதளபதி அகழியின் மீது போடப்பட்டிருந்த மரப்பாலத்தைக் கடந்தான்— ஓட்டமும் நடையுமாக. திரைகள் மூடப்பட்டிருந்த பல்லக்கை நெருங்கியதும் சற்றுத் தயங்கி நின்றான்.

“மரக்கல மன்னர் பின்புறம் இருக்கிறார்” என்றான் உதவியாள்.

உபதளபதி விரைந்தான்.

பெருவாணிகர் தன் பரிவாரங்களின் கடைசியில் புரவியின் மீது அமர்ந்திருந்தார். “மன்னித்துக் கொள்ளுங்கள் ஐயா! இக்கட்டான நிலையில் இருக்கிறோம். தளபதியின் கட்டளையைத் தட்ட முடியாது. தங்களையும் தடுத்து நிறுத்த முடியாது. என்ன செய்வது..?” என்று குழப்பத்துடன் கேட்ட உபதளபதியைக் கம்பீரமாக நிமிர்ந்து பார்த்தார் மரக்கல மன்னர்.

“அய்யா, ஆட்களையெல்லாம் உள்ளே அனுப்பிவிடுகிறோம். தயவு செய்து வண்டிகளை மட்டும் சோதனையிட அனுமதி வழங்குங்கள்!” என்று விநயமாக அவன் விண்ணப்பித்த போது, புன்னகையோடு தலையசைத்துச் சம்மதம் தெரிவித்தார் அவர்.

காவல் வீரர்கள் வண்டிகளைச் சூழ்ந்து கொள்ளவே, புரவியில் வீற்றிருந்த பெருவாணிகரைப் பணிந்து வணங்கி உள்ளே செல்லுமாறு வேண்டினான் உபதளபதி.

கோட்டை வாயிலைத் தாண்டி மரக்கல மன்னரின் குதிரை நுழையவும், தொடர்ந்து அவருடைய ஆட்களும் உள்ளே நுழைந்தனர். பல்லக்கும் வாயிலை நெருங்கியது.

“பல்லக்கில் யாருமில்லையா..?” என்று கேட்டுக் கொண்டே அதன் பக்கத்தில் உபதளபதி நெருங்கிய போது “பல்லக்கைத் தொடாதீர்கள்” என்று அதட்டினான் பெருவாணிகரின் உதவியாள்.

உபதளபதி எரிச்சலுடன் திரும்பிப் பார்த்தான்.

“உள்ளே ஆள் இருக்கிறார்கள்..”

“அதுதான் யார் என்று கேட்கிறேன்?”

“கட்டாயம் தெரிந்து கொள்ள வேண்டுமோ?”

“கட்டளை அப்படித்தான்.”

“உள்ளே இருப்பது.. மரக்கல மன்னரின் பெருமனைக் கிழத்தி!”

‘பெருமனைக் கிழத்தி’ என்று வார்த்தைகள் காதில் விழுந்த உடனேயே உபதளபதியின் அதிகார தோரணை அகன்றது.

“அடடே..! முன்பே சொல்லியிருக்கக் கூடாதா..?” என்று தன் செயலுக்காக வருந்துகிறவன் போல் பேசினான்.

“வணக்கம் அம்மா..” என்று வெளியே இருந்தபடியே குரல் எழுப்பிக் கைகளைக் குவித்ததுடன் “நீங்கள் போகலாம்..” என்று பல்லக்குத் தூக்கிகளை நோக்கிக் கைகளையும் அசைத்தான்.

பல்லக்கு கோட்டைக்குள் நுழைந்தது. பல்லக்கின் உள்ளே இருந்த விஜயனும் தஞ்சைக் கோட்டைக்குள் தனி மரியாதையுடன் நுழைந்தான்.

“பரவாயில்லையே.. தம்பி விஜயன் தப்பி வருவதற்கு நானும் பயன்பட்டிருக்கிறேனே..” என்று பேருவகை கொண்டாள் பெருமனைக்கிழத்தி.

“பல்லக்கில் நீ இருக்கிறாய் என்று சொன்னதுதான் தாமதம்.. வாயை மூடிக் கொண்டு வழிவிட்டுவிட்டார்கள். என்ன இருந்தாலும் தஞ்சைக் கோட்டையில் உனக்குத் தனிச் செல்வாக்குதான்!” என்று மனைவியைக் கிண்டல் செய்தார் மரக்கல மன்னர்.

“கேலி செய்ய வேண்டாம்! என்னைக் கட்டிக் கொள்வதற்கு முன் நீங்கள் இருந்த இருப்பு தெரியாதாக்கும்? வெறும் உப்பு வாணிகராய் இருந்த நீங்கள், என்னைப் பெண் கேட்டு வந்த சில நாட்களில் கூலவாணிகராய் உயர்ந்தீர்கள். அப்புறம், திருமணம் செய்து கொண்ட மறுதிங்களிலேயே கடல் தாண்டி வாணிபம் செய்தீர்கள். மடமடவென்று உயர்ந்து ‘மரக்கல மன்னர்’ என்று மகிமை பெற்றுவிட்டீர்கள்! பழையதையெல்லாம் மறந்துவிடாதீர்கள்.”

“பழையதையெல்லாம மறக்கவில்லை தாயே! கொஞ்சம் பழையது இருந்தால் போடு. பசியாறிக் கொள்கிறேன்.”

இருவரும் சிரித்தார்கள்.

“திரைகடல் தாண்டி எத்தனையோ திரவியங்களைத் தேடி வந்திருக்கிறேன். தேடினாலும் கிடைக்காத செல்வம் ஒன்றை இப்போதுதான் கொண்டு வந்து சேர்த்திருக்கிறேன்” என்று

பெருமிதத்துடன் கூறிய பெருவாணிகர், “விஜயனைக் கவனமாகப் பராமரித்துக் கொள்ள வேண்டியது உன்னுடைய பொறுப்பு!” என்றார்.

“நீங்கள் சொல்ல வேண்டியதில்லை. அவன் என் பிள்ளை” என்று பெருமனைக்கிழத்தி பேசிக் கொண்டிருந் போதே பெருவாணிகரின் உதவியாள் அங்கு வந்தான்.

“வைத்தியர் வந்துவிட்டாரா?” என்று கேட்டார் மரக்கல மன்னர்.

“வரமாட்டார்” என்று கூறிய உதவியாளின் குரல் சோர்ந்திருந்தது.

“ஏன், வைத்தியருக்கும் உடல் நலமில்லையா..?” என்று சிரித்தார் மரக்கல மன்னர்.

“ஆம்! அச்சம் என்னும் நோய் அவரை ஆட்கொண்டுவிட்டது.”

“ஏன்?”

“விஜயனுக்கு வைத்தியம் பார்த்ததாக வெளியே தெரிந்தால் ஆபத்து வந்துவிடும் என்று அஞ்சுகிறார்.”

“நேற்றிரவு வந்து பார்த்தாரே..!”

“அதையும் வெளியே சொல்லிவிட வேண்டாம் என்று வேண்டுகிறார்.”

“அடடா..!” என்று வருந்திய பெருமனைக்கிழத்தி “எனக்கு உடல் நலமில்லை என்று கூறியாவது அவரை அழைத்துக் கொண்டு வா!”என்றாள்.

“வர மறுத்தால்..?” என்று உதவியாள் பெருவாணிகரைக் கேட்ட போது,

“வழக்கம் போல் செய்!” என்று கடுமையான குரலில் கட்டளை பிறந்தது.

மரக்கல மன்னரின் மாபெரும் மாளிகையில் எவரும் கண்டுபிடிக்க முடியாத பாதுகாப்போடும் சகலவிதமான வசதிகளோடும் அமைந்திருந்த பாதாள மண்டபத்தில் விஜயன் படுத்திருந்தான். அவனுடைய தலைமுடியைக் கோதிவிட்டவாறு பரபரப்புடன் வாயிலை நோக்கியபடி நின்றிருந்த பெருமனைக்கிழத்தி, உள்ளே வந்த மரக்கல மன்னரிடம், “வைத்தியர் வந்துவிட்டாரா?” என்று ஆவலுடன் கேட்டாள்.

“கொண்டுவந்து கொண்டிருக்கிறார்கள்.”

“கொண்டுவந்து கொண்டிருக்கிறார்களா?”

“ஆமாம்..! தந்தப் பல்லக்கை அனுப்பினால் வந்து பார்க்க மறுக்கிறார். வண்டியை அனுப்பி வைத்தேன். குண்டுக்கட்டாகக் கட்டிக் கொண்டு வந்து கொண்டிருக்கிறார்கள்..” என்று சிரித்தார் மரக்கல மன்னர்.

“அவரை ஒவ்வொரு நாளும் இப்படியே அழைத்துவர முடியுமா?”

“முடியாது.”

“இந்தப் பிள்ளைக்குத் தொடர்ந்து மருத்துவம் பார்க்க வேண்டுமே!” என்று கவலையுடன் கூறிய பெருமனைக்கிழத்தியிடம், அவர் ஒரு கேள்வியை எழுப்பினார்:

“நம் மாளிகையின் அட்டிற்சாலையில் எத்தனை பேருக்கு உணவு தயாரிப்பார்கள்?”

“இருபது பேருக்கு”

“இன்னும் ஒருவரைக் கணக்கில் சேர்த்துக் கொள்ளச் சொல்!”

“ஏன்?”

“பாவம். வைத்தியரால் பட்டினி கிடக்க முடியாது!”

“என்ன..?” என்று நிமிர்ந்து பார்த்த பெருமனைக்கிழத்தியிடம், “விஜயனுக்கு உடல் நலமடையும் வரை வைத்தியர் இங்கேதான் இருக்கப் போகிறார்” என்றார் மரக்கல மன்னர்.

“வெளியே விடுவதில்லை என்று தீர்மானித்துவிட்டீர்களாக்கும்..” என்று சிரித்தாள் பெருமனைக்கிழத்தி.

“வெளியே இருக்க அவருக்கு விருப்பமில்லை என்றால் நாமென்ன செய்ய முடியும்?”

“‘வைத்தியரைக் காணவில்லை’ என்ற செய்தி பரவினால் ஒற்றர்களின் சந்தேகம் ஊர்ஜிதமாகாதா?”

“காணவில்லை என்று யார் சொன்னது? சேவல்பட்டியில் இருக்கும் தன் குடும்பத்தை அழைத்துவரச் சென்றிருக்கிறார் வைத்தியர் என்று தஞ்சை மக்கள் பேசிக் கொள்ளத் தொடங்கிவிட்டார்கள்.”

"பேச வைத்துவிட்டீர்களாக்கும்" என்று சிரித்தாள் பெருமனைக்கிழத்தி.

ஒரு நாள் பொழுது விடிந்த போது, மரக்கல மன்னரின் உதவியாள் பதறியபடி ஓடி வந்தான். "அய்யா! முற்றுகையிட்டது போல் நம் மாளிகையை வளைத்துக் கொண்டிருக்கிறார்கள் முத்தரைய வீரர்கள்" என்றான்.

"திட்டவட்டமாக எதுவும் தெரியாமல் இத்தகைய செயலில் ஈடுபட்டிருக்கமாட்டார்கள்" என்று முணுமுணுத்த மரக்கல மன்னர் யோசனையில் ழ்கினார்.

"நம் மாளிகையைச் சோதனையிடப் போகிறார்கள் போலிருக்கிறது" என்று உதவியாள் கூறிய போது, சீறிய பெருவாணிகர், "என் மாளிகையின் உள்ளே நுழைந்து சோதனையிடும் துணிச்சல் எவனுக்கு இருக்கிறதென்று பார்க்கிறேன்!" என்றார். "மாளிகையின் வாயிலில் ஆயுதங்களுடன் நம் ஆட்களை அணிவகுக்கச் சொல்" என்றும் கட்டளையிட்டார்.

விஜயன் பெருமனைக்கிழத்தியிடம் வேண்டினான், "தாயே! மரணத்தின் விளிம்பில் ஊசலாடிக் கொண்டிருந்த என் உயிரைக் காப்பாற்றினீர்கள்! தளர்ந்திருந்த என் உடலில் பழைய வலிமை வந்துவிட்டது. விடைபெற்றுக் கொண்டு நான் வெளியேறுகிறேன். எனக்காக முத்தரைய மன்னனிடம் நீங்கள் மோதிக் கொள்ள வேண்டாம்."

அவனுடைய வார்த்தைகளைக் கேட்ட பெருமனைக்கிழத்தி, "தம்பி! நீ இப்படியெல்லாம் பேசக்கூடாது. உன் தலைக்கு விலை வைத்து வலை வீசும் நேரத்தில் இங்கிருந்து உன்னை வெளியேறிச் செல்லவிடமாட்டேன்" என்றாள்.

இருவரது உரையாடலையும் கேட்டுக் கொண்டே வந்த மரக்கல மன்னர், "எங்களைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். முத்தரையனுக்கும் எனக்கும் மோதல் வராது. ஏனென்றால்— உனக்கு இன மானம் பெரிது. மன்னனுக்கோ என்னிடமிருந்து கிடைக்கும் வருமானம் பெரிது. அரசாள வந்தவர்கள் என்னைப் போன்ற செல்வந்தர்களை விரோதித்துக்கொள்ள விரும்பமாட்டார்கள்" என்றார்.

"ஐயா! எனக்காக நீங்கள் எத்தனை தொல்லைகளை ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள்" என்றான் விஜயன்.

"இது தொல்லையல்ல! வாழ்க்கையில் எங்களுக்குக் கிடைத்திருக்கும் வாய்ப்பு! இளைஞன்தான் நீ. ஆனால், கொள்கைக் குன்றென நிமிர்ந்து நிற்பவன்! ஏழைதான் நீ. ஆனால், மன்னவன் சூடியுள்ள மணிமகுடம் நடுங்குகிறது— நீ நடமாடும் போது! மண்ணில் எப்போதாவதுதான் உன்னைப் போன்ற மாவீரர்கள் பிறக்கிறார்கள். சோழர்களுக்காகவும் உன் தோழர்களுக்காகவும் எத்தனை தொல்லைகளை நீ ஏற்றுக் கொண்டிருக்கிறாய்? பெரிதாக நான் என்ன செய்துவிட்டேன்?" என்று பேசிய மரக்கல மன்னர், "என் மனைவி உன்னை மகனாய்ப் பார்க்கிறாள். நானோ உன்னை மாவீரனாய்ப் பார்க்கிறேன்! உன்னைக் காப்பாற்ற வேண்டியது என் போன்றவர் கடமை. கடமையிலிருந்து தவறும்படி எங்களைக் கட்டாயப்படுத்தாதே!" என்று உறுதியான குரலில் உரைத்துவிட்டு வைத்தியர் இருந்த பகுதியை நோக்கி நகர்ந்தார்.

இன்று உச்சிப்பொழுதில் அந்தச் செய்தி கிடைத்தது. மன்னன் பெரும்பிடுகு முத்தரையன் தஞ்சைக்கு வந்துவிட்டதாகவும், அரசனிடமிருந்து பெருவாணிகருக்கு அழைப்பு வரக்கூடுமென்றும் உதவியாள் உரைத்தான்.

அழைப்பு வரவில்லை.

அரசனே வந்துவிட்டான்!

பெருவாணிகர் அந்த வருகையின் நோக்கத்தை அறிந்து கொண்டார்.

சொந்தம் கொண்டாட வரவில்லை மன்னன்! சோதனையிட வந்திருக்கிறான்!

வாயிலில் சென்று மன்னனை வரவேற்றார்.

"வாருங்கள் மன்னரே! வணக்கம்!" என்றார் பெருவாணிகர் இயல்பாக.

"மரக்கல மன்னரே! வணக்கம்..!" என்றான் அரசன் கேலியாக.

"தலைநகரிலிருந்து தஞ்சைக்கு எந்நேரம் வந்தீர்கள்..?" என்றார் பெருவாணிகர் அன்பாக.

"வரவேண்டிய நேரம் வந்தது. வந்துவிட்டேன்" என்றான் மன்னன் அலட்சியமாக.

"ஏதாவது முக்கியமான காரியமா?" என்றார் பெருவாணிகர் பொதுவாக.

"முக்கியமான மனிதர் தஞ்சைக்குள் வந்திருப்பது முக்கியமில்லையா?" என்றான் அரசன் பூடகமாக.









18



# சரித்திரத்தின் தீர்ப்பு

ஆபத்தான பாதையில் போய்க் கொண்டிருந்த பேச்சின் திசையை மாற்ற வேண்டுமென்று தீர்மானித்த பெருவாணிகர், "நானொன்றும் முக்கியமான மனிதனில்லை" என்று மொழிந்தார்.

"நிறைகுடம் தளும்புவதில்லை. அதனால் அதன் உள்ளே இருப்பதைப் பலர் உணர்ந்து கொள்வதில்லை" என்று கூறினான் அரசன்.

மறுமொழி சொல்லாமல், மௌனமாய் இருந்த மரக்கல மன்னரை நோக்கித் திடீரென்று தன் கனத்த சரீரம் குலுங்கக் குலுங்கச் சிரித்தான்.

"மன்னர் மிகவும் மகிழ்ச்சியாய் இருக்கிறார் போலும்!"

"மாளிகை வாயிலில் மரக்கல மன்னரின் ஆட்கள், வாளும் வேலும் தாங்கிப் போர்க்கோலம் பூண்டு நின்றிருப்பதைப் பார்த்தவுடன் என்னால் சிரிப்பை அடக்கிக் கொள்ள முடியவில்லை."

"முற்றுகையிட்டது போல் உங்கள் வீரர்கள் என் மாளிகையை மொய்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்தவுடன் என்னால் சினத்தை அடக்கி வைக்க முடியவில்லை.." என்றார் பெருவாணிகர் கொஞ்சம் கோபத்துடன்.

"அடடே..! தவறாகப் புரிந்து கொண்டீர்கள் போலிருக்கிறது. தங்கள் மாளிகைக்கு நான் வரப் போவதாகத் தகவல்

அனுப்பியிருந்தேன். இதெல்லாம் எனக்காகச் செய்த ஏற்பாடுகள்” என்றான் அரசன்.

“பலமான ஏற்பாடுகள்தான்..” என்றார் பெருவாணிகர்.

“வாயிலிலேயே நின்று பேசிக் கொண்டிருக்கிறோமே!”

“மரியாதை தெரியாதவனல்லன் நான். மாளிகையை முழுக்கச் சுற்றிக் காட்டிவிட்டுத்தான் மன்னரை அனுப்பி வைப்பேன்!” என்று கூறிய பெருவாணிகர், பெரும்பிடுகு முத்தரையனை உள்ளே அழைத்துச் சென்றார்.

விருந்து மண்டபத்தினுள் நுழைந்து அவர்கள் அமர்ந்ததும், பணிப்பெண்கள் இருவர் பொன்னாலான தட்டுகளில், நறுக்கிய பழத் துண்டுகளும், செதுக்கிய சிற்பம் போன்ற கண்ணாடிக் குவளைகளில் செந்நிறப் பழச்சாறும் கொணர்ந்து வைத்தனர்.

புருவ வில் வளைத்த பருவச் சிலை இரண்டு பூங்கொடி போல் அசைந்து பழத்தட்டுகளைப் பரிமாற வந்த போது— அதுவரை ‘மருந்து மண்டபம்’ போல் தென்பட்டது உண்மையாகவே ‘விருந்து மண்டப’மாகிவிட்டதாய் எண்ணி முத்தரைய மன்னன் முகம் மலர்ந்தான்.

மேகத் துணுக்குகளைக் கிழித்து மேலாடையாய்ச் சுற்றிக் கொண்டு உயரமாய் உலா வந்த அந்த ஒல்லி நிலவுகள் அவன் உற்சாகத்தை ஆகாயம் போல் அகலமாக்கின.

“ஆகா..! இதுதான் யவன நாட்டுத் தேறலோ..?” என்று குவளையை ஒரு பார்வையும், அதைக் கொண்டு வந்து வைத்த கோதையை ஒரு பார்வையுமாய் மாறிமாறிப் பார்த்தபடி கேள்வியை எழுப்பினான் மன்னன்.

“இல்லை. திராட்சைச் சாறு!” என்றார் பெருவாணிகர்.

“ஓகோ..! பாரசீக நாட்டுப் பருவத் திராட்சைகளோ!” என்று பார்வையை எங்கோ பதியவிட்டபடி பரவசத்துடன் பேசிய முத்தரையன். “ஆனால்.. அசையும் போது பார்த்தால் அரபுக் குதிரைகள்தான்..” என்றும் ஆசையாய் முணுமுணுத்தான்.

இளம்பெண்களின் அழகுத் தடங்களின் மீது மன்னனின் கண்கள் இடறி விழுவதும் எழுவதும், பின் இடறி விழுவதுமாய் இருப்பதையும், வளைந்தும் நெளிந்தும் கிடந்த வனிதையரின் சிவந்த உடலெங்கும்

தென்பட்ட சித்திர வித்தைகளில் அவன் இதயம் சிக்கித் தவிப்பதையும், மொட்டுகள் போன்ற அப்பெண்களின் கட்டுடல் கண்டு மோக வெறி கொண்ட அவனுடைய உதடுகள் ஏதேதோ உளறிக் கொட்டுவதையும் பார்த்து, உள்ளூரச் சினம் பொங்கினாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாதவராய் வீற்றிருந்தார் பெருவாணிகர்.

காரிகையரைக் கண்டு கள்வெறி கொண்ட மன்னனின் கண்கள், காரியத்திலும் கவனமாய் இருப்பதை அவர் கண்டு கொண்டார். மண்டபத்தின் ஒவ்வொரு பகுதியையும் அவன் உற்றுப் பார்ப்பதையும், வேண்டுமென்றே எழுந்து உலவுவது போல் தன் பார்வையை நான்கு புறத்திலும் அவன் நடமாடவிடுவதையும் பெருவாணிகர் பார்த்துக் கொண்டுதான் இருந்தார்.

விருந்து மண்டபத்திலிருந்து வெளியேறிய பின் முற்றிலும் நிதானத்திற்கு வந்திருந்த முத்தரையன், இருந்தாற்போலிருந்து அந்தக் கேள்வியை எழுப்பினான்.

"இல்லாதவர்களுக்கெல்லாம் அள்ளித் தருகிற தாய் என்று உங்கள் இல்லக் கிழத்தியைப் பற்றித் தஞ்சையில் பெருமையாகப் பேசிக் கொள்கிறார்களே.. வெளியூர் போயிருக்கிறார்களோ..?"

அரசனுக்குத் தன் மனையாட்டியை அறிமுகப்படுத்த விருப்பமில்லாவிட்டாலும், ஐயத்திற்கு இடந்தரலாகாது என்பதால் உதவியாளிடம் சொல்லி அனுப்பினார் பெருவாணிகர்.

அடுத்த மண்டபத்தை முத்தரையனுடைய கண்கள் ஆராய்ந்து கொண்டிருந்த போது, அங்கு வந்து சேர்ந்த பெருமனைக்கிழத்தி, "வரவேண்டும் அரசே! வணங்குகிறேன்!" என்று மரியாதை தெரிவித்துவிட்டு ஒருபுறமாக ஒதுங்கி நின்றாள்.

பெரும்பிடுகு முத்தரையன் தன் பெரிய சரீரத்தை வளைத்துக் குனிந்து அந்த மாதரசியைக் கும்பிட்டுவிட்டு, "உங்கள் மாளிகைக்கு ஒரு விருந்து வந்திருக்கிறது!" என்று வார்த்தைகளை உதிர்த்தான், ஓர விழிகளால் அவளை உற்றுப் பார்த்தபடி.

பெருமனைக்கிழத்தி தன்னை மறந்து ஏதேனும் பேசிவிடுவாளோ என்று பெருவாணிகர் தடுமாறிக் கொண்டிருக்கும் பொழுதே, "விருந்து என்றால் புதுமை என்று பொருள்! என் துணைவருக்கு

நீங்கள் புதியவரல்லவே, பழகிய நண்பர்தானே!" என்று தயக்கமின்றிப் பதில் உரைத்தாள் பெருமனைக்கிழத்தி.

முகத்திலடித்தாற் போல் சொல்லப்பட்ட அந்தப் பதிலை முத்தரையன் எதிர்பார்க்கவில்லை என்பதை அவனது முகபாவம் காட்டியது.

பெருவாணிகரின் முகத்திலோ குறுநகை கோலமிட்டது.

"மாளிகையின் மற்ற பகுதிகளையும் பார்வையிடலாம்.. வாருங்கள்" என்று பெருவாணிகர் நடக்கத் தொடங்கவே, "அடடே! நானே நினைத்தேன்.." என்றான் அரசன்.

ஒவ்வொரு பகுதியையும் சுற்றிக் காட்டிய போது அரசனுடைய கண்கள் அங்குமிங்கும் அலைபாய்ந்ததையும், பூட்டியிருந்த கதவுகளைக்கூடத் திறந்து காட்டிய போது அவன் திகைப்படைந்ததையும், பெருவாணிகர் ஓர விழிகளால் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். மாளிகையின் பின்புறமிருந்த நந்தவனத்திற்குள்ளும் அரசனை அவர் அழைத்துச் செல்லாமல்விடவில்லை. நந்தவனத்தின் உள்ளே இருந்த கிணறுகளைக்கூட எட்டிப் பார்க்கச் சொல்லி அவர் கட்டாயப்படுத்திய போது மன்னனுக்கு மயக்கமே வந்துவிடும் போலிருந்தது.

'இது என்ன நாடகம்! இதில் யார் நடித்துக் கொண்டிருக்கிறார்கள்? யார் ரசித்துக் கொண்டிருக்கிறார்கள்?'

மீண்டும் மாளிகையின் உள்ளே வந்து முகப்பு மண்டபத்தில் அமர்ந்து கொண்ட இருவரும், ஒருவரை ஒருவர் உரையாடலால் உரசிப் பார்க்கத் தொடங்கினார்கள்.

பெருவாணிகர் கேட்டார், "திருப்தியாகப் பார்த்துவிட்டீர்களா?"

"திருப்தியாகப் பார்த்துவிட்டேன். ஆனால், பார்த்ததில் திருப்தியில்லை!"

"புதிர் போடுகிறீர்களே..?"

"புதிர் ஒன்றுமில்லை. பார்த்ததில் மட்டும் எனக்குத் திருப்தி இல்லை. இங்கேயே இருந்துவிட எண்ணமிடுகிறேன்" என்ற மன்னன். "ஆகா! என்ன அழகான மாளிகை! எவ்வளவு பெரிய மாளிகை!" என்று வியப்படைவது போல் காட்டிக் கொண்டான்.

"உள்ளே ஓர் ஊரையே ஒளித்து வைக்கலாம் போலிருக்கிறதே.." என்று சிரித்தபடியே உரைத்தான். திடீரென்று அதிர்ச்சியடைகிற மாதிரி ஒரு வினாவையும் தூக்கி வீசினான். "விஜயனைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

பெருவாணிகர் இந்தக் கேள்வியில் பிடிபட்டுவிடுவார் என்று எதிர்பார்த்த அவனுக்கு அப்போதும் ஏமாற்றமே ஏற்பட்டது. சற்றும் தயங்காமல் அவரிடமிருந்து பதில் வந்தது.

"அவன் ஒரு மகாவீரன்! ஆள் பலமில்லாமல், படை பலமில்லாமல் ஓர் ஆட்சியை நோக்கி அறைகூவல்விடுப்பதென்றால் அதற்கு அசாத்தியத் துணிச்சல் வேண்டும்!"

"நியாயம் என்று அவன் செயலை நினைக்கிறீர்களா..?"

"தவறு என்று என்னால் தள்ளிவிட முடியவில்லை."

"ஏன்..?"

"நலிந்து கிடக்கும் தன் இனத்திற்காக ஒரு நாடு கேட்டு அவன் போராடுகிறான். அதைக் குற்றம் என்று எப்படிக் குறை கூற முடியும்?"

"அவன் கலகக்காரனல்லவா..?" என்று கேட்ட அரசனின் குரலில் ஆவேசம் தென்பட்டது.

"வரலாற்றின் நாயகர்கள் என்று வழிபடப்படுகிறவர்களெல்லாம் ஒரு காலத்தில் கலகக்காரர்கள் என்று கருதப்பட்டவர்களே!"

"விஜயனை வரலாற்றின் நாயகன் என்று வழிபடச் சொல்கிறீர்களா..?"

"சரித்திரத்தின் தீர்ப்பு எப்படி இருக்கும் என்று யாருக்குத் தெரியும்?"

"எப்படியோ இருக்கட்டும் அவன் என் எதிரி.." என்றான் அரசன் எரிச்சலுடன்.

"எனக்கு அவன் எதிரியுமல்ல.. நண்பனுமல்ல.." என்றார் பெருவாணிகர்.

"நான் உங்கள் நண்பனல்லவா..?"

"ஆம்.."

"நண்பனின் விரோதி. நமக்கும் விரோதிதானே?"

"நம்மிடம் எப்படி நடந்து கொள்கிறான் என்பதைப் பொறுத்துத்தான் நண்பனா.. எதிரியா என்று தீர்மானிக்க வேண்டும்."

"கௌடில்யரைக் கரைத்துக் குடித்திருக்கிறீர்களோ?" –குமுறினான் கொற்றவன்.

"தேவையில்லை! திருவள்ளுவரை நான் தெரிந்து வைத்திருக்கிறேன்.." தீர்மானமாகச் சொன்னார் மரக்கல மன்னர்.

முகத்தில் கோபம் முகாமிட்டது. சினந்து சிவந்தன விழிகள். சீற்றத்துடன் எழுந்து நின்றான் முத்தரையன்.

"*ஸ்ரீமாறா! அமருங்கள். சினம் தவிர்த்துச் செவி கொடுங்கள்!" என்று பெருவாணிகர் விநயமாகப் பேசினார்.

தன்னைக் கௌரவிக்கும் விதத்தில் தன் சிறப்பு விருதினைச் சொல்லி அழைத்ததும், முத்தரையனின் கோபம் கொஞ்சம் குறைந்தது. ஆசனத்தில் மறுபடியும் அமர்ந்தான்.

"**முத்தரையர் என்ற பெயர் உங்களுக்கு எப்படி ஏற்பட்டது தெரியுமா?" என்று கேட்டார் பெருவாணிகர்.

"தெரியும்! முத்து அரையர் நாங்கள். எங்கள் மூதாதையர், பாண்டியர்களின் பரம்பரையிலே வந்தவர்கள்."

"ஆமாம். பாண்டியர்களின் வம்சத்திலே வந்தவர்கள் என்று பெருமை கொள்கிற நீங்கள்தான் இப்போது பல்லவச் சக்கரவர்த்தி

---

*ஸ்ரீமாறன் என்பது பெரும்பிடுகு முத்தரையனுக்குக் கல்வெட்டுக்களில் வழங்கப்படும் பட்டப் பெயர்களுள் ஒன்று. ஆதாரம்–முத்தரையர்–நடன காசிநாதன் பக்கம் 50–52.

**இம்மரபினர் பாண்டியரை வென்றவுடன் 'மாறன்' என்று பெயரிட்டுக் கொண்டனர். முத்து+அரையர் = முத்துக்கள் கிடைக்கும் பகுதிக்கு (பாண்டிய நாட்டுக்கு) அரசர் என்று தம்மை அழைத்துக் கொண்டனர். இன்றேல் சேர, சோழ, பாண்டியரை வென்றனராதலின் முத்தரையர் (முத்தரையர்) எனப் பெயர் கொண்டனர் எனினும் பொருந்தும் M.S.R. Iyengar's Studies in S.I. Jainism.

(பல்லவர் வரலாறு டாக்டர் மா. இராசமாணிக்கனார் 7–ஆம் பதிப்பு– பக்கம்–43)

நிருபதுங்கவர்மனை நேசிக்கிறீர்கள். பல்லவர்களுடன் சேர்ந்து கொண்டு பாண்டியரை எதிர்த்துக் கொண்டு இருக்கிறீர்கள்! எந்த வகையில் நியாயம் இது..?”

பெரும்பிடுகு முத்தரையன் பேசாமல் இருந்தான்.

“சகல வல்லமை படைத்த நீங்களே சதுரங்க அரசியலின் சூழலுக்கேற்ப அவ்வப்போது நண்பனை எதிரியாகவும், எதிரியை நண்பனாகவும் மாற்றிக் கொள்ளும் போது, சாதாரண வாணிகர்களாகிய நாங்கள் என்ன செய்ய முடியும்?”

பெருவாணிகருடைய கேள்வி முத்தரையனை யோசிக்க வைத்தது.

“அரபு தேசத்திலிருந்து ஆயிரக்கணக்கான குதிரைகளை ஏராளமான பொருள் கொடுத்து இறக்குமதி செய்கிறேன். துறைமுகத்தில் பொற்கழஞ்சுகளைச் சுங்கமாகக் கொட்டிக் குவிக்கிறேன். அப்படிக் கொண்டு வந்த குதிரைகளை இவருக்குத்தான் விற்பேன்— அவருக்கு விற்கமாட்டேன் என்று நான் பிடிவாதம் பிடித்தால் பிழைக்க முடியுமா? எவர் எனக்கு எதிரி? யார் எனக்கு நண்பன்? துன்பத்தில் இருப்பவன் என் நண்பன்! துயரத்தில் இருப்பவன் என் தோழன். எனக்குத் தெரிந்த அர்த்த சாஸ்திரம் இதுதான்!”

இடையில் குறுக்கிட்டு ஏதோ சொல்லப் புகுந்த முத்தரையனைத் தடுத்துவிட்டுப் பெருவாணிகரே பேசினார்:

“வேந்தே! நீங்கள் ராஜ தர்மத்தைக் காப்பாற்ற வேண்டியவர்கள்! உங்களைப் போலவே எனக்கும் சில தர்மங்கள் உண்டு. *கொள்வதுஉம் நிறைகொளாது கொடுப்பதுஉம் குறைபடாது நடத்த வேண்டிய வணிக தர்மம் உண்டு. என் தேசத்தில் அவ்வப்போது ஆள்கிறவர்களை அல்ல, என் தேசத்தில் என்னோடு வாழ்கிறவர்களை நேசிக்க வேண்டிய வாழ்க்கை தர்மம் உண்டு. இதையெல்லாம் தாண்டி— பூமிக்கெல்லாம் பொதுவான மானுட தர்மம் என்ற ஒன்றும் உண்டு” என்று கூறி நிறுத்திய பெருவாணிகர் மன்னனை ஏறிட்டுப் பார்த்தார். அடக்க முடியாத எரிச்சலுடன் அரசன் அவரைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

---

*பட்டினப்பாலை

பெருவாணிகர் தொடர்ந்து கூறினார்: "இந்த நெறிகளிலிருந்து நான் தவறக் கூடாது. பிறரைத் தவறவிடவும் கூடாது. அதனால்தான் பசலையூர் அருகே மூர்ச்சையடைந்து கிடந்த விஜயனை உங்கள் வீரர்கள் கொல்ல முயன்ற போது நான் குறுக்கிட்டேன். அவர்களுடைய தகாத செயலைத் தடுத்து நிறுத்தினேன்."

எரிச்சல்களையெல்லாம் அடக்கிக் கொண்டு இதுவரை பொறுமையுடன் சகித்துக் கொண்டிருந்த அரசனிடம் பெருவாணிகர் பேசிய கடைசி வார்த்தைகள் அடக்க முடியாத ஆத்திரத்தையும் ஆவேசத்தையும் ஏற்படுத்திவிட்டன.

'தலையைக் கொண்டு வந்தால் ஆயிரம் பொற்கழஞ்சுகள்' என்று தான் அறிவித்திருந்த ஒருவனைக் காப்பாற்றியதோடு மட்டுமல்லாமல்— தைரியமாக அதைத் தன்னிடமே விவரித்துக் கொண்டிருக்கும் 'தர்மத்தை' அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

முத்தரையனிடமிருந்து வெளிப்பட்ட மூச்சு— நாகத்தின் சீற்றம் போல் எதிரிலிருப்பவர்களை நடுங்க வைப்பதாய் இருந்தது. ஆங்காரம் மேலோங்கப் பற்களை நறநறவென்று கடித்தபடி எழுந்து நின்றவன், தான் அமர்ந்திருந்த ஆசனத்தை நோக்கி ஓங்கி ஓர் உதை கொடுத்தான்.

'வீண் பேச்சு எதற்கு? ஒரே வெட்டாக வெட்டிப் போட்டாலென்ன இந்த வாணிகனை?' என்று விபரீதமான ஒரு யோசனையும் ஓடியது அவன் உள்ளத்தில்.

கச்சையிலிருக்கும் கொலைவாளை நோக்கிப் பெரும்பிடுகு முத்தரையனின் கையும் நீண்டது.








# 19



## வேங்கைப்புலி

ஆத்திரம் கொண்ட முத்தரைய மன்னன் எழுந்து நின்றதையும், ஆசனத்தை ஓங்கி உதைத்ததையும், உறைவாளை நோக்கி அவனுடைய கை நீண்டதையும் கவனித்துக் கொண்டிருந்த பெருவாணிகரின் முகத்தில் எவ்விதப் பரபரப்பும் ஏற்படவில்லை. அச்சமின்றித் தன் இருக்கையில் அமைதியாகவே அமர்ந்திருந்தார்.

உறைவாளை நோக்கிச் சென்ற அரசனுடைய கை சற்றுத் தயங்கி நின்றபின் வாளை உருவாமல் கச்சையைவிட்டு விலகியதைப் பார்த்தவர், கொற்றவன் மிகுதியான குழப்பத்தில் இருப்பதைப் புரிந்து கொண்டார்.

வெறுப்புடன் அவரை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த அரசனுக்குப் பெருவாணிகர் அடுத்துச் செய்த செயல் ஆச்சரியத்தை உண்டாக்கியது.

இடுப்புக் கச்சையிலிருந்து ஒரு சிறிய பட்டுப் பையை உருவி எதிரே வைத்தவர், "வேந்தே! எடுத்துக் கொள்ளுங்கள்" என்று வேண்டுகோளும் விடுத்தார்.

"இதில் என்ன இருக்கிறது?" என்று கேட்டான் அரசன் எரிச்சலுடன்.

"தங்களுக்குத் தேவையானது!" என்று கூறிய பெருவாணிகர், அந்தப் பையை எடுத்து அவனுக்குத் திறந்து காட்டினார்.

உள்ளே பார்த்த முத்தரையன் "திறவுகோல்கள்!" என்று முணுமுணுத்தான்.

"ஆமாம்! தங்களுக்குத் தேவையானதைத் தாங்களே எடுத்துக் கொள்வதற்காக.." என்றார் பெருவாணிகர்.

அந்த வார்த்தைகளின் பொருளை அரசனால் புரிந்து கொள்ள முடியவில்லை. பட்டுப் பையையும் வாணிகரின் முகத்தையும் மாறி மாறிப் பார்வையிட்டான்.

பெருவாணிகர் விளக்கினார். "அரசே! ராஜ தர்மத்தைக் காப்பாற்ற உங்களுக்கு நானும் உதவத் தயாராயிருக்கிறேன். அதன் அடையாளமாகத்தான் உங்களிடம் திறவுகோல்களை ஒப்படைக்கிறேன்.

"புரியவில்லை" என்றான் அரசன்.

"பலத்த மழை பெய்து பயிர்கள் அழிந்துவிட்டதால் தஞ்சையில் இப்போது பஞ்சம். வல்லத்தில் வறட்சி! கடுமையான பஞ்சத்திலிருந்து மக்களைக் காப்பாற்ற வேண்டிய கடமை– காவலனுக்கு! கவலைப்பட வேண்டாம்.. நிமிர்ந்தே நிற்பது என் நெற்களஞ்சியம்! தானியக் கிடங்குகளையெல்லாம் தயங்காமல் திறந்துவிடுகிறேன். தேவையானதை அள்ளிக் கொள்ளுங்கள். தீரட்டும் பஞ்சம்!"

"உண்மையாகவா? நானே உங்களிடம் கேட்க நினைத்தேன்!" என்று மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டான் மன்னன்.

"கேட்க வேண்டியதில்லை. எப்போது வேண்டுமானாலும் நீங்களே எடுத்துக் கொள்ளலாம்" என்று புன்னகைத்த பெருவாணிகர்..

"உங்களை நான் புரிந்து கொள்கிறேன். நீங்களும் என்னைப் புரிந்துகொள்ள வேண்டும். விஜயனைக் கொல்ல முயன்ற வீரர்களை நான் தடுத்தேன் என்றதும் வெகுண்டெழுந்தீர்கள். ஏன் தடுத்தேன்? மனித தர்மத்திற்கே அது மாறானது என்பதால் தடுத்தேன்.. முத்தரையர் என்றால் யார்? பாலை, நெய்தல் இரண்டிலும் முழுமையாய் வாழ முடியாது. முல்லை, குறிஞ்சி, மருதம் மூன்றும் வாழ்க்கைக்கு ஏற்ற வளமான பகுதிகள். அந்த மூன்று தரைக்கும் உரிமை உடையவர்தான் முத்தரையர்!" என்றார்.

"ஆகா! புதுமையான விளக்கம். போற்றுகிறேன் உங்களை.." என்று மன்னன் முகம் மலர்ந்தான்.

“அப்படிப்பட்ட முத்தரையர் குலத்திற்குப் பழி வரலாமா? உணர்விழந்து கிடக்கும் ஒருவனைக் குத்திக் கொலை செய்யும் கொடூரத்தை எந்த தர்மமும் ஏற்றுக் கொள்ளாது. அதனால்தான் தடுத்தேன். மயக்கம் தீர்ந்ததும் விஜயனை உங்கள் வீரர்களிடத்திலேயே ஒப்படைத்தேன்!”

“உண்மைதான்!” என்று தலையை ஆட்டினாலும் முத்தரையன் சமாதானம் அடைந்துவிடவில்லை என்பதை அவன் முகம் காட்டியது.

“நீங்கள் என் மாளிகைக்குள் நுழையும் போதே உள்ளே விஜயன் ஒளிந்திருக்கக்கூடும் என்ற சந்தேகத்துடன்தான் வந்தீர்கள். ஆபத்து எத்தகையது என்பதை அறிந்திருந்தும், தளபதியை வீரர்களை யாரையுமே துணைக்கு அழைக்காமல் தனியே வந்தீர்கள். என் மீது நீங்கள் வைத்த நம்பிக்கையை மட்டுமல்லாமல், உங்கள் வீரத்தின் மீது உங்களுக்கிருக்கும் நம்பிக்கையையும் நான் உணர்ந்து கொண்டேன். ஆனால், பசலையூர் அருகே உங்கள் வீரர்கள் செய்தது பாதகச் செயலல்லவா? அந்தக் கயவர்களைக் கழுவிலேற்றி இந்த நாட்டின் கௌரவத்தை நீங்கள் காப்பாற்ற வேண்டும்!” என்று பெருவாணிகர் பேசி முடித்த போது பெரும்பிடுகு முத்தரையன் பிரமித்துப் போயிருந்தான்.

குற்றவாளி தன் குற்றத்திற்குப் பரிகாரம் தேடாமல், குற்றம் சாட்டுகிறவர்களின் மீதே குற்றத்தைத் திருப்பிவிட்ட சாமர்த்தியத்தையும்.. குற்றம் சாட்டுகிறவர்களையே கழுவிலேற்ற வேண்டுமென்று கோரிக்கைவிடுக்கிற துணிச்சலையும் கண்டு அயர்ந்து போய் அமர்ந்திருந்த அரசனால் நீண்ட நேரத்திற்கு எதுவுமே பேச இயலவில்லை. கோபத்துடன் அந்த மாளிகைக்குள் நுழைந்த முத்தரையன், குழப்பத்துடன் அங்கிருந்து வெளியேறினான்.

“பெரும்பிடுகு முத்தரையனல்லன்.. அவன் பெரும் பிடுங்கு முத்தரையன்!” என்று கூறிச் சிரித்தார் மரக்கல மன்னர்.

“எரிச்சலுடன் வந்த மன்னனை எப்படிச் சமாளித்தீர்கள்?” என்று கேட்டாள் பெருமனைக்கிழத்தி.

“நம்பிக்கை ஏற்படும்படி நடந்து கொண்டேன். மாளிகை முழுவதையும் நானே சுற்றிக் காட்டினேன். சந்தேகங்களையெல்லாம் நானே கிளப்பி அதற்குச் சமாதானமும் சொன்னேன். சுருக்கமாகச்

சொன்னால் கொஞ்சம் கொஞ்சமாக அவனைக் குழப்பினேன்" என்று சிரித்தார் மரக்கல மன்னர்.

"கற்ற வித்தைகளையெல்லாம் காட்டினீர்களாக்கும்!" என்று கேலி செய்தாள் பெருமனைக்கிழத்தி.

"அளவாகத்தான் காட்டினேன்.." என்று கூறிய மரக்கல மன்னர், "அறிவாளிகளிடம் அஞ்ச வேண்டியதில்லை. முட்டாள்களிடம் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும். இவன் முட்டாள் மட்டுமல்ல.. மூர்க்கன்!" என்றார்.

"வாருங்கள், விஜயனைப் போய்ப் பார்ப்போம்" என்று நடந்தாள் பெருமனைக்கிழத்தி.

மாளிகையின் கோடியை அடைந்து பின்புற வாயிலைத் திறந்து அங்கிருந்து நந்தவனத்திற்கு இறங்கும் படிக்கட்டுகளின் அருகே அவர்கள் வந்து நின்றவுடன், உதவியாள் இரண்டாம் படிக்கட்டைக் கைகளால் தள்ளி நகர்த்தினான். உள்ளே கையைச் செலுத்தி எதையோ திருகினான்.

மேலேயிருந்த படிக்கட்டுகள் விலகிக் கொள்ள தரைக்குக் கீழே பாதாள மண்டபத்திற்குச் செல்லும் படிக்கட்டுகள் தென்பட்டன! மூவரும் உள்ளே சென்றவுடன் படிக்கட்டுகள் மூடிக் கொண்டன.

கவலை படிந்த முகத்துடன் வைத்தியர் வழியிலேயே காத்திருந்தார்.

"அய்யா! வைத்தியர் வாட்டமாக இருக்கிறாரே! உடல் நலமில்லை போலிருக்கிறதே.. இவருக்கு வைத்தியம் செய்ய இனி எந்த வைத்தியரைப் போய் இழுத்து வருவேன்?" என்று மரக்கல மன்னர் கேலியாகச் சிரிக்கவே, "சும்மா இருங்கள். தாத்தா என்று கூப்பிடப் பேரன் இல்லாததால் குழந்தையைப் போல் எப்போதும் குதித்து விளையாடுகிறீர்கள்!" என்று கோபித்துக் கொண்ட பெருமனைக்கிழத்தி, வைத்தியரை நெருங்கி, "அய்யா! ஏன் கவலையாக இருக்கிறீர்கள்? தங்களுக்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராய் இருக்கிறோம்" என்றாள்.

"வேறொன்றும் வேண்டாம் தாயே! எனக்கு விடுதலை வேண்டும்" என்றார் வைத்தியர்.

“நல்லது வைத்தியரே! தஞ்சையிலிருந்து முத்தரையர் நாளை புறப்படுவாரென்று நம்புகிறேன். கோட்டை வாயிலை அவர் தாண்டியதும் நீங்கள் இந்த வீட்டு வாயிலைத் தாண்டலாம். தக்க பரிசுகளோடு அனுப்பி வைப்பேன். ஆனால்.. இந்த ரகசியம் மட்டும் உங்கள் நெஞ்சோடு இருக்க வேண்டும். வெளியில் வந்ததோ..” என்று நிறுத்தினார் மரக்கல மன்னர்.

“என்ன நடக்கும் என்பதை அறிவேன் அய்யா!” என்று கூறிய வைத்தியர், கழுத்தில் ஒரு கையை வைத்து வெட்டி காட்டினார். எல்லோருமே சிரித்தார்கள்— வைத்தியர் உட்பட.

“பாருங்கள் இந்தப் பிள்ளையை.. காலைப் பொழுதிலேயே கலகத்தைத் தொடங்கிவிட்டான். எதை உண்ணச் சொன்னாலும் வேண்டாம்.. வேண்டாம்.. என்கிறான். வாலிபப்பிள்ளை வயிற்றைக் காயப் போடலாமா..?” என்று பெருமனைக்கிழத்தி குற்றம் சாட்டவே, மரக்கல மன்னர் விஜயனை நெருங்கி “எல்லாவற்றையும் வேண்டாமென்கிறாய். என்னதான் வேண்டும் உனக்கு?” என்றார்.

விஜயன் இருவரையும் மாறிமாறிப் பார்த்துவிட்டு, “எனக்கும் விடுதலை வேண்டும்” என்றான்.

மரக்கல மன்னரும் அவரது மனைவியும் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார்கள்.

“வேங்கைப் புலியல்லவா நீ. வெளியேற வேண்டியதுதானே..?”

“முத்தரையனுடைய சிறை என்றால் மோதித் தகர்த்துவிடலாம். அப்படிச் செய்ய முடியாத சிறை இது!”

“எது?”

“அன்பெனும் சிறை!” என்றபடி பெருமனைக்கிழத்தியையும் மரக்கல மன்னரையும் பார்த்துப் பேசினான் விஜயன்: “தலைமறைவாய்த் திரிந்த எனக்குத் தாயின் பாசத்தையும், தந்தையின் பரிவையும் காட்டினீர்கள். உங்களைப் பிரிவதற்கு உள்ளம் வரவில்லை. ஆனால் என்ன செய்வது.. கடமை என்னை அழைக்கிறது!” என்று விஜயன் கூறிய போது, பெரியவர்கள் இருவரும் பிரமையிலிருந்தார்கள்.

“மாட்டேன்! என் மகனைப் பிரிந்து என்னால் இருக்க முடியாது” என்று பெருமனைக்கிழத்தி கண் கலங்கினாள்.

அமைதியாய் நிமிர்ந்த பெருவாணிகர் அவளுக்கு ஆறுதல் கூறினார். "தடுக்காதே..! வீட்டை மகிழவைக்க மட்டும் பிறந்த பிள்ளையல்ல விஜயன். நாட்டையே வழி நடத்தப் போகிறவன்!" என்று கூறியவர், விஜயனைப் பார்த்து, "தம்பி, நாளை நீ புறப்படுகிறாய்!" என்று கூறிவிட்டு நடந்தார்.

விஜயன் விடைபெற்றுக் கொண்டான். மரக்கல மன்னர் ஒரு வீரவாளை எடுத்து அவனிடம் கொடுத்தார். பளபளவென்று ஒளிவீசிய அந்த வாளின் பிடி பொன்னால் செய்யப்பட்டிருந்தது. அதில் 'விஜயன்' என்ற பெயரும் பொறிக்கப்பட்டிருந்தது

பெருமனைக்கிழத்தி, மரக்கல மன்னர் இருவரையும் வணங்கி வாளை வாங்கிக் கொண்ட விஜயன், அந்த வாளை இடுப்பில் செருகிக் கொண்டான்.

"நீ பழையாறைக்குப் போய்ச் சேர்ந்ததும் ஆரியப்படையூர் அருகே உன்னை என் ஆட்கள் சந்திப்பார்கள். நூறாயிரம் பொற்கழஞ்சுகளைக் கொண்ட மூட்டை உன்னிடம் ஒப்படைக்கப்படும்."

"எதற்கு..?"

"உன் லட்சிய வேள்விக்கு எங்கள் முதல் காணிக்கை!" என்று கூறிய மரக்கல மன்னர் தன் மனைவியைப் பார்த்து, "வேறு ஏதாவது வேண்டுமா கேள்.. உன் வீர மகனுக்கு..!" என்றார்.

"அய்யா! எனக்கு வேண்டியது ஒன்றே ஒன்றுதான். தங்களால் அதைத் தர முடியாது.." என்று புன்னகை செய்தான் விஜயன்.

"என்னவென்று சொன்னால் இந்த ஏழை வணிகனால் இயலுமா என்று பார்க்கிறேன்" என்று மரக்கல மன்னரும் புன்னகை பூத்தார்.

"தஞ்சை வேண்டும்! அதன் ஆட்சி வேண்டும். நாதியற்றுக் கிடக்கும் சோழர் குலத்திற்கு ஒரு நாடு வேண்டும்!" என்று கூறிய விஜயனை அவர் சற்று நேரம் அமைதியாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார். தீவிரமாக எதையோ சிந்தித்தார்.

"விலை கொஞ்சம் அதிகமாகத்தான் இருக்கும்" என்று யோசனையுடன் கூறியவர், ஒரு தீர்மானத்திற்கு வந்துவிட்டவர் போல் "பரவாயில்லை..!" என்று தனக்குத்தானே கூறிக் கொண்டார்.

பெருமனைக்கிழத்தியை நோக்கித் திரும்பிய பெருவாணிகர், "தம்பிக்குத் தஞ்சையை வாங்கித் தந்துவிடலாமா..?" என்று கேட்டுவிட்டுச் சிரித்தார். விஜயன் அவரை வியப்புடன் பார்த்தான்.

"விளையாட்டாகச் சொல்கிறேன் என்று நினைக்காதே. பெரும்பிடுகு முத்தரையன் கடுமையான கஷ்டத்திலிருக்கிறான். சேர்த்து வைத்திருக்கிற என் செல்வத்தையெல்லாம் கொண்டு போய்க் குவித்தால் போதும்! தஞ்சையை எனக்குச் சாசனம் பண்ணித் தந்துவிடுவான். என்ன சொல்கிறாய்..?" என்று கேட்டார் மரக்கல மன்னர்.

விஜயன் உறுதியான குரலில் உரைத்தான் "வேண்டாம்! விலை கொடுத்து ஓர் ஆட்சியை வாங்கிவிடலாம். ஆனால், நீண்ட காலம் அது நிலைத்திருக்காது. ஒரு நாட்டின் விடுதலைக்கும் ஓர் இனத்தின் எழுச்சிக்கும் விலை உண்டு. ஆனால், அது பொன்னோ பொருளோ அல்ல!"

"வேறென்ன..?"

"உயிர்..! ஆயிரக்கணக்கான லட்சிய வீரர்களின் உயிரையும் தியாகத்தையும் அர்ப்பணித்து அடைகிற ஆட்சியைத்தான் யாராலும் அசைக்க முடியாது."

" அதனால்..?"

"போராடுவேன்; படையெடுப்பேன்; காலங்கடந்தாவது ஒரு நாள் தஞ்சையைக் கைப்பற்றுவேன்!"

"மகிழ்ச்சி மகனே! மகிழ்ச்சி! உன் போராட்டத்திற்கு எதுவுமே தேவைப்படாதா..?" என்று கேட்டார் மரக்கல மன்னர்.

"வேண்டும். வேல் வேண்டும்! வாள் வேண்டும்! வீரர்களின் தோள் வேண்டும்! உங்களைப் போன்ற தூயவர்களின் துணை வேண்டும்!" என்று விஜயன் முழங்கிய போது, பெருமனைக்கிழத்தியின் உள்ளமும் உணர்ச்சியில் துள்ளியது.

பெருவாணிகர் நெஞ்செல்லாம் நெகிழ்ந்து பேசினார்: "படை திரட்டவும் பயிற்சி கொடுக்கவும் என் செல்வத்தையெல்லாம் நீ பயன்படுத்திக் கொள்ளலாம். உனக்கும் உன் லட்சியத்திற்கும் உதவுவதைவிட எனக்கும் என் மனைவிக்கும் வேறு

மகிழ்ச்சியில்லை" என்று கூறிவிட்டுச் சில நொடிகள் பேச முடியாமல் உணர்ச்சிவசப்பட்டவர், மீண்டும் தொடர்ந்தார்: "வரும் பௌர்ணமியன்று என் மரக்கலங்கள் புறப்படுகின்றன. வாணிகத்தில் பொருள் குவித்து அயல் தேசங்களிலிருந்து நான் இரண்டு திங்களில் திரும்புவேன். நான் திரும்பும் போது இரண்டு மரக்கலங்கள் நிறைய உனக்கு ஆயுதங்கள் வரும்! உன் வீரர்களுக்காக அரபு தேசத்திலிருந்து குதிரைகள் துறைமுகத்தில் வந்து இறங்கும்!" என்று கூறிவிட்டுக் கட்டித் தழுவிக் கொண்டு பிரியா விடை கொடுத்தார் பெருவாணிகர்.

&&&



"பிரியா விடை கொடுத்தாரோ அல்லது பிரியும் விடை கொடுத்தாரோ தெரியவில்லை. 'இரண்டு திங்களில் வருகிறேன்' என்று புறப்பட்டவர் வரவேயில்லை.

'கடல் நடுவே கலம் கவிழ்ந்து மாண்டுவிட்டார் மரக்கல மன்னர்' என்ற செய்தி மட்டும் வந்தது."



கதையைச் சொல்லி முடித்த கோட்டைத் தளபதி குன்றத்தூர்க் கிழாரின் கண்கள் கலங்கியிருந்தன. பல்லவ இளவரசியின் கண்களும் பனித்தன.

"கணவனை இழந்து கலங்கிய நிலையிலும், பெருமனைத்தாய் எங்களைக் கைவிடவில்லை. விஜயாலயருடைய வீரப் போராட்டத்திற்கு ஆதரவாகத் தம் செல்வத்தையெல்லாம் அர்ப்பணித்தார். இப்போது அந்தத் தாயை இழந்த சோகத்தை விஜயாலயரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. மௌன மண்டபத்திற்குள் புகுந்துவிட்டார் மன்னர். ஒரு நாளோ இரு நாளோ அவரே வெளிப்பட்டாலன்றி அவரைச் சந்திக்க இயலாது!" என்று தெரிவித்துவிட்டு விடைபெற்றுக் கொண்டார் கோட்டைத் தளபதி.

'மௌன மண்டபமா?' என்று மனத்திற்குள் எண்ணமிட்ட பல்லவ இளவரசிக்கு, அந்த மண்டபத்தில் ஓர் ஆனந்தமான அனுபவம் காத்திருந்தது. இன்பமான ஓர் அதிர்ச்சியும் அவளை எதிர்நோக்கியிருந்தது. அதையெல்லாம் அப்போது அறிந்து கொள்ளவில்லை அந்த அழகு மயில்!








# 20



# வண்டைத் தேடிய மலர்

தஞ்சை நகரத்தின் கிழக்கே ஒரு காத தூரத்தில் ஆதித்தனுடைய வெள்ளைப் புரவி விரைந்து கொண்டிருந்தது. வேடம் சரியாக இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டான் வேந்தன் மகன். சாதாரணப் படை வீரனின் உருவத்தில் தன்னை மறைத்துக் கொண்டிருந்தான்.

காதலைக் 'களவு' என்று சொல்கிறார்கள். 'களவு', 'பொய்' இவையில்லாமல் காதலிக்கவே முடியாது போலிருக்கிறது— என்று எண்ணியவனின் இதழ்களில் ஒரு புன்னகை மின்னியது. துள்ளித்துள்ளிப் புரவி ஓடிய வேகத்தில் ஆதித்தனுடைய உள்ளமும் துள்ளியது. இளங்காற்று இதயத்தைக் கிள்ளியது.

ரதத்தில் பயணம் செய்வதைக் காட்டிலும் புரவியில் பயணம் செய்வதுதான் இளவரசனுக்குப் பிடிக்கும். ரதம் ஒரு சாரதியை வைத்திருக்கிறது. ரகசியத்துக்கு அதில் இடமில்லை. அந்தரங்கமான பயணத்துக்குப் புரவியைவிட ஏற்ற வாகனம் எதுவுமில்லை.

காற்று எதிர்த் திசையில் வீசிக் கொண்டிருக்க.. அதன் பிடரியைப் பிளந்து கொண்டு முகத்தை முன்புறம் நீட்டி முன்னேறிக் கொண்டிருக்கும் புரவியின் முதுகில் படர்ந்து கழுத்தைக் கட்டிப்பிடித்தபடி பயணம் செய்கிற இன்பம் இருக்கிறதே.. அதற்கு ஈடும் இல்லை. இணையும் இல்லை.

ராஜபாட்டையிலிருந்து இறங்கி மண் சாலையில் ஓடிக் கொண்டிருந்த புரவி, இருபுறமும் பச்சை வயல்களை அணிந்து

கொண்டிருந்த பாதையில் திரும்பியது. புரவியைச் சற்றே நிறுத்தி, வெகு தொலைவில் ஒற்றையாய்த் தனியாய் ஓர் ஓவியம் போல் தென்பட்ட வீட்டை ஆதித்தன் உற்று நோக்கினான். இருபுறமும் அடர்த்தியாக வளர்ந்திருந்த மரங்கள், அந்த வீட்டுக்காகச் சாலை நெடுகிலும் போடப்பட்டிருந்த காவல் வேலிகளாய்க் காட்சியளித்தன.

பழைய வீடாக இருந்தாலும் மிகப் பெரியதாகவும், அழகாகவும் பார்வையை ஈர்த்தது அது.

வீட்டின் வாசலில் ஓடிக் கொண்டிருந்தாள் அந்த ஓவியப் பாவை. "டேய்.. நில்லுடா.." என்று குழந்தையை விரட்டிக் கொண்டிருந்தாள்.

"புடி பாக்கலாம்.." என்று அந்தச் சிறுவன் பூவையிடம் போட்டியிட்டுக் கொண்டிருந்தான். வீட்டின் உட்புறத்தில் முற்றத்தைக் கடந்து ஓடியவன், ஒவ்வொரு கூடத்திலும் நுழைந்து, பின் வழியில் வெளியேறித் திண்டாட வைத்துக் கொண்டிருந்தான் அந்த தேவதையை.

பிரமாண்டமான அந்தப் பெரிய வீட்டின் பின்புறமிருந்த நந்தவனத்தைக் காவிரியாற்றின் கைவிரல்கள் வருடிக் கொண்டிருந்தன. கரைகள் இரண்டையும் தண்ணீர்க் கைகளால் தழுவியபடி காவிரிப் பெண் கவிபாடிக் கொண்டிருந்தாள்.

குழந்தையை விரட்டிக் கொண்டே நந்தவனத்திற்குள் நுழைந்த கோதை, தொலைவில் படகைச் செலுத்தியபடி வந்து கொண்டிருக்கும் பழுத்த கிழத்தைப் பார்த்தாள்.

உண்டு, உறங்கி ஓய்வெடுக்க வேண்டிய வயதில் தாத்தா திடீர் திடீரென்று படகை எடுத்துக் கொண்டு எங்கேயாவது பறந்துவிடுகிறார். அப்படி என்ன அரச உத்தியோகம் பார்க்கிறாரோ தெரியவில்லை!

சிறுவன் "தாத்தா.. தாத்தா.." என்று சத்தமிட்டுக் கொண்டே நந்தவனத்தைத் தாண்டிக் காவிரியின் கரையை நோக்கி ஓடினான். படகைச் செலுத்திக் கொண்டு வந்த கிழவரோ துடுப்பைப் படகில் போட்டுவிட்டு அங்கிருந்தவாறே தன் கைகள் இரண்டையும் அவனை நோக்கி நீட்டினார்.

காவிரிப் பெண்ணின் கைக் குழந்தை போல் காட்சியளித்த படகோ அங்கும் இங்குமாய் அலைநடுவே ஆடத் தொடங்கிற்று.

குழந்தையின் மீதும், தாத்தாவின் மீதும் குறும்புக்காரிக்குக் கோபம் வந்தது. 'வரட்டும்.. படகைக் கொண்டு வந்து நிறுத்தட்டும்.. அந்தத் துடுப்பைப் பிடுங்கியே தாத்தாவுக்கொன்றும் பேரனுக்கொன்றும் போடுகிறேன்..'

படகு வந்து நின்றது. நந்தவனத்தில் வேலியையொட்டி நட்டு வைத்திருந்த கட்டையில் படகை இழுத்துக் கட்டிவிட்டுக் கிழவர் திரும்பியவுடன், துள்ளியோடிய குழந்தை அவர் தோள்களில் தொற்றிக் கொண்டது.

அடர்ந்த தலைமுடி, நீண்ட தாடி, 'தொள தொள'வென்று இருபுறமும் தொங்கிக் கொண்டிருந்த மீசை— எல்லாமே நரைத்துப் போய் மஞ்சள் நிறத்தில் ஜொலித்துக் கொண்டிருக்க ஒரு முனிவரைப் போல் காட்சியளித்தார் அந்தக் கிழவர்.

"எங்கே போய்விட்டு வருகிறீர்கள் இந்த நேரத்தில்? சொன்னால் கேட்கமாட்டேன் என்கிறீர்களே! காலம் போன கடைசியில். ஒரு நாள் என் கைகளாலேயே உங்களைத் தூக்கிக் காவிரியில் எறியப் போகிறேன்.." என்றாள் காரிகை.

"கொஞ்சம் பொறு பெண்ணே! ஏமாந்தவன் எவனாவது வராமலா போவான்? கண்களை மூடிக் கொண்டு உன்னை அவனுக்குக் கட்டி வைக்காமலாவிடப் போகிறேன்? அவனைத் தூக்கிக் காவிரியில் போடு! அநாவசியமாக என்னையும் என் பேரனையும் வம்புக்கு இழுக்காதே!" என்றார் கிழவர்.

"கட்டி வைப்பீர்கள், கட்டி வைப்பீர்கள்..! என்னைக் கட்டிக் கொள்ளும் தைரியசாலி யாரென்று பார்க்கிறேன்.." என்று அவள் சவால்விட்டுக் கொண்டிருந்த போதுதான் 'டொக் டொக்' என்று புரவியின் குளம்படி ஓசை கேட்டது.

தன் தைரியத்திற்கு இப்படி ஒரு சோதனை வந்திருப்பது தெரியாமல், அந்தக் குதிரையின் மீது வந்து கொண்டிருந்தான் வீராதி வீர விஜயாலய சோழரின் புதல்வன் ஆதித்தன்.

செவிடு போல் தன்னைக் காட்டிக் கொள்கிற கிழவர் காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டு குளம்படி ஓசையை உற்றுக் கேட்பதை அவள் கவனித்தாள். வீட்டின் உள்ளே வேக வேகமாக அவர் விரைவதைப் பார்த்துவிட்டு 'இந்தக் கிழவனுக்கு இன்றைக்கு என்ன

வந்துவிட்டது?’ என்று எண்ணமிட்டவாறே அவரைப் பின்தொடர்ந்தாள்.

வீட்டின் முன்வாசலை அடைந்த போது அவளுடைய விழிகள் வியப்பால் விரிந்தன. புரவியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தான் அந்தக் குறும்புக்காரன். கிழவரிடம் ஏதோ விசாரித்த வண்ணம், காரிகையைப் பார்த்துக் கண்களால் பேசினான். ‘கண்டு பிடித்துவிட்டேன் உன் வீட்டை’ என்று பார்வையால் அவளைப் பரிகாசம் செய்தான்.

அவனைப் பார்த்தவுடன் அவளுடைய விழிக்குளத்தில் மின்னல் பூத்தது. முகப் பொய்கையில் தாமரை மலர்ந்தது. இதழ் ஓடையில் முல்லை சிரித்தது. இதயக்கடலில் பொங்கி எழுந்த இன்ப அலை இளமையை இழுத்துச் செல்ல வலை விரித்தது. கிழவர் ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்தார். அவளையும் திரும்பிப் பார்த்தார்.

“தாத்தா! குழந்தை மீது குதிரை மோதிவிடாதபடி காப்பாற்றினாரே.. நீங்கள் கூட அவரைப் பார்க்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தீர்களே.. அவர் இவர்தான். இவர் அவர்தான்!” என்று அவனை அறிமுகப்படுத்தினாள் அந்த அழகி.

“அடடே..! அவர் இவர்தானா..? உள்ளே வாருங்கள் தம்பி!” என்று கிழவர் உபசரித்த போது அவருடைய குரலில் உற்சாகம் குறைந்திருப்பதை அவள் உணர்ந்து கொண்டாள். குழந்தையோ மிகுந்த உற்சாகத்துடன் தாத்தாவின் கழுத்திலிருந்து தாவி ஆதித்தனின் தோள்களில் அமர்ந்து கொண்டது.

“தாத்தா.. இவர் பெயர் கிள்ளி. சாதாரணமானவர் என்று இவரை நினைத்துவிடாதீர்கள்! அரண்மனை வீரனாக வருவார்! ஆனைமங்கலத்துச் சூரனாக வருவார்! ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வேடத்தில் வருவார்! எத்தனை வீரர்கள் வளைத்துக் கொண்டாலும் அவர்களிடமிருந்து தந்திரமாகத் தப்பிவிடுவார்” என்று சிரித்தாள் அந்தச் செம்மாதுளை.

கிழவர் தாடியை வருடிக் கொண்டே, “தந்தையைப் போல் பிள்ளை..” என்று முணுமுணுத்தார்.

“தம்பி! என் பேத்தி சும்மாவே வாயை மெல்லுவாள். அவளுக்கு இப்போது அவல் கிடைத்துவிட்டது” என்றார்.

"அவளுக்கு அவல் கிடைத்துவிட்டது. எனக்கு 'அவள்' கிடைத்துவிட்டாள்!" என்று கன்னியின் காதில் மட்டும் கேட்கும்படி கூறிவிட்டுக் கண்சிமிட்டினான் ஆதித்தன்.

"ஆரம்பித்துவிட்டீர்களே உங்கள் வேலையை..!" என்று பூங்குயில் பொய்க் கோபம் காட்டியது. ஆதித்தனும் பொய்யான கோபத்துடன் "வேலையை.. என்று சொல்லக் கூடாது" என்று கண்டித்தான்.

"வேறு எப்படிச் சொல்வது..?"

"லீலையை என்று சொல்ல வேண்டும்!" என்று சிரித்தான்.

"வாசலில் நிறுத்தி வைத்தே பேசிக் கொண்டிருக்கிறாயே. தம்பியை உள்ளே வந்து உட்காரச் சொல்லம்மா!" என்று கூறினாரே தவிர, கிழவர் உள்ளே நுழைவதற்கு வழிவிடுகிறவராய்த் தெரியவில்லை. வாயிலை அடைத்துக் கொண்டு நின்றிருந்தார்.

"பரவாயில்லை பெரியவரே! நான் வெளியே இருக்கும் கல் மேடையிலேயே அமர்ந்து கொள்கிறேன். காற்று இங்கே கவரி வீசுகிறது!" என்றான் ஆதித்தன்.

"அதுவும் நல்லதுதான். தாமரை! தம்பியோடு பேசிக் கொண்டிரு. நான் இதோ வந்துவிடுகிறேன்" என்று உள்ளே சென்றார் கிழவர்.

"திரை போட்டு மறைத்தாலும் தெரியாமல் போய்விடுமா? அபாரமான பெயர்! அழகான பெயர்! தாமரை! இந்தப் பெயரைச் சொல்வதற்கா அவ்வளவு யோசித்தாய்? நான்கூட வேறு மாதிரி நினைத்தேன்.." என்று துள்ளினான் ஆதித்தன்.

"என்ன நினைத்தீர்கள்?"

"காக்கை, கழுகு, கோட்டான்— இப்படிக் கண்டபடி பெயர் வைத்துவிட்டார்கள் போலிருக்கிறது! அதனால்தான் வற்புறுத்திக் கேட்டாலும் பெயரைச் சொல்ல மறுக்கிறாள் வனிதை என்று நினைத்தேன்."

"கொள்ளி, சுள்ளி என்று பெயர் வைத்துக் கொள்வதைவிட அது ஒன்றும் குறையாகாது!"

"ஏய் கள்ளி.. என் பெயர் கிள்ளி" என்று அதட்டினான் ஆதித்தன்.

"நில்லுங்கள் தள்ளி" என்று மிரட்டினாள் தாமரை.

கலகலவென்று கலந்து கொண்டது காதலர் சிரிப்பொலி.

"இருங்கள்.. பருகுவதற்கு ஏதாவது கொண்டு வருகிறேன்" என்று சிறுவனையும் அழைத்துக் கொண்டு வீட்டுக்குள் போனவள், முற்றத்தைத் தாண்டியுள்ள முன்வாயிற் கதவு உட்புறம் தாழிடப்பட்டிருப்பதைக் கண்டு திகைத்தாள்.

'அப்படி என்ன ரகசியம் இந்தக் கிழத்துக்கு?' என்று எண்ணியவள், "இங்கேயே விளையாடிக் கொண்டிருடா" என்று குழந்தையிடம் கூறிவிட்டு, முற்றத்தின் மூலையில் கிடந்த உரலின் மீது ஏறி நின்று சாளரத்தின் வழியே எட்டிப் பார்த்தாள். கிழவர் யாருடனோ ரகசியமாகப் பேசிக் கொண்டிருக்கும் ஓசை கேட்டது. வார்த்தைகள் தெளிவாகக் காதில் விழவில்லை. எப்போதும் பூட்டியே இருக்கும் அறையிலிருந்துதான் அந்தக் குரல்கள் எழுந்தன. கிழவரோடு பேசிக் கொண்டிருந்த இன்னொரு குரல் கணீரென்று ஒங்காரமாக ஒலித்தது.

'நமக்குத் தெரியாமல் வீட்டிற்குள்ளே எப்படி வேறொருவர் நுழைந்திருக்க முடியும்? கிழவர் செய்கிற காரியங்கள் எல்லாம் மர்மமாக இருக்கிறதே.. விடக் கூடாது! இந்தக் கிழத்தைக் கையும் களவுமாகப் பிடிக்க வேண்டும்.'

வீட்டைச் சுற்றிக் கொண்டு வெளியே ஓடியவள், வயல் வரப்புகளில் நடந்து, வேலியைத் தாண்டிக் குதித்து வீட்டின் பின்புறமிருந்த நந்தவனத்தை நெருங்க முற்பட்ட போது ஆள் அரவம் கேட்கவே.. அருகிலிருந்த மருத மரத்தின் பின்புறம் மறைந்து கொண்டாள்.

"புறப்படுவோமா?" —ஒரு கம்பீரமான குரல்.

"இதோ.." தாத்தாவின் குரல்.

"பஞ்சும் நெருப்பும் பத்திரம்!" என்றது கம்பீரமான குரல்— கட்டளையிடுவது போல்.

"கவலை வேண்டாம் அய்யா!" என்றது தாத்தாவின் குரல்— தலையாட்டுவது போல்.

"எந்த நெருப்பென்று பஞ்சுக்குத் தெரியுமா?"

"தெரியாது அய்யா.. ஆனால். பக்கத்தில் போகாத பஞ்சு இது!"

"நெருங்கி நெருங்கி வருகிற நெருப்பு அது!" என்று கவலையுடன் ஒலித்தது கம்பீரமான குரல்.

“கவலையைவிடுங்கள்! பஞ்சை நன்றாக நனைத்து வைத்துவிடுகிறேன்” என்று பணிவுடன் ஒலித்தது தாத்தாவின் குரல்.

தாமரையின் நெஞ்சம் கொதித்தது. தாத்தாவின் மர்மமான நடவடிக்கைகள் அவளுடைய இதயத்தில் சினத்தை ஏற்படுத்தியிருந்தன. உள்ளே வந்தது யார்..? அவருடன் தாத்தாவுக்கென்ன ரகசியப்பேச்சு..?

அவர்கள் பேசிக் கொண்டிருந்ததன் முழுமையான விவரத்தைப் புரிந்து கொள்ள முடியாவிட்டாலும், கிள்ளிக்கும் தனக்கும் இடையே மலரும் காதலை அவர்கள் கிள்ளியெறிய நினைக்கிறார்கள் என்பதை மட்டும் அவளால் புரிந்து கொள்ள முடிந்தது.

‘என் ஆசைகளுக்குக் குறுக்கே நிற்க இவர்கள் யார்?’ என்ற கோபமும் எழுந்தது. எப்படியாவது அவர்களைப் பழிவாங்க வேண்டும் என்ற ஆவேசமும் கிளம்பியது.

அவளுடைய ஆவேசத்தால் கிள்ளி என்ற பெயரில் கல்மேடையில் காத்துக் கொண்டிருந்த ஆதித்தனுக்கு அடித்தது அதிர்ஷ்டம்!

ஆமாம்.. ஒரு மலர் வண்டைத் தேடிப் போனது; இதழ்களை விரித்தது; வண்டை அழைத்தது..

பூ போர்வையானது.

குங்குமம் வியர்வையானது.

வண்டு திண்டாடியது.

மலர் கொண்டாடியது.









21



# போர்க்களத்துப் புரவி

தாமரையின் கண்களில் தணல் பறந்தது. உள்ளம் கொதித்தது. கள்ளத் தாத்தாவின் மீது கடுங்கோபம் மூண்டது.

'..நான் பஞ்சாம்.. நெருப்பு என்னை நெருங்கக் கூடாதாம். பக்கத்தில் போகாத பஞ்சாம் நான்! நெருங்கி நெருங்கி வருகிற நெருப்பாம் என் நெஞ்சத்தைக் கவர்ந்தவன்.

என் இதயத்தில் பூத்த காதல் மலரின் இதழ்களைப் பிய்த்தெறிய இவர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? யாரோ ஒருவர் கட்டளையிடுகிறார்.. தாத்தா அதற்குத் தலையாட்டுகிறார். பஞ்சை நன்றாக நனைத்து வைத்துவிடுவாராம்..

பார்க்கிறேன்! பஞ்சு நனைகிறதா.. நெருப்பு அணைகிறதா.. அல்லது பஞ்சும் நெருப்பும் இணைகிறதா என்று பார்த்துவிடுகிறேன்..'

—எண்ணம் எழுந்தது..

அன்னம் நடந்தது.

வீட்டின் முன்புறம் அந்த வேல்விழியாள் வந்த போது ஆதித்தன் எரிச்சலோடு அமர்ந்திருந்தான். அவன் மட்டும் அமைதியாய் இருந்திருந்தால் ஆனந்த சொர்க்கம் அப்போதே கிடைத்திருக்கும். வேகமாய் வந்த வெண்ணிலவு அப்போதே மேகமாய் மாறி அவன் தாகம் தணித்திருப்பாள்.

ஆதித்தன், வார்த்தைகளால் அவளை வம்புக்கிழுக்கவே.. மையலோடு வந்த தையல் தயங்கினாள். கையில் கிடைத்த வாய்ப்பு நழுவிவிடுமோ என்று காமன் கலங்கினான். "பேத்தியின் லட்சணமும், தாத்தாவின்லட்சணமும் பிரமாதம்!" என்றான் ஆதித்தன் வெறுப்புடன்.

"என்ன சொல்கிறீர்கள்?"

"பேத்தியின் லட்சணமும், தாத்தாவின் லட்சணமும் பிரமாதம் என்றேன்."

"பேத்தி லட்சணமாய் இருந்தால் போதாதாக்கும்? தாத்தாவும் லட்சணமாய் இருக்க வேண்டுமோ?" என்று நகை செய்தாள் நங்கை.

"வந்தவர்களை இப்படித்தான் வரவேற்பதா?"

"வரச் சொல்லவில்லை! அதனால் வரவேற்கவில்லை."

"பிடிக்கவில்லை என்று ஒரேயடியாகச் சொல்லிவிடு.." ஊடலுக்கு உரையெழுதினான் அவன்.

"பிடிக்காமல் விடமாட்டீர்களே. நழுவி நழுவிப் போனாலும்" கூடலுக்குக் குறிப்புக் கொடுத்தாள் அவள்.

"பிடிகொடுக்காமலே பேசிக் கொண்டிருக்கிறாய்.." என்று அலுத்துக் கொண்டான் ஆடவன்.

"பிடித்துவிட்டவர்களுக்குப் பிடி எதற்கு?" என்று சிருங்காரம் சிந்தினாள் சேயிழை.

"எங்கெங்கோ தேடி இறுதியில் கண்டுபிடித்தேன் உன் இருப்பிடத்தை" என்று ஆதித்தன் நிமிர்ந்தான்.

"தேடாமலே நான் கண்டுபிடித்தேன் உங்கள் இதயத்தை" என்று தாமரை தலைகுனிந்தாள்.

"கிடைத்தது சம்மதம்" என்று ஆதித்தன் குதித்தான்.

"இன்னும் ஏன் தாமதம்?" என்று தாமரை அழைத்தாள்.

பஞ்சும் நெருப்பும் அங்கு பற்றிக் கொண்டது!

எரிந்தது காதல் தீபம்!

"தாமரை.." என்றான் ஆதித்தன்.

"வெறும் தாமரையல்ல.." என்றாள் அவள்.

“வெள்ளைத் தாமரை!”

“இல்லை.”

“செந்தாமரை..”

“இல்லை.”

“பொற்றாமரை..”

“அதுவும் சரியல்ல.”

“எதுதான் சரி?” என்று கேட்டான்.

“இதயத் தாமரை” என்று காதலோடு முணுமுணுத்தாள்.

“என்ன..?” என்று ஆர்வத்தோடு அணைத்துக் கொண்டான்.

“நான் உங்கள் இதயத் தாமரை” என்று விளக்கியவள் அவன் அணைப்பில் தன்னை முழுமையாகப் பிணைத்துக் கொண்டாள்.

அரண்மனையின் வடகோடியில் இருந்தது அந்த மண்டபம்! அந்தப்புரத்திலிருந்து சற்று விலகித் தனியே ஓர் ஆசிரமம் போல் அது அமைந்திருந்தது. அடர்த்தியான மரங்களும், செடிகொடிகளும் சுற்றிச் சூழ்ந்து கொண்டிருந்தன. ‘மௌன மண்டபம்’ என்ற பெயருக்கு ஏற்ப அசாதாரணமான அமைதி நிலவியது அங்கு.

மண்டபத்தின் பிரதானமான நடுக்கூடத்தில் வேந்தர் விஜயாலயர் வீற்றிருந்தார். அவர் அமர்ந்திருந்த ஆசனம் தேக்கு மரத்தால் செய்யப்பட்டிருந்தது. கைப்பிடியின் இருபுறங்களிலும்—பாயப்போகிற பார்வையுடன் கூடிய சீறும் புலியின் வடிவம் செதுக்கப்பட்டிருந்தது. எதிரே வட்ட வடிவமாய்க் கிடந்த ஆசனங்கள் மூன்றும் தங்கத்தால் செய்யப்பட்டுத் தகதகத்துக் கொண்டிருந்தன.

சுற்றியிருந்த சுவர்களெங்கும் வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச் சித்திரங்கள் சிரித்துக் கொண்டிருந்தன.

அந்தரங்கமான பல முடிவுகளை அரசர் அங்குதான் தீர்மானித்திருக்கிறார். எத்தனையோ போர்க்களங்களின் வியூகங்கள் அந்த மண்டபத்தில் வகுக்கப்பட்டிருக்கின்றன. மிக முக்கியமான ராஜப்பிரதானிகள் முன்கூட்டியே அனுமதி பெற்றிருந்தால் மட்டுமே அவரை அங்கு சந்திக்க முடியும்.

மற்றபடி வேறு யாரும் அனுமதிக்கப்படுவதில்லை. தனக்கென அவர் அமைத்துக் கொண்ட தபோவனம் அது.

விஜயாலயர் தீவிரமாக எதையோ சிந்தித்துக் கொண்டிருந்தார். சுற்றிலுமிருந்த ஓவியங்களில் அவருடைய பார்வை சுழன்று கொண்டிருந்தது.

மண்டபத்தின் நடுவிலிருந்த மணியொன்று அசைந்து ஒலியெழுப்பியது. வாயிற்புறத்தை நோக்கித் திரும்பி, "வரலாம்" என்று குரல் கொடுத்தார் விஜயாலயர். வீரர்களில் ஒருவன் உள்ளே வந்து வணங்கினான்.

"அரசே! பல்லவ இளவரசியின் பல்லக்கு வந்திருக்கிறது" என்று கூறியவனை அவர் ஏறிட்டுப் பார்த்தார்.

"'அரசரை இங்கு சந்திக்க இயலாது. அரண்மனைக்கு வந்தவுடன் தகவல் அனுப்புகிறோம்' என்று கூறினோம். 'இப்போதே சந்திக்க வேண்டும்' என்று காத்திருக்கிறார் இளவரசி!" என்று அவர் விழிகளிலிருந்த வினாவிற்கு விடையளித்தான் வீரன்.

"வரச் சொல்!" என்று அனுமதி வழங்கிவிட்டு வாயிலை நோக்கிப் பார்வையைத் திருப்பினார் மன்னர்.

"ஏன் தயங்குகிறீர்கள் இளவரசி? வாருங்கள்!" என்று அவர் குரல் கொடுக்கவும் பல்லவ இளவரசி உள்ளே நுழைந்தாள்.

"நானே உங்களைப் பார்க்க வர வேண்டும் என்று நினைத்திருந்தேன். உடல் நலமில்லையாமே.."

"உடல்நலமாகிவிட்டது அய்யா!"

"அப்படியானால் உள்ளம்தான் நலமில்லை போலும்!" என்று கூறிய விஜயாலயர், "இளவரசிக்கு எங்கள் எளிய அரண்மனை பிடிக்கவில்லை போலிருக்கிறது" என்றார்.

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?"

"காஞ்சிக்குப் புறப்படுவது எப்போது என்று கவலைப்படத் தொடங்கிவிட்டீர்களே.."

"தங்களிடம் யார் சொன்னது?"

"முகம் மொழிகிறது. பார்வை பகர்கிறது. விடைபெற்றுக் கொள்ளத்தான் வந்திருக்கிறீர்கள் என்பதை உங்கள் திடீர் வருகை தெரிவிக்கிறது" என்று புன்னகைத்தபடி விஜயாலயர் இளவரசியைப்

பார்த்த போது, அவள் சுவரில் வரையப்பட்டிருந்த ஓவியங்களை நோக்கித் தன் விழிகளைத் திருப்பினாள்.

“முக்கியமான ஓர் இடத்திற்கு உங்களை அழைத்துச் செல்ல வேண்டியிருக்கிறது. அதுவரை அமைதியாய் இருங்கள். தக்க ஏற்பாடுகளுடன் காஞ்சிக்கு அனுப்பி வைக்கிறேன்” என்று கனிவுடன் அவர் கூறிய போது, இளவரசியால் அவரை எதிர்த்துப் பேச இயலவில்லை.

மௌனத்தால் சம்மதம் தெரிவித்துவிட்டு, மௌன மண்டபத்தைத் தன் விழிகளால் அளந்தாள் மங்கை.

“மற்றவர் அமர்வதற்குப் பொன்னாசனங்கள்! மன்னருக்கு மட்டும் மர இருக்கை ஏன்?” என்றாள் திடீரென்று.

“இங்கு என்னைச் சந்திக்க வருகிறவர்களெல்லாம் அரசியலிலும், ஆட்சி அதிகாரங்களிலும் உயர்ந்தவர்கள். அவர்களின் தகுதியைக் கௌரவிப்பதற்குத்தான் தங்கத்தில் ஆசனங்கள்!”

“நீங்கள் ஒரு மன்னரல்லவா?”

“இல்லை. தாழ்ந்து கிடக்கும் இனத்தின் தலைவன் நான்! மன்னன் என்ற மயக்கத்தில் அதை மறந்துவிடக் கூடாது என்பதற்காகத்தான் மர இருக்கை!”

“இந்த மண்டபத்திற்குத் தங்கள் மைந்தர் வருவதுண்டா?” என்று அவள் கேட்கும் போதே அவள் இதயத்தில் ஓடிய எண்ணங்களைப் புரிந்து கொண்ட விஜயாலயர் சிரித்தார்.

“எப்போதாவது..” என்று பதிலுரைத்தார்.

“தந்தை மர இருக்கையில் வீற்றிருக்கும் போது மகன் பொன்னாசனத்தில் அமர்வது தவறல்லவா?”

“இல்லை. என் தந்தை ஓர் ஏழை! எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம் நான். ஆனால், ஆதித்தன் ஓர் அரசகுமாரன் அல்லவா?” என்றார் விஜயாலயர்.

பல்லவ இளவரசியின் பார்வை சுவர்களிலிருந்த ஓவியங்களில் பதிந்தது.

அகன்ற சுவர்களில் தீட்டப்பட்டிருந்த அனைத்துச் சித்திரங்களிலும் குதிரைகளே காட்சியளித்தன.

ஆற்றின் கரையில் அழகாக நின்று கொண்டிருக்கும் குதிரை— நீரில் தன் நிழல் பார்க்கும் குதிரை— கோட்டையை முறைத்துக் கொண்டிருக்கும் குதிரை— ஆவேசமாகச் சிலிர்த்துக் கொண்டு ஆங்காரமாகப் பாயும் குதிரை— போர்க்களத்தின் நடுவே சீறும் குதிரை— உடலின் இருபுறமும் கொத்துக் கொத்தாய் அம்புகள் குத்தி நிற்க.. பட்டத்து யானையை நோக்கித் தன் முன்னங்கால்களைத் தூக்கிக் கொண்டு மோதப்போகும் குதிரை— தலை மட்டும் வெளியே நீட்டிக் கொண்டிருக்க, இரத்த வெள்ளத்தில் நீந்திக் கொண்டிருக்கும் குதிரை— கொடியைத் தன் வாயில் கவ்விப் பிடித்தபடி கோட்டை மதில் மேல் நிற்கும் குதிரை— இப்படி அந்த மண்டபத்தின் சுவர்களெங்கும் குதிரைகளின் உருவங்கள் மட்டுமே வண்ண ஓவியங்களாய் வரையப்பட்டிருந்தன.

கடைசியாய் இருந்த ஓவியத்தில் உடல் முழுக்கத் தழும்புகள் நிறைந்திருக்க, வெற்றிப் பெருமிதத்துடன் ஒரு குதிரை ஓடிக் கொண்டிருந்தது.

சுவரிலிருந்த ஓவியங்களைச் சுற்றிச்சுற்றி அவளுடைய கண்கள் சுழன்று கொண்டிருப்பதைக் கவனித்தார் விஜயாலயர்.

“ஐயா! இந்த ஓவியங்களில் ஏதோ உட்பொருள் இருக்கிறது..” என அவள் கூறிய போது, மகிழ்ச்சியடைந்த மன்னர், “என்ன சொல்கிறீர்கள்?” எனக் கேட்டார் எதுவும் தெரியாதவர் போல்.

“வெவ்வேறு குதிரைகளின் ஓவியங்களல்ல இவை!”

“அப்படியா?”

“ஒரே குதிரையின் வெவ்வேறு ஓவியங்கள்!”

“ஓகோ!”

“ஆமாம்! குதிரைகளின் முகம் எல்லாவற்றிலும் ஒரே மாதிரி உள்ளது.”

“உண்மைதான்.”

“இது ஒரு குதிரையின் கதை. இதோ குதிரை தண்ணீரில் தன் நிழலைப் பார்க்கிறது. இதன் பொருள்— கடந்த காலத்தின் நினைவுகள் அதன் நெஞ்சில் நிழலாடுகின்றன. தீவிரமாக ஏதோ திட்டமிடுகிறது..

..அதோ கோட்டையை வெறித்துப் பார்க்கும் குதிரை அம்பு மழையில் நனைந்து— குருதி வெள்ளத்தில் நீந்தி— வெற்றிக்கொடி பிடித்து வீரநடை நடக்கிறது. உடம்பெல்லாம் தழும்புகள்.. குதிரையின் வீரம் குறிப்பிடப்படுகிறது! முதல் ஓவியத்தில் வாலிபக் குதிரை— கடைசி ஓவியத்தில் வயோதிகக் குதிரையாக மாறிவிட்டது. போர்க்களத்துப் புரவி ஒன்றின் வாழ்க்கை இது!” என்று விளக்கினாள் இளவரசி.

“அற்புதம்!” என்று பாராட்டினார் அரசர். ஓவியங்களை நெருங்கி மீண்டும் உற்றுப் பார்த்தாள். சட்டென்று முகம் மலர்ந்தாள்.

“இல்லை, இது குதிரையின் கதை அல்ல. ஒரு மனிதனின் கதை! உங்களுடைய கதை! ஆமாம்.. நீங்கள்தான் இந்தக் குதிரை!” என்று உற்சாகமாகக் கூவினாள்.

பெண்ணின் மதிநுட்பத்தைப் பார்த்து பிரமித்துப் போன விஜயாலயர்,

“நீங்கள் ஆணாகப் பிறந்திருந்தால் இந்த அகிலத்தை ஜெயித்திருப்பீர்கள்!” என்று பாராட்டிய போது, அந்தக் காரிகையின் கண்களில் கர்வமும் நாணமும் கலந்து காட்சியளித்தன.

“இருங்கள்” என்று மறுபடியும் சுவரருகே சென்ற இளவரசி, கடைசி ஓவியத்தில் குதிரையின் மீதிருந்த தழும்புகளை எண்ணிப் பார்த்தாள் “ஒன்று.. இரண்டு” என்று அவள் எண்ணிக் கொண்டிருக்கும் போதே, “இது வரைக்கும் எண்பத்தாறு” என்றார் விஜயாலயர் தன் உடம்பிலிருந்த தழும்புகளைத் தடவிக் கொடுத்தபடி.

“அரிசிலாற்றங்கரையில் நடந்த போரில் மட்டும் பரிசாகக் கிடைத்த விழுப்புண்கள் பதினாறு!” என்றார்.

“எங்களுக்காக” என்றாள் இளவரசி.

“ஆமாம். பல்லவர்களுக்காக! என் நண்பர்களுக்காக! தங்களுக்காகப் புண்பட இன்னும் தயாராய் இருக்கிறேன் இளவரசி!” என்று மீண்டும் அவர் கூறியவுடன், அவள் எதையோ நினைவு கூர்ந்தவளாய், “எங்களுக்காகப் புண்பட நீங்கள் தயாராய் இருக்கிறீர்கள். ஆனால், உங்கள் மைந்தரோ..” என்று கூறியவள், சட்டென்று பற்களைக் கடித்துக் கொண்டாள். தவறி வந்துவிட்ட வார்த்தைகளைத் தடுத்து நிறுத்தினாள்.

"சொல்லுங்கள் இளவரசி."

"ஒன்றுமில்லை."

"என் மகன் உங்களைப் புண்படச் செய்துவிட்டானா?" என்று கோபத்துடன் கேட்டார் விஜயாலயர்.

"அதெல்லாம் இல்லை" என்று மழுப்பினாள் மங்கை.

"யாரங்கே?" என்று விஜயாலயர் குரல் கொடுத்ததும் வெளியே இருந்த வீரன் ஓடி வந்தான்.

"ஆதித்தனை உடனே அழைத்து வா" என்று கம்பீரமான குரலில் கட்டளையிட்டார். சிரித்துக் கொண்டிருந்த அவருடைய முகத்தில் சீற்றம் பரவியது.

போர்க்களத்துப் புரவியொன்று புலியாக மாறிவிட்டதையும், பாசமுள்ள மகன் மீதே அது பாயப்போவதையும் உணர்ந்து கொண்ட பல்லவ இளவரசியின் இதயம் படபடத்தது.









22



# மல்லிகைப் பந்தலும்... தாமரைத் தடாகமும்...

மனிதர்களின் மனம் ஒரு புதிர்! அதிலும் பெண்களின் மனமோ புதிருக்குள் மறைந்திருக்கும் புதிர்.

ஆதித்தன் மீது அளவிலாக் கோபம் கொண்டிருந்த போதும், அவனுக்காக இதயத்தில் ஒரு மூலையில் இடம் போட்டும் வைத்திருந்தாள் இளவரசி. அதனால்தான் ஆத்திரம் கொண்ட விஜயாலயர் ஆதித்தனை அழைத்து வர ஆணையிட்ட போது அவளுடைய நெஞ்சில் கலவரம் நிகழ்ந்தது.

ஆதித்தனின் குற்றம் விசாரிக்கப்படும் போது விசாரிக்கப்படாமலேயே தன்னுடைய குற்றமும் வெளிப்பட்டுவிடும் என்பதும் அவளுக்கு விளங்கியது.

திடீரென்று அந்தக் கேள்வியை எப்படிக் கேட்டோம் என்று அவளுக்குத் திகைப்பாக இருந்தது! ‘எங்களுக்காகப் புண்பட நீங்கள் தயாராக இருக்கிறீர்கள்! ஆனால், உங்கள் மைந்தரோ..’ வசமிழந்து வெளியேறிவிட்ட வார்த்தைகளால் வலைக்குள் அகப்பட்டுக் கொண்டாள் வனிதை.

இப்போது என்ன செய்வது? ஆதித்தனை அழைத்து வருமாறு அரசர் ஆணையிட்டுவிட்டார். அவரிடம் என்ன சொல்வது? இதயத்தைப் புண்படுத்தினான் என்று சொல்வதா அல்லது

கன்னத்தைக் காயப்படுத்தினான் என்று காட்டுவதா? காளிகோயிலுக்குள் தான் நுழைந்ததற்கான காரணத்தைக் கேட்டால் என்ன பதில் உரைப்பது? தன்னை மறந்து தடுமாறிக் கொண்டிருந்தாள் தையல்.

நேரம் ஓடிக் கொண்டிருந்தது. பல்லவ இளவரசியின் பரபரப்பும் அதிகரித்துக் கொண்டிருந்தது. அன்புடன் அவளைக் கேட்டார் அரசர்:

“திடீரென்று சோர்வடைந்துவிட்டீர்களே இளவரசி! உடல் நலம்..” என்று அவர் வார்த்தைகளை நிறுத்திய போது, பேதைக்கு ஒரு பிடி கிடைத்தது.

“ஆமாம் ஐயா! தலை வலிக்கிறது..” என்று எழுந்து கொண்டாள்.

“நீங்கள் சென்று ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். ஆதித்தனுக்குத் தக்க தண்டனை தருவது என் பொறுப்பு” என்று கோபமடைந்தவர் போல் விஜயாலயர் கூறவும், “அதெல்லாம் வேண்டாம் ஐயா! அவர் ஒன்றும் தவறாக நடந்து கொள்ளவில்லை” என்று அவசரமாகக் குறுக்கிட்டாள் அவள்.

“பூவைப் போன்ற உங்கள் மனம் புண்படுமாறு ஏதோ நடந்திருக்கிறது. அதற்குத் தண்டனை உண்டு” என்று உறுதியாகக் கூறியபடியே அவளை உற்றுப் பார்த்தார் அவர்.

“வேண்டாம் ஐயா.. வேண்டாம்! அவரை விட்டுவிடுங்கள்..” பாவையின் முகத்திலிருந்த பதற்றத்தை விஜயாலயர் பார்வையிட்டார்.

“விட்டுவிடுகிறேன். உங்களிடமே விட்டுவிடுகிறேன்..” என்று கூறிச் சற்றே நிறுத்தியவர், “அவனை விசாரிக்கும் பொறுப்பை” என்று முடித்தார்.

அவள் மறுபடியும் ஏதோ பேச முனைவதைக் கண்டவர், “தண்டிக்கும் பொறுப்பையும் உங்களிடம் தரச் சொல்கிறீர்களா..? ஆகட்டும்.. அப்படியே செய்கிறேன்” என்றார்.

ஆதித்தன் வந்துவிடுவானோ என்று அடிக்கடி வாயிற்புறத்தை நோக்கி அவள் கண்கள் ஓடுவதையும், நெற்றியைப் பற்றிக் கொண்டு அவள் நெளிந்து கொண்டிருப்பதையும் கவனித்துவிட்டு, “நீங்கள் புறப்படுங்கள் இளவரசி! அரச வைத்தியரை அனுப்பி வைக்கிறேன்”

என்று விடை கொடுத்தார் விஜயாலயர். 'அரச வைத்தியர்' என்ற வார்த்தைக்கு அழுத்தம் கொடுத்தார்.

பல்லவ இளவரசி தன் பாதுகாப்பு வீரர்கள் பின் தொடர நடந்து பல்லக்கில் ஏறினாள். சிவிகை சுமப்பவர்கள் தங்கள் தோள்களின் மீது பல்லக்கைத் தூக்கிக் கொண்ட போது, மௌன மண்டபத்தின் படிக்கட்டுகளில் வேகவேகமாக இறங்கி வந்த வீரனொருவன், இளவரசியின் அருகில் நெருங்கிச் சின்னஞ்சிறு மரப்பேழை ஒன்றை நீட்டினான்.

"அரசர் பெருமான் தங்களிடம் இதைச் சேர்ப்பிக்குமாறு கட்டளையிட்டார். மாளிக்கைக்குச் சென்றபின் திறந்து பார்க்கும்படி மன்னர் சொன்னார்."

பல்லவ நாட்டுப் பாதுகாப்பு வீரர்களின் தலைவன் ஓடி வந்து, அந்தப் பேழையைப் பறித்துச் சோதனையிட முனைந்தான். அவனைத் தடுத்துப் பேழையைத் தானே பெற்றுக் கொண்ட இளவரசி சிவிகையின் திரைத் துகில்களை இழுத்துவிட்டாள்.

பல்லக்குப் புறப்பட்டது.

டக்.. டக்.. என்று குதிரையின் காலடியோசை மிக அண்மையில் கேட்டது. மண்டப வாயிலில் அந்த ஓசை நின்றுவிட்டது. வந்தது யாராக இருக்கும் என்று எண்ணமிட்டபடி திரைத்துகிலை விலக்கி எட்டிப் பார்த்தாள் இளவரசி.

மண்டபத்தின் வாயிலில் குதிரையிலிருந்து கீழே குதித்த இளவரசன் ஆதித்தனும் 'பல்லக்கில் போவது யாராக இருக்கும்?' என்ற ஆர்வத்துடன் திரும்பிப் பார்த்தான்.

அவன் பார்த்த அதே நேரத்தில்தான் திரைத்துகில் விலகியது. தென்றல் முகம் காட்டியது.

சந்திரப் பார்வையும், சூரியப் பார்வையும் சந்தித்துக் கொண்டன.

தன்னைப் பார்த்ததும் பல்லவ இளவரசி பார்வையால் சீறுவாள் என்று எதிர்பார்த்த ஆதித்தனுக்கு ஏற்பட்டது ஏமாற்றமே! அவள் பார்வையில் சீற்றமும் இல்லை. சிநேகமும் இல்லை. அனுதாபத்தின் அடையாளம் இருந்தது.

ஆதித்தனுடைய இதழ்களில் ஒரு புன்னகை அரும்பியது. அதைப் பார்த்ததும் மானின் விழிகளில் மருட்சி தெரிந்தது.

'நடந்தது எதற்கும் நான் காரணமில்லை' என்று சொல்ல நினைத்தான் அவன்.

'நடப்பது எதற்கும் நான் காரணமில்லை' என்று சொல்ல நினைத்தாள் அவள்.

அவன் பார்த்துக் கொண்டே இருந்தான். அந்தப் பார்வை தன்னைக் கேலி செய்வதைப் போல் உணர்ந்தாள் அந்தப் பாவை.

ஆறுதலாக அவளிடம் ஒரு வார்த்தை பேசலாம் என்று பல்லக்கை நோக்கி நடந்தான் ஆதித்தன். சட்டென்று மொய் குழலாள் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்; பல்லக்கின் திரைகளையும் இழுத்து இறுக்கமாக மூடினாள்.

'இதயத்தையும் இழுத்து மூடிக் கொள்ள இப்படித் திரைகள் இருந்தால் எவ்வளவு வசதியாக இருக்கும்' என்று இளையவளின் உள்ளம் எண்ணியது.

'ஆணவக்காரியின் மீது அனுதாபப்பட்டேனே' என்று ஆதித்தனின் உள்ளத்தில் ஆவேசம் மின்னியது.

பல்லக்கில் சென்ற பாவையின் நெஞ்சத்தில் பல்வேறு நினைவலைகள். சினம் கொண்ட விஜயாலயர் மகனை எப்படியெல்லாம் சீறிக் கொண்டிருப்பார் என்ற சிந்தனைகள்.

'வேண்டும்.. நன்றாக வேண்டும்..' என்று பெண் மனம் ஒருபுறம் பேசியது. 'அடடா.. பாவம், அவரென்ன தவறு செய்தார்?' என்று பின்மனம் ஒருபுறம் வாலிபனுக்காக வழக்காடியது.

திடீரென்று கோபம் வந்தது! திடீரென்று மகிழ்ச்சி வந்தது! மாளிகையை அடைந்து மன்னர் கொடுத்தனுப்பிய மரப்பேழையைத் திறந்து பார்த்த போது அவளுக்கு மயக்கமே வந்தது!

பேழையில் இரண்டு குறுவாட்கள் இருந்தன. ஒன்று— அவளுடைய குறுவாள்— காளிகோயிலில் குண்டோதரனைக் குத்திக் கொன்றது! அதில் குருதிக் கறை படிந்திருந்தது. இன்னொன்று— குண்டோதரன் ஆதித்தனை நோக்கிக் குறிபார்த்து எறிந்தது. கறைபடியாமல் அது காட்சியளித்தது.

இரு குறுவாட்களிலும் பல்லவர்களின் சின்னமான நந்தி இலச்சினை பதிந்திருந்தது.

விஜயாலயரின் எதிரே அமர்ந்திருந்தான் ஆதித்தன். தந்தையின் கண்கள் மகனுடைய முகத்தில் தவழ்ந்து கொண்டிருந்தன. ஆதித்தனுடைய கண்களோ தரையைப் பார்ப்பதும், விதானத்தைப் பார்ப்பதும், சுவர்களைப் பார்ப்பதுமாய்ச் சுற்றுலா நடத்தின.

“அரசர் என்னை அழைத்ததாகக் கேள்விப்பட்டேன்.”

“ஆமாம். அரசனாகத்தான் அழைத்திருக்கிறேன்! உன்னை விசாரிக்க வேண்டும்!” என்று விஜயாலயர் கூறியதும், ஆதித்தனுடைய உள்ளம் அதிரத் தொடங்கியது.

பல்லவ இளவரசி அங்கிருந்து புறப்பட்டுச் சென்றதைப் பார்த்திருந்ததால், மன்னரைச் சந்தித்த இளவரசி என்ன சொல்லியிருப்பாளோ என்று மனம் கலங்கினான் மைந்தன்.

“உன் மீது ஒரு குற்றசாட்டு..” என்றார் விஜயாலயர்.

“குற்றம் சாட்டியது யார்?” என்று கேட்டான் ஆதித்தன்.

“ஒற்றர்படைத் தலைவன் சாத்தன் பழியிலி!”

ஆதித்தன் இதை எதிர்பார்க்கவில்லை என்பது அவனது முகத்தில் தெரிந்தது.

“கோயிலில் ஒரு கொலை நடந்திருக்கிறது..” என்று விஜயாலயர் ஆரம்பித்தவுடன், “கொலை செய்தது யாரென்று தெரியுமா?” என்று குறுக்கிட்டான் ஆதித்தன்.

“நடந்ததெல்லாம் நானறிவேன். யார் கொலை செய்தார்கள் என்பது என் கேள்வியல்ல. நீ என்ன செய்தாய் என்பதே என் கேள்வி?

“மறுநாள் விழா நடக்கப் போகிற மாகாளியின் சந்நிதானத்தில் குருதிக் கோலம் பிணம் விழுந்து கிடக்கிறது. அந்த இடத்தில் நீ இருந்திருக்கிறாய். பிணத்தை அப்புறப்படுத்த முயற்சி செய்யவில்லை. கோட்டைத் தளபதியிடமோ, என்னிடமோ தகவல் கொடுக்கவுமில்லை. கொற்றவையின் கோயிலில் கொலை நடந்த செய்தி தலைநகரத்தில் பரவியிருந்தால்.. விழாவுக்காகச் செய்திருந்த ஏற்பாடெல்லாம் வீணாகியிருக்கும். ஒவ்வொருவரும் இதைப் பற்றி ஒவ்வொருவிதமாகப் பேசியிருப்பார்கள். உன்னால் இதையெல்லாம் உணர முடியவில்லையா?” என்று விஜயாலயர் கேட்ட போது, மறுமொழியின்றி மௌனமாயிருந்தான் ஆதித்தன்.

“மூர்ச்சையடைந்திருந்த காவல் தலைவனைக் காப்பாற்றுவதற்காகத் தூக்கிச் சென்றேன். திரும்பி வந்து பார்த்தால் பிணத்தைக் காணவில்லை. கத்தியையும் கண்டு பிடிக்க முடியவில்லை..” என்றான் தயக்கத்துடன்.

“குருதிக் கறையை அகற்றுவதற்காவது ஏற்பாடு செய்திருக்கலாம்” என்று விஜயாலயர் கூறவும், ஆதித்தன் தான் நடந்து கொண்டதை எண்ணி நாணினான்.

“மன்னர் என்னை மன்னிக்க வேண்டும்.”

“பரவாயில்லை. எனக்குப் பின் இந்தச் சோழர் குலத்தைக் காப்பாற்ற வேண்டியவன் நீ! எப்போதும் விழிப்புடன் இருக்க வேண்டும்.”

“நான் புறப்படலாமா?” என்று எழுந்தான் ஆதித்தன்.

“புறப்படு மல்லிகைப் பந்தலுக்கு!” என்று புன்னகைத்தார் விஜயாலயர்.

“மல்லிகைப் பந்தலுக்கா?” என்று வியப்புடன் கேட்டான் வேந்தன் மகன்.

“ஆம்!”

“எதற்கு?”

“வேறெதற்கு? விருந்தினரைப் பார்ப்பதற்கு.”

“பல்லவ இளவரசியையா?”

“ஆம்!”

“பல்லவ இளவரசியை எதற்காக நான் பார்க்க வேண்டும்?”

“உன் மீது ஒரு விசாரணை..”

“என்ன?” என்று திகைப்புடன் கேட்டான் ஆதித்தன்.

“விருந்தினராய் வந்திருக்கும் இளவரசி உன்னை ஏதோ விசாரிக்க வேண்டுமாம்” —விளக்கினார் விஜயாலயர்.

“பல்லவ இளவரசி என்னை விசாரிப்பதா?”

“ஆம்!”

“அதை நான் அனுமதிக்க முடியாது.”

“நான் அனுமதித்திருக்கிறேன்.”

“இது நியாயமில்லை.”

“உன்னையும் அனுமதிக்கிறேன்.”

“எதற்கு?”

“இளவரசியை விசாரிப்பதற்கு.”

“புரிந்துகொள்ள முடியவில்லை.”

“புரிந்துகொள்ளத் தேவையான பொறுமையில்லை.”

“இளவரசியிடம் நான் எதை விசாரிக்க வேண்டும்?”

“உடல்நலம் விசாரிக்க வேண்டும்.”

“ஏன்?”

“சில நாட்களாகவே உடல்நலமில்லையாம்.”

“அதற்கு நாமென்ன செய்வது? மனம் நன்றாக இருந்தால், உடலும் நன்றாக இருக்கும்.”

“பிள்ளை போல் பேசாதே. காஞ்சியின் விருந்தினர்களைக் கவனித்துக் கொள்ள வேண்டியது நம் கடமை.”

“கர்வம் பிடித்தவளை நான் போய்க் காண முடியாது.”

“எனக்குக் கர்வம் இல்லையா? உனக்குக் கர்வம் இல்லையா? யாருக்குத்தான் கர்வம் இல்லை?” என்று மெல்லிய குரலில் கூறிய விஜயாலயர், “செருக்குடையவர்கள்தான் உலகத்தில் செயற்கரிய செயல்களைச் செய்து முடிக்கிறார்கள்” என்றார்.

மௌனமாய் நின்றான் மன்னன் மகன்.

“புறப்படு!”

அவன் பதில் சொல்லவுமில்லை, புறப்படவுமில்லை.

“இது என் வேண்டுகோள் அல்ல..” என்றார் விஜயாலயர்.

“அப்படியானால்..?”

“கட்டளை!” என்று கண்டிப்பான குரலில் கூறினார்.

ஆதித்தன் புறப்பட்டான்.

மல்லிகைப் பந்தலுக்கு அல்ல— அவன் மனத்தினைக் கவர்ந்தவள் குடியிருந்த தாமரைத் தடாகத்துக்கு!









23



# பணிக்குக் கிடைத்த பரிசு

"தாமரை!"

"ம்.. ம்.."

"தாத்தா எங்கே?"

"தஞ்சைக்குப் போயிருக்கிறார்."

"குழந்தை..?"

"அவனும்தான்.."

"கிடைத்தற்கரிய நேரம்!"

"எது?"

"இது!"

"ஏன்?"

"தனிமையில் நீ! அண்மையில் நான்!"

"..”

"என் தந்தைக்கு நன்றி சொல்ல வேண்டும்"

"ஏன்?"

"ஒரு பெண்ணைப் பார்த்து வரச் சொன்னார். நான் உன்னைப் பார்க்க வந்துவிட்டேன்."

"அப்படியா!"

"ஆமாம்."

"விடுங்கள்.."

"என்ன கோபம்?"

"போய் அந்தப் பெண்ணையே தொடுங்கள்!"

"முடியாது.."

"ஏன்?"

"அவளை எனக்குப் பிடிக்காது."

"பிடிக்காதவளைப் பற்றியா இவ்வளவு நேரம் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?"

"பிடித்தவளைப் பார்த்தவுடன் பிடிக்காதவளின் ஞாபகம் வந்துவிட்டது."

"தள்ளி நில்லுங்கள். நீங்கள் செய்வது சரியல்ல."

"என்ன செய்தேன்?"

"நினைப்பது அவளை அணைப்பது இவளை!"

"கோபத்தில் சிவந்தது குவளை!"

"ஆண்களுக்கு இதெல்லாம் கை வந்த கலை."

"இன்னொரு பெண்ணைப் பற்றிப் பேசியது என் பிழை."

"யார் அவள்? ஊர் எது?"

"அலங்காரி! அகங்காரி! அடுத்த நாட்டுக்காரி!"

"பழகிச் சொல்கிறீர்களோ?"

"பார்த்துச் சொல்கிறேன்."

"ஓ..! பழகிப் பார்த்துச் சொல்கிறீர்களோ..?"

"தாமரையைத் தழுவிய கைகள், அல்லி மலருக்கா ஆசைப்படும்?"

"பூக்கள்.. வண்டுக்குப் பொழுது போக்கு!"

"நான் வண்டல்ல, கண்ட மலரெல்லாம் வண்டுக்குக் கட்டில். ஆனால் பெண்ணின் மடியோ குழந்தைக்குத் தொட்டில்!"

“நீங்களா குழந்தை?”

“ஆம். உன் மடியில் தவழும் போது.”

“நகர்த்துங்கள் தலையை! நம்பவே முடியவில்லை உங்களை. ஒவ்வொரு நேரத்திலும் ஒவ்வொரு வேடம். உண்மையில் நீங்கள் யார்?”

“நான் யாரென்று உனக்குத் தெரியாதா?”

“தெரியாது.”

“காதலன்!”

“எத்தனைப் பெண்களுக்கு?”

“தாமரை! வீண் சந்தேகம் வேண்டாம். ஓர் அரசியல் பணியின் நிமித்தம் அந்தப் பெண்ணைப் பார்த்து வரச் சொன்னார் என் தந்தை. கடுமையான அவர் கட்டளையையும் மீறி உன்னைக் காண வந்திருக்கிறேன்.”

“உங்கள் தந்தையைப் பார்த்துக் கேட்டால்தான் அகலும் என் ஐயம்.”

“என் தந்தையைப் பார்த்தால்..”

“பார்த்தால்?”

“கேள்வி கேட்கமாட்டாய். ஆச்சரியத்தில் அப்படியே அயர்ந்து நின்றுவிடுவாய்.”

“பார்க்கலாம். அவர் ஆச்சரியப்படுகிறாரா.. நான் ஆச்சரியப்படுகிறேனா என்று.”

“வயதானவர்களைப் பற்றிப் பேசியது போதும்.”

“ஏன்?”

“வாலிபம் வீணாகிக் கொண்டிருக்கிறது.”

“..”

“நீ மிகவும் அழகாக இருக்கிறாய்!”

“அவலட்சணமானவள் திடீரென்று அழகாகிவிட்டேன் என்கிறீர்களா!”

“அழகிதான் நீ! சினந்து, சினம் தணிந்தபின் பேரழகியாகிவிட்டாய்.”

“பேசிக் கொண்டே ஆபரணங்களைக் கழற்றுகிறீர்கள்.”

“கவிஞர் பொன்முடியின் கவிதையை நிறைவேற்றுகிறேன்.”

“பொன்முடியின் கவிதையா?”

“ஆம்! சொல்லட்டுமா?”

“கையூட்டா?”

“ஆமாம்.. காதலுக்குக் கையூட்டு கவிதைதானே!”

“சொல்லுங்கள்.”

“தலைவி தலைவனுடைய வருகைக்காகக் காத்திருக்கிறாள். ஆடியைப் பார்த்துப் பார்த்துத் தன்னை அலங்கரித்துக் கொண்டிருக்கிறாள். கவிஞன் அவளைக் கேலி செய்கிறான்.”

“இந்தப் பெண் ஆசை ஆசையாய்த் தன்னை அலங்கரித்துக் கொண்டிருப்பது எதற்காக? காதலன் கண்கள் காண்பதற்காக...! ஆனால், காதலன் வந்தவுடன் செய்யப் போகும் முதற் காரியம் எது தெரியுமா? அரும்பாடுபட்டு இவள் அணிந்து கொண்டிருக்கும் ஆடைகளையும் ஆபரணங்களையும் அகற்றுவதுதான்.”

“கவிஞர் மகா குறும்புக்காரர் போலிருக்கிறது.”

“ஆமாம். என்னைப் போல்.”

“இது அவர் இளமையில் எழுதிய கவிதையோ?”

“இளமைக்காகவும் எழுதிய கவிதை. இளைய உள்ளங்களுக்காக..”

“போதும்! இத்தகைய கவிதைகள் கைவசம் இருந்தால்..”

“கைவசமிருந்தால்..?”

“அரச சபையெல்லாம் அந்தப்புரம் ஆகிவிடும்.”

“இது அரச சபையல்ல.”

“ஆமாம்.”

“ஆற்றங்கரை”

"ஆமாம்."

"அந்தப்புரமாகிறது."

"..."

—தாமரை தள்ளாடியது.

பொன்முடியின் கவிதை அரங்கேற்றம் ஆதித்தனின் கைகளால் ஆரம்பமானது.

வைகறைச் சூரியன் மேகக் கதவுகளைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். புள்ளினங்கள் சிறகடித்தன. காற்று தன் கையசைத்தது. மரங்களின் கிளை மேடைகளில் இலைகளில் நடனம்.

மல்லிகைப் பந்தலில் காலைப் பொழுதின் கலகலப்பு. அரண்மனைப் பெண்களின் ஆரவாரம். சிற்றரசர் மாவலியாணருடைய மகளும் உறையூர் உத்தமசிலருடைய மகளும் பல்லவ இளவரசியை அலங்கரித்துக் கொண்டிருந்தனர்.

புது நீராட்டிப் புத்தாடை உடுத்திக் கட்டான மேனிக்குப் பட்டாடை சூட்டிக் கூந்தலில் ஒரு பூத்தோட்டத்தைக் குடியேற வைத்துப் பல்லவ நாட்டுப் பருவ மயிலைச் சிங்காரித்துக் கொண்டிருந்தனர்.

சோழ நாட்டின் அழகிய இடங்களையெல்லாம் இளவரசிக்குச் சுற்றிக்காட்டுமாறு அரண்மனைப் பெண்களுக்கு ஆணையிட்டிருந்தார் விஜயாலயர்.

சுற்றிப் பார்க்கச் செல்லும்முன், வேந்தருடைய விருப்பத்தின்படி 'கொற்றவையை'க் கும்பிட்டுச் செல்வதற்காகக் கோயிலுக்கு வந்து சேர்ந்தாள் கோமகள்.

நிசும்ப சூதனி ஆலயத்தின் வாயிலில் ரதத்திலிருந்து இறங்கிய பல்லவ இளவரசியைப் புன்னகையால் வரவேற்றார் மன்னர். அருகில் நின்றிருந்த ஆதித்தனோ அவளைக் கவனிக்காமல் தூண்களை வெகு அக்கறையோடு கவனித்துக் கொண்டிருந்தான்.

கோட்டைக் காவல் தலைவர் குன்றத்தூர்க்கிழார் முன்னே செல்ல, அவரைத் தொடர்ந்து ஆதித்தன் நடக்க, அவர்களின் பின்னே விஜயாலயரும் இளவரசியும் கோயிலின் முன் மண்டபத்தைத் தாண்டி நடந்து கொண்டிருந்தனர். ஆதித்தனும் அவளும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ள நேர்ந்த போது, மோதிக் கொண்ட விழிகள் சட்டென விலகிக் கொண்டன. இருவருடைய இதயங்களிலும் எண்ணங்களின் படையெடுப்பு..

ஒரு நள்ளிரவில் வாளைச் சுழற்றும் வீர நாயகனை இங்கே சந்தித்ததும், தன் பூவுடலை அவன் கைகளிலிருந்து விடுவித்துக் கொள்ளப் போராடியதும், தீப்பந்த வெளிச்சத்தில் அவனைப் பார்த்தவுடன் இதயத்தைப் பறிகொடுத்ததும், அவனுக்காகத் தன் வீரர்களில் ஒருவனையே பலி கொடுத்ததும், அவன்தான் ஆதித்தன் என்று அறிந்தவுடன் தனக்கு ஏற்பட்ட வெறுப்பு காதல் இதயத்தின் கதவுகளை அடைத்ததும் அவள் உள்ளத்தில் ஒன்றன் பின் ஒன்றாய் ஊர்வலம் வந்தன.

ஆதித்தனுடைய உள்ளத்திலும் அந்த நள்ளிரவு நடை போட்டது. அதே சமயத்தில் பல்லக்கில் ஏறிச் சென்றவளிடம் அனுதாபம் கொண்டு நெருங்கிப் பேச முற்பட்ட போது அவள் தன்னைப் பார்க்கப் பிடிக்காதவளாய்ப் பட்டுத் திரைகளை இழுத்து முகத்தை மூடிக் கொண்ட நிகழ்ச்சி அவன் இதயத்தைப் பெரிதும் பாதித்திருந்தது.

ஆலயத்தின் உள்ளே வீரமாகாளியை வணங்கிவிட்டு, ஒவ்வொரு தூணிலும் செதுக்கப்பட்டிருந்த சிற்பங்களை உவகை பொங்க ரசித்துப் பார்த்த இளவரசி, இடையிடையே ஆதித்தனிடமும் விழிகளை அனுப்பிக் கொண்டுதான் இருந்தாள்.

‘வீரத் தழும்புகளை ஆபரணங்களாய் அணிந்திருக்கும் விஜயாலயர் எங்கே. இளம் பெண்ணின் இதயத்தைக் கருணை சிறிதுமின்றிக் காயப்படுத்திய ஆதித்தன் எங்கே.’

ஆதித்தனுக்கோ பாவையின் முகம் பார்வையில் பட்டபோதெல்லாம் பற்றி எரிந்தது. சக்கரவர்த்தியின் மகளாக இருக்கலாம். அதற்காக இத்தனை திமிர் ஓர் இளம் பெண்ணிடம் இருக்கக் கூடாது.

தாமரையையும், பல்லவ இளவரசியையும் ஒப்பிட்டுப் பார்த்தது அவன் உள்ளம்.

தாமரை—குளிர் பூஞ்சோலை! இவளோ பட்டத்து யானை பவனி வரும் சாலை.

தாமரை— வீசும் தென்றல் காற்று. இவளோ நெஞ்சைச் சுட்டெரிக்கும் நெருப்பின் ஊற்று.

அவளைப் பார்த்தால் பெண்களுக்கே ஆசை வரும்.

இவளின் தோற்றமோ ஆணுக்கே அச்சம் தரும்!

அவள் என் இதயத்தின் அரசி.

இவளோ வெறும் இளவரசி!

இரண்டு இளம் உள்ளங்களின் போராட்டங்களை ஒருவாறு ஊகிக்க முடிந்த போதும் அதை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை விஜயாலயர். காளியின் சிலையமைப்பில் அவருடைய கண்கள் பதிந்திருந்தன.

அழிந்து கொண்டிருந்த ஓர் இனத்தைக் காப்பதற்காக ஆர்ப்பரித்துக் கிளம்பிய அன்னையின் ஆவேச வடிவமாய் அதை நினைத்தார். ஆமாம். காளியாக உருவெடுத்துக் கண்ணெதிரில் நிற்பது வேறு யாருமல்ல— சோழ மாதா!

இது வழிபடும் ஆலயம் மட்டுமல்ல. வழிப்படுத்தும் ஆலயம்!

நிசும்பசூதனி* வலக்காலை மடக்கி ஆசனத்தின் மேல் அமர்ந்து, இடக்காலைத் தொங்கவிட்டுக் கொண்டிருந்தாள். வாளையும் கேடயத்தையும் கையில் ஏந்தியிருந்தாள். வலக்கையில் ஏந்திய சூலத்தைக் கொண்டு காலடியில் கிடந்த அரக்கனின் மார்பைக் குத்திப் பிளந்து கொண்டிருந்தாள்.

கற்சிலையை ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்த பொற்சிலையிடம் “சிறப்பாக இருக்கிறதா சிற்பம்?” என்று கேட்டார் விஜயாலயர்.

“அற்புதம்! காளி நம் கண்ணெதிரிலேயே அரக்கனைக் குத்திக் கிழிப்பது போல் சிலை தத்ரூபமாகச் செதுக்கப்பட்டுள்ளது!” என்று பாராட்டினாள் பல்லவ இளவரசி.

“அழைத்து வாருங்கள் அவரை!” என்று கோட்டைத் தளபதிக்கு ஆணையிட்ட அரசர்,

“இதை வடிவமைத்த சிற்பிக்கு என்ன பரிசு கொடுக்கலாம்?” என்று இளவரசியிடம் கேட்டார்.

“அரிய பரிசு வழங்கலாம். பல்லவ நாட்டிலென்றால் ஓர் ஊரையே தானமாகக் கொடுப்போம்” என்று கர்வத்துடன் கூறினாள் கட்டழகி.

“நான் என்ன பரிசு கொடுத்திருக்கிறேன் தெரியுமா?” என்று விஜயாலயர் கேட்டார் ஏறிட்டுப் பார்த்த இளவரசியிடம்,

“ஊரைத் தானமாகக் கொடுக்கச் சொல்லவில்லை. உயிரைத் தானமாக வாங்கச் சொல்லியிருக்கிறேன்” என்றார்.

---

*சோழர் கலைப் பாணி— எஸ். ஆர். பாலசுப்பிரமணியம்

"என்ன..?" என்று திடுக்கிட்டாள் இளவரசி. திகைப்புடன் ஆதித்தனும் திரும்பிப் பார்த்தான்.

"ஆம்! செயற்கரிய செயலைச் செய்து முடித்த சிற்பியின் தலை, நாளைக் காலைப்பொழுதில் கழுவிலேற்றப்படும்" என்று கூறிவிட்டுக் கண்களை மூடிக் கொண்டார் விஜயாலயர்.













24



# மாவீரன் பெற்ற மகள்

சிற்பியின் கலைத்திறனை வியந்து பாராட்டிய இளவரசியை மட்டுமல்ல ஆதித்தனையும்கூட அதிர்ச்சியடைய வைத்தன விஜயாலயர் கூறிய விபரீத வார்த்தைகள்.

"விவேகத்தில் உயர்ந்தவர் நீங்கள். ஆனாலும் ஓர் வேண்டுகோள்!" என்றாள் இளவரசி.

"சொல்லுங்கள்!"

"கலைஞர்கள் நெகிழ்ந்த இதயம் உடையவர்கள்; பலவீனமானவர்கள். அனுதாபத்தோடு அவர்களை அணுக வேண்டும். தவறு செய்திருந்தால் கண்டிக்க வேண்டியதுதான். கழுவில் ஏற்றாமல் கருணை காட்டக் கூடாதா?"

"முடியாது. அவர் செய்த குற்றத்துக்கு இதைவிடவும் குறைந்த தண்டனை கிடையாது" என்றார் விஜயாலயர்.

உணர்ச்சிவயப்பட்ட நிலையிலிருந்து அவர் மீண்டுவிட்டதை உணர்ந்து கொண்ட ஆதித்தன் கேட்டான் "சிற்பி என்ன செய்தார்?"

"நள்ளிரவில் பல்லவ இளவரசியைக் காளி கோயிலுக்குள் வரவழைத்தார்!" மன்னரின் இதழ்களில் புன்னகை படர்ந்தது.

ஆதித்தனும் இளவரசியும் தலை கவிழ்ந்தனர்.

விஜயாலயர் விவரித்தார்:

"கொற்றவைக்குக் கோயில் என்று கூறிக் கொண்டு பல்லவநாட்டை நோக்கிச் சுரங்கப்பாதை அமைப்பதாகச் செய்தி சென்றது காஞ்சிக்கு. கண்டுபிடிக்குமாறு கட்டளையிட்டார் பல்லவச் சக்கரவர்த்தி! பூட்டுகளை உடைத்துக் கொண்டு இளவரசி புகுந்தார்!"

"அப்படியா!" என்று வியந்தான் ஆதித்தன்.

ஓர் ஒற்றைக்குதிரை நின்று நின்று போன ஓசை அவன் நினைவில் நிழலாடியது.

"கண்டுபிடித்தீர்களா சுரங்கப்பாதையை?" —விஜயாலயர் இளவரசியை வினவினார்.

"மன்னர் என்னை மன்னிக்க வேண்டும்! உள்ளே வந்து தேடிய பிறகுதான் உணர்ந்து கொண்டேன்— வந்த செய்தி வதந்தி என்று."

"வதந்தியல்ல!"

"அப்படியானால்..?"

"சுரங்கப்பாதை அமைக்கப்பட்டது உண்மை! ஆனால் பல்லவ நாட்டை நோக்கி அல்ல! பாண்டிய நாட்டிலிருந்து தஞ்சைக்கு."

அதிர்ச்சியுடன் ஏறிட்டுப் பார்த்த இளவரசியிடம் மறுபடியும் கூறினார்:

"சோழர் குலம் உங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறது!"

"எதற்காக?"

"பல்லவ வீரன் ஒருவனைப் பலியிட்டு ஆதித்தனின் உயிரைக் காப்பாற்றியதற்காக."

இளவரசியை ஆதித்தன் ஏறிட்டுப் பார்த்தான். இப்போது அந்தப் பார்வையில் பாசம் இருந்தது. நன்றி இருந்தது. காதலும் கொஞ்சம் கலந்திருந்தது.

கோட்டைத் தளபதி குன்றத்தூர்க்கிழார் விலங்கிட்ட கைகளுடன் சிற்பியை அழைத்து வந்தார். சிற்பி பித்துப் பிடித்தவர் போல் அங்குமிங்கும் பார்த்துப் பேதலித்தார்.

"இதோ இவர்தான். பாண்டிய ஒற்றர்கள் நடமாடவும், பதுங்கிக் கிடக்கும் முத்தரையர்கள் என் மீது பாய்வதற்கு வசதியாகவும் பாண்டிய நாட்டின் எல்லையிலிருந்து தஞ்சைக் கொற்றவைக்

கோயிலுக்கு வர சுரங்கப்பாதை அமைத்துத் தந்த பரோபகாரி! கொஞ்ச நாட்களாகவே தஞ்சையில் ஏற்பட்ட குழப்பங்களுக்குக் காரணமானவர்! பாறைகளோடும் கற்களோடும் பழகிக் கொண்டிருந்த வரைக்கும் இவர் மென்மையான மனிதராய் இருந்தார். மனிதர்களோடு பழக ஆரம்பித்த பிறகுதான் சிற்பியின் இதயம் கல்லைப் போல் கடினமாகிவிட்டது. இவர் கைகளில் குடியிருந்த கலையை நான் நேசித்தேன். இவரோ எனது எதிரிகள் கொடுத்த விலையை நேசித்தார்.” —விஜயாலயரிடமிருந்து ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது.

“கலை மன்னரே! பல்லவ இளவரசிகூட உங்களுக்காகப் பரிந்து பேசினார். ஆனால் தனி மனிதனுக்குத் துரோகம் செய்தால் மன்னிக்கலாம். ஒரு கூட்டத்துக்குத் துரோகம் செய்தால் தண்டிக்கலாம். தேசத்துக்கே துரோகம் செய்கிறவர்களைக் கொல்லாமல்விடுவது குற்றம்” என்று சிற்பியிடம் கூறிவிட்டுக் கோட்டைத் தளபதியை நோக்கிக் கையசைத்தார் மன்னர், “கொண்டு செல்லுங்கள். கூடைப் பொற்கழஞ்சுகளால் இவரைக் குளிப்பாட்டுங்கள்! பிறகு கழுவேற்றுங்கள். உடலையும் பொற்கழஞ்சுகளையும் சிற்பியின் குடும்பத்தாரிடம் ஒப்படைத்துவிடுங்கள்!”

கொற்றவன் உள்ளே போயிருந்ததால் கொற்றவை தரிசனத்துக்காக வந்திருந்த பொதுமக்கள் கோயிலின் வாயிலில் காத்திருந்தனர். கூட்டத்தின் முன்புறம் தாமரையின் தாத்தா தலை காட்டினார். தொலைவிலிருந்தே அவரைக் கவனித்துவிட்ட வேந்தர், உள்ளே வருமாறு சமிக்ஞை செய்தார்.

நெருங்கி வந்த கிழவர் விஜயாலயருக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு விலகி நின்றார். அவரைப் பார்த்ததும் ஆதித்தனின் கண்களில் ஒரு மருட்சி! கிழவரோ ஆதித்தனைக் கண்டும் காணாதவர் போல் நின்றிருந்தார்.

“எங்கு வந்தீர்கள் பெரியவரே?” என்றார் விஜயாலயர்.

“தரிசனத்துக்காக.”

“ஆலய தரிசனமா?”

“அரச தரிசனமும்.”

“ஒரே கல்லில் இரண்டு மாங்காய்” என்ற விஜயாலயர். “காய் காயாகத்தானே இருக்கிறது?” என்று கேட்டார் கம்பீரமான குரலில்.

“கனிந்துவிட்டது அரசே!” என்றார் பெரியவர் வாட்டத்துடன்.

“கவலைப்படாதீர்கள் கனியைக் காயாக்கிவிடுவோம்!”

என்ன பேசிக்கொள்கிறார்கள் என்று தெரியாமல் இளவரசியும், ஆதித்தனும் திகைத்த போது, “இவர் யார் தெரியுமா?” என்று கேட்டார் விஜயாலயர்.

“பார்த்ததில்லை அரசே!”

“ஆதித்தா! உனக்குத் தெரியுமா?”

“தெரியும். ஆனால்..”

“தெரியும். ஆனால்.. தெரியாது!” என்று சிரித்த விஜயாலயர், “உண்மைதான். இவர் யார் என்ற முழுவிவரம் உனக்குத் தெரியாதுதான்” என்றார்.

“இவர்தான் என் முதல் தொண்டர்! என் சேனையில் சேர்ந்த முதல் வீரர்!” என்று பெருமிதத்துடன் கூறிய விஜயாலயரின் விழிகள் பிரகாசித்தன. சுவையான வரலாற்றை அவர் சொல்லத் தொடங்கினார். ஆதித்தனும் இளவரசியும் அளவிலா ஆர்வத்துடன் அந்தக் கிழவரின் கதையைக் கேட்டனர்.

&&&

“அப்போது தஞ்சை, முத்தரையர்களின் ஆதிக்கத்தில் இருந்தது. சூறாவளியில் பட்ட இலைகளைப் போல் சிதறிக் கிடந்தது சோழர் குலம்.

என்னிடம் பொருள் இல்லை. படை இல்லை. இலட்சிய வெறியைத் தவிர எதுவுமே இல்லை. சோர்ந்து கிடந்த சோழர்களை ஒன்று சேர்த்துப் பெரியதொரு படையை உருவாக்கப் பிரம்மப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தேன்.

ஒவ்வொரு சிற்றூராகச் செல்வேன். காவிரியை மறித்துக் கல்லணை கட்டிய கரிகால்வளவனுடைய கதையைச் சொல்வேன். இளஞ்சேட் சென்னியைப் பற்றி எடுத்துரைப்பேன். கோயில் மண்டபங்களில் இளைஞர்களைக் கூட்டி வைத்துக் கொண்டு பேசுவேன். என்னோடு சேர்ந்து போராட அழைப்பேன். நான் உருவாக்கப் போகும் சேனையில் வந்து சேர வேண்டுவேன்.

என் பேச்சினைக் கேட்டுக் கொண்டிருக்கும் இளைஞர் கூட்டம், கடைசியில் நான் விடுக்கும் வேண்டுகோளைப் பார்த்துக் கைகொட்டிச் சிரிக்கும். 'முத்தரையர்களிடமா மோதப் போகிறாய்?' என்று நகைக்கும்! 'பாவம், இந்த இளைஞனுக்குப் பைத்தியம்' என்று பரிகசிக்கும்!

நகரங்களில், சிற்றூர்களில், நாட்டு மக்களுக்கு மத்தியில் நான் கேலிப் பொருளானேன். பேச்சை ரசித்துக் கேட்டார்கள். ஆனால், பின்பற்ற ஒருவர்கூட முன்வரவில்லை. சொல்ல முடியாத கனவுகளைச் சுமந்து கொண்டிருந்த நான் சோர்ந்தேன். தளரா என் மன உறுதியும் தளர்ந்தது.

ஒரு நாள்—

இளைஞர்களுக்கு மத்தியில் என் இதயம் திறந்தது.

"விழலுக்கு இறைத்த நீராய் என் முயற்சிகள் வீணாகிவிட்டன. என் கால்படாத சிற்றூர் இல்லை. என் குரல் கேட்காத செவிகள் இல்லை. ஆனால், என் இலட்சியத்தை ஏற்றுக் கொள்ளத்தான் எவருமில்லை.

தூங்கிக் கொண்டிருக்கும் உங்களைத் துள்ளி எழவைக்கத் துடித்தேன். உங்கள் கொட்டாவி என்னையும் குடை சாய்த்துவிட்டது.

என் கனவுகளைச் சொல்லி இனிமேல் உங்கள் உறக்கத்தைக் கலைக்கமாட்டேன். நிம்மதியாகத் தூங்கலாம் நீங்கள். வேதனையோடு நான் விடைபெறுகிறேன்" என்று பேசி முடித்துவிட்டு வெளியேறினேன்.

எக்காளமிட்டுச் சிரித்தது இளைஞர் கூட்டம்! கூச்சலும் ஆரவாரமும் கொடிகட்டிப் பறந்தன.

ஊர் எல்லையைத் தாண்டி நான் நடந்து கொண்டிருக்கும் போது 'விஜயன்' என்று யாரோ அழைப்பதைக் கேட்டு நின்றேன்.

"கூப்பிட்டுக் கொண்டே இருக்கிறேன். திரும்பிப் பார்க்காமலேயே போகிறாயே தம்பி!" என்று கூறியபடி நடுத்தர வயதுடைய ஒருவர் அருகில் வந்தார்.

"புண்பட்டுப் போயிருக்கிறேன்! நீங்களும் எனக்குப் புத்திமதி சொல்ல வேண்டாம்" என்றேன்.

“புத்திமதி சொல்ல வரவில்லை. உன் புத்திமதியைக் கேட்டு நடக்க வந்திருக்கிறேன்” என்றார்.

ஆச்சரியத்துடன் நிமிர்ந்து பார்த்தேன்.

“ஆமாம் தம்பி! நடந்ததையெல்லாம் திண்ணையில் அமர்ந்தபடி கவனித்துவிட்டுத்தான் நாடி வந்தேன் உன்னை! சேனையில் முதல் வீரனாக சேர்த்துக் கொள் என்னை” —அவர் கூறிய வார்த்தைகளில் நம்பிக்கையின்றி நின்றிருந்தேன் நான்.

“இளைஞனாக நான் இல்லையென்று யோசிக்கிறாயா? ஒரே சமயத்தில் நான்கு பேரை வீழ்த்தும் உடல் வலிமை என்னிடம் உண்டு” என்று அங்கியைத் திறந்து தன் அகன்ற மார்பைக் காட்டினார்.

“உண்மையாகவே என் படையில் சேர விரும்புகிறீர்களா?”

“ஆமாம்.”

“என் இலட்சியத்தின் மீது உங்களுக்கு நம்பிக்கையிருக்கிறதா?”

“உன் மீது நம்பிக்கை இருக்கிறது!”

“என்னோடு சேர்வதற்குக் காரணம் என் மீது கொண்ட அன்பா?”

“அல்ல. அனுதாபம்!”

ஏறிட்டுப் பார்த்த என்னிடம் வேதனையோடு விவரித்தார். “ஊர் ஊராய்ச் சென்று இளைஞர்களை அழைக்கிறாய். உணர்ச்சி மழுங்கிப் போன அவர்களோ உன்னை எள்ளி நகையாடி இகழ்கிறார்கள். சோழர்களுக்கு ஒரு நாடு வேண்டும் என்ற உன் இலட்சியம் தற்போதைக்குச் சாத்தியமானதல்ல. ஆனால் சத்தியமானது! ஆதரிக்காமல்விட்டாலும், உன்னை அவமானப்படுத்தாமலாவது இருக்கலாம். ஆனால், மதியிழந்தவர்கள் உன்னை மனம் நோக வைத்தார்கள். அதனால்தான் நீ ஆரம்பிக்கப் போகும் படையில் முதல் ஆளாகச் சேர்வதென முடிவெடுத்தேன்.”

“அனுதாபத்தால் கிட்டும் ஆதரவை நான் ஏற்றுக் கொள்வதில்லை.”

“வெறும் அனுதாபமல்ல. உன் விடா முயற்சிக்குக் கிடைத்த வெற்றி இது! இன்று முதல் நீ என் தலைவன்! ஒப்புக்கொள்வதும் நிராகரிப்பதும் உன் பொறுப்பு” என்று கூறியவர் என் வாளைத்

தொட்டு வணங்கினார். அவரை நான் கட்டித் தழுவிக் கொண்ட போது என் கண்களில் நீர் கசிந்தது.

'தோள் பாதி. தோரணை பாதி' என்பார்கள். என் தலைவன் இனிமேல் நடந்து வரக்கூடாது. குதிரையில்தான் வரவேண்டும். என்னிடம் ஒரு குதிரை இருக்கிறது. ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று கோரிக்கை விடுத்தார் அவர். ஒரு திங்களுக்குள் இன்னும் நான்கு பேர் என்னோடு சேர்ந்தார்கள். அவர்களுக்கு நான் படைப்பயிற்சி கொடுத்தேன். 'ஐவர் படை' என்று அவர்களை அழைத்தேன்.

ஐந்து பேர்— ஐம்பது பேர் ஆனார்கள்! அடலேறுகளாய், ஆற்றல் மறவர்களாய் ஆர்ப்பரித்தார்கள்! அவ்வப்போது முத்தரையர்களை அதிர வைத்தார்கள்! என் வீர வேள்வி விஸ்வரூபம் எடுத்தது!

தஞ்சை என் கைகளில் கிடைத்தது. அதன் பிறகும் எத்தனை போர்க்களங்கள். அழிஞ்சியூர், மணலூர், கொடும்பாளூர், கண்ணனூர், அண்ணன்வாயில், அரிசிலாற்றங்கரை— அத்தனை போர்க்களங்களிலும் முன்னணிப் படையில் நின்று போராடினார் என் முதல் வீரர்!" என்று கூறி உணர்ச்சிவசப்பட்ட விஜயாலயர், "அவர்தான் இவர்!" என்று பெரியவரை அறிமுகப்படுத்திய போது, ஆதித்தனும் இளவரசியும் அவரை வணங்கினார்கள். கூச்சத்துடன் கிழவர் குறுகினார், வணங்கினார், ஒதுங்கினார்.

"இடவைப் போர்! என் தோள்களைக் குலுக்கிய தோல்வி! எதிர்பாராத நேரத்தில் வரகுண பாண்டியனின் வரம்பு மீறிய படையெடுப்பு! இவருடைய ஒரே மகன் அந்தப் போரில் உயிரை ஈந்தான். நாட்டுக்காகப் போரிட்டு இன்று நடுகல்லாய் நிற்கிறான். அந்த மாவீரனுடைய மகளையும் இளம் வயது மகனையும் பராமரிப்பதற்காக இவருக்கு ராஜசேவையிலிருந்து ஓய்வளித்திருக்கிறேன்!" என்று கூறிய விஜயாலயர், "பெரியவரே! பிள்ளைகளையும் அழைத்து வந்தீர்களா?" என்று பிரியமுடன் கேட்டார்.

"வாயிலில் நிற்கிறார்கள் அய்யா.. பேரனும், பேத்தியும்!" என்றார் பெரியவர்.

"அடடே! தாமரை வந்திருக்கிறாளா? அழைத்து வாருங்கள் உடனே" என்றார் அரசர்.

'தாமரை' என்ற பெயர் காதில் விழுந்தவுடன் ஆதித்தனுடைய உள்ளத்தில் ஆனந்தம் ஏற்பட்டாலும், தந்தையின் முன்னே தன் காதல் வெளிப்பட்டுவிடுமோ என்ற அச்சமும் ஏற்பட்டது. தாமரையிடம் தன் வேடம் வெளிப்பட்டுவிடுமோ என்ற சங்கடமும் சேர்ந்து கொண்டது.

தாமரையும் குழந்தையும் வந்து வணங்கிய போது அவர்களை அறியாதவன் போல் காட்டிக் கொண்டான் அவன். தாமரையோ ஆதித்தனையே பார்த்துக் கொண்டிருந்தாள். 'இவர்தான் கிள்ளியோ?' என்ற ஐயம் ஏற்பட்டது அவளுக்கு.

எந்த ஐயமும் இல்லாமல் குழந்தை ஆரவாரத்துடன் தாவியது ஆதித்தனை நோக்கி. அவனுடைய தோள்களிலும் ஏறித் தொற்றிக் கொண்டது.









25



# எங்கே இளவரசி?

'இளவரசரா..? கிள்ளியா? இவர் யார்?' —ஐயத்தோடு ஆதித்தனை ஏறிட்டுப் பார்த்துக் கொண்டிருந்த தாமரை. திடீரென்று குழந்தை அவனை நோக்கித் தாவியதையும், ஆதித்தன் குழந்தையை அணைத்துக் கொண்டதையும் பார்த்துத் திகைத்தாள். வேந்தன் மகன் என்ன செய்வதென்று விழித்தான்.

"இளவரசருக்குக் குழந்தைகளின் மேல் எத்தனை அன்பு!" என்றார் கிழவர்.

"டேய்! இறங்கு கீழே. அவர் இளவரசர்" என்றாள் தாமரை கோபமாக.

"மாத்தேன்!" என்றது குழந்தை.

"இறங்குடா கீழே! எட்டாத பழத்துக்குக் கொட்டாவிவிடக் கூடாது. இளவரசரைப் போய்க் கட்டிப் பிடிக்கக் கூடாது" —சீறினாள் சேல்விழியாள்.

"இருக்கட்டும். அதனாலென்ன? குழந்தைதானே" என்று வேண்டுமென்றே குறுக்கிட்டுக் குறும்பாகச் சிரித்தார் விஜயாலயர்.

"ஐயா! அரசர்கள் ஏழைகளை அணைத்துக் கொள்ளலாம். அது பெருந்தன்மை. ஆனால், அரசர்களை அணைத்துக் கொள்ள ஏழைகள் எண்ணக் கூடாது. அது பேராசை!" என்று பொங்கிப் பொரிந்தாள் பூவிழியாள்.

“கனி— காயாகிவிட்டது!” என்று கிழவரின் காதோடு முணுமுணுத்த விஜயாலயர், “பெரியவரே! அடக்கமானவள் என்று நினைத்தேன். ஆனால், பேச்சில் எல்லாரையும் அடக்கிவிடுவாள் போலிருக்கிறதே.. உங்கள் பேத்தி!” என்றார் உரத்த குரலில்.

“தாமரை! சும்மாயிருக்கமாட்டாயா?” என்று அதட்டிய பெரியவர், ஆதித்தனிடமிருந்து பேரனை வாங்கிக் கொண்டார்.

“நல்லது பெரியவரே! நாம் புறப்படுகிறோம். பல்லவ இளவரசியை அனுப்பி வைக்க வேண்டும். ரதம் காத்திருக்கிறது” என்று கூறிய மன்னர், “தாமரை! அரசனுக்கு அடுத்த மரியாதை உனக்குத்தான். ஏனென்றால், நாட்டுக்காக உயிர்நீத்த மாவீரனுடைய மகள் நீ! கொற்றவையை நீ தரிசனம் செய்துவிட்டுப் போகும்வரை கோயிலுக்குள் வேறு யாரையும்விடமாட்டார்கள்” என்று புன்னகைத்தவாறே, “வாருங்கள் இளவரசி! போகலாம்” என்றார்.

தயங்கித் தயங்கி நடந்த ஆதித்தன் தாமரையைத் திரும்பிப் பார்த்தான். எரித்துவிடுவது போல் அவனையே பார்த்துக் கொண்டிருந்த பாவை வெடுக்கென்று முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டாள்.

இளவரசன் நின்றான்.

“வேறு ஏதேனும் வேலை இருக்கிறதா?” என்று வினவிய விஜயாலயர், “இல்லை..” என்ற ஆதித்தனின் தோள்களில் கைபோட்டுக் கொண்டு நடக்கத் தொடங்கினார்.

கூடியிருந்த பொதுமக்கள் குரலெழுப்பினர்.

“கோப்பரகேசரி விஜயாலயச் சோழர்..”

“வாழ்க. வாழ்க!”

“இளவரசர் ஆதித்தர்..”

“வாழ்க. வாழ்க!”

கொற்றவையின் ஆலயத்தில் நின்று கொண்டிருந்த குழந்தையும் “வாழ்க. வாழ்க!” என்று சத்தமிட்டது.

கைகளை ஓங்கிக் கொண்டு தம்பியை அடிப்பதற்காகத் தாவினாள் தாமரை. கற்சிலையின் பின்புறமாய் ஒளிந்து கொண்ட குழந்தை, உயிர்ச்சிலையை ஓட வைத்துக் கொண்டிருந்தது.

விஜயாலயருடைய குதிரையைத் தொடர்ந்து ஓடிக் கொண்டிருந்தது ஆதித்தனின் வெண்புரவி. கோட்டைத் தளபதி குன்றத்தூர்க்கிழாரின் குதிரை சற்றே தயங்கியதை அறிந்து திரும்பிப் பார்த்த விஜயாலயர், "நீங்கள் போகலாம்" என்றார்.

அவர் திரும்பிச் செல்லாதிருக்கவே, "ஏதேனும் சொல்ல வேண்டுமா?" என்று கேட்டார்.

"ஆம் அரசே! பாதுகாப்பிற்குப் பல்லவ வீரர்களே போதுமென்றும், சோழ வீரர்கள் உடன் வரவேண்டாமென்றும் சொல்லிவிட்டார் இளவரசி!"

"அப்படியா!" என்று இமைகளை நெரித்த அரசர் கேட்டார்.

"பல்லவ வீரர்கள் எத்தனை பேர்?"

"பதினைந்து பேர்."

"சுற்றிப் பார்க்கச் செல்லும் இடங்களில்..?"

"சோழ வீரர்களின் காவல் இருக்கும்."

"ரத சாரதிகள்..?"

"நம்முடையவர்கள்தான். மதுராந்தகனும், மாடத்தேவனும்."

"சரி" என்று விஜயாலயர் தலையசைத்தார், கோட்டைத் தளபதி தன் குதிரையைத் திருப்பினார்.

"நானும்.." என்று திரும்ப முயன்றான் ஆதித்தன்.

"வா.. என்னுடன்" –விஜயாலயர் புரவியை விரட்டினார்.

வேந்தரின் குதிரை வித்தியாசமாகக் கனைத்தது. அது தன்னைப் பார்த்துச் சிரிப்பது போல் தோன்றியது ஆதித்தனுக்கு.

"இங்கு எதற்காக அழைத்து வந்தீர்கள் தந்தையே?"

"அவசரப்படாதே! உன் அறிவாற்றலைச் சோதிக்கப் போகிறேன்."

மௌன மண்டபத்தின் உள்ளே நுழைந்தனர் மன்னனும் மைந்தனும்.

"எத்தனை தடவை இங்கு வந்திருப்பாய்?"

"மூன்று அல்லது நான்கு முறை."

"இங்குள்ள எதுவேனும் உன் கவனத்தை ஈர்த்திருக்கிறதா?"

“ஆசனங்கள் வித்தியாசமாக அமைந்துள்ளன.”

“அப்புறம்?”

“சுவர்களெங்கும் கண்களைக் கவரும் வண்ண ஓவியங்கள்!” என்றான் ஆதித்தன் சற்றே எரிச்சலுடன். தாமரையைச் சந்திக்கவிடாமல் தடுத்துக் கொண்டிருக்கிறாரே என்ற தவிப்பு அவனுக்கு.

“ஓவியம் எதையும் உணர்த்தவில்லையா?” என்று மன்னர் கேட்கவே, அருகில் சென்று உற்றுப் பார்த்தான் ஆதித்தன். குதிரைக்குப் பதில் அங்கே தாமரை தெரிந்தாள். தாமரையின் முகம் திடீரென்று காளியின் முகமாக மாறியது.

“கொற்றவை மிகவும் கோபமாக இருக்கிறாள்!”

“என்ன சொல்கிறாய்..?”

“இல்லை.. இல்லை. குதிரை மிகவும் கோபமாக இருக்கிறது..” ஆதித்தன் திருத்திக் கொண்டான். அரசர் சிரித்துக் கொண்டார்.

“வீரம் இந்த ஓவியங்களில் விளக்கப்பட்டுள்ளது.”

“அவசரப்படாதே..”

ஒவ்வொரு காட்சியையும் ஆதித்தன் விவரித்தான் அலுப்போடு.

“ஊம்.. ஊம்..” என்று ஆர்வத்தைத் தூண்டினார் அவர்.

“கண்டு பிடித்துவிட்டேன்! ஒவ்வொரு விதமாய் வரையப்பட்டிருந்தாலும் இது ஒரே குதிரைதான்! ஒரு குதிரையின் வாழ்க்கை வண்ண ஓவியங்களால் வரையப்பட்டுள்ளது.”

“ஆகா..!”

“குதிரையின் முதுகில் யாரும் அமர்ந்திருக்கவில்லை. அது ஓர் அழகான உருவகம்!”

“அடடே..!”

“தோள்களில் யாரையும் தூக்கிச் சுமக்காதே. எவருக்கும் சுமையாய் நீயும் இருக்காதே என்று எடுத்துரைக்கிறது இது.”

“அவ்வளவுதானா..?”

ஆதித்தன் கூறினான்: "உன்னை யாரும் வழி நடத்த வேண்டியதில்லை! உன்னை நீயே நடத்து.. என்பது இதன் உட்கருத்து."

"அவ்வளவுதானா?" என்று அரசர் மீண்டும் கேட்ட போது அவருடைய குரலில் ஏமாற்றம் தெரிந்தது.

"ஆதித்தா! குறிப்பொன்று தருகிறேன். கண்டு பிடிக்க முடிகிறதா பார். குதிரை என்பது குதிரையல்ல.." என்று விடுகதை போட்டார் விஜயாலயர்.

"புரியவில்லையா?"

தலையசைத்தான்.

"யோசித்துப் பார்! அந்த வீரம்.. அந்தச் சீற்றம்.. அந்தத் தியாகம்.. அந்த வெற்றி.."

உதடுகளைப் பிதுக்கினான்.

"கடைசி ஓவியத்தின் முதுகிலிருக்கிற காயங்களைப் பார்."

பார்த்தான்.

"எத்தனைத் தழும்புகள் என்று எண்ணிப் பார்!"

தழும்புகளை அலட்சியமாக எண்ணத் தொடங்கினான் ஆதித்தன்.

"பத்து பதினொன்று.." என்று எண்ணி வரும் போதே, அவன் முகத்தில் ஒரு பரவசம்! "எண்பது.." என்றவுடன் எண்ணுவதை நிறுத்திவிட்டு, "ஆ..!" என்று சத்தமிட்டான் ஆச்சரியத்துடன்.

"ஆம்! குதிரை.. குதிரையல்ல.." என்றான். "நீங்கள் தானே இந்தக் குதிரை?" என்று கேட்டபடி ஓடி வந்து தந்தையைத் தழுவிக் கொண்டான்.

"காயங்களை எண்ணிப் பார்த்திருந்தால் ஆரம்பத்திலேயே கண்டுபிடித்திருப்பேன்" என்று நாணினான்.

விஜயாலயர் விளக்கினார்:

"நான்கு முறை நீ இங்கு வந்திருக்கிறாய்! ஓவியங்களைப் பார்த்திருக்கிறாய். பெரிய, பெரிய ராஜதந்திரிகள் இந்த மண்டபத்திற்குள் பிரவேசித்திருக்கிறார்கள். ஓவியங்களை அவர்களும் பாராட்டியிருக்கிறார்கள். உட்பொருளைத்தான் ஒருவரும்

உணர்ந்ததில்லை! ஆனால்—மண்டபத்தின் உள்ளே நுழைந்த கொஞ்ச நேரத்தில், ஒவியங்களின் உண்மையைக் கண்டுபிடித்துவிட்டாள் ஒரு பெண்!”

“யார், பல்லவ இளவரசியா?” என்று கேட்டான் ஆதித்தன்.

“ஆமாம்” என்ற விஜயாலயரின் குரலில் பெருமிதம் இருந்தது.

மண்டபத்தின் நடுவிலிருந்த மணி ஒலித்தது. வாயிலை நோக்கித் திரும்பிய விஜயாலயர், “வரலாம்” என்று குரல் கொடுத்தார்.

ஒற்றர் படைத் தலைவன் சாத்தன் பழியிலி உள்ளே நுழைந்தான். வழக்கமாக அவன் முகத்தில் தென்படும் மர்மப் புன்னகையைக் காணவில்லை.

“அவசரமான செய்தியென்று நினைக்கிறேன். அனுமதி கேட்காமல் வந்திருக்கிறாய்” என்று புன்னகைத்தார் மன்னர்.

“ஆம், வேந்தே ஆபத்து!”

“யாருக்கு?” என்றார் புன்னகை மாறாமல்.

“பல்லவ இளவரசிக்கு!” என்ற ஒற்றர் தலைவனின் குரலில் பதற்றமிருந்தது. விஜயாலயரின் இதழ்களில் தவழ்ந்து கொண்டிருந்த புன்னகை மறைந்தது.

“சொல்!” என்றார் அமைதியாக.

“ரத சாரதி மதுராந்தகனை வீட்டில் கட்டிப் போட்டுவிட்டு இளவரசியின் ரதத்தை வேறொருவன் ஒட்டிப் போயிருக்கிறான்..”

“யாரவன்?”

ஒற்றர் தலைவன் மெதுவான குரலில் அவரிடம் அந்தப் பெயரைக் கூறினான்.

“என்ன..?” என்று துள்ளி எழுந்தார் விஜயாலயர். “அவனா..? அவன் எப்படி இங்கே வந்தான்?” என்றும் கேட்டார்.

“வெட்ட வெட்டத் துளிர்க்கும் புற்களைப் போல் முத்தரையர்கள் எங்கிருந்தாவது முளைத்துக் கொண்டே இருக்கிறார்கள்” என்றான் ஆதித்தன்.

“அதிலும் அவன் பயங்கரமானவன்! எதையும் திட்டமிட்டு நிறைவேற்றும் திறமையுள்ளவன்” என்ற விஜயாலயர், ஒற்றர்

தலைவனின் பக்கம் திரும்பி, "எப்படி நடந்தது இது?" என்று கேட்டார்.

"மன்னிக்க வேண்டும் அரசே!" என்று தலைகுனிந்த சாத்தன் பழியிலி கவலையுடன் கூறினான்.

"சோழ வீரர்கள் துணைக்கு வர வேண்டாம் என்று இளவரசி சொல்லிவிட்டதால் ஆள் மாறாட்டத்தை அறிந்து கொள்ள முடியாமல் போய்விட்டது. பயணப் பாதையை மாற்றி இளவரசியைக் கொல்லத் திட்டமிட்டிருக்கிறார்களாம்!"

"பல்லவ இளவரசிக்கு ஏதாவது நேர்ந்தால் சோழ நாடு சூறையாடப்படும்" என்று பற்களைக் கடித்தார் விஜயாலயர்.

"யாரங்கே..? கூப்பிட்டு வா கோட்டைத் தளபதியை! மதுராந்தகனைச் சிறைப்படுத்து" – மடமடவென்று கட்டளைகளைப் பிறப்பித்த மன்னர், ஒற்றர் தலைவனை நோக்கிக் கேட்டார்:

"ரதம் எவ்வளவு தூரம் போயிருக்கும்?"

"நான்கு காத தூரம் போயிருக்கும்."

"தந்தையே! இளவரசியைக் காப்பாற்றிக் கொண்டு வருவது என் பொறுப்பு!" என்று எழுந்தான் ஆதித்தன்.

தஞ்சையிலிருந்து ஆறுகாத தூரத்தில் வேக வேகமாய் மூச்சிரைக்கக் குதிரைகளைத் துரத்திக் கொண்டு சென்ற ஆதித்தனும், ஒற்றர் தலைவனும், தொலைவில் பல்லவ வீரர்கள் புடைசூழ ரதமொன்று போய்க் கொண்டிருப்பதைப் பார்த்தனர்.

"நல்லவேளை!" என்றான் ஆதித்தன்.

"நல்லவேளையா பொல்லாத வேளையா என்று இன்னும் முடிவாகவில்லை இளவரசே!" என்றான் சாத்தன் பழியிலி.

குதிரையை வேகமாகச் செலுத்திக் கொண்டு முன்னே சென்ற ஒற்றர் தலைவன், "இன்னொரு ரதம் எங்கே?" என்று கேட்டான்.

"முன்னே சென்று கொண்டிருக்கிறது" என்றான் பல்லவ வீரர்களில் ஒருவன்.

"ஏன் அந்த ரதத்தைத் தனியே செல்லவிட்டீர்கள்?"

“ஒன்றுமில்லை. உற்சாகத்தில் ரதங்கள் ஒன்றை ஒன்று முந்திக் கொண்டு ஓடின. அந்த ரதம் சற்று முன்னே போய்விட்டது” என்று அசடு வழிந்தான் ரத சாரதி மாடத் தேவன்.

“வீரர்கள் யாரும் உடன் போகவில்லையா?” என்று சீறிய ஒற்றர் தலைவனிடம்,

“எங்கள் இளவரசி இந்த ரதத்தில் இருப்பதால் நாங்கள் யாரும் அதைத் தொடரவில்லை” என்றான் பல்லவ வீரர்களில் ஒருவன் பயமற்ற குரலில்.

நிம்மதியாக மூச்சுவிட்ட ஒற்றர் தலைவன், ஆதித்தனிடம் கூறினான். “அப்படியானால்.. பகைவன் ஓட்டிச் செல்லும் ரதத்தில் மாவலிவாணருடைய புதல்வியும், உத்தம சீலருடைய புதல்வியும் இருக்க வேண்டும். இளவரசே! வீரர்களுடன் நான் விரைகிறேன். நீங்கள் இளவரசியின் ரதத்தைத் தொடர்ந்து வாருங்கள்.”





ஒற்றர் தலைவன் சோழ வீரர்களுடன் புறப்பட்டுப் போன பிறகு திடீரென்று அந்த ஐயம் வந்தது ஆதித்தனுக்கு. ‘இந்த ரதத்தில் உண்மையாகவே இளவரசி இருக்கிறாளா..?’

ரதத்தை நிறுத்துமாறு கட்டளையிட்டான். தாழிடப்பட்டிருந்த ரதத்தின் கதவுகள் திறக்கப்பட்டன. உள்ளே. உத்தம சீலருடைய பெண்ணும் மாவலிவாணரின் பெண்ணும் ஆதித்தனைப் பார்த்ததும் நாணி ஒதுங்கினர்.

“முட்டாள்களே! ஏமாற்றப்பட்டுவிட்டீர்கள். உள்ளே இல்லை உங்கள் இளவரசி!” என்று உறுமிய ஆதித்தன் ஓங்கிவிட்ட உதையில் ஒரு பல்லவ வீரன் மண்ணில் உருண்டான்.




26



# குறுந்தொகை பேசிய கூந்தல்!

பாதையைவிட்டு ரதம் விலகிச் செல்வதைப் பல்லவ இளவரசி அறிந்தாள். ரதத்தின் சக்கரங்கள் கற்களிலும் பாறைகளிலும் மோதிக் கொண்டு செல்வதிலிருந்து, ராஜபாட்டையிலிருந்து பிரிந்து காட்டு வழியில் ரதம் ஓடிக் கொண்டிருப்பதை அவளால் உணர முடிந்தது. குதிரைகளின் சத்தமோ வீரர்களின் ஆரவாரமோ கேட்காமலிருந்ததும் அவளைக் குழப்பத்தில் ஆழ்த்தியது.

உட்புறமிருந்த சாளரத்தின் திரைத்துகிலை விலக்கி வெளியே பார்த்தாள். மரங்களும் புதர்களும் மண்டிக்கிடந்த கரடுமுரடான பாதையில் ரதம் ஓடிக் கொண்டிருந்தது. கண்ணுக்கெட்டிய தொலைவுவரை காவல் வீரர்கள் யாரும் தென்படவில்லை. இன்னொரு ரதத்தையும் காணவில்லை.

முன்புறமிருந்த துளை வழியே முகத்தை நீட்டி, "சாரதி, ரதத்தை நிறுத்து!" என்று கட்டளையிட்டாள்.

"ரதம் நிற்காது!" என்று பதில் வந்தது.

"ஏன்?"

"கடிவாளம் என் கையில்" என்று கூறினான் ரதத்தை ஓட்டியவன்.

"கடிவாளம் மட்டுமல்ல– இப்போது காரிகையும் என் கையில்" என்றான் மறுபடியும் ஏளனமாக.

"யார் நீ..?" என்று சீறினாள் இளவரசி.

"நானா?" என்ற கேள்வியை எழுப்பிவிட்டு நகைத்தவன், "நான்தான் சத்ரு பயங்கர முத்தரையன்" என்று கர்ண கடூரமாக முழங்கினான். தொடர்ந்து, "விஜயாலயனின் ஜென்ம விரோதி" என்று சொல்லிக் கொண்டே திரும்பி அவளைப் பார்த்தான். தன் முகத்தை மறைத்துக் கொண்டிருந்த தலைப்பாகையையும் விலக்கினான்.

சத்ரு பயங்கரன் பெயருக்கேற்ப பயங்கரமாகவே இருந்தான். முகத்தில் ஒரே ஒரு கண் மட்டும் இருந்தது. இன்னொரு கண் இருக்க வேண்டிய இடத்தில் வெள்ளையாய் முட்டையைப் போல் ஒரு வீக்கம் தெரிந்தது.

"ரத சாரதி எங்கே? நீ எப்படி வந்தாய்?"

"மதுராந்தகனை மடக்கினேன். சாரதியாய் மாறினேன். உன் பல்லவ வீரர்களுக்கு மதுராந்தகனையும் தெரியாது. என்னையும் தெரியாது. எளிதாக முடிந்தது என் வேலை."

"எங்கே ஓட்டிச் செல்கிறாய் ரதத்தை?"

"இன்ப லோகத்துக்கு" என்றான் இடிக்குரலில். "அழகிய இடங்களைச் சுற்றிப்பார்க்க ஆசைப்பட்டாயாம். மண்ணுலகத்தைக் காட்டிலும் விண்ணுலகத்தில் அழகிய இடங்கள் அதிகம்! அங்குதான் உன்னை அனுப்பி வைக்கத் திட்டமிட்டேன். ஆனால், இத்தனை பேரழகியாய் நீ இருப்பாய் என்று எதிர்பார்க்கவில்லை. காஞ்சி சுந்தரியே! உன்னைக் கண்டவுடன் என் முடிவை மாற்றிக் கொண்டேன்" என்று பேசியபடியே கடிவாளத்தைச் சொடுக்கினான் சத்ருபயங்கரன்.

"என்ன செய்யப் போகிறாய்?"

"கொல்லப் போவதில்லை. உன்னுடன் குடும்பம் நடத்தப் போகிறேன்.." என்று கூறியவன், "போரில்லை. படையெடுப்பில்லை.. தஞ்சை என் கைகளில் தானாக வந்து சேரும்— பல்லவச் சக்கரவர்த்தி தன் செல்ல மகளுக்குச் சீதனமாய்த் தருவார்" என்று சிரித்தான்.

"என் வீரர்கள் வருவார்கள். உனக்குச் சீதனம் தருவார்கள் வேலாலும் வாளாலும்" என்றாள் இளவரசி.

“அற்புதமாகத் திட்டமிட்டு உன்னை அழைத்து வந்திருக்கிறேன் பெண்ணே! இன்னொரு ரதத்தில்தான் நீ இருக்கிறாய் என்று எண்ண வைத்திருக்கிறேன். அப்படியே உன் வீரர்கள் கண்டுபிடித்துவிட்டாலும் சத்ருபயங்கரனுடைய ஆட்கள் சாதாரணமானவர்கள் அல்லர். உன் வீரர்களை ஓட ஓட விரட்டியடிப்பார்கள். அதுமட்டுமல்ல.. இந்தக் காட்டுப்பாதை நான்கு இடங்களில் பிரிகிறது. வழி கண்டுபிடித்து வருவது சுலபமல்ல” என்று சொல்லிவிட்டு முன்புறமாய்த் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான் அந்த மூர்க்கன்.

சத்ரு பயங்கரனின் கழுத்தை ஒரு குறுவாள் உரசியது.

“அசையாதே! ரதத்தை ராஜபாட்டை நோக்கித் திருப்பு. நஞ்சு தோய்ந்த வாள் இது. மெதுவாகக் கீறினால் போதும். என்னை அனுப்பி வைக்கத் திட்டமிட்ட இடத்துக்கு நீயே போய்விடுவாய்” என்று எச்சரித்தாள் இளவரசி.

ரதம் திரும்பியது.

“வந்த வழியிலேயே செல்” என்று கட்டளையிட்டாள். வழியில் ஒரு பெரிய பாறையின் மீது சக்கரம் ஏறி இறங்கிய போது ரதம் குலுங்கியது. சட்டென்று தலையைக் குனிந்து கொண்ட சத்ரு பயங்கர முத்தரையன் எதிர்பாராதபடி இளவரசியின் கையைப் பற்றி உதறிக் குறுவாளைத் தட்டிவிட்டான். “ஆகா! என்ன அழகான கை” என்று அதைத் தடவியும் கொடுத்தான். வெடுக்கென்று கையை இழுத்துக் கொண்டாள் இளவரசி.

தொலைவில் எகிறி விழுந்த குறுவாள் ஒலியெழுப்பியது.

வளைந்து, வளைந்து செல்லும் காட்டுப்பாதையில் பயங்கர வேகத்தில் ரதம் பறந்து கொண்டிருந்தது. செய்வதறியாது திகைத்த இளவரசி ஒரு முடிவுக்கு வந்தாள். ரதத்தின் கதவினைத் திறந்து கொண்டு குதிப்பதற்குத் தயாரானாள்.

“செவ்வாழை மேனி சிதறிவிடும்” என்று சிரித்தான் சத்ருபயங்கரன். அதே சமயத்தில் ஓர் அசரீரி கேட்டது.

“குதிக்க வேண்டாம் இளவரசி, உள்ளேயே இருங்கள்.”

‘இது.. இது.. ஆதித்தனின் குரல் போல் இருக்கிறதே..’ என்று ஆர்வத்துடன் வெளியே பார்த்தாள் அவள்.

மரத்தின் மறைவிலிருந்து துள்ளிப் பாய்ந்தது வெள்ளைப் புரவி. ஆதித்தன் கம்பீரமாக அமர்ந்திருந்தான். திரும்பிப் பார்த்த சத்ருபயங்கரன் வேகமாக ரதத்தை விரட்டினான்.

ஓடிக் கொண்டிருந்த குதிரையிலிருந்து மின்னல் வேகத்தில் தாவிய ஆதித்தன், ரதத்தில் குதித்தான். வாளை உருவப்போன சத்ருபயங்கரனின் முகத்தில் சரமாரியாகக் குத்தினான். அடிவயிற்றிலும் மார்பிலும் ஆவேசமாகத் தாக்கினான். பயங்கரமாக அலறிக் கொண்டு பாய்ந்த முத்தரையன், ஆதித்தனை அப்படியே கொத்தாக அள்ளி வீச முயன்றான்.

முன்புறமிருந்த துளைவழியே இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த பாவையின் இதயம் படபடத்தது.

நழுவி விழப்போன ஆதித்தன், சட்டென்று சுழன்று சத்ருபயங்கரனின் கழுத்தினைத் தன் கால்களால் பின்னிக் கொண்டான். இளவரசி நிம்மதியாக மூச்சுவிட்டாள்.

சத்ரு பயங்கரனின் வேலும், ஆதித்தனின் வாளும் மோதத் தொடங்கின. ரதத்தை இழுத்துச் சென்ற குதிரையின் கடிவாளம் விடுபட்டுவிட்டதால் தாறுமாறாக ஓடியது ரதம்.

அடித்தொண்டையிலிருந்து விநோதமான குரல் எழுப்பினான் ஆதித்தன். ரதத்தினைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த அவனுடைய புரவி, ரதத்தின் கதவுகளை நெருங்கிக் தன் முதுகினால் மோதியது, முகத்தை உள்ளே நுழைத்துக் கனைத்தது. புரிந்து கொண்ட இளவரசி, ரதத்திலிருந்து குதிரையின் முதுகுக்கு மாறினாள்.

பெருஞ்சீற்றத்தோடு வாளை ஓங்கினான் ஆதித்தன். வேலைப் பிடித்திருந்த சத்ருபயங்கரனின் கரத்தில் ஆதித்தனின் வாள் இறங்கியது. வேலும் அதைப் பற்றியிருந்த விரல்களோடு கூடிய மணிக்கட்டும் வெட்டுண்டு விழ "ஆ..!" என்று அலறினான் அவன்.

ரதத்தை உந்தி மேலே கிளம்பிய ஆதித்தன், மரவிழுதினைப் பற்றிக் கொண்டான். ரதம் பயங்கரமான வேகத்தோடு சென்று ஓரத்திலிருந்த கற்குவியலை உடைத்துக் கொண்டு பாதைச் சரிவில் நழுவியது. பள்ளத்தை நோக்கிக் கவிழ்ந்த ரதம் மோதி உருண்டு மீண்டும் மோதி மறுபடியும் உருண்டு சுக்கு நூறாக நொறுங்கியது.

ரதத்தில் பூட்டியிருந்த புரவியின் மரண ஓலம் கேட்டது. "ஆ..!" என்ற மனித அலறலும் வெளிப்பட்டது. அநேகமாக சத்ருபயங்கரன்— அவன் கூறியபடியே இன்பலோகத்தை எட்டிப் பார்த்திருக்க வேண்டும்.

வெள்ளைப் புரவியின் மீது வீற்றிருந்த இளவரசி ஆதித்தனின் வீர சாகசங்களைப் பார்த்து வியந்திருந்தாள்.

பற்றியிருந்த விழுதிலிருந்து இன்னொரு விழுதுக்கு மாறி குதிரையின் அருகே வந்து குதித்தான் ஆதித்தன். பார்த்துக் கொண்டே இருந்தாள் அவனைப் பல்லவ இளவரசி. வைத்த விழி மீட்கவில்லை, வாய் திறந்து பேசவில்லை.

"பகைவர்கள் பதுங்கியிருக்கக்கூடும். இந்த இடத்தைவிட்டுப் புறப்பட வேண்டும்" என்றான் ஆதித்தன்.

"ஒரு மாவீரர் அருகிலிருக்கும் போது எதிரிகளால் என்னை என்ன செய்ய முடியும்?" என்றாள் இளவரசி.

"என் வீரத்தைக் காட்டும் இடமல்ல இது. பத்திரமாக உங்களைக் கொண்டு சேர்ப்பதுதான் என் பணி!"

"சரி.." என்றாள் இளவரசி.

"ஒரே ஒரு குதிரை தான் இருக்கிறது.."

"ஆம்." என்ற இளவரசி, "இருவருக்கும் இதன் முதுகில் இடம் இருக்கிறது" என்றாள்.

ஆதித்தன் தயங்கினான்.

"அமர்ந்து கொள்ளுங்கள்" என்றாள்.

குதிரையின் முன்புறம் நகர்ந்து அவனுக்கு இடமும் கொடுத்தாள்.

குதிரை கனைத்தது.

"புரவியும் ஆமோதிக்கிறது" என்று புன்னகைத்தாள் போதையுடன்.

இளம் பெண்ணின் இதழ்களில் தெரிந்தது ஓர் இன்ப அழைப்பு

இளைஞனால் என்ன செய்ய முடியும்?

கும்மாளமிட்டுக் கொண்டு புறப்பட்டது குதிரை. அவள் கொடுத்த இடத்தில் அமர்ந்திருந்தான் ஆதித்தன், சாதாரண இடமா அது? சாம்ராஜ்யம்.. சந்தோஷ சாம்ராஜ்யம்!

"இன்னும் கொஞ்சம் நெருங்கி உட்காருங்கள். கடிவாளம் நழுவிவிடப் போகிறது" என்றாள் அவள்.

'நீண்ட நேரமாகிவிட்டது இதயக் கடிவாளம் என்னிடமிருந்து நழுவி' என்று நினைத்துக் கொண்டான் அவன்.

எல்லாம் கனவுபோல் இருந்தது.. தென்றல் உராய்ந்தது.. தேன் மலர் தீண்டியது.. அருவி பாய்ந்தது.. நதியிலிருது நகர்ந்து வந்த ஓர் அலை— அலை பாய்ந்தது.

தொடுவது துகிலா.. தோகை மயிலா? வருடுவது காற்றா.. வசந்தத்தின் கீற்றா?

இயற்கை பொல்லாதது. ஓர் இளம் பெண்ணின் உடலில் எத்தனை வலைகள்!

சொர்க்கம் பக்கத்திலிருந்தது. அதுவும் வெட்கத்திலிருந்தது.

"நன்றி" என்றாள் நங்கை.

"உங்களைத் தவறாக நினைத்திருந்தேன். மன்னிப்பீர்களா?" என்றும் வாய் மலர்ந்தாள்.

ஆதித்தன் பேசவில்லை. அதன் பிறகு அவளும் பேசவில்லை. இதயங்கள் பேசிக் கொண்டன. இடையிடையே குறுக்கிட்டு இளமையும் பேசிக் கொண்டது.

ஆதித்தனின் அகன்ற மார்பில் அந்தப் பூங்கொடியின் முதுகு புதையலாகியிருந்தது. கடிவாளத்தைப் பற்றியிருந்த அவனுடைய கை மீது அவளுடைய கூந்தலின் இழைகள் குறுந்தொகை பேசின.

உடன் வந்தவர்கள் எங்கே? ஒற்றர் தலைவன் என்ன ஆனான்? பல்லவ வீரர்களும், மற்றொரு ரதத்தில் வந்த பெண்களும் பத்திரமாகத் திரும்பிவிட்டார்களா..? எந்த நினைவுமில்லை இருவருக்கும்!

ஆதித்தனின் வெள்ளைப் புரவி அப்போது கள்ளப் புரவியாகிவிட்டது. தேவையில்லாமல் குதித்தது. திடீர் திடீரென்று குலுங்கியது. ஆனால், வாயை மட்டும் மூடிக் கொண்டு வந்தது. கடைசி வரை கனைக்கவில்லை. கனவுகளைக் கலைக்கவில்லை.

பூமியின் மீது மஞ்சள் பூசிக் கொண்டிருந்தது வானம்— தன் வெயில் விரல்களால் சூரியன் மேற்கே சுடர் நெருப்புக் கோலமிட்டான்.

தஞ்சையின் ஒரு காத தூரத்தில் புயல்வேகத்தில் வந்து கொண்டிருந்தது ஆதித்தனின் புரவி. சாலையின் குறுக்கே நடந்து கொண்டிருந்த அந்தப் பெண்ணோ சீறிக் கொண்டு வரும் குதிரையைச் சிறிதும் கவனிக்கவில்லை.

வேகமாய்ப் பாய்ந்து அவள் மீது மோதப் போன குதிரை, சட்டென்று விலகி முன்னங்கால்கள் இரண்டையும் மேலே தூக்கிச் சுழன்றது. திடீரென்று புரவி நிமிர்ந்ததால்— முன்புறமாய் அதன் முதுகில் அமர்ந்திருந்த பல்லவ இளவரசி, ஆதித்தனின் மார்பில் ஒட்டிக் கொண்டாள்.

திடுக்கிட்டு உணர்வு பெற்ற ஆதித்தன், குதிரையிலிருந்து நழுவிவிடாதிருக்க இளவரசியைத் தன்னுடன் இறுக்கிக் கொண்டபடி முன்புறமாய் நகர்ந்து கடிவாளத்துடன் சேர்த்துக் குதிரையின் கழுத்தைக் கட்டிக் கொண்டான்.

குதிரை முன்னங்கால்களைத் தரையில் ஊன்றி நின்றவுடன், குறுக்கே வந்த பெண்ணை நோக்கிக் கோபத்துடன் திரும்பினான்.

ஆதித்தனையும் பல்லவ இளவரசியையும் அவர்களிருந்த கோலத்தையும் நெருப்பு விழிகளுடன் நிமிர்ந்து பார்த்துக் கொண்டிருந்தாள் தாமரை!








27



# தாமரையும், சூரியனும்

தாமரையைப் பார்த்ததும் குதிரையிலிருந்து இறங்கினான், ஆதித்தன். தன்னையும் பல்லவ இளவரசியையும் ஒன்றாகப் பார்த்தவுடன் அவளுடைய உள்ளம் எப்படி உடைந்து போயிருக்கும் என்பதை அவன் உணர்ந்தான்.

சங்கடத்தோடு அவளை நெருங்கிச் சமாதானப்படுத்தவும் முயன்றான். "தாமரை!" என்று மெதுவாக அழைத்த ஆதித்தன், "என்னைத் தவறாகக் கருதாதே" என்றான்.

"முன்பு தவறாகக் கருதியிருந்தேன். இப்போது சரியாகப் புரிந்து கொண்டேன்" என்றாள் தாமரை.

ஆதித்தன் மீண்டும் பேச முற்பட்டபோது, "இளவரசே! ஒரே ஒரு வேண்டுகோள்" என்றாள்.

"என்ன?"

"கிள்ளி என்ற பெயரைச் சொல்லி என்னைப் போன்ற ஏழைப் பெண்களை இனிமேலாவது ஏமாற்றாதீர்கள்! ஏனென்றால், உயர்ந்த இடத்தில் இருப்பவர்களுக்குக் கற்பைப் பற்றிக் கவலையில்லை. எங்களிடமோ கவலைப்படுவதற்குக் கற்பைத் தவிர எதுவுமில்லை" என்று சொல்லிவிட்டு நடக்கத் தொடங்கினாள்.

"நான் சொல்வதைக் கேள்" —ஆதித்தன் அவளைப் பின் தொடர்ந்தான். திரும்பியே பார்க்காமல் அவள் விரைந்தாள்.

பல்லவ இளவரசி குதிரையைக் கொண்டு வந்து ஆதித்தனின் பக்கத்தில் நிறுத்தினாள்.

"என்ன நடந்தது? கோபமாகப் போகிறாளே. குதிரை மோதிவிட்டதா?" என்று கேட்டாள் குறுநகையோடு.

"ஆமாம். மோதிவிட்டது" என்ற ஆதித்தன், 'அவள் இதயத்தில்' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான்.

தஞ்சை அரண்மனையில் தீபத் திருவிழா. பாவை விளக்குகளின் படையெடுப்பு! அலங்கார விளக்குகளின் அணிவகுப்பு!

மாடங்களும் கூடங்களும் ஒளிவீசிக் கொண்டிருக்க, மகிழ்ச்சியோடு வீற்றிருந்தார் விஜயாலயர்.

"மகத்தான சேவை செய்திருக்கிறாய் மகனே.. நம் சோழ நாட்டுக்கு" என்று கூறியவாறே மைந்தனைத் தழுவிக் கொண்டார்.

"மௌன மண்டபத்தில் ஏற்பட்ட தோல்வியைச் சத்ருபயங்கரனிடம் பெற்ற வெற்றியால் சரிசெய்துவிட்டாய்" என்று பாராட்டினார்.

"சத்ருபயங்கர முத்தரையன் யார் தந்தையே?"

"முத்தரையர் குடிப் பிறந்த மூர்க்கன். பெரும்பிடுகு முத்தரையனின் தூரத்து உறவினன். *வரகுண பாண்டியனின் தந்தை சீமாற சீவல்லபனிடம் அரசியல் தலைவனாகப் பணியாற்றியவன். ஆலங்குடியைச் சேர்ந்தவன். 'இருப்பைக் குடிக்கிழான்' என்றும், 'எட்டிச் சாத்தன்' என்றும் பெயர் பெற்றவன். பாண்டிய மன்னனிடத்தில் மிகுந்த செல்வாக்குப் பெற்றவன்– தென்பாண்டி நாட்டில் அவன் நடமாடுவதாகக் கேள்விப்பட்டேன். தஞ்சைக்குள் நுழைந்துவிட்டான் தைரியமாக."

"முத்தரையர்களை முற்றாக வேரறுக்க முடியாதா?"

"அது அத்தனை எளிதல்ல. அவர்கள் சாமான்யமானவர்களும் அல்ல. *தமிழ்ப் புலவர்களே பாராட்டும் தகுதியுடையவர்கள். அவர்களிடமிருக்கும் ஒற்றுமை அபூர்வமானது. பெரும்பிடுகு முத்தரையனை ஒழித்தோம்! அதற்காகப் பழிவாங்க வந்திருக்கிறான் பயங்கரன்! இந்த இன ஒற்றுமை ஏது நம்மிடம்? நலங்கிள்ளியும்,

---

*முத்தரையர்– நடன காசிநாதன்– பக்.69

நெடுங்கிள்ளியும் மோதிக் கொண்ட வரலாறுதானே நம்முடையது! கோவூர்க் கிழார்களும் இப்போது குறைந்து போனார்கள்” என்று சிரித்தார் விஜயாலயர்.

“வணக்கம் வேந்தே!” என்றபடி வந்தான் வீரன் ஒருவன். “பல்லவ நாட்டிலிருந்து தூதுவர் வந்திருக்கிறார்” என்று பணிவுடன் பகர்ந்தான்.

“ஆதித்தா! நீ புறப்படலாம்” என்று விடை கொடுத்தார் விஜயாலயர்.

மல்லிகைப் பந்தலில் மங்கையர் கூட்டம். பல்லவ இளவரசியைச் சுற்றிப் பாவையர் முற்றுகை! வசந்தத்தின் முணுமுணுப்பு. வளையல்களின் கிணுகிணுப்பு!

“சொல்லுங்கள், இளவரசி! அந்தச் சூழ்ச்சிக்காரனிடமிருந்து எப்படித் தப்பினீர்கள்?” என்று கேட்டாள் மாவலிவாணரின் மகள்.

“அந்த அனுபவம்..” என்று ஆரம்பித்தாள் இளவரசி.

“பயங்கரமான அனுபவமா?”

“முதலில் பயங்கரம். அப்புறம் பரவசம்..” என்று கண்களைச் சிமிட்டினாள் உத்தமசிலரின் புத்திரி.

“ஒற்றர் தலைவருக்கு எல்லா விவரமும் தெரிந்துவிட்டது. ஒன்றைத் தவிர..”

“எதைத் தவிர..?” என்றாள் இளவரசி இயல்பாக.

“காஞ்சி இளவரசியும், தஞ்சை இளவரசரும் ஒரே குதிரையில் ஊர்வலம் வந்ததைத் தவிர.”

“அது ஒற்றர் தலைவருக்கு மட்டும்தான் தெரியவில்லை. ஆனால்..”

“ஆனால்..?”

“ஊருக்கே தெரிந்துவிட்டது!”

—கலகலவென்று சிரித்தது காரிகையர் கூட்டம்.

---

*‘பெருமுத்தரையர் பெரிதுவந் தீயும் கருணைச் சோறு’ —நாலடியார் பாடல் 200.

—கொற்கை முத்துக்களின் கூடாரம் குலுங்கியதோ?

“சத்ருபயங்கரனிடமிருந்து தப்பித்து என்ன பயன்?” என்று கவலையுடன் கூறினாள் ஒருத்தி.

“ஏன்?”

“அவனைவிடப் பயங்கரமானவரிடம் அகப்பட்டுக் கொண்டார்களே இளவரசி. தப்பிக்க வழியில்லையே.”

“யாரிடம்?”

“வேறு யாரிடம்? நம் இளவரசர் ஆதித்தரிடம்தான்!”

“போடி..” என்று பொய்யான கோபத்துடன் அவள் மீது ஒரு பூவை எடுத்து வீசினாள் பூவை.

மங்கையர் கூட்டம் தன்னைப் பற்றிப் பேசி மகிழ்ந்து கொண்டிருந்த நேரத்தில், ஆதித்தனின் உள்ளமோ அலைபாய்ந்து கொண்டிருந்தது.

தன்னைப் பற்றி என்ன நினைப்பாள் தாமரை என்று இரவெல்லாம் தவித்தான் இளவரசன்.

பொழுது விடிந்ததும் புறப்பட்டான். சூழ்நிலையை விளக்கிச் சொல்ல வேண்டும். அன்பான அவள் மனத்துககு ஆறுதல் கூற வேண்டும். தன் இதயத்தைத் திறந்து காட்ட வேண்டும். உள்ளே உட்கார்ந்திருப்பது யார் என்பதை உணர்த்த வேண்டும்.

வீடு வெறிச்சோடிக் கிடந்தது. உம்மென்று முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார் கிழவர். குதிரையிலிருந்து குதித்த ஆதித்தனை ஏறிட்டுப் பார்த்ததும் “வரவேண்டும் இளவரசே! வரவேண்டும்” என்று முதியவர் முகம் மலர்ந்தார்.

“தாமரை! யார் வந்திருக்கிறார்.. பார்” என்று வீட்டின் உட்புறத்தை நோக்கி உற்சாகமாகக் குரல் கொடுத்தார்.

உள்ளிருந்து ஒரு பதிலும் வரவில்லை. கிழவர் வியப்போடு எட்டிப் பார்த்தார் வீட்டுக்குள். “தாமரை! நம் இளவரசர் வந்திருக்கிறார்” என்று மீண்டும் குரல் கொடுத்தார்.

அமைதியாய் நின்றிருந்தான் ஆதித்தன்.

வீட்டுக்குள்ளே போய்விட்டுச் சற்று நேரம் கழித்து வெளியே வந்த கிழவர், “இளவரசராக வந்திருக்கிறாரா? கிள்ளியாக வந்திருக்கிறாரா?” என்று கேட்டு வரச் சொல்கிறாள்” என்றார்.

“மனிதனாக வந்திருக்கிறேன்” என்றான் மன்னன் மகன்.

கிழவர் மறுபடியும் உள்ளே சென்று பேசிவிட்டு வந்தார்.

“அரசர்கள் இருக்கிறார்கள். அடிமைகள் இருக்கிறார்கள். ஏழைகள் இருக்கிறார்கள். செல்வர்கள் இருக்கிறார்கள். ஏமாற்றுகிறவர்கள் இருக்கிறார்கள். ஏமாறுகிறவர்கள் இருக்கிறார்கள். இந்த உலகத்தில் மனிதர்கள் ஏது? என்று தத்துவம் பேசுகிறாள் என் பேத்தி. சரியான வாயாடி” என்று சலித்துக் கொண்டார்.

“வெளியே வரச் சொல்லுங்கள். நான் பேசிக் கொள்கிறேன்” என்றான் ஆதித்தன் கோபமாக.

கிழவர் உள்ளே சென்று கேட்டுவிட்டு வந்தார்.

“வெளியே வரவேண்டிய உண்மையெல்லாம் வெளிவந்துவிட்டது. இனிமேல் நான் வெளியே வரமாட்டேன்” என்று வீம்பாகக் கூறுகிறாள்.

“அப்படியானால்.. நான் உள்ளே போகிறேன்”ஆதித்தன் வீட்டுக்குள் நுழைய முயன்றான்.

வாயிலை மறித்துக் கொண்டார் கிழவர், “வேண்டாம் ஐயா! நேற்றுப் பல்லவ இளவரசியுடன் ஒரே குதிரையில் பவனி வந்தீர்களாம். சொல்லிச் சொல்லி அழுதாள். உள்ளம் உடைந்திருக்கிறாள். விட்டுப் பிடிக்கலாம். நீங்கள் அவசரப்படக் கூடாது.”

“பல்லவ இளவரசியைக் கொல்லப் பகைவர்கள் சதி செய்தார்கள். தக்க சமயத்தில் சென்றேன். கடமை உணர்வினால் இளவரசியைக் காப்பாற்றி வந்தேன். பாதைச் சரிவிலிருந்து ரதம் உருண்டு நொறுங்கிவிட்டதால் என் குதிரையின் மீதே ஏற்றி வந்தேன். நடந்தது இவ்வளவுதான்.”

“அடடா! இதற்காகவா என் பேத்தி இத்தனை ஆர்ப்பாட்டம் செய்துவிட்டாள்? இந்தப் பெண் பிள்ளைகளுக்கு அறிவே கிடையாது. தொட்டதற்கெல்லாம் சந்தேகப்பட்டால் என்ன செய்வது? கவலைப்படாதீர்கள் இளவரசே! பக்குவமாக எடுத்துச் சொல்லி அவளை அழைத்து வருகிறேன்” என்று அனுதாபத்துடன் பேசிவிட்டு உள்ளே சென்றார் பெரியவர்.

நின்று கொண்டிருந்தான் ஆதித்தன். நீண்டு கொண்டே இருந்தது நேரம்

'..கிள்ளியென்று என் பெயரைச் சொல்லி ஏமாற்றியது குற்றம்தான். ஆனால், மன்னன் மகன் என்று தெரிந்திருந்தால்— காரிகை என்னைக் காதலித்திருப்பாளா? அப்படியே இருந்தாலும் நான் கூறியதில் என்ன குற்றம்? புல்லாங்குழல் தன்னை மூங்கில் என்று சொன்னால் அது பொய்யா?

..இளவரசியோடு ஒரே குதிரையில் வந்தது தற்செயலாய் நிகழ்ந்தது. காரணம் தெரிந்து கொள்ளாமலே கற்பனை செய்து கொண்டால் அது— அவளுடைய தவறு! எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். வீடு தேடி வந்திருக்கிறான் வேந்தன் மகன். வாசலில் நிறுத்தி வைத்து அவமதிக்கலாமா?

சக்கரவர்த்தியின் மகளான பல்லவ இளவரசியே என் அன்பைப் பெறுவதற்காகக் காத்திருக்கிறாள். உயிராக நினைத்தவள் என்னை உதாசீனப்படுத்துவதோ? வேண்டாம். இவள் காதலும் வேண்டாம். கண்ணீரும் வேண்டாம்! புறப்பட்டுவிடலாம்.'

"இளவரசே!" —பின்புறமிருந்து கேட்ட கிழவரின் குரல் அவனைத் தடுத்து நிறுத்தியது.

பயபக்தியுடன் எதிரே வந்து நின்ற கிழவர், தலையைத் தலையை ஆட்டிக் கொண்டிருந்தாரே தவிர, விவரம் எதுவும் சொல்லவில்லை.

அதற்குமேல் ஆதித்தனால் பொறுக்க முடியவில்லை. "என்னதான் சொல்கிறாள் அவள்?" என்று கேட்டான் எரிச்சலுடன்.

"அவள் சொன்னதையெல்லாம் என் வாயினால் சொல்ல இயலாது இளவரசே!" என்றார் பெரியவர் பணிவாக.

"பரவாயில்லை.. சொல்லுங்கள்."

"உங்கள் தந்தையிடம் ஊழியம் செய்தவன் நான். அதிலும் அவருடைய சேனையின் முதல் வீரனாய்ச் சேர்ந்தவன். என் மகனோ கடைசியாக நடந்த இடவைப் போரில் உங்களுக்காக உயிர்விட்டவன். எங்கள் குடும்பத்தில் ஒரு பெண் உங்களை இப்படி அவமதித்துவிட்டதற்காக வருந்துகிறேன்.." —பீடிகை போட்டுப் பேசினார் பெரியவர்.

“இளம் உள்ளத்தில் ஆசையை வளர்த்து அவளை ஏமாற்றிவிட்டீர்களாம். ‘பல்லவ இளவரசியை மணந்து கொண்டு பல்லாண்டு வாழட்டும். பேதையின் இதயத்தை வார்த்தைகளால் கீறாமல் பேசாமல் போகட்டும்’ என்று கூறுகிறாள்.”

“ஆபத்திலிருந்து இளவரசியைக் காப்பாற்றி அழைத்து வந்ததைக் கூறினீர்களா?”

“கூறினேன். ‘எல்லாமே நாடகம்’ என்கிறாள். ஆண்கள் எல்லோருமே ஏமாற்றுப் பேர்வழிகளாம். அதிலும் அரச குலத்தில் பிறந்தவர்களுக்கு இதயமே இருக்காதாம்.”

“நானா இதயம் இல்லாதவன்? இதயமில்லாதவனிடமா ‘நான் உங்கள் இதயத் தாமரை’ என்றாள்?” என்று தனக்குள் ஆவேசத்துடன் கேட்டுக் கொண்டான் ஆதித்தன்.

“அதுமட்டுமல்ல இளவரசே! எனக்கே ஆத்திரம் வந்துவிட்டது. உங்களைப் பற்றி அவள் சொன்ன ஒரு வார்த்தை.”

“என்ன வார்த்தை?”

“நீங்கள் பெண் பித்தராம். ஆமாம். அப்படித்தான் சொன்னாள். அழகான பெண்களைக் கண்டால் பின்னாலேயே சுற்றிவரும் பெண்ணாசை கொண்டவராம் நீங்கள்” என்று மேலும் தூபம் போட்டார் கிழவர்.

“ஆ..!” என்று பற்களைக் கடித்தான் ஆதித்தன்.

“கூப்பிடுங்கள் குழந்தையை, அவனையாவது பார்த்துவிட்டுப் புறப்படுகிறேன்.”

“உங்கள் குரல் கேட்டவுடன் குதித்தோடி வந்த குழந்தையை உரலோடு சேர்த்துக் கட்டிப் போட்டுவிட்டாள் உன்மத்தம் பிடித்தவள்” என்று கூறிய கிழவர், “வேண்டுமானால் ஒன்று செய்யுங்கள்..” என்று ஆதித்தனைப் பார்த்தார்.

“வாயிலில் சென்று நான் மறித்து நிற்கிறேன். கையைப் பிடித்து இழுத்து என்னைக் கீழே தள்ளுங்கள். மடமடவென்று வீட்டுக்குள் நுழைந்து நேராகக் குழந்தையிடம் சென்று கொஞ்சுங்கள். திரும்பியே பார்க்காதீர்கள் அந்தத் திமிர் பிடித்தவளை. விடுவிடுவென்று வெளியேறிவிடுங்கள். அடங்கட்டும் அவள் ஆணவம்!”

“வேண்டாம். வீட்டுக்குள்ளே போனால் அவளை வெட்டாமல்விடமாட்டேன். களங்கமில்லாத என் வாள் அவள் குருதியினால் கறைபட வேண்டாம்” என்று எழுந்த ஆதித்தன், வேகமாக நடந்து சென்று தன் குதிரையில் தாவி ஏறினான்.

உள்ளேயிருந்து தாமரை ஓடி வந்தாள்.

“என்ன நடந்தது தாத்தா?”

“ஒன்றுமில்லை அம்மா..! பேச மறுக்கிறாள் என் பேத்தி. உள்ளே போய் ஆறுதலாக ஒரு வார்த்தை சொல்லுங்கள். இருவருக்கும் இடையே உள்ள திரை விலகிவிடும் என்றேன். இளவரசர் அதற்கு என்ன சொன்னார் தெரியுமா?”

தாமரை நிமிர்ந்து பார்த்தாள்.

“‘வீடு தேடி வந்திருக்கிறேன். என்னை வந்து பார்க்காதவளை எதற்காக நான் போய்ப் பார்க்க வேண்டும்? ஏழைப் பெண்ணுக்கு இத்தனை திமிரா? அகம்பாவம் பிடித்தவள். வாழ்க்கையெல்லாம் அழுது கொண்டே இருக்கட்டும்’ என்று சொல்லிவிட்டுக் குதிரையில் ஏறிவிட்டாரம்மா..” என்று வருத்தத்துடன் பேசினார் கிழவர்.

“பார்த்தீர்களா தாத்தா..? மண்ணுக்காக உயிர் கொடுத்தவரின் மகளை அரச குமாரர் எப்படி அலட்சியப்படுத்திவிட்டார் பார்த்தீர்களா?”

—தாமரை வாடியது. தன்னிடம் முகம் காட்டாமல் சென்ற சூரியனை நினைத்து.

“கவலைப்படாதே தாயே. ஆண்டாண்டு காலமாக அரச குடும்பத்துடன் பழகி வருகிறேன் நான். எனக்குத் தெரியாதா இவர்கள் குணம்? நாடாளும் மன்னர்களுக்கு நன்றி ஏதம்மா? அவர்களுடைய அரசியல் சதுரங்கத்தில்— பார்வையில் படுகிற அனைவருமே பகடைக் காய்கள்தான்” என்றார் கிழவர்.

தொலை தூரத்தில் மண் சாலையிலிருந்து மேட்டின் மேல் ஏறித் திரும்பிச் சென்று கொண்டிருந்தது குதிரை.

துள்ளிக் குதித்தபடி உள்ளேயிருந்து ஓடிவந்த சிறுவன் “போய்த்..தா..ரா..?” என்று கேட்டான் தாமரையின் கையைப் பிடித்துக் கொண்டு.

“போய்விட்டார்! என் வாழ்க்கையிலிருந்தே போய்விட்டார். என் வாழ்க்கையே போய்விட்டது” என்று தளர்ந்த குரலில் கூறிவிட்டுத் தம்பியைத் தூக்கிக் கொண்டாள் தாமரை.

“அச்சச்சோ..” என்று கூறிக் கொண்டே அவள் கண்களிலிருந்த நீரை வழித்துத் தன் கண்களில் தடவிக் கொண்டது– குழந்தை.

அரண்மனையை அடைந்தவுடன் ஆதித்தனுக்கு அழைப்பு வந்துவிட்டது அரசரிடமிருந்து.

“நீ காஞ்சிக்குப் புறப்படுகிறாய்” என்றார் விஜயாலயர்.

“எதற்காக?”

“பல்லவ இளவரசிக்குப் பாதுகாப்பாக.”

“படை வீரர்களை அனுப்புங்கள்! நான் எதற்கு? என்னைப் பொறுத்தவரை கணக்கு முடிந்துவிட்டது தந்தையே!” என்றான் ஆதித்தன்.

“என்ன சொல்கிறாய்?” என்று இமைகளை நெரித்தார் விஜயாலயர்.









28



# விழுந்து விழுந்து எழுந்த கதை!

காஞ்சிக்குப் புறப்படுமாறு கட்டளையிட்டபோதே, ஆதித்தனிடமிருந்து எத்தகைய பதில் வரும் என்று ஏற்கனவே விஜயாலயர் எதிர்பார்த்திருந்தார். ‘கணக்கு முடிந்துவிட்டது’ என்ற வார்த்தைகள்தான் வேந்தரைச் சற்றே வியப்பில் ஆழ்த்தின.

“என்ன சொல்கிறாய்?” என்று கேட்டபடி இமைகளை நெரித்தவரின் குரலில் தென்பட்டது கோபமா, குழப்பமா என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

“ஆமாம் தந்தையே! எனக்கும் பல்லவ இளவரசிக்கும் இடையே இருந்த கணக்கு சரியாகிவிட்டது” என்றான் ஆதித்தன்.

“புரிகிறது” என்றார் விஜயாலயர். “கோயிலில் உன் உயிரை இளவரசி காப்பாற்றினார். சத்ருபயங்கரனிடமிருந்து இளவரசியை நீ காப்பாற்றினாய். உண்மைதான். கணக்கு சரியாகிவிட்டது” என்று புன்னகை செய்தவர், ஒற்றர் தலைவன் சாத்தன் பழியிலியை நோக்கித் தலையசைத்தார்.

“ஆதித்தனிடம் நான் கொஞ்சம் பேச வேண்டும். நீ மாலையில் வா. ஒரு வேலையிருக்கிறது.”

பழியிலி வெளியேறியபின் “ஆதித்தா! உன் கணக்கு சரியாகிவிட்டது. ஆனால், பல்லவர்களுக்கும் எனக்குமுள்ள கணக்கு

இன்னும் சரியாகவில்லை. பல்லவர்களிடம் நான் பட்ட கடன் தீரவில்லை” என்றார் விஜயாலயர்.

“நீங்களாக அப்படி நினைத்துக் கொள்கிறீர்கள். பல்லவர்கள் உங்களுக்கு என்ன செய்துவிட்டார்கள்?” என்று கேட்டான் ஆதித்தன்.

“தஞ்சையை எனக்குத் தந்தார்கள்.”

“தஞ்சையைப் பல்லவர்கள் தரவில்லை. முத்தரையனோடு நீங்கள் மோதிப் பெற்றீர்கள்.”

“உண்மைதான். ஆனால், பல்லவர்கள் அப்போது படை கொண்டு வந்திருந்தால், முத்தரையர்களை நாம் ஜெயித்திருக்க முடியாது.”

“அதுநாள் வரை முத்தரையர்களுக்கு உதவி வந்தவர்கள், அப்போது மட்டும் ஏன் படை அனுப்பவில்லை?”

“கடைசி யுத்தத்தில் நமக்குக் கைகொடுக்க வேண்டுமென்பதற்காக.”

“நமக்குக் கைகொடுக்கவில்லை. முத்தரையர்களைக் கைவிட்டார்கள்.”

“முத்தரையர்களைக் கைவிட்டதன் மூலம் நமக்குக் கைகொடுத்தார்கள்.”

“அவர்களுக்கென்ன நம் மீது திடீர் அக்கறை?”

“அக்கறை அல்ல. நம்பிக்கை! என் ஆற்றலின் மீது கொண்ட நம்பிக்கை. என் வீரத்திற்குக் கிடைத்த வெகுமானம்.”

“உங்கள் வீரத்திற்குக் கிடைத்த வெகுமானம் அல்ல தந்தையே. நிருபதுங்க சக்கரவர்த்தியின் விவேகத்திற்குக் கிடைத்த வெற்றி!”

“எப்படி?”

“பல்லவர்களுக்கு நேர்ந்த நெருக்கடி அவர்களை உங்களிடம் நெருங்கி வர வைத்தது. நெருக்கடியால் ஏற்பட்ட நட்பை நெருக்கமான நட்பென்று நீங்கள் நினைத்துவிட்டீர்கள்” என்று ஆதித்தன் கூறியவுடன், ‘ஆகா!’ என்று மகிழ்ச்சியடைந்த விஜயாலயர், “சொல்” என்று மேலும் தூண்டினார்.

"தீராப் பகை கொண்டிருந்த பாண்டிய நாட்டுக்கும் பல்லவ நாட்டுக்கும் குறுக்கே ஒரு தடுப்புச்சுவர் தேவைப்பட்டது. காவிரிக் கரையில் ஒரு வலிமையான காவல் இருந்தால் கவலையின்றி இருக்கலாம். பல்லவ நாட்டின் பாதுகாப்பை உத்தேசித்து ஒரு பராக்கிரமசாலியைத் தேடினார்கள். முத்தரையர்கள் அதற்குத் தகுதியானவர்கள் அல்லர். அதனால், வீராதி வீரரான விஜயாலயருக்கு விரித்தார்கள் வலையை. தஞ்சையை நீங்கள் கைப்பற்றிய போது தலையிடாமல் ஒதுங்கிக் கொண்டார்கள். அவர்களுடைய ராஜதந்திரம் வென்றது. அன்பெனும் வலையில் நீங்கள் அகப்பட்டுக் கொண்டீர்கள்."

பதிலேதும் சொல்லாமல் விஜயாலயர் புன்னகை பூத்தார். ஆதித்தன் தொடர்ந்தான்.

"சொல்லப் போனால் பல்லவர்களுக்கு நீங்கள்தான் பாதுகாப்பளித்தீர்கள். எத்தனை போர்க்களங்களில் அவர்களுக்கு ஆதரவாகப் போராடினீர்கள்!"

"ஆமாம்! செய்த உதவி சிறிதானாலும் மரணம் வரை அதை மறவாதிருப்பவன்தான் மனிதன்! 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு' என்பது தெய்வப் புலவரின் வாக்கு. அதுதான் என் வாழ்க்கைப் போக்கு!

"ஒப்புக்கொள்கிறேன் தந்தையே! நன்றி உணர்வின் நாயகனாகத்தான் நீங்கள் நடந்து கொண்டீர்கள். அரிசிலாற்றங்கரைப் போர் ஒன்று போதும். அதை அவனிக்குச் சொல்ல. *குடமூக்குப் போர்க்களத்தில் நந்திவர்மப் போத்தரையரின் கர்வத்தைக் குடைசாய வைத்தான் பாண்டியன் சீமாற சீவல்லபன். தந்தையின் வரலாற்றில் படித்த களங்கத்தைத் துடைத்தாக வேண்டுமே என்று கவலைப்பட்டார் சக்கரவர்த்தி நிருபதுங்கவர்மர். அப்போது அவருக்குக் கைகொடுத்தது யார்?"

மௌன மண்டபத்திற்குள் எத்தனை நாள் உணவின்றி உறக்கமின்றி உட்கார்ந்தீர்கள்? அரிசிலாற்றங்கரைப் போர்க்களத்தில், ஒரு குதிரையின் அசைவுகூட உங்களால் திட்டமிடப்பட்டது. வியூகம் வகுத்தீர்கள் வெற்றி தேடிக் கொடுத்தீர்கள்.

பல்லவர்களுக்காகப் போரிட்டு அந்தப் போர்க்களத்தில் மட்டும் பதினாறு விழுப்புண்களைப் பெற்றீர்கள். அற்புதமான அந்தப் பணிக்குப் பல்லவர்கள் உங்களுக்களித்த பரிசென்ன?

வரகுண பாண்டியன் திடீரென்று படையெடுத்தான். சோழ நாட்டின் எல்லைக்குள் சூறாவளியாய்ப் புகுந்தான். இடவையைக் கைப்பற்றினான். எத்தனை பெரிய இழப்பு நமக்கு! நன்றி மிகுந்த உங்கள் நண்பர்கள், இன்னலுற்ற நேரத்தில் எங்கே போனார்கள்? கண்டும், காணாமல் கைவிட்டுவிட்டார்களே!

“தந்தையே! உங்கள் கணக்குத் தீரவில்லையென்று சொன்னீர்கள். தவறு! அரிசிலாற்றங்கரைப் போரில் மாபெரும் வெற்றியைத் தேடித் தந்ததோடு உங்கள் கணக்கும் தீர்ந்துவிட்டது” என்று ஆதித்தன் பேசிய போது “அற்புதம்” என்று கைகளைக் கொட்டி ஆரவாரித்தார் விஜயாலயர்.

“தந்தையே! நான் சொல்வதைத் தவறாகக் கருத வேண்டாம். இடவைப் போரில் நம்மைக் கைவிட்டார்கள். நன்றி கொன்றார்கள், வீரத் திருவிழாவிற்குப் பல்லவ நாட்டின் பிரதிநிதியாக அபராஜிதனைக் கூட அனுப்பி வைக்காமல், ஒரு பெண்ணை அனுப்பி வைத்து நம்மை அவமதித்தார்கள்.”

---

*1.பாண்டியன், மூன்றாம் நந்திவர்மன் இறுதிக் காலத்தில் (அல்லது) நிருபதுங்கவர்மன் ஆட்சியின் தொடக்க காலத்தில் பல்லவரைக் குடமூக்கில் வென்றிருத்தல் வேண்டும். பிறகு நிருபதுங்கன் பெரும் படையுடன் சென்று அரிசிலாற்றங்கரையில் சீமாற சீவல்லபனை வென்றிருத்தல் வேண்டும். (பல்லவர் வரலாறு— டாக்டர் மா. இராசமாணிக்கனார் பக்கம் 210).

2.அரிசிலாற்றங்கரையில் நடைபெற்ற போரில் பல்லவ மன்னனாகிய நிருபதுங்கவர்மனும், இலங்கை இரண்டாம் சேனனும் ஒருங்கு சேர்ந்து மாறவர்மன் பரச்சக்கர கோலாகலனைத் தோற்கடித்திருக்கலாம். இப்போர் நிகழ்ச்சியிலும் விஜயாலய சோழன் கலந்து கொண்டனனாதல் வேண்டும். (பிற்காலச் சோழர் வரலாறு தி. வை. சதாசிவப்பண்டாரத்தார் பக்கம்—19)

3.சீமாற சீவல்லபனுக்குப் பரச்சக்கர கோலாகலன் என்ற பெயரும் உண்டு.

“ஆமாம்.”

“இதற்கெல்லாம் பழிவாங்காமல்விடக் கூடாது.”

“பழிவாங்கத் தேவையில்லை, தவறுக்கு ஏற்றபடி தண்டித்தாலே போதும்! ஆனால்..” என்று நிறுத்திய விஜயாலயர், “ஒட்டுமொத்தமாகப் பல்லவர்களையெல்லாம் நாம் பகைவர்களாகக் கருத வேண்டியதில்லை. பல்லவர்களில் நல்லவர்களும் உண்டு. அதனால்— தவறுகளுக்குக் காரணமானவர் யாரோ— அவரை மட்டும் தண்டிப்பதென்று நான் தீர்மானித்துவிட்டேன்.”

“யாரைத் தந்தையே?”

“நிருபதுங்கவர்மனை.”

“சக்கரவர்த்தியை மட்டும் தனியாக எப்படித் தண்டிக்கப் போகிறீர்கள்?”

“ஆட்சிக் கட்டிலிலிருந்து அகற்றினால் போதும். நாடாளும் மன்னவனுக்கு அதைவிடவும் நல்ல தண்டனை கிடையாது.”

“எப்படி..? எப்படி அவரை நீங்கள் ஆட்சியிலிருந்து அகற்ற முடியும்?” என்று ஆச்சரியத்தோடு கேட்டான் ஆதித்தன்.

“மாமன்னன் நிருபதுங்கவர்மனின் மணிமகுடத்தைப் பறிக்கப் போவது நானல்ல.”

“வேறு யார்?”

“அபராஜிதன்!”

“என்ன?! தந்தையை மகனே ஆட்சியைவிட்டு அகற்றுவானா?”

“மகன் தந்தையை மாற்றுவான். அண்ணனைத் தம்பி அகற்றுவான். கூடப் பிறந்தவர்களின் குருதியில் குளித்து மகிழ்வார்கள்! சாம்ராஜ்யங்களின் வரலாற்றில் இதெல்லாம் சகஜம்” என்ற விஜயாலயர் தொடர்ந்தார். “அதோடு *நிருபதுங்கவர்மனின் சொந்த மகனல்ல அபராஜிதன். அதனால் சுலபமாகிவிட்டது என் பணி!”

“சொந்த மகனில்லையா?” என்று திகைப்போடு கேட்டான் ஆதித்தன்.

"ஆமாம். நிருபதுங்கவர்மனுக்குப் பிள்ளைகள் கிடையாது. அதனால் அவரது தம்பி மகன் அபராஜிதனுக்கு இளவரசுப் பட்டம் கட்டியிருக்கிறார்கள். அபராஜிதனின் தந்தை பெயர் கம்பவர்மன்."

"இளவரசி..?"

"அபராஜிதனின் உடன் பிறந்த தங்கைதான் பல்லவ இளவரசி சாருமதிதேவி!"

"அடடே! இதெல்லாம் எனக்குத் தெரியாது தந்தையே!"

"அரச குலத்தில் பிறந்தவர்கள் அடுத்த நாட்டு வேந்தர்களை அறிந்து வைத்திருந்தால் மட்டும் போதாது. அவர்களுடைய குடும்ப விவரங்களையும் குறித்து வைத்திருக்க வேண்டும். ஏன் தெரியுமா?" என்று கேட்ட தந்தையை ஆர்வத்துடன் ஏறிட்டுப் பார்த்தான் ஆதித்தன்.

"குடும்பத்தில் குழப்பம் வந்தால், கோட்டையிலும் குழப்பம் வரும்" என்று கூறிய விஜயாலயர், "அங்கே குடும்பத்தில் இப்போது குழப்பம் வந்துவிட்டது. அபராஜிதவர்மனுக்கும் நிருபதுங்கனுக்கும் ஆட்சிக்கான போராட்டம் ஆரம்பமாகிவிட்டது. நேற்று பல்லவநாட்டிலிருந்து வந்த தூதனை என்னிடம் ஆலோசனை கேட்கவே கம்பவர்மர் அனுப்பி வைத்திருக்கிறார்."

"கோட்டையின் மீதிருக்கும் கோபத்தினால் குடும்பத்திற்குள் குழப்பம் உண்டாக்கலாமா தந்தையே?"

"கூடாது! குழப்பத்தை நான் உண்டாக்கவில்லை. ஏற்கெனவே தீ இருந்தது. அதை நான் தீப்பந்தமாக்கிக் கொண்டேன்– தீமையைப் பொசுக்குவதற்காக" என்று நிமிர்ந்த விஜயாலயர், "அதைக்கூட நான்

---

*About three years back Tiruttani copper plates of Aparajitha were discovered. I had an opportunity to see them with Dr. Nagasamy. It is edited and Published by the Tamilnadu Archeological Department. It Reveals that Nirubathunga and Kambavarma were brothers. Aparajitha was the son of Kambavarma Probably the elder had no Sons. In 873 Kambavarma Crowned his Son Aparajitha. The brohters Nirubathunga and Kambavarma were getting on happily till 876.

(வரலாற்றிஞர் குடந்தை என்.சேதுராமனின் 1.7.1982–ஆம் நாளிட்ட கடிதம்)

செய்திருக்கமாட்டேன். நிருபதுங்கவர்மன் செய்த இழி செயல் எனக்குத் தெரியாமல் போயிருந்தால்..” என்றார்.

“இடவைப் போரில் உதவாமல் நம்மை ஏமாற்றியதுதான் எல்லோருக்கும் தெரியும். ஆனால் இடவையைக் கைப்பற்றுமாறு வரகுண பாண்டியனை ஏவியதே நிருபதுங்கன்தான் என்பது எவருக்குத் தெரியும்?”

“என்ன?”

“ஆமாம். இல்லாவிட்டால் வரகுண பாண்டியனுக்கு அந்தத் தைரியம் வந்திருக்காது” என்று கோபத்துடன் கூறிய விஜயாலயர், “இதோ இதைப் பார்” என்று பேழையிலிருந்து ஓர் ஒலையை எடுத்து நீட்டினார். ரிஷப இலச்சினை பொறித்த *விடேல்விடுகு அது. சக்கரவர்த்தி நிருபதுங்கவர்மர் வரகுண பாண்டியனுக்கு அதை எழுதியிருந்தார்.

**‘எண்ணம் ஈடேறட்டும். இடவையில்!**

**நந்தி– குறுக்கே நிற்காது.’**

என்ற வாசகங்கள் அந்த ஒலையில் இருந்தன.

“நன்றியற்றவர் என்றுதான் நிருபதுங்கவர்மரை நினைத்தேன். நயவஞ்சகராகவும் இருக்கிறாரே” என்ற ஆதித்தன்.

“இதற்கு என்ன காரணம் தந்தையே?” என்றும் வினவினான்.

“வரகுண பாண்டியன் தந்தையை இழந்தவன். நிருபதுங்கவர்மனோ பிள்ளையில்லாதவன். பாண்டியன் மீது திடீரென்று பாசம் பொங்கிவிட்டது போலும்.”

---

*விடேல்விடுகு என்பது பல்லவர் விருதுப் பெயர்களுள் ஒன்று எனத் தவறாகக் கருதிய ஆராய்ச்சியாளர் பலர். விடை+வெல்+விடுகு, என்றிருத்தலே சிறப்புடையது. இதன் பொருள் ‘வெற்றியுடைய நந்தி இலச்சினையோடு விடுதல் ஆணை’ என்பதாகும். இப்பொருள் சரியா என்பது ஆராயத் தக்கது.

(பல்லவர் வரலாறு– டாக்டர் மா. இராசமாணிக்கனார். பக்கம் 222)

“உயிரைப் பணயம் வைத்து உதவியாய் நின்ற உங்களை உதறிவிட்டுப் பரம்பரைப் பகைவனோடு சேர்ந்து கொள்ள எப்படி அவருக்கு எண்ணம் வந்தது?”

“அதுதான் அரசியல் மகனே! நேற்று நிழல் தந்தவர் யார் என்று நினைத்துப் பார்க்கமாட்டார்கள். இன்றைக்கு ஆதாயம் எவரிடத்தில் என்றுதான் ஆராய்வார்கள்” என்று வருத்தத்துடன் கூறிய விஜயாலயர், “அரசியல் என்பது ஒரு சுயநலச் சொக்கட்டான்” என்று சொல்லிவிட்டுப் பெருமூச்சுவிட்டார்.

“தங்கள் இதயத்தில் இத்தனை காயங்களா தந்தையே?”

“ஆம் மகனே! மார்பில்பட்ட காயங்களை மற்றவர்களிடம் காட்டலாம். மனத்தில்பட்ட காயங்களை யாரிடம் காட்ட முடியும்?” என்று சிரித்த விஜயாலயர், “விழுந்து விழுந்து எழுந்த கதை என்னுடையது. ஆனால் வெற்றிமேல் வெற்றிதான் உன்னுடையது” என்றார்.

தந்தையை மகன் தழுவிக் கொண்டான்.



“என் கனவுகள் நனவாகும் காலம் வந்துவிட்டது. காஞ்சியில் அபராஜித பல்லவனை ஆட்சிக் கட்டிலில் அமர்த்தப் போகிறேன். பல்லவர்களின் உதவியோடு பாண்டியர்களை வேரறுக்கப் போகிறேன். இந்தச் சின்னஞ் சிறு சோழ நாடு சோழப் பேரரசாக மாறிச் சுடர் வீசப் போகிறது.”

விஜயாலயருடைய வீர உரையைக் கேட்ட ஆதித்தன், “தந்தையே! உங்கள் கனவுகளை நனவாக்க என் உயிரையும் தருவதற்குத் தயாராக இருக்கிறேன்” என்றான்.

“உயிர் கொடுக்கத் தேவையில்லை. நீ உடன் நின்றால் போதும். நான் சொல்வதை ஒப்புக் கொண்டால் போதும்” என்று பொருள் பொதிந்த புன்னகையைப் படரவிட்டார்.

“தந்தையே! இதுவரை இளமையின் அறியாமையினால் உங்களை எதிர்த்துப் பேசியதுண்டு. இனிமேல் உங்கள் கண்ணசைவே எனக்குக் கட்டளை. உங்கள் சொற்களெல்லாம் என் சூளுரை” என்றான் ஆதித்தன்.

“அப்படியானால்..” என்று எழுந்து கொண்ட விஜயாலயர் தயங்கிச் சிரித்தார்.

“காஞ்சிக்கு எப்போது புறப்பட வேண்டும்?” என்று கேட்டான் ஆதித்தன்.

“நாளை வைகறையில்!”

“புறப்படுகிறேன்.”

“புறப்படு. ஆனால்.. பல்லவ இளவரசியின் பாதுகாவலனாக அல்ல!” என்ற விஜயாலயர், அவன் விழிகளை ஒருமுறை உற்றுநோக்கிவிட்டு, “அபராஜிதனுக்கும், கம்பவர்மனுக்கும் நான் அனுப்பும் அந்தரங்கத் தூதுவனாக!” என்றார்.








29



# அரியணைப் போர்

இளவேனிற் காலத்தின் இனிய காற்று காஞ்சி மாநகருக்குக் கவரி வீசிக் கொண்டிருந்தது. ஓங்கி உயர்ந்த மாடமாளிகைகளிலும் குன்றெனை நிமிர்ந்த கோட்டை மதில்களிலும் பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்த ரிஷபக் கொடிகள் இருபுறமும் தலையசைத்து, அந்த வாலிபக் காற்றுக்கு வரவேற்பு கூறிக் கொண்டிருந்தன.

ஆறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருக்களில்— காஞ்சியின் செல்வச் செழிப்பு காட்சியளித்தது. காணுமிடமெங்கும் கலை எழில்! கற்பனைக்கு எட்டாத சிற்ப அற்புதங்கள்; சித்திர விசித்திரங்கள்.

ஆலயமணிகளின் கிண்கிணி நாதம்— கல்விச் சாலைகளில் மாணவர்கள் முழங்கிய வேதம்— பல்லவர் புகழ் பாடும் பரவச கீதம்!

பதுக்காத புதையலைப் போன்ற பாவையர் கூட்டம், செதுக்காத சிலைகளாய் அசைந்து கொண்டிருந்த சிங்காரக் காட்சிகள்! இன்பக் கனவுகளைப் போல் சாளரங்களில் எட்டிப் பார்க்கும் இளமையின் எழுத்தோவியங்கள்! அப்படியும் இப்படியும் அசையும் போதே ஆடவர் இதயங்களில் செப்படி வித்தைகள் செய்து முடிக்கும் அழகு மயில்களின் கழுத்தோவியங்கள்! காண்பவர்களையெல்லாம் ஒரு சொப்பன உலகமாய்ச் சொக்க வைத்துக் கொண்டிருந்தது காஞ்சி.

காஞ்சிநகரத்தின் நெருக்கடி மிகுந்த அங்காடி வீதியானது வாகனங்களின் கூட்டமும் மக்கள் நடமாட்டமும் குதிரைகளின் ஓட்டமுமாய்க் கலகலப்பாகவும் பரபரப்பாகவும் காட்சியளித்தது.

அங்காடி வீதியில் கடை ஒன்றைச் சுற்றிலும் முற்றுகையிட்டது போல் கூட்டம் மொய்த்திருந்தது. கடையில் பொருள்களை வாங்குவதற்காகக் கூடிய கூட்டமல்ல அது. வீரர்கள் இருவருக்குள் நடந்து கொண்டிருந்த விவாதத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த கூட்டம். விவாதித்துக் கொண்டிருந்த வீரர்களின் பக்கம் சேர்ந்து ஆரவாரித்த கூட்டம்!

ஒரு வீரன் உறுமினான்: “சக்கரவர்த்தி நிருபதுங்கவர்மரைப் பற்றித் தவறாகப் பேசாதே!”

இன்னொரு வீரன் உறுமினான்: “இளவரசர் அபராஜிதனைப் பற்றி இழிவாகப் பேசாதே!”

“இனிமேல் நீ ஒரு வார்த்தை பேசினால், அப்புறம் என் வாய் பேசாது.”

“ஊமையாகிவிடுமோ?”

“கத்தி பேசும்.”

“கத்திப் பேசாதே தம்பி! கத்தியைப் பேசச் சொல்.”

“எல்லைக் காவல்படையில் இருப்பதை எண்ணித் துள்ளாதே.”

“கோட்டைக் காவல் பணியில் இருப்பதை நினைத்துக் குதிக்காதே.”

தெருவெங்கும் அடைத்துக் கொண்டு திரண்டிருந்த கூட்டத்தைத் தாண்டிச் செல்ல முடியாமல் வாகனங்கள் தயங்கி நின்றன. நடந்து சென்றவர்களும் நகர முடியவில்லை. கலைந்து செல்லுமாறு கூட்டத்தை நோக்கிக் கண்டிப்பு காட்டிக் கொண்டிருந்த காவல் வீரர்களும், வீராவேசமான அந்த விவாதத்தை வேடிக்கை பார்க்கத் தொடங்கிவிட்டனர்.

அரண்மனை அதிகாரி ஒருவர், தான் வந்து கொண்டிருந்த பல்லக்கு வழியில் நிற்கவே ஆத்திரத்தோடு இறங்கினார்.

“அங்கே என்ன குழப்பம்? கூட்டத்தைக் கலைத்து வழி ஏற்படுத்திக் கொடுக்காமல் வீரர்களும் சேர்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே..” என்றார்.

“ஐயா யாரோ?” என்று கிண்டலாகக் கேட்டான் காவல் வீரன்.

"என்னைத் தெரியாதா?" என்று அதிகார தோரணை காட்டினார் அரண்மனை அதிகாரி.

"சொன்னால்தான் தெரியும். நான் என்ன சோதிடனா?"

"அரண்மனை அதிகாரிகளை நீங்கள் அறிந்து வைத்திருக்க வேண்டும்."

"சக்கரவர்த்தியையே தெரியாதென்று அங்கே ஒருவன் சட்டம் பேசிக் கொண்டிருக்கிறான்."

அதிகாரியின் முகத்தில் எள்ளும் கொள்ளும் ஏக சமயத்தில் வெடித்த போதும், காவல் வீரனிடம் தன் கடுமையைக் காட்டிக் கொள்ள அவர் விரும்பவில்லை. காரணம்— அவன் கையில் சவுக்கு இருந்தது. தொடக்கத்திலேயே தோலை உரித்துவிடுவான். அடையாளம் தெரியாமல் அடித்துவிட்டேன் என்று மன்னிப்பும் கேட்டுக் கொள்வான்.

குதிரையின் வாயிலிருந்தும், காவல் வீரர்களின் கையிலிருந்தும் விலகி நிற்பதே விவேகம் என்பதை அனுபவத்தில் அறிந்தவர் அவர்.

"பரவாயில்லை. அரண்மனையில் நீ என்னைப் பார்த்ததில்லை போலிருக்கிறது. நான் பட்டய எழுத்துக்காரன் பரமேஸ்வரன்" என்றார்.

"ஓகோ! செப்புப் பட்டயங்களைச் செதுக்கும் அதிகாரியா? மன்னித்துக் கொள்ளுங்கள். ஆரம்பத்திலேயே சொல்லியிருந்தால், இந்நேரம் நீங்கள் அரண்மனைக்குப் போயிருக்கலாமே!" என்று வருந்துபவன் போல் கூறிவிட்டு அவருடைய பல்லக்கு செல்வதற்கு வழி ஏற்படுத்திக் கொடுத்தான் அவன்.

சுற்றி நின்றிருந்த கூட்டத்தின் ஆரவாரத்தைப் பார்த்தவுடன் சூடு பிடித்தது சண்டை.

"விவாதம் என்ற பெயரில் நீதான் வீண் வம்புக்கிழுத்தாய். உன்னை *அதிகரணத்தில் கொண்டு போய் நிறுத்தாமல்விடமாட்டேன்."

"**தருமாசனம் வரை வருவதற்குத் தயாராக இருக்கிறேன்."

சுவையான சொற்போர் கூடியிருந்தோரிடையே குதூகலம்! விவாதித்துக் கொண்டிருந்தவர்களில் ஒருவன் திடீரென்று எழுந்து நின்றான். வார்த்தைகளில் நம்பிக்கை இழந்தவனாய்த் தோள்களைத்

தட்டிக் காட்டினான். அடுத்தவன் தொடைகளைத் தட்டி ஆரவாரித்தான். வாய்ப் போரில் வலம் வந்தவர்கள் திடீரென்று கைப்போரைக் காண்பிக்கத் தொடங்கினார்கள்.

கோட்டைக் காவல் வீரன், எல்லைக் காவல் வீரனைக் காலால் உதைத்தான். எல்லைக் காவல் வீரன் முஷ்டியால் அவன் முகத்தில் குத்தினான்.

"சக்கரவர்த்தியைப் பழித்துப் பேசாதே!"

"இளவரசரை இழித்துப் பேசாதே!"

சத்தமும் சண்டையுமாய் அலங்கார வீதி அலங்கோல வீதியானது.

இளவரசனின் ஆதரவாளனான எல்லைக் காவல் வீரன், எதிரியை இரு கைகளாலும் தூக்கித் தலைக்கு மேலே சுற்றி வீசினான். கீழே விழுந்த சக்கரவர்த்தியின் ஆதரவாளன் தலை கிறுகிறுத்துப் போய், எழ முயன்றும் இயலாமல் தரையில் சரிந்தான். அபராஜிதனுடைய ஆதரவாளனோ ஆத்திரம் தீராதவனாய் அவனை உதைத்தான்.

"இளவரசர் வாழ்க! அபராஜிதர் வாழ்க!" என்று சத்தமிட்டுக் கொண்டே உதைத்து உதைத்து அவனை மண்ணில் உருட்டினான்.

கூடியிருந்த மக்கள் அனைவரும் "இளவரசர் வாழ்க! அபராஜிதர் வாழ்க!" என்று திடீரென்று கோஷமிடவே, உதைத்தவனுக்கு மிகுந்த உற்சாகம் வந்தது. இன்னும் வேகமாக உதைவிட அவன் முயன்ற போது, இரும்புக் கரமொன்று தன்னை இறுகப் பற்றி இழுப்பதை உணர்ந்தான். திமிற முயன்றும் அந்தப் பிடியிலிருந்து அவனால்விடுபட முடியவில்லை. சினத்துடன் அவன் திரும்பிப்

---

*அறங்கூர் அவையங்கள் பல்லவ நாட்டில் இருந்தன. அறங்கூர் அவையத்துத் தலைவர் 'அதிகரண போஷகர்' எனப்பட்டார். 'அதிகரணம்' என்பது பெரிய அறங்கூர் அவையாகும். கரணம் என்பது சிற்றூரில் இருந்த அறங்கூர் அவையாகும். அது குற்ற வழக்குகளை விசாரிக்கும் நீதிமன்றம் (Criminal) எனலாம்.

**'தருமாசனம்' என்பது மற்ற வழக்குகளை விசாரிக்கும் (Civil) நீதிமன்றம் என்று கொள்ளலாம். பல்லவநாட்டின் தலைமை நீதிமன்றம் தருமாசனம் ஆகும். அரசனது நேர்பார்வையில் அது இருந்தது. தருமாசனம் என்பது இக்காலத்து உயர்நீதிமன்றம் (High Court) போன்றது.

பார்த்த போது, எதிரில் இளவரசன் அபராஜிதனே எழுந்தருளியிருப்பதைப் பார்த்துத் திகைத்தான்.

ஆஜானுபாகுவான நெடிதுயர்ந்த தோற்றத்தோடு நின்ற அபராஜிதனிடம் கோபம் கொலு வீற்றிருந்தது. முப்பது அகவை மதிக்கத்தக்க அவனுடைய முகத்தில் ராஜகளை தவழ்ந்தது.

உருண்டு கொண்டிருந்தவனைக் தூக்கி நிறுத்திய அபராஜிதன், உதைத்தவனை நோக்கிச் சீற்றத்துடன் திரும்பினான். யாருக்காகத் தான் வழக்காடிக் கொண்டிருந்தானோ அந்த இளவரசனே தன்னைச் சினந்து நோக்கியதைப் பார்த்து மருண்டு போன ஆதரவாளான், மன்னிப்புக் கேட்பது போல் மண்டியிட்டான்.

“இவன்தான் முதலில் சண்டையிடத் தொடங்கினான். உங்களைப் பற்றியும் இகழ்ந்து பேசினான்” என்று முறையிட்டான்.

“அதற்காக.. அங்காடி வீதியில் இப்படி அநாகரிகமாக நடந்து கொள்வதா..? அரண்மனைக்குள் பூசல் இருக்கலாம். நடுவீதிக்கு அதைக் கொண்டு வருவது நாகரிகமல்ல” என்று சீறிவிட்டு அருகிலிருந்த வீரர்களை நோக்கிக் கையசைத்தான் அபராஜிதன். சண்டையிட்டவர்களை அவர்கள் வந்து பிடித்துக் கொண்டார்கள்.

“அவரவர்களுடைய படைப் பிரிவின் தலைவர்களிடம் ஒப்படைத்து உரிய நடவடிக்கை எடுக்கச் சொல்” என்று ஆணையிட்டான் அபராஜிதன்.

“ஜாக்கிரதை! இத்தகைய விவேகமற்ற செயலில் எந்த வீரனும் ஈடுபடக்கூடாது! அரச குலத்தைச் சேர்ந்தவர்கள் ஆட்சிக்காகப் போட்டியிடலாம். ஆனால், பதவியில் யார் இருக்கிறார்களோ அவர்களுக்குப் பணிந்து நடப்பதுதான் காவல் வீரர்களின் கடமை” என்று முழங்கிய அபராஜிதனைப் பார்த்து காவல் வீரர்கள் அச்சத்துடன் ஒதுங்கி நிற்க, ஆரவாரத்துடன் வந்து மொய்த்துக் கொண்டனர் மக்கள்.

“இளவரசர் வாழ்க!”

“அபராஜிதர் வாழ்க!”

பிரமாண்டமான பெரிய மாளிகையில் நுழைந்து, பணிந்து வணங்கிய வீரர்களையும் பணிப்பெண்களையும் தாண்டி, “மாதேவி..

மாதேவி..!” என்று அழைத்தபடி தன் மனைவியிருந்த மண்டபத்தை அடைந்தான் அபராஜிதன்.

“ஏன் சோர்வாக இருக்கிறீர்கள்?” என்று கேட்டாள் மாதேவி.

“அரண்மனைச் சண்டை அங்காடிக்கு வந்துவிட்டது” என்று அலுப்புடன் கூறினான் அபராஜிதன்.

“அதற்கு நீங்கள் என்ன செய்ய முடியும்? ‘உலை வாயை மூடினாலும் ஊர் வாயை மூட முடியாது’ என்பார்கள். உங்கள் பெரிய தந்தையார் நினைத்தால் ஊர் வாயை மூடிவிடலாம். ஆனால், அவரே இதையெல்லாம் அரவணைக்கிறாரோ என்ற ஐயம் ஏற்படுகிறது. பல மாதிரி பேசிக் கொள்கிறார்கள் பணிப்பெண்கள்.”

“சக்கரவர்த்தியின் போக்கை என்னாலும் புரிந்து கொள்ள முடியவில்லை. மனம்விட்டுப் பேசுவார் முன்பு. இப்போதெல்லாம் வாயே திறப்பதில்லை. சந்திப்புகளையும் தவிர்க்கிறார்.”

“மகாராணிகூட முன்பு போல் இல்லை. வாரம் ஒருமுறையாவது வந்து விசாரித்துவிட்டுப் போவார்கள். இப்போதெல்லாம் மகாராணி அவர்களுக்கு இந்தத் திசையே மறந்துவிட்டது” என்று மாதேவி கூறிக் கொண்டிருக்கும் போதே, பணிப்பெண் ஒருத்தி வந்து பணிந்து வணங்கினாள்.

“இளவரசே! தங்களை அழைத்து வருமாறு தங்கள் தந்தை தகவல் அனுப்பியிருக்கிறார்.”

தந்தக் கட்டிலில் சாய்ந்து கொண்டிருந்தார் கம்பவர்மர்.

“அங்காடி வீதியில் நடந்ததைக் கேள்விப்பட்டேன். குடிமக்கள் இப்படி நடந்து கொண்டால் குற்றமில்லை, ஆனால், படைவீரர்களும் அரசியல் அதிகாரிகளும் பிளவு பட்டால் பல்லவ நாட்டின் பாதுகாப்பே கேள்விக் குறியாகிவிடும்” என்றார்.

“என் கவலையும் அதுதான் தந்தையே!”

“எல்லாம் என் அண்ணனால் வந்த வினை. அவன் சக்கரவர்த்தி ஆன நாளிலிருந்து எங்களுக்குள் எந்த மனத்தாங்கலும் ஏற்பட்டதில்லை. ஆனால்.. கொஞ்ச காலமாகவே நிருபதுங்கனின் நடவடிக்கைகளில் நிறைய மாற்றம்.”

"நிருபதுங்க சக்கரவர்த்தியிடம் ஏற்பட்டிருப்பது மாற்றம்! நீங்கள் அடைந்திருப்பது ஏமாற்றம்" என்று புன்னகைத்தான் அபராஜிதன்.

"ஏமாற்றம் அடையப் போவது யாரென்று இறுதியில் தெரியும்" என்ற கம்பவர்மர், "சக்கரவர்த்தியை இனிமேலும் சகிக்க முடியாது—விஜயாலயருக்குத் தூதனுப்பியிருக்கிறேன். அரியணையில் உன்னை அமர்த்துவதுதான் என் வேலை இனி."

"தந்தையே! ஆட்சியும் வேண்டாம். அதிகாரமும் வேண்டாம். அரியணை மீது எனக்கு ஆசையில்லை. என் பெரிய தந்தையாரே சிம்மாசனத்தில் வீற்றிருக்கட்டும். செங்கோல் செலுத்தட்டும். கடல் கடந்த நாடுகளுக்கு நான் போய் வருகிறேன். வெகு காலமாக வீற்றிருக்கிறது நம் கடற்படை வேலையில்லாமல்."

அபராஜிதன் பேசிய வார்த்தைகளைக் கேட்டுவிட்டுக் கம்பவர்மர் பெருத்த குரலில் சிரித்தார். "நல்ல முடிவு" என்றார்.

"காஞ்சியைவிட்டு நீ நகர வேண்டியதுதான். அடுத்த நொடியே என்னை மாமல்லைச் சிறையில் அடைத்துவிடுவான் அன்பான என் அண்ணன். காலமெல்லாம் நான் கற்சிலைகளோடு கதை பேச வேண்டியதுதான்."

—கம்பவர்மரின் குரல் வறண்டிருந்தது.

"அன்போடும், ஆசையோடும் அவனும் நானும் சேர்ந்துதான் உனக்கு இளவரசுப் பட்டம் கட்டினோம். ஆனால், *பாண்டிய நாட்டில் பரச்சக்கர கோலாகலனை எதிர்த்து அவனுடைய மகனே புரட்சி செய்ததிலிருந்து என் அண்ணனுக்குப் புத்திகெட்டுப் போய்விட்டது. ஆட்சி பறிபோய்விடுமோ என்ற அச்சம் வந்துவிட்டது. என்னையும் உன்னையும் எதிரிகளாகவே எண்ணத் தொடங்கிவிட்டான். சோழ மன்னர் விஜயாலயரோடு எனக்கு ஏற்பட்ட நெருக்கம் அவனுடைய சந்தேகத்தை அதிகமாக்கிவிட்டது.

---

*Maya Pandya alies Vira Pandya was the elder son by the Second wife. Varaguna was the younger son by the first wife. It means that Varaguna was younger than Vira Pandya. The trouble arose as to who should be crowned? The first son or the son of the first wife? Sri Vallaba (பரசக்கர கோலாகலன்) Crowned the Son of the first wife. So Vira Pandya rebelled and appeled to Ceylon.

—வரலாற்றறிஞர் குடந்தை என்.சேதுராமன்

அதனால்தான் பாண்டியன் இடவையைத் தாக்கிய போது படை உதவி அனுப்பாமல் சோழர்களைப் பழி வாங்கினான். அடி– விஜயாலயருக்கு. வலி– எனக்கு. அதுதான் அவன் கணக்கு.

தஞ்சையில் வீரத்திருவிழா. சக்கரவர்த்தி போயிருக்க வேண்டும். அல்லது உன்னை அனுப்பியிருக்க வேண்டும். உன் தங்கை சாருமதியை அனுப்பியது ஏன்? விஜயாலயர் அவமானத்தால் கொதிப்பார். எதிர்ப்பார். வீழ்த்திவிடலாம். என் துணைக்கரத்தை வெட்டிவிடலாம் என்று எதிர்பார்த்தான். அனைத்தையும் புரிந்து கொண்டார் விஜயாலயர். அந்தரங்கத் தூதுவனை அனுப்பி, நிருபதுங்கவர்மனிடம் எச்சரிக்கையாய் இருக்குமாறு என்னை அறிவுறுத்தினார்."

கம்பவர்மருக்கு மூச்சு வாங்கியது. சற்று நேரம் அமைதியாக இருந்தவர் மீண்டும் கூறினார்: "அவனுடைய ஆட்சி குடிமக்களைக் கொடுமைப்படுத்தியது. அவனுடைய சூழ்ச்சி தளர்ந்து போன என்னைத் தனிமைப்படுத்தியது. மகனே தயக்கத்தைக் கைவிடு. கடிக்க வரும் பாம்பிற்குக் கருணை காட்டத் தேவையில்லை. சிம்மாசனத்தை நீ கைப்பற்றுவதைத் தவிர தேசத்தையும், நம்மையும் காப்பாற்றிக் கொள்ள வேறுவழியில்லை."

அபராஜிதன் கேட்டான்: "அதிகாரம் படைபலம் அனைத்தும் அவரிடத்தில்! ஆட்சிக் கட்டிலிலிருந்து அவரை அகற்ற முடியுமா?"

"அதிகாரமும், படைபலமும் மட்டுமல்ல.. குள்ளநரித் தந்திரமும் இருக்கிறது என் கூடப் பிறந்தவனிடம்! ஆனால், மக்கள் ஆதரவு என்ற மகத்தான சக்தி உன்னிடம்! அதுமட்டுமல்ல.. விஜயாலயரின் விவேகமும் நமக்குத் துணையிருக்கிறது– வெற்றியைப் பெற்றுத் தர!"

"சூழ்ச்சிகளும், சதிகளும் நிறைந்த இந்த அரசியல் எனக்குப் பிடிக்கவில்லை தந்தையே! மன்னனாக இருப்பதைக் காட்டிலும் மனிதனாக இருப்பதே எனக்கு மகிழ்ச்சி."

"சொந்த மகிழ்ச்சியைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்காதே! நாட்டு நலன் கருதி, நம்பியவர்களின் நல்வாழ்வு கருதி நடைபோட வேண்டியதுதான் நாடாளும் குலத்தில் பிறந்த நல்லவர்களின் கடமை" என்ற கம்பவர்மர்.

"அபராஜிதா! *குணபரனாகிய மகேந்திரவர்மரைப் போலவே நீ கலைகளிலும், கவிதைகளிலும் மிகுதியான கவனத்தைச் செலுத்துகிறாய். அதனால்தான் இந்தக் கலக்கம். உன் தங்கை சாருமதி மட்டும் ஆணாகப் பிறந்திருந்தால்— நிற்க நிழலில்லாமல் நிருபதுங்கனை நிர்க்கதி ஆக்கியிருப்பாள்" என்று பெருமிதத்துடன் பேசியபடி எழ முயன்றார் கால்களை இழந்து ஊனமாய்க் காட்சியளித்த கம்பவர்மர்.

அப்போதுதான் அந்தச் செய்தி வந்தது. செய்தியைக் கேட்டதும் தோள்களைக் கட்டையில் ஊன்றியபடி துள்ளி எழுந்த கம்பவர்மர்.

"நாளைக் காலையில் காஞ்சியின் கோட்டை வாயிலில் நம் சூரியோதயம்! அதே நேரத்தில் ஆரம்பமாகிறது நிருபதுங்கவர்மனின் அஸ்தமனம்" என்று கம்பீரமாகக் கூறிவிட்டுச் சிரித்தார்.







*குணபரன் என்பது மகேந்திரவர்ம பல்லவரின் விருதுப்பெயர்களுள் ஒன்று.




30



# குன்றை முட்டிய குருவி

பாறைகளிலும் மரக்கிளைகளிலும் படிந்திருந்த பனித்துளிகளை உண்டு பசியாறிக் கொண்டிருந்தான் பகலவன். காஞ்சியிலிருந்து நான்கு காத தொலைவிலிருந்த மலையொன்றில் உச்சியில் பெரியதொரு பேரிகையைச் சுற்றி மூன்று பல்லவ வீரர்கள் நின்று கொண்டிருந்தனர்.

"அதோ!" என்றான் ஒருவன்.

ஓவியக் கோடு போல் வளைந்திருந்த சாலையில் மெள்ள மெள்ள உருவங்கள் புலப்படத் தொடங்கின. வில்லேந்திய வீரர்கள் சூழ்ந்து வர நடுவில் இரு ரதங்கள் நகர்ந்து வந்து கொண்டிருந்தன.

மலையின் உச்சியில் நின்று கொண்டிருந்த வீரர்கள் பேரிகையை முழக்கினார்கள். அந்த ஒலி காற்றின் முதுகில் சவாரி செய்து, வெகு தொலைவில் காத்திருந்த வீரர்களின் செவிகளில் விழவே அவர்களுடைய பேரிகைகளும் ஆனந்தமாய் அதிர்ந்தன. அங்கிருந்து தொலைதூரத்திலிருந்து அடுத்த பேரிகையும் முழங்கியது; ஒவ்வொரு பேரிகையாய்த் தொடர்ந்து முழங்க, காஞ்சிக் கோட்டையின் உச்சியில் காட்சியளித்த பிரமாண்டமான பேரிகையைக் குண்டோதரன் ஒருவன் குதூகலமாய் முழக்கினான்.

கோட்டை வாயிலில் மந்திரி மண்டலத்தாரும், அரண்மனை அதிகாரிகளும் கூடியிருந்தனர். அபராஜிதன் தன் குதிரையின் மேல்

ஆரோகணித்திருந்தான். ரதங்கள் வந்து சேர்ந்ததும் கூடியிருந்தவர்களின் வாழ்த்து முழக்கங்கள் வானைத் தொட்டன.

அன்புடன் தங்கையை வரவேற்ற அபராஜிதன், ஆதித்தனைத் தன் கனத்த தோள்களால் கட்டித் தழுவிக் கொண்டான்.

“வா.. என் நண்பனே! பல்லவ நாடு உன்னை வரவேற்கிறது.”

“வணக்கம் இளவரசே! சோழ நாடு உங்களுக்கு வாழ்த்துச் சொல்கிறது.”

“உன்னைப் பார்க்க வேண்டுமென்று அநேக நாட்களாக ஆசைப்பட்டேன்” என்றான் அபராஜிதன்.

“அதையெல்லாம் நானும் கேள்விப்பட்டேன்” என்றான் ஆதித்தன், பல்லவ இளவரசி சாருமதிதேவியைப் பார்த்துப் புன்னகைத்தபடி.

“என் தங்கையைக் காப்பாற்றியதற்கு நன்றி” என்றான் அபராஜிதன்.

“உங்கள் தங்கை என்னைக் காப்பாற்றியதற்கும் நன்றி!” என்று சிரித்தான் ஆதித்தன்.

இளவரசி குறுக்கிட்டாள். “அண்ணா! பொல்லாத மனிதர் இவர். இவரிடம் வார்த்தை கொடுத்து நீங்கள் ஜெயிக்கவே முடியாது!”

“நீ ஜெயித்திருப்பாயே..?” என்று புன்னகை பூத்தான் அபராஜிதன்.

மாளிகையின் வாயிலில் நின்று வரவேற்ற கம்பவர்மர் தன் மகளைக் கட்டித் தழுவிக் கொண்டார். ஆதித்தனுடைய தடந்தோள்களைத் தட்டிக் கொடுத்தார். சாருமதியைத் தொடர்ந்து உள்ளே நுழைந்த போது மாடத்தில் நின்று கொண்டிருந்த மங்கையர் சோழ இளவரசன் மீது மலர்களைத் தூவினர்.

அந்த மலர்களெல்லாம் ஆதித்தனின் உடல் மீது விழவில்லை. உள்ளத்திற்குள் விழுந்து கொண்டிருந்தன.

மகேந்திர தடாகத்தின் அருகே சில்லென்று வீசிக் கொண்டிருந்த காற்று ஒரு கண்கொள்ளாக் காட்சியைக் கண்டது. தடாகத்தின் கரையில், உயர்ந்த ஜாதி அரேபியப் புரவிகள் இரண்டு நின்று கொண்டிருந்தன. தடாகத்தின் படிக்கட்டுகளில் இரண்டு நாடுகளின் இளவரசர்களும் சாதாரண மனிதர்களைப் போல் தரையில் அமர்ந்து இளமையின் சங்கீதக் கனவுகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள்.

“அதே முகம்! அதே முழக்கம்!” என்று தனக்குள் பேசிக் கொண்ட அபராஜிதன், “விஜயாலயரின் வாலிப நாட்களின் முகம் உன் வதனத்தில் வரையப்பட்டிருக்கிறது” என்றான்.

“என் தந்தையை இளம் வயதில் பார்த்திருக்கிறீர்களா?” என்று கேட்டான் ஆதித்தன்.

“பார்த்திருக்கிறேன். அப்படியே அந்தக் காட்சியை இதயத்தில் பதித்திருக்கிறேன். அப்போது எனக்குப் பன்னிரண்டு வயதிருக்கும். சக்கரவர்த்தி நிருபதுங்கவர்மர் அப்போதெல்லாம் இத்தனை கொடியவராக இருந்ததில்லை. ஒரு தாயைப் போல் என்னை நேசித்தார். எங்கு சென்றாலும் என்னையும் அழைத்துச் செல்வார். ஒருமுறை தஞ்சைக்கு அவரோடு வந்து கொண்டிருந்தேன். அப்போதுதான் அந்த மகாவீரரைச் சந்தித்தேன்” என்று கூறிய அபராஜிதன், ஆதித்தனின் கைகளைப் பற்றிக் கொண்டு பெருமிதத்துடன் பேசினான்.

“அவர்தான் உன் தந்தை! சக்கரவர்த்தி நிருபதுங்கவர்மர் உன் தந்தையைப் பற்றிக் கேள்விபட்டிருந்தாரே தவிர, அதுவரை சந்தித்ததில்லை. அந்தச் சந்திப்புதான் தஞ்சையை விஜயாலயருக்குத் தந்தது.”

“என்ன..?” என்று ஆவேசத்துடன் கேட்ட ஆதித்தன், “விவரமாகச் சொல்லுங்கள்” என்று வேண்டிக் கொண்டான்.

அபராஜிதன், பல வருடங்களுக்கு முன் நிகழ்ந்த அந்த நிகழ்ச்சியை நினைவு கூர்ந்தான். கண்களைத் திறந்தபடியே கனவு காண்பவன் போல் பேசினான்.

&&&

“பௌர்ணமி நிலவு ஒளிவீசிக் கொண்டிருக்கிறது. பல்லவச் சக்கரவர்த்தி தன் பரிவாரங்களோடு தஞ்சையின் சில காத தூரத்தில் தண்டிறங்கித் தங்கியிருக்கிறார். வீரர்கள் யாரையும் அழைத்துக் கொள்ளாமல் வெளியே கிளம்பிய சக்கரவர்த்தி, “நீயும் வருகிறாயா?” என்று கேட்கிறார்.

ஒரே ஓட்டமாய் ஓடி அவருடைய புரவியின் முன்பக்கம் உட்கார்ந்து கொள்கிறேன். ஒரே ஒரு வீரனை மட்டும் தன்னைப் பின்தொடருமாறு கட்டளையிட்ட சக்கரவர்த்தி புரவியைத் தட்டிவிடுகிறார்.

வெகு தொலைவில் காட்சியளித்த கோட்டையை எனக்குக் காட்டுகிறார். நிலவின் ஒளியில் நீராடுவது போல் அது நின்று கொண்டிருக்கிறது.

"அதுதான் தஞ்சைக் கோட்டை! விடிந்தவுடன் அங்குதான் நாம் விருந்தினராகச் செல்கிறோம். அதை ஆட்சி செய்யும் அரசனின் பெயர் பெரும்பிடுகு முத்தரையன். காலம் தவறாமல் நமக்குக் கப்பம்கட்டி வருகிறவன்" என்று கூறுகிறார். ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டே தலையை ஆட்டுகிறேன் நான்.

தொலைவில் எதையோ பார்த்த சக்கரவர்த்தி புரவியிலிருந்து கீழே இறங்குகிறார்.

குளிர்காற்று வீசிக் கொண்டிருந்த அந்த இரவில் கூப்பிடு தொலைவில் தென்பட்ட அந்தக் காட்சி சிறுவனான என்னைச் சிலிர்க்க வைக்கிறது.

கூட்டமாகக் கூடியிருந்த வீரர்கள் கோட்டையை நோக்கித் திரும்பி நிற்கிறார்கள். ஒரு வீரபுருஷர் தன் வாளை உயர்த்தியபடி அவர்களிடம் உரையாற்றுகிறார். அமைதியான அந்த இரவில் அவர் பேசிய வார்த்தைகள் ஈர மணலில் எழுதியதைப் போல் என் இதயத்தில் பதிகின்றன.

"கோட்டை அதுதான்! நம் கொடி பறக்கப் போவதும் அங்குதான்! இழந்த புகழை மீட்போம்! சோழர் குலத்தின் பேரரசை இங்கிருந்து பிரகடனப்படுத்துவோம். உன்னதமான இப்பணியில் நம் உயிரையும் அர்ப்பணித்துக் கொள்வோம்."

—இதைக் கேட்டதும் கோட்டையைப் பார்த்தபடி நின்றிருந்த ஐம்பது வீரர்களும் 'சரக் சரக்' என்று தங்கள் உறைவாளை உருவி உயர்த்திப் பிடிக்கிறார்கள். பௌர்ணமி நிலவின் வெளிச்சத்தில் அந்த வாட்கள் பளபளக்கின்றன.

சக்கரவர்த்தி உடன் வந்த வீரனை நோக்கிச் சைகை செய்துவிட்டு இன்னும் கொஞ்சம் நெருங்குகிறார்.

முழக்கம் செய்த வீரர் தன் இடுப்பிலிருந்து குறுவாளை எடுக்கிறார். அடடே! தன் இடது கையின் பெருவிரலைத் தானே கீறிக் கொள்கிறார். 'குபுக்'கென்று கிளம்பிய குருதியைத் தொட்டு ஒவ்வொரு வீரனின் நெற்றியிலும் வைக்கிறார்.

"இப்போது உங்களுக்கு என் இரத்தத்தால் பொட்டு வைத்திருக்கிறேன். இது நெற்றிப் பொட்டல்ல, சோழர் குலத்தின் வெற்றிப் பொட்டு" என்று கூறிவிட்டு அவர் நிமிர்கிற போது, ஏராளமான பல்லவ வீரர்கள் அவர்களைக் சூழ்ந்து வளைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

சக்கரவர்த்தி தன் கூடாரத்துக்குத் திரும்புகிறார். ஆசனத்தில் அவர் அமர்ந்திருக்க, அவருக்குப் பக்கத்தில் நான் நிற்கிறேன். முழக்கமிட்ட அந்த வீரரைப் பல்லவ வீரர்கள் அழைத்து வருகிறார்கள். அலட்சியமாகவே நடந்து வருகிறார் அந்த வீரர்.

"யார் நீ..?" என்று கேட்கிறார் சக்கரவர்த்தி.

"சாதாரணமான ஒரு வீரன்."

"நான் யார் தெரியுமா?"

"சாம்ராஜ்யம் ஆளும் சக்கரவர்த்தி."

"உன்னுடன் நின்று கொண்டிருந்தவர்கள் யார்?"

"என் படை வீரர்கள்."

"உன்னிடம் படை இருக்கிறதா?" என்று கேட்கும் போதே நிருபதுங்கருக்குச் சிரிப்பு வரத் தொடங்குகிறது.

"என்னிடமும் ஒரு படை இருக்கிறது" என்று சக்கரவர்த்தியைப் பார்த்து அழுத்தமாகச் சொல்கிறார் அவர்.

"சாதாரண வீரனுக்குப் படை எதற்கு?"

"சாம்ராஜ்யத்தை உருவாக்குவதற்கு!"

சக்கரவர்த்தி அலட்சியமாகச் சிரிக்கிறார்.

"அங்கே என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?"

"சபதம் ஏற்றுக் கொண்டிருந்தோம்."

"எதற்கு..?"

"தஞ்சையைக் கைப்பற்றுவதற்கு!"

ஒரு பெரிய நகைச்சுவையைக் கேட்பது போல் சத்தமிட்டுச் சிரிக்கிறார் சக்கரவர்த்தி.

“இனிமேல் நீங்கள் கேட்கும் எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லமாட்டேன்” என்று அந்த வீரர் உறுதியான குரலில் உரைக்கிறார்.

“ஏன்..?”

“என் இரண்டு நிபந்தனைகளை நீங்கள் ஏற்றுக் கொண்டால்தான் பதில் சொல்வேன்.”

“அடடே!” என்று வியந்த சக்கரவர்த்தி “என்ன நிபந்தனைகள்?” என்று கேட்கிறார்.

“ஒன்று– நான் கூறுவதைக் கேட்டு நீங்கள் அலட்சியமாகச் சிரிக்கக் கூடாது. இன்னொன்று எனக்கும் ஆசனம் கொடுத்து அமர வைத்துத்தான் பேச வேண்டும்.”

வீரரை நான் வியந்து பார்க்கிறேன். அவருடைய வார்த்தைகள் என்னை வசீகரிக்கின்றன. நான் பரவசமடைவதைப் பார்த்த சக்கரவர்த்தி, “என்ன அபராஜிதா?” என்று கேட்கிறார்.

“அந்த வீரருக்கும் ஓர் ஆசனம் போடச் சொல்லுங்கள்” என்கிறேன் நான். “சரி” என்று என்னைத் தட்டிக் கொடுக்கிறார். சக்கரவர்த்தியின் எதிரே சமமாக அந்த வீரருக்கும் ஓர் ஆசனம் போடப்படுகிறது.

“உன் பெயரைச் சொல்லிவிட்டு உட்காரலாம்” என்கிறார் சக்கரவர்த்தி.

“விஜயன்” என்று கம்பீரமான குரலில் கூறிவிட்டு அந்த வீரர் உட்காருகிறார்.

உட்கார்ந்திருந்த சக்கரவர்த்தி, “என்ன..?!” என்று வியப்புடன் எழுந்து நிற்கிறார்.

தொலைவில் நின்றிருந்த வீரர்கள் விஜயனைச் சூழ்ந்து கொள்கிறார்கள். விலகி நிற்குமாறு வீரர்களுக்குக் கட்டளையிட்ட சக்கரவர்த்தி, உட்கார்ந்து கொண்டு யோசிக்கிறார்.

“தஞ்சைக் கோட்டையை உன்னால் கைப்பற்ற முடியுமா?” என்று கேட்ட சக்கரவர்த்தி,

“எந்த மனிதனுக்கும் ஆசை இருக்கலாம். பேராசை இருக்கக் கூடாது” என்றும் கூறுகிறார்.

“பேரரசர் என்னை மன்னிக்க வேண்டும். எனக்கிருப்பது ஆசையல்ல, இலட்சியம். கடல்கடந்து வெற்றி கண்ட சோழர் குலம் கைகட்டி நிற்கிறதே என்ற ஆவேசம்!”

“உன்னிடம் எத்தனை வீரர்கள் இருக்கிறார்கள்?”

“என் படையில் ஐம்பது பேர் இருக்கிறார்கள். ஆயிரத்திற்கும் மேற்பட்டவர்கள் என்னை ஆதரிக்கிறார்கள்.”

“முத்தரையர்களின் படைபலம் தெரியுமா?”

“தெரியும்.”

“போர் வந்தால் வழககம் போல் பல்லவர்களின் பெரும்படை முத்தரையர்களுக்குத் துணையாக வரும்.”

“ ஆமாம்.”

“உன்னுடைய சின்னஞ்சிறு படையை வைத்துக் கொண்டு எங்களை வெல்ல முடியுமா? குன்றைப் போய்க் குருவி முட்டலாமா..?” என்று நெகிழ்ந்த குரலில் கேட்கிறார் நிருபதுங்கர்.

“சக்கரவர்த்தி அவர்களே! என் மீது நீங்கள் காட்டும் அனுதாபத்திற்கு நன்றி” என்ற விஜயன் தொடர்ந்து முழங்குகிறார்.

“நான் குருவிதான். ஒப்புக்கொள்கிறேன். ஆனால், கூட்டை முட்டுவதால் குருவிக்குப் பெருமை ஏது? அதனால்தான் குன்றை முட்டுகிறேன். தகர்ந்தால் குன்று! விழுந்தால் குருவி! இதுதான் என் தத்துவம். குறுக்கே நிற்கும் குன்று நொறுங்க வேண்டும். அல்லது கூட்டங் கூட்டமாக மோதிக் குருவிகள் உதிர வேண்டும்! இதுதான் எங்கள் கொள்கை!”

“எத்தகைய பலத்தை எதிர்த்துப் போராடுகிறேன் என்பதை அறிவேன். தொடர்ந்து போராடிக் கொண்டே இருப்பேன். நான் இறந்து போனால், என் மகன் வருவான். அவனுக்குப்பின் அவன் மகன் வருவான். அடுத்தடுத்து வந்து கொண்டேயிருப்பார்கள்! என்றாவது ஒரு நாள் கோட்டையில் எங்கள் கொடி பறக்கும். அதுவரைக்கும் என் இனம் இருக்கும்!”

சக்கரவர்த்தி கேட்கிறார்: "நீண்ட கால இலட்சியத்தை நினைவில் வைத்துப் பேசுகிறாய். இந்த இடத்திலேயே என் வீரர்கள் உன்னைச் சிறைப்பிடித்தால் என்ன செய்வாய்?"

விஜயன் அலட்சியமாகச் சிரிக்கிறார்.

"கடமைகளை முடிக்கும்வரை என்னை யாரும் கைப்பற்ற முடியாது!"

"சவாலாக எடுத்துக் கொள்ளலாமா?"

"சந்திக்கத் தயாராக இருக்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை! இங்கிருந்து நான் தப்பிச் சென்றுவிட்டால் என் வீரர்களை நீங்கள் விடுதலை செய்துவிட வேண்டும்!"

"ஒப்புக்கொள்கிறேன்" என்ற சக்கரவர்த்தி, "சிறைப்படுத்துங்கள் விஜயனை!" என்று கட்டளையிடுகிறார்.

தன்னை நோக்கி ஒடிவந்த வீரர்களின் மேல், தான் அமர்ந்திருந்த ஆசனத்தைச் சுழற்றி எறிந்துவிட்டு, குறுக்கே வந்த வீரனுடைய வேலினைக் கைப்பற்றி.. எவரும் நெருங்க முடியாதபடி மின்னலைப் போல் அதைச் சுழற்றியவாறே வாயிலுக்கு வந்த அந்த மாவீரர், அங்கு நிறுத்தப்பட்டிருந்த தன் புரவியின் மீது தாவி ஏறுகிறார். வீரர்கள் துரத்துகிறார்கள்.

கரிய, பெரிய களிறுகள் பிளிறியபடி வட்டமாக நிறுத்தப்பட்டு வழிமறித்து நிற்கின்றன வெளியே. அங்கங்கே நிறுத்தப்பட்டிருந்த வீரர்களிடம் தப்பிய புரவி, வழியை மறித்து நின்றிருந்த களிறுகளைப் பார்த்துத் தயங்கி நிற்கிறது. பின் வாங்குகிறது. அதன் கழுத்தைப் பிடித்துத் தடவிக் கொடுத்த விஜயன் மீண்டும் அதை முன்னே செலுத்துகிறார்.

வாயிலில் வந்து இடுப்பில் கைவைத்தபடி விஜயனைப் பார்த்துச் சிரிக்கிறார் சக்கரவர்த்தி.

அணிவகுத்து நின்ற களிறுகள் துதிக்கையை உயர்த்திக் கொண்டு சத்தமிடுகின்றன. விஜயனுடைய புரவி களிறுகளை நெருங்குகிறது.

'எப்படித் தப்பிக்கப் போகிறான் இந்த இளைஞன்?' என்று எண்ணமிட்ட சக்கரவர்த்தி, அலட்சியமாகப் பார்த்துக் கொண்டிருந்த போதே அந்த அதிசயம் நிகழ்ந்தது.

தண்ணீரில் நீந்துவது போல் தரையில் பாய்ச்சல் காட்டிய விஜயனின் புரவி சற்றுப் பின்வாங்கி, விரைந்து குதித்து மேலே கிளம்பிக் களிறுகளின் முதுகைத் தாண்டிப் பறந்து தரையில் குதித்துக் கண்ணிமைக்கும் நேரத்தில் அங்கிருந்து காணாமல் மறைகிறது. களிறுகள் அலறிக் கொண்டு திரும்புகின்றன.

தயாராக இருந்த வீரர்கள் விஜயனைத் துரத்த முற்பட்ட போது நிருபதுங்கவர்மர் அவர்களைத் தடுக்கிறார். விஜயனுடைய ஐம்பது வீரர்களையும் வரவழைக்கிறார். "விடுதலை செய்கிறேன். நீங்கள் புறப்படலாம். விஜயனின் வீரத்தைப் பாராட்டுகிறேன். உங்கள் தலைவனிடம் சொல்லுங்கள்— அவன் வீரத்துக்கு ஒரு பரிசு காத்திருக்கிறது. நானாக அதைக் கொடுக்கமாட்டேன். தானாக எடுத்துக் கொண்டால் அதைத் தடுக்கமாட்டேன்."

சக்கரவர்த்தியின் வார்த்தைகளைக் கேட்டுக் கைகொட்டி ஆரவாரம் செய்கிறேன் நான்."

&&&

மகேந்திர தடாகத்தின் படித்துறையில் அமர்ந்து கடந்த கால நினைவுகளைக் கதையாகச் சொல்லிக் கொண்டிருந்த அபராஜிதன், பரவசத்தோடும் பாசத்தோடும் ஆதித்தனைப் பார்த்தான்.

"என் பாட்டனாரைப் பற்றிப் பாடப்பட்ட நந்திக் கலம்பகத்தைப் பலமுறை படித்துப் படித்து இதயத்தில் பதிய வைத்தவன் நான். ஆனால் உன் தந்தை பேசிய ஒவ்வொரு வாசகமும், அன்று அவர் காட்டிய மாவீரமும் ஒரே பார்வையில் என் உள்ளத்தில் பதிந்துவிட்டன. ஆண்டுகள் பல ஓடிவிட்டன. ஆனாலும் அந்தக் காட்சி என் கண்களைவிட்டு அகலவே இல்லை. ஆதித்தா! உன் தந்தையை நினைக்கும் போதெல்லாம் என் இதயம் பெருமிதம் கொள்கிறது. சரித்திரம் எப்போதாவதுதான் விஜயாலயரைப் போன்ற மகாவீரர்களைச் சந்திக்கிறது."

"அபராஜிதரே! நீங்களும் அத்தகைய வீரவேந்தனாக வருவீர்கள்!"

"வேந்தனாக வரவே விருப்பமில்லை எனக்கு. அப்புறம் எப்படி வீரவேந்தனாக வர முடியும்?" என்று கேட்டான் அபராஜிதன்.

அத்துடன் நிறுத்தியிருந்தால் கூட ஆதித்தன் அதைப் பொருட்படுத்தியிருக்கமாட்டான். ஆனால் அபராஜிதன் தொடர்ந்து கூறிய வார்த்தைகள் அவனை அதிர்ச்சியடைய வைத்தன.

'எல்லோரும் சேர்ந்து போட்டு வைத்திருக்கும் இணையற்ற திட்டத்தை, அபராஜிதன் ஒருவனே கெடுத்துவிடுவானோ?' என்ற கவலையும் ஏற்பட்டது.









31



# நான் உன் நண்பன்

தடாகத்தின் படிக்கட்டுகளைத் தழுவிவிட்டு நழுவிச் செல்லும் அலைகளையே பார்த்துக் கொண்டிருந்தான் ஆதித்தன்.

வாழ்க்கையிலும் இப்படித்தான்– தழுவிக் கொள்கிறார்கள் என்று நினைக்கிற போதே சிலர் நழுவிக் கொள்கிறார்கள்.

அற்புதமாக வகுக்கப்பட்டிருக்கும் விஜயாலயருடைய திட்டம்– அபராஜிதனால் பாழாகிவிடுமா..?

ஆதித்தனின் எண்ண ஓட்டங்களைப் புரிந்து கொள்ளாமலே அபராஜிதன் பேசினான்.

“ஆகா! கடந்து சென்ற அந்த நாட்கள் மீண்டும் நடந்து வருமா? என் இளமைக் காலம் எப்படிப்பட்டது தெரியுமா?

மாவீரர்களின் கதைகளைக் கேட்பேன். மாமல்லபுரத்துச் சிலைகளைப் பார்ப்பேன். கடலலைகளின் அருகே அமர்ந்து கவிதைகள் யாப்பேன். எங்கே போய்விட்டது அந்த இனிய வசந்தம்? காலம் ஏன் என் உள்ளத்தைக் கவலைகளால் கனமாக்கிவிட்டது?

ஆட்சிக்காக நடக்கிற சூழ்ச்சிகளை எண்ணிப் பார்க்கவே அருவருப்பாக இருக்கிறது. ஆதித்தா! என்னிடமும் என் தங்கையிடமும் நிருபதுங்கவர்மர் எத்தனை அன்பாக இருந்தார். என்ன நேர்ந்தது இன்று? எதிரியாய் நினைக்கிறார் எங்களை.

காரணம் என்ன? அரசியல் போட்டி! அரியணை ஆசை. அதனால்தான் நான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன்."

"என்ன முடிவு?" என்று திகைப்புடன் கேட்டான் ஆதித்தன்.

"மணிமுடியை உதறப் போகிறேன். துறவறம் பூணப் போகிறேன். கமண்டலம் எடுப்பேன். காவி உடை தரிப்பேன், நாவுக்கரசரைப் போல் நாடெங்கும் நடப்பேன்! பதிகம் பாடுவேன்; பரமனைத் தேடுவேன்" என்றான் அபராஜிதன்.

"இளவரசே..!" என்று ஆரம்பித்தான் ஆதித்தன்.

"வேண்டாம். 'அபராஜிதா' என்று கூப்பிடு. நீங்கள் என்று சொல்லி விலகி நிற்காதே.. நீ என்று சொல்லி நெருங்கு. தோள்களைத் தொட்டு என் தோழனாகப் பேசு" என்ற அபராஜிதன், "என் இதயம் அன்பிற்காக ஏங்குகிறது" என்றான். ஆதித்தன் சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறாய்..?"

"அன்பிற்காக ஏங்கும் இதயம் எவ்வாறு துறவறம் ஏற்க முடியும்?"

"மனம் வெறுத்துப் போகும் மனிதர்களுக்கு வேறு மார்க்கம் ஏது?"

"வெறுப்பில் வருவதல்ல துறவு! விருப்பு வெறுப்பற்ற நிலைதான் துறவு! துறவு என்பது நம்மைச் சுற்றியிருக்கிறவர்களுக்குச் செய்யும் துரோகமாகிவிடக் கூடாது. நாம் குடிமக்களுக்குக் கட்டுப்பட்டவர்கள்" என்று ஆதித்தன் கூறிக் கொண்டிருந்த போதே, அபராஜிதன் குறுக்கிட்டான்.

"நாமார்க்கும் குடியல்லோம் என்று நிமிர்ந்து நிற்பவர்களல்லவா துறவிகள்?"

"அப்படிப்பட்ட துறவிகள் ஆண்டவனைக் காண்பதற்குக்கூட அரசர்களின் தயவு தேவைப்பட்டிருக்கிறது."

"என்ன சொல்கிறாய்?"

"நடந்ததைச் சொல்கிறேன். 'நாமார்க்கும் குடியல்லோம்' என்ற நாவுக்கரசர், எங்கள் சோழ நாட்டிற்கு வந்த போது என்ன நடந்தது தெரியுமா..? *பழையாறை வடதளியில் இறைவனை வணங்கச்

*பெரியபுராணம்– திருநாவுக்கரசு நாயனார் புராணம்.

சென்றாராம். அப்போது அக்கோயிலில் இருந்த சிவலிங்கப் பெருமானைப் பிற சமயத்தினர் ஒளித்து வைத்துவிட்டனர். அடிகள் உள்ளம் வருந்தினார். பழையாறை மன்னன்தான் அவர்களை அடக்கி நாவுக்கரசருக்கு உதவினான். வடதளிப் பெருமானை வழிபட வாய்ப்பினை வழங்கினான்."

"என்னை என்ன செய்யச் சொல்கிறாய் ஆதித்தா..? என் இதயம் வெறுமையாய் இருக்கிறது."

"தவறு! உன் இதயத்தில் உன் மனைவி இல்லையா? உன் தந்தை இல்லையா? உயிருக்குயிராய் நேசிக்கும் உன் தங்கைக்கு இடமில்லையா உன் உள்ளத்தில்?"

"இருக்கிறது!"

"அப்புறம் எப்படி உன் இதயம் வெறுமையாய் இருக்க முடியும்?

"உண்மைதான்."

"வாழ்க்கையை நேசி. கடமைகளை நிறைவேற்று."

"அநாகரிகமான அரசியல் சூழ்ச்சிகள் எனக்குப் பிடிக்கவில்லையே! நிருபதுங்கவர்மச் சக்கரவர்த்தியைப் பதவியிலிருந்து நீக்க வேண்டும் என்கிறார் என் தந்தை."

"அதிலென்ன தவறு? பாசத்தை எண்ணி நீ தயங்குகிறாய். ஆனால், பதவி பறிபோய்விடுமோ என்ற பயத்தினால் உடன்பிறந்த தம்பியையும் உன்னையும் ஒழித்துக் கட்டப் பார்க்கிறார் சக்கரவர்த்தி. அரசியல் சூழ்ச்சியில் அவர்மட்டும் ஈடுபடலாமா?

அதுமட்டுமல்ல.. நிருபதுங்களின் ஆட்சியில் அதிகாரிகள் கொழுத்தார்கள், குடிமக்கள் இளைத்தார்கள். அராஜகம் வளர்ந்தது, அறச்செங்கோல் தளர்ந்தது. நிருபதுங்கவர்மரை மக்கள் நேசிக்கவில்லை. உன்னைத்தான் நேசிக்கிறார்கள். குடிமக்களுக்காகவேனும் அந்த அதிகார வெறியரை அப்புறப்படுத்த வேண்டியது உன் கடமை."

"ஆகா! அற்புதமாக விவாதம் செய்கிறாய். அழகாகப் பேசுகிறாய். என் தங்கையும் இப்படித்தான் பேசுவாள்" என்று ஆதித்தனைப் பாராட்டினான் அபராஜிதன்.

“தந்தை சொன்ன போது உள்ளம் அதை ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால், நீ பேசப் பேச என் பிடிவாதம் கரைகிறது.” என்று தொடர்ந்தான்.

“ஆதித்தா..! யோசித்துப் பார்த்தால் என் இதயத்தின் ஏக்கம் என்னவென்று புரிகிறது. எனக்குத் தந்தை இருக்கிறார். தங்கை இருக்கிறாள். மனைவி இருக்கிறாள். ஆனால், இவர்களையெல்லாம்விட இன்னும் நெருக்கமாக இதயத்தைப் பகிர்ந்து கொள்ள ஒரு நண்பன் இல்லை.”

“இதோ நான் இருக்கிறேன்” என்றான் ஆதித்தன்.

“நிஜமாகவா..?”

“ஆமாம்.”

“நிலை எதுவாயினும் என்னை நேசிப்பாயா?”

“ஆட்சியைத் துறந்தாலும் உன் மீது அன்பு செலுத்துவேன்.”

“இந்த மகேந்திர தடாகத்தில் நாம் உறுதியெடுத்துக் கொள்வோம். ஒருவரை ஒருவர் உள்ளன்போடு நேசிப்போம். உற்ற நண்பர்களாய் இருப்போம்.”

“துன்பத்திலும் துயரத்திலும் தோள் கொடுப்போம்.”

“வாழ்க்கையில் எனக்குப் பிடிப்பு வந்துவிட்டது.”

“வெற்றியில் எனக்கு நம்பிக்கை வந்துவிட்டது.”

“நீ என் தோழன்!”

“நான் உன் நண்பன்!”

“என்றென்றும் நீ என் இதயத்தில் இருப்பாய்.”

“உயிர் போனாலும் நீ என் உள்ளத்தில் இருப்பாய்.”

அபராஜிதனுடைய நடவடிக்கைகளில் காணப்பட்ட மாற்றம் கம்பவர்மருக்கு மட்டுமல்ல—மாதேவிக்கே வியப்பாக இருந்தது. அரசியல் நடவடிக்கைகளில் ஆர்வம் காட்டினான். விஜயாலயரின் திட்டத்தைப் பற்றி விரிவாக விவாதித்தான்.

ஆதித்தனும் அபராஜிதனும் எங்கு சென்றாலும் இணைந்தே சென்றார்கள். எப்போதும் சேர்ந்தே இருந்தார்கள்.

“மாற்றிவிட்டாய் என் மகனை. மகிழ்ச்சி!” என்றார் கம்பவர்மர் ஆதித்தனிடம்.

“மறந்துவிடாதீர்கள் உங்கள் மனைவியை.. புதிய நண்பர் வந்த பூரிப்பில்!” என்று புன்னகைத்தாள் மாதேவி அபராஜிதனிடம்.

“பெண்ணை மயக்குவதில் பெயர் பெற்றவர் என்று கேள்விப்பட்டிருந்தேன். ஆண்களையும் மயக்க ஆரம்பித்துவிட்டீர்களே. சோழ நாட்டிலிருந்தே வாங்கி வந்தீர்களா சொக்குப் பொடியை..?” என்று ஆதித்தனின் காதோடு பேசினாள் காரிகை சாருமதி.

மாலை நேரத்தில் நிலா முற்றத்தில் சாருமதிதேவி அமர்ந்திருந்தாள். ஆதித்தன் அங்கு வந்தான்.

“பரவாயில்லையே. என்னைப் பார்க்க வந்திருக்கிறீர்களே.”

“பார்க்க வரவில்லை. பதில் சொல்ல வந்தேன்.”

“எதற்கு?”

“காலையில் கேட்டாயே ஒரு கேள்வி. அதற்கு!”

“பதிலை யோசிப்பதற்கு இவ்வளவு நேரம் தேவைப்பட்டதா.”

“அப்போதே சொல்லியிருப்பேன், அருகே உன் அண்ணன் இருந்தான்” என்ற ஆதித்தன், காற்றில் அசைந்த கார்குழல் அவளுடைய பூவுடலைத் தீண்டிப் பொல்லாத்தனம் செய்து கொண்டிருப்பதைப் போதையுடன் பார்த்தான்.

பொற்புதையலைப் போர்த்தியிருக்கும் பூரிப்பில் அவள் மேனியை மூடியிருந்த மெல்லிய துகில் கர்வத்துடன் நிமிர்ந்து காட்சியளிப்பதையும்.. காற்று அவ்வப்போது அதன் கர்வத்தைக் கலைத்து, அவள் உடலில் ஒட்ட முடியாமல் துகிலைத் துரத்தியடிப்பதையும் ரசித்தபடி அவன் சொன்னான், “சோழ நாட்டில் சொக்குப் பொடி விற்பது உண்மைதான். ஆனால், அதை அங்கிருந்து வாங்கி வரவேண்டிய அவசியம் இல்லை.”

“ஏன்?”

“உற்பத்தியாவதே பல்லவ நாட்டில்தான் என்பதை உணர்ந்து கொண்டேன்.”

“சொக்குப் பொடியையே நீங்கள் சொக்க வைத்துவிட்டீர்களே” என்றபடி அவள் தலைகுனிந்தாள்.

“எனக்கொரு சந்தேகம்.”

“என்ன..?

“மல்லிகைப் பந்தலில் ‘ஆதித்தன்’ என்ற பெயரைக் கேட்டவுடன் அனலாகிவிட்டாயே. அது ஏன்..?”

“தஞ்சைக்கு என்னை அனுப்பி வைத்த போது, சோழ நாட்டாரிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென்று சொல்லி அனுப்பினார் நிருபதுங்கச் சக்கரவர்த்தி. குறிப்பாக உங்களைப் பற்றி அவர் கூறியிருந்த வார்த்தை.”

“சக்கரவர்த்தி என்னைப் பற்றி என்ன கூறினார்?”

“சொல்லக் கூடாத வார்த்தை அது.”

“சொல்லாமல்விடமாட்டேன்.”

“அப்படியா? சரி! சற்றுத் திரும்பி அமர்ந்து கொள்ளுங்கள். நான் கூப்பிடும்வரை இந்தப் பக்கம் பார்க்கக் கூடாது.”

அவன் திரும்பிக் கொண்டான். அவள் எழுந்து சென்று ஒரு ரோஜா மலரைப் பறித்து வந்தாள். இதழ்களை எடுத்து ஒன்று சேர்த்தாள்.

என்ன செய்கிறாள் இவள்? பூக்கோலம் போடுகிறாளா..?

“திரும்பலாம்..” என்றாள்.

நகர்ந்தாள். நழுவினாள்!

அவள் உட்கார்ந்திருந்த இடத்தை உற்றுப் பார்த்தான் ஆதித்தன். மலர் இதழ்களின் ஈரத்தினால் ஏதோ எழுதப்பட்டிருந்தது.

படித்துப் பார்த்தான்..

‘ஆதித்தன்– பெண் பித்தன்!’

“ஆ! என்னைப் பற்றிச் சக்கரவர்த்தியுமா இப்படிச் சொன்னார்..?”

காஞ்சி மாநகரம் இதுவரை கண்டிராத பரபரப்போடு காட்சியளித்தது. பல்லவப் பெருநாட்டின் மகாமண்டல சபை கூடப் போவதாகப் பேசிக் கொண்டார்கள்.

பொதுமக்கள், கூட்டம் கூட்டமாக வீதிகளில் நின்றிருக்க, தூதர்கள் புரவியின் மேல் பறந்து கொண்டிருந்தார்கள்.

மங்கலான நிலா வெளிச்சம் கம்பவர்மரின் மாளிகை மீது படிந்திருந்த தூசிகளைத் துடைத்துவிட்டுக் கொண்டிருந்தது.

எதிரே கிடந்த ஆசனங்களில் அமர்ந்திருந்த ஆதித்தன், அபராஜிதன், சாருமதி மூவரையும் நோக்கிக் கம்பவர்மர் கூறினார்: "விஜயாலயருடைய திட்டத்திற்குக் கிடைத்த முதல் வெற்றி இது. மகாமண்டல சபை கூடுகிறது. விடிந்தால் தெரிந்துவிடும் பல்லவ நாட்டின் விதி!"

"தந்தையே! தளபதி இருசப்ப பூபதியின் உதவி நமக்குக் கிட்டாதா?" என்றான் அபராஜிதன்.

"மலையைத் திருப்பலாம், அவனுடைய மனத்தைத் திருப்ப முடியாது. இருசன் கடமை தவறாதவன்! கருத்து வேறுபாடு கொண்ட படைகளையெல்லாம் ஒரு கட்டுக்குள் வைத்திருப்பவன். இந்தத் திட்டம் நிறைவேறுவது இருசனை எப்படிச் சமாளிக்கப் போகிறோம் என்பதைப் பொறுத்தது" என்ற கம்பவர்மர் ஆதித்தனைப் பார்த்துக் கேட்டார்:

"விஜயாலயருடைய ஆலோசனையின்படியே அனைவரும் நடந்து கொள்வோம். உரிய சமயத்தில் உதவி கிடைக்குமல்லவா..?"

"எல்லாம் திட்டமிட்டபடியே நடக்கும். நாளை மறுநாள்— என் தந்தையின் காஞ்சிப் பிரவேசம்! அவராக நம்மைத் தொடர்பு கொள்ளும் வரை நாம் அவசரப்படக் கூடாது" என்றான் ஆதித்தன்.

சாருமதி கூறினாள்: "தலைமறைவாய் இருந்து அண்ணன் அபராஜிதனுக்கு உதவ வேண்டிய பொறுப்பு தஞ்சை இளவரசருடையது!"

"இப்போதே புறப்படுகிறேன்" என்று எழுந்தான் ஆதித்தன்.

சாருமதி கலகலவென்று சிரித்தாள்.

"அவசரப்படக் கூடாது என்று சொன்னவரே அவசரப்படுகிறார்" என்று கூறியவள், "உட்காருங்கள்! மாளிகையைச் சுற்றிலும் ஒற்றர்கள்! காலையில் போகலாம்" என்றாள்.

“காலையில் மட்டும் ஒற்றர்கள் காணாமல் போய்விடுவார்களா..?” என்ற ஆதித்தனின் குரலில் கொஞ்சம் கோபம் இருந்தது.

“காலையில் சபை கூடுவதால் தெருவெல்லாம் பரபரப்பாக இருக்குமே..?” என்ற ஐயத்தை எழுப்பினான் அபராஜிதன்.

“பரபரப்பான சூழ்நிலைதான் ரகசியங்களைப் பரிமாறிக் கொள்ள ஏற்றது” என்ற சாருமதி தன் திட்டத்தை விளக்கினாள்:

“தந்தையே! தஞ்சை இளவரசர் போக வேண்டிய இடம் வடமொழிக் கடிகை. பாண பண்டிதரிடம் இவர் பாடம் கேட்கப் போகிறார். இவரிடம் பாடம் கேட்பதற்காக ஐந்நூறு மாணவர்கள் அங்கு காத்திருக்கிறார்கள். சமிக்ஞை கிடைத்தவுடன் எல்லோரும் சேர்ந்து சக்கரவர்த்திக்குப் பாடம் நடத்துவார்கள். இதுதானே நமது திட்டம்?”

“ஆமாம்.”

“வடமொழிக் கடிகை பாதாளச் சிறைக்கோட்டத்தின் பக்கத்தில் இருக்கிறது. அதனருகில் கயிலாயநாதர் கோயில். சிறைக்கோட்டம் இருக்கும் தெருவில்தான் நாற்படை நாயகர் இருசப்ப பூபதியின் வீடு. எனவே இரவெல்லாம் காவல் வீரர்களின் கண்காணிப்பு மிகுந்திருக்கும்! இங்கிருந்து வெளியேறுவதும் சந்தேகத்திற்கிடமில்லாமல் அங்கு சென்று சேர்வதும் கடினம்.”

“உண்மைதான்..” என்றார் கம்பவர்மர் கவலையுடன்.

“காலை நேரத்தில் அது இன்னும் கடினமாகிவிடாதா..?” என்றான் ஆதித்தன்.

“ஆகாது...! விடிந்தவுடன் காஞ்சியின் வீதிகளில், கோட்டத் தலைவர்கள் அதிகாரிகள் என்று பல இடங்களிலிருந்தும் வந்தவர்கள் பரபரப்பாகப் போய்க் கொண்டிருப்பார்கள். அந்த ஆரவாரங்களுக்கு மத்தியில் மாறுவேடமிட்ட அந்நியர் ஒருவரை அடையாளம் கண்டு கொள்வது அரிது!”

சாருமதி சொல்வதை ஒப்புக்கொள்வது போல் அமைதியாக இருந்தனர் மூவரும். இளவரசி மேலும் தொடர்ந்தாள். “அதுமட்டுமல்ல.. விடிந்தவுடன் நான் கயிலாயநாதரை வழிபடப் போகிறேன். மகாமண்டல சபைக் கூட்டம் முடியும்வரை என் பல்லக்கை எவரும் தடுக்கமாட்டார்கள். என் மூடு பல்லக்கில் இவரும்

வருகிறார். கயிலாயநாதர் கோயிலில் வழிபாடு செய்துவிட்டு இவர் கடிகைக்குப் போகலாம்.”

“அற்புதம்..” என்று பாராட்டினார் கம்பவர்மர். “அருமையான திட்டம்..” என்றான் ஆதித்தன். அபராஜிதனோ தன் தங்கையைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

அந்தக் காட்சி ஆதித்தனின் மனத்தில் மிகப் பெரிய ஆதங்கத்தை ஏற்படுத்தியது. ஓர் ஏக்கப் பெருமூச்சும் எழுந்தது தஞ்சை இளவரசனிடமிருந்து.









# 32



# கொற்றவன் செய்த குற்றம்

பல்லவ நாட்டின் மகாமண்டல சபை பரபரப்போடு கூடிய சிம்மவிஷ்ணு மண்டபத்தில், ஏதோ நடக்கப் போகிறது என்ற எதிர்பார்ப்பும்.. என்ன நடக்கப் போகிறதோ என்ற கேள்வியும் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் உட்கார்ந்திருந்தது.

மந்திரி மண்டலத்தார், நாற்படைத் தலைவர்கள், வாரியப் பெருமக்கள், கோட்டத் தலைவர்கள் அனைவரும் சபையில் கூடியிருந்தனர்.

மெய்க்காவல் வீரர்கள் புடை சூழ மண்டபத்திற்குள் பிரவேசித்தார் சக்கரவர்த்தி.

வாயிற்காவலன் அறிவிப்புச் செய்தான்: "அரசர்க்கரசர், அவனிநாயகர், சத்ருமல்லர், சண்டப் பிரசண்டர், சத்துருகேசரி, சங்கீதபோஷகர், சக்கரவர்த்தி நிருபதுங்கவர்மர் வருகிறார்.."

சபை முழுதும் எழுந்து நின்றது. இருபுறமும் கம்பீரமாகத் திரும்பிப் பார்த்தபடி தன்னுடைய தங்கச் சிம்மாசனத்தை நோக்கி நடந்து சென்ற சக்கரவர்த்தி, நடுவில் கொஞ்சம் தயங்கி, அடுத்து வந்த கொண்டிருந்த அபராஜிதனைத் தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டார். அவை முழுதும் ஆரவாரம் எழுந்தது.

கைப்பிடிகளில்— இருபுறமும் உயர்ந்த விளக்குகளும் நடுவே அமர்ந்திருக்கும் நந்தியுமாய், பல்லவர்களின் இலச்சினை பளபளத்துக் கொண்டிருந்த சிம்மாசனத்தில் அமர்ந்தார் நிருபதுங்கவர்மர்.

நந்திவர்மப் பல்லவரின் காலத்திலிருந்தே அமைச்சர் பொறுப்பை வகித்து வரும் முதியவரும், முதன் மந்திரியுமாகிய இறையூர் உடையார் எழுந்து முழங்கினார்:

“சக்கரவர்த்தி அவர்களின் தம்பியார் களம்பல கண்ட கம்பவர்மரும் அவரது திருமகனார் இளவரசர் அபராஜிதரும் வேண்டுதல் முன் வைக்க, மகாமண்டல சபையின் அதிபதியான சக்கரவர்த்தி அவர்களின் சம்மதத்தோடு சபை கூட்டப்பட்டுள்ளது. பல்லவப் பெருநாட்டு, செங்காட்டுக் கோட்டத்துத் திருக்காட்டுப்பள்ளி நாட்டுப் புழலேரி ஊரைச் சேர்ந்த பிரம்மராய நம்பன் இறையூர் உடையானாகிய நான் அறிவிப்புச் செய்ததைப் பட்டய எழுத்துக்காரர் பதிவு செய்யக் கடவது..”

இளவரசனைச் சக்கரவர்த்தி அன்புடன் நோக்கி, “மகாமண்டல சபையைக் கூட்டுமாறு கோரிக்கைவிடுத்த காரணம் என்ன..? விவரத்தை அவைக்கு விளக்கு” என்று கட்டளையிட்டார்.

“சக்கரவர்த்தியவர்கள் அளவுமீறிப் பாண்டியர்களுக்கு ஆதரவு காட்டுவதாகச் சோழ நாட்டார் சுட்டிக்காட்டுகிறார்கள். குடிமக்களும் குமுறுகிறார்கள்” என்றான் அபராஜிதன்.

“தவறில்லையே. வரகுணன் தந்தையை இழந்தவன்” என்று சாதாரணமாகக் கூறினார் சக்கரவர்த்தி.

“பரிதாபம் கொள்ளலாம்! அதற்காக ஜென்மப் பகைவனோடு சேர்ந்து கொள்ளலாமா?”

“ஆமாம்..” என்றும் “உண்மைதான்” என்றும் சபையில் அங்கங்கே சலசலப்பு எழுந்தது.

“பாராளும் மன்னர்களுக்குப் பகைவர்களோ நண்பர்களோ நிரந்தரமில்லை அபராஜிதா!” என்றார் நிருபதுங்கவர்மர்.

“உண்மைதான் தந்தையே! ஆனால், நந்திவர்மப் போத்தரையரைக் குடமூக்குப் போர்க்களத்தில் தோற்கடித்து அவமானப் படுத்தியவர்களல்லவா பாண்டியர்கள்?”

“குடமூக்குப் போர்க்களத்தில் நந்திவர்மர் படை நடத்தவில்லை. நானும் போகவில்லை. அந்தப் போருக்குத் தலைமை தாங்கியவன்..”

என்று நிறுத்திய சக்கரவர்த்தி "என் தம்பி கம்பவர்மன்" என்று சிரித்தார் ஏளனமாக.

"அந்தப் போரில் கடுமையாகப் போராடி என் தந்தை கால்களை இழந்தார்" என்றான் அபராஜிதன்.

"கம்பவர்மன் என்று பெயர் வைத்தது தவறாகப் போய்விட்டது. அதனால்தான் என் தம்பி கம்பை ஊன்றிக் கொண்டு நடக்கிறான்" என்று நகைத்தார் சக்கரவர்த்தி.

அவையில் சிலர் சிரித்தார்கள். சிலர் முகம் சுளித்தார்கள்.

நிருபதுங்கர் கேட்டார்:

"குடமூக்கில் நேர்ந்த அவமானத்திற்காக நானே படை நடத்திச் சென்று பாண்டியர்களை *அரிசிலாற்றங்கரையில் பழிவாங்கவில்லையா..?"

"விஜயாலயருக்கும் அந்த வெற்றியில் பங்குண்டு."

"தஞ்சையை அவர் கைப்பற்றுவதற்கு மறைமுகமாக நாம் உதவினோம். நல்ல மனிதர் என்பதால் விஜயாலயர் நன்றி காட்டினார்."

"அரிசிலாற்றங்கரையில் மட்டுமல்ல, அடுத்தடுத்து நடந்த பல போர்க்களங்களிலும் துணையாக நின்று நமக்குத் தோள் கொடுத்தார்."

"உண்மைதான். ஆனால், முத்தரையர்கள் தஞ்சையை ஆண்ட போது நமக்குத் திறை செலுத்திக் கொண்டிருந்தனர். விஜயாலயர் திறை செலுத்துவதில்லை. அதற்குப் பதிலாகத்தான் படை நடத்தும் நேரங்களில் நமக்குப் பக்கத்துணையாய் நிற்கிறார்."

"அதுமட்டுமல்ல தந்தையே! நாம் கைப்பற்றியிருந்த சோழ நாட்டின் சில பகுதிகளை வழங்குவதாக விஜயாலயருக்கு வாக்களித்திருந்தீர்கள்!"

---

*பாகூர்ப் பட்டயம் கூறுவதாவது: 'முன் ஒருமுறை பாண்டியர்க்குத் தோற்ற பல்லவர் படை இப்போது அரசனது அருளால் (நிருபதுங்கவர்மன் படை நடத்தியதால்) வெற்றிபெற்றது.

"அப்படியா..?" என்று புருவங்களை நெரித்த சக்கரவர்த்தி, "சாசனம் இருக்கிறதா..?" என்று கேட்டார்.

"செப்புப் பட்டயம் எதுவும் அவ்வாறு செதுக்கப்படவில்லை" என்றான் *உள்படு கருமத் தலைவன்.

முதலமைச்சர் குறுக்கிட்டார்: "அரசர்களின் அந்தரங்க உரையாடல்கள் பட்டயங்களில் பதிவு பெறுவதில்லை. அதனால், செப்புப் பட்டயமில்லாத வாக்குறுதி எதுவும் செல்லுபடியாகாது."

"புதிதாக எதையும் கொடுக்க வேண்டாம். ஏற்கனவே அவர்களிடம் இருப்பதையும் பறித்துக் கொள்வது பாவமல்லவா?"

"இளவரசர் என்ன சொல்கிறார்?" என்றார் சக்கரவர்த்தி.

"இடவையைச் சோழர்கள் இழந்தார்கள்!"

"எடுத்துக் கொண்டவர்கள் நாமல்ல!"

"தடுத்திருக்க வேண்டியது நம் கடமை!"

"உண்மைதான்! வரகுணனுடைய பாட்டனார் கட்டிய **பாண்டிய அரண்மனை இடவையில் இருந்தது. பாட்டனுடைய உழைப்பில் உருவான பிரசித்தி பெற்ற அரண்மனையைப் பேரன் பெற நினைத்ததில் பிழையில்லை. அந்த நியாயத்தைக் கருதித்தான் இடவைப் போரின் போது விஜயாலயருக்கு நாம் உதவவில்லை!

அபராஜிதனுக்கு ஆத்திரம் வந்துவிட்டது. "தர்மம் நியாயம் எல்லாவற்றையும் கட்டிக் காப்பாற்றும் தருமாசனத்தின் தலைவரே இடவையைக் கைப்பற்றுமாறு பாண்டியனைத் தூண்டிவிட்டிருந்தால் அது துரோகமல்லவா..?"

அவையில் கலவரத்தை ஆரம்பித்து வைத்தது அவனுடைய கேள்வி.

---

*உள்படு கருமத் தலைவன்— Private Secretary

**இடவை நகரில் இவன் (வரகுண பாண்டியன்) பாட்டன் வரகுணபாண்டியரது அரண்மனை இருந்த காரணம் பற்றியே, இவன் முதலில் அதன் மீது படையெடுத்துச் சென்று அதனையும் அதனைச் சூழ்ந்த பகுதியையும் கைப்பற்றிக் கொண்டான் என்க.

—அறிஞர் சதாசிவப் பண்டாரத்தார் —பாண்டியர் வரலாறு பக்—56

"என்ன!" என்று ஆவேசத்துடன் எழுந்தார் சக்கரவர்த்தி. "என்னைத் துரோகி என்கிறாயா?" என்று சீறினார்.

கூச்சலும் குழப்பமுமாக அவை கொந்தளித்தது. முதலமைச்சர் பணிவுடன் வேண்டினார். "மாமன்னரின் திருவடி தொழுதோம். அன்பு கூர்ந்து அமர வேண்டும்!"

அபராஜிதனை நோக்கித் திரும்பிய முதலமைச்சர், "இளவரசே! மகாமண்டல சபையில் பேசுவதற்கு ஒரு மரபு இருக்கிறது. நாவடக்கம் வேண்டும்" என்றார் சற்றே கண்டிப்பான குரலில்.

"அடக்கமாகத்தான் இருந்தேன். என்னை அடக்கம் செய்யத் திட்டமிட்ட போதுதான் ஆவேசம் கொண்டேன்" என்றான் அபராஜிதன்.

"குற்றச்சாட்டுகளிருந்தால் கூறலாம். ஆத்திரத்தில் அவதூறாகப் பேசக் கூடாது."

"நல்லது! என் மதிப்பிற்குரிய பெரிய தந்தையாரும் பல்லவ நாட்டின் சக்கரவர்த்தியுமான தருமாசனத் தலைவர் மீது, கம்பவர்மப் பல்லவரின் மகனும் பல்லவ நாட்டின் இளவரசனுமாகிய நான் கூறுகிற குற்றச்சாட்டுகளாவன:

முதல் குற்றச்சாட்டு— சக்கரவர்த்தி பாண்டியர்களின் பக்கம் சாய்ந்துவிட்டார் என்பது.

இரண்டாவது குற்றச்சாட்டு— பல்லவர்களின் நட்பு நாடான சோழ நாட்டை இக்கட்டான நேரத்தில் கைவிட்டதன் மூலம் நமக்குக் களங்கம் உண்டாக்கினார்.

மூன்றாவது குற்றச்சாட்டு— இடவையைக் கைப்பற்றுமாறு பாண்டியனை இவரே தூண்டியதன் மூலம், என்றுமே தீராத பழியைப் பல்லவ இனத்திற்கு ஏற்படுத்தினார்."

—அபராஜிதன் குமுறிவிட்டு அமர்ந்தான்.

அவை நிசப்தமாக இருந்தது. சற்று நேரம் எதுவுமே பேசாத சக்கரவர்த்தி, "**தோளில் வளர்த்த பிள்ளை— துள்ளுகிறது**" என்றார் தளர்ந்த குரலில்.

கழிவிரக்கம் தோன்றும்படி பேசப்பட்ட அந்த வார்த்தைகள் அபராஜிதனைக் கண்கலங்க வைத்தன.

அவையிலிருந்து வெளியேறிவிடலாமா என்று ஒருகணம் நினைத்த அபராஜிதன், இருக்கையிலிருந்து எழுந்தான். மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு மறுபடியும் அமர்ந்தான்.

முதுமையின் அதிகாரம் பெற்ற முதலமைச்சர் பேசினார்.

"நல்லது இளவரசே! பல்லவ அரசியலின் நெறிமுறைப்படியும், மகேந்திரவர்மர் காலத்திலிருந்து நடந்து வருகின்ற நடைமுறைப்படியும், நாட்டு நலன் கருதி நடவடிக்கை மேற்கொள்ளவும், அயல்நாடுகளுடன் உறவு கொள்வது பற்றிச் சுயமாக முடிவு செய்து கொள்ளவும் சக்கரவர்த்திக்கு அதிகாரம் உண்டு. அவ்வப்போது மேற்கொள்கிற அவசர, யுத்த நடவடிக்கைகளுக்கு மட்டும் மந்திரி மண்டலத்தார் சம்மதம் கேட்பது மரபு.

மாய பாண்டியன் கலகத்தின் போது மதுரைக்குப் படை அனுப்பியதும், இடவைப் போரின் போது விஜயாலயருக்குப் படை அனுப்பாததும் சக்கரவர்த்தி தனித்தெடுத்த முடிவுகளல்ல. அந்தரங்க ஆலோசனை சபை கூட்டி, மந்திரி மண்டலத்தார் சம்மதத்துடன்தான் அந்த முடிவுகள் மேற்கொள்ளப்பட்டன.

மூன்றாவதாக நீங்கள் கூறிய குற்றச்சாட்டை மட்டும் மகாமண்டல சபை கருத்தில் கொள்கிறது. சோழ நாட்டை நோக்கிப் படையெடுக்குமாறு, பாண்டியனைச் சக்கரவர்த்தியே தூண்டினார் என்பதற்குத் தக்க ஆதாரம் இருந்தால் சபையில் சமர்ப்பிக்கலாம்."

அபராஜிதன் எழுந்தான். எதுவும் பேச இயலாமல் நின்றான். வேதனை மிகுந்த குரலில் வெளிவந்தன வார்த்தைகள்.

"'தோளில் வளர்ந்த பிள்ளை துள்ளுகிறது' என்று சக்கரவர்த்தி கூறிய போது நான் துடித்துப் போனேன். தாயினும் சாலப் பரிந்து வளர்த்த என் பெரிய தந்தையாரின் இதயத்தைக் கீற விரும்பவில்லை. குற்றச்சாட்டுகளையெல்லாம் தள்ளுபடி செய்யக் கோருகிறேன்."

முதலமைச்சர் புன்னகை பூத்தார். "படை வெல்லாததைப் பாசம் வெல்லும் என்பதை அவனிக்கு உணர்த்திவிட்டார் அபராஜிதர்" என்றார் மகிழ்ச்சியுடன்.

நிருபதுங்கர் அந்த மகிழ்ச்சியை நிலைக்கவிடவில்லை. "அபராஜிதன் பின்வாங்கியதற்கு அன்பு காரணமில்லை" என்றார். "அவனிடம் ஆதாரம் இல்லை" என்று மீண்டும் கூறினார்.

“வேண்டாம் தந்தையே! இதோடு விட்டுவிடலாம்..” என்றான் அபராஜிதன்.

“விட முடியாது மகனே! நீ சுமத்தியது சாதாரணக் குற்றச்சாட்டா? ஆதாரம் காட்டாமல் உன்னை நான் விடப்போவதில்லை.”

“ஆதாரம் இருக்கிறது! தங்களுக்குச் சேதாரம் வரக்கூடாதென்று தயங்குகிறேன்!”

“பரவாயில்லை மகனே! உன் பாச உணர்வைப் பாராட்டுகிறேன். ஆனால், ஆதாரத்தை அறிந்து கொள்ளவே அவை ஆசைப்படுகிறது” என்றார் நிருபதுங்கர்.

பரபரப்பு மீண்டும் பரவியது. திடீர்த்திருப்பத்தால் ஏற்பட்ட திகில்—முகங்கள் தோறும் முகாமிட்டது.

அபராஜிதன் நடந்தான். இடுப்புக் கச்சையில் இருந்த குழலை உருவி, அதன் மூடியைத் திறந்தான். உள்ளே இருந்த ஓலை நறுக்கினை முதலமைச்சரிடம் நீட்டினான். அதை வாங்கிப் பார்வையிட்ட முதலமைச்சர், அளவிலா அதிர்ச்சியுடன் அதனை அதிகரண போஷகரிடம் காட்ட, அவர் அதனை உள்படு கருமத் தலைவனிடம் ஒப்படைக்க, சக்கரவர்த்தியிடம் அதைச் சமர்ப்பித்தான் அவன்.

ஓலையைக் கையில் வாங்கியதுமே நிருபதுங்கவர்மரின் முகத்தில் இருள்மண்டியது. நீண்டநேரம் அதை உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தார். உரத்த குரலில் ஓலையைப் படித்தார்.

“எண்ணம் ஈடேறுக இடவையில்!

நந்தி குறுக்கே நிற்காது.”

படித்து முடித்ததும் சட்டென்று சிரிக்கத் தொடங்கினார்.

“இதை யார் எழுதியது?”

“கீழே ஒப்பமிடப்பட்டுள்ளது..”

“அதுதான் யாருடைய ஒப்பம் என்று கேட்கிறேன்.”

“சாட்சாத் சக்கரவர்த்தியின் கையொப்பம்தான்.”

“இல்லை. இதில் ஏதோ சூது நடந்திருக்கிறது” என்ற சக்கரவர்த்தி, “இது எப்படி உனக்குக் கிடைத்தது?” என்று கேட்டார்.

"அதைத் தெரிவிக்க வேண்டிய அவசியம் இல்லை."

"எனக்குத் தெரியாமலேயே என் முத்திரை பொறிக்கப்பட்டுள்ளது. போலி ஒப்பமும் போடப்பட்டுள்ளது" —சக்கரவர்த்தியின் குரலில் சினமும் சீற்றமும் சேர்ந்திருந்தன.

"ஓலையை மந்திரி மண்டலத்தார் பொறுப்பில் ஒப்படைக்கிறேன். ஆவணக் களஞ்சியத்திற்கு அனுப்புங்கள். பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கும் *ஊரார் கையெழுத்துக்களோடு ஒப்பிட்டுப் பாருங்கள். இதை எழுதியது யார் என்பதைக் கண்டுபிடித்து நட்ட நடுவீதியில் வெட்டிப்போட வேண்டும்" என்று உறுமிய நிருபதுங்கவர்மர், "ஆவணக் களஞ்சிய அதிகாரி என்னுடைய ஒப்பங்களையும் இதோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம்" என்றார்.

உள்படு கருமத் தலைவன் உரைத்தான்: "ஓலையெல்லாம் ஆராய்வதென்றால் ஒரு நாளாவது ஆகும்!"

"ஆகட்டும். நாளை மறுநாள் மகாமண்டல சபை மறுபடியும் கூடட்டும்" என்று கட்டளையிட்டபடி எழுந்து நின்றார் சக்கரவர்த்தி.

"மகாமண்டல சபையில் நாளை மறுநாள் நீங்கள் நடத்தப் போகும் நாடகத்தைப் பார்க்க நான் வர இயலாது" என்று அலட்சியமாகக் கூறினான் அபராஜிதன்.

"எங்கு போகிறாய்..?"

"பல்லவ நாடு சோழர்களுக்குச் செய்த அநீதிக்கு பரிகாரம் தேடப் போகிறேன். பாண்டியர்களின் மீது படையெடுக்கப் போகிறேன்."

"யாருடைய அனுமதியின் பேரில் படையெடுக்கப் போகிறாய்?" என்று சீறினார் சக்கரவர்த்தி.

"பாலாற்றங்கரையில் இருக்கும் தென் மண்டலச் சேனை என் அதிகாரத்தில் இருக்கிறது. எவருடைய அனுமதியைக் கேட்க வேண்டும்!" என்று சிரித்தான் அபராஜிதன்.

---

*அந்தந்த ஊரார் கையெழுத்துக்களையும், கை ஒப்பங்களையும் தனியாய் ஊர்ப் பொது அரசாங்க அறச்சாலைப் பாதுகாப்பில் வைக்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது.

—டாக்டர். இராசமாணிக்கனார். பல்லவர் வரலாறு— பக்கம்—225.

"அபராஜிதா.. விளையாடாதே!"

"நான் விளையாடவில்லை தந்தையே! உங்கள் அரசியல் விளையாட்டுக்களுக்கு ஒரு முடிவு கட்டப் போகிறேன்" என்று முழங்கிவிட்டு அவையிலிருந்து வெளியேறத் தொடங்கினான் அபராஜிதன்.

பற்களை நறநறவென்று கடித்தபடி, தளபதி இருசப்ப பூபதியைப் பார்த்து நிதானமிழந்து கத்தினார் நிருபதுங்கச் சக்கரவர்த்தி. "அபராஜிதனை சிறைப்படுத்துங்கள்!"

கட்டளையிட்ட அந்தக் கடுமையான குரல் மண்டபத்தின் சுவர்களெங்கும் மோதி எதிரொலித்தது. அவையோர் திடுக்கிட்டு அதிர்ச்சியடைந்தனர்.

'இது என்ன விபரீதம்?' என்ற கேள்வி எல்லாருடைய இதயங்களிலும் எழுந்தது.









33



# வெறுப்பின் விதைகள்

நிருபதுங்கச் சக்கரவர்த்தியின் கடுமையான நடவடிக்கையை யாரும் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை என்பது அவையில் நிலவிய அமைதியில் தெரிந்தது. அபராஜிதனைக் கைது செய்யுமாறு அவர் ஆணையிட்டவுடன் அங்கிருந்த அனைவருமே அதிர்ச்சியடைந்தனர். அதிர்ச்சியடையாமலும் ஆவேசம் கொள்ளாமலும் அமைதியாய் இருந்தவன் அபராஜிதன் மட்டுமே.

அவையிலிருந்து வெளியேறி நடக்கத் தொடங்கியவன், சக்கரவர்த்தியின் ஆணையைக் கேட்டவுடன் அசையாமல் நின்றான், அலட்சியத்துடன். இளவரசனின் இதழ்களுக் கிடையே ஒரு புன்னகையும் எட்டிப் பார்த்தது.

முதலமைச்சர் பிரம்மராய நம்பன் இறையூர் உடையாரும், அதிகரண போஷகரும் எழுந்து நிருபதுங்கரை நெருங்கி அமைதிப்படுத்தி ஆற்றுவிக்க முயன்றனர். நாற்படை நாயகனான தளபதி இருசப்ப பூபதியும் “சக்கரவர்த்தி அவர்களே..!” என்று ஏதோ சொல்லத் தொடங்கினான்.

கண்களில் கனல் பறக்க நிருபதுங்கவர்மர் கத்தினார். “யாரும் எதுவும் பேச வேண்டியதில்லை! ஏன் தயங்கி நிற்கிறாய் இருசா? ஆணையை நிறைவேற்று! அபராஜிதனைச் சிறைப்படுத்து, பாதாளச் சிறைக்கோட்டத்திற்கு அனுப்பு!”

வீரர்களை அழைத்து அபராஜிதன் கைகளில் விலங்கினை மாட்டிய தளபதி, "மன்னியுங்கள் இளவரசே!" என்று கூறியபடி ஒரு பெருமூச்சுவிட்டான். அவையில் எழுந்து நின்ற சிலர் மீண்டும் அமர்ந்தனர்— நிருபதுங்கவர்மரின் நெருப்புப் பார்வையைத் தாங்க முடியாமல்.

மண்டபத்தின் வாயில் வரை சென்று பலத்த பாதுகாப்புடன் அபராஜிதனை அனுப்பிவிட்டுத் திரும்பிய தளபதி, தலையைத் தொங்கவிட்டவாறே வந்தான். பதுமைபோல் அவன் நடந்து வந்தது பார்ப்பதற்கே விநோதமாய் இருந்தது.

"ஏன் தலைகுனிந்து நடக்கிறாய் இருசா?" என்று சத்தமிட்டார் சக்கரவர்த்தி.

"சக்கரவர்த்தி அவர்களே! சரித்திரத்தின் முன் பல்லவர்கள் தலைகுனியும் சம்பவம் நடந்திருக்கிறது" என்றான் தளபதி.

"புத்தியற்றவனே! போ நகர்ந்து!" என்று பொங்கினார் நிருபதுங்கர்.

இருசப்ப பூபதியின் முகம் இருண்டது. சட்டென்று தன் கச்சையிலிருந்து உறைவாளை உருவியவன், அதைச் சக்கரவர்த்தியின் காலடிகளில் வைத்துவிட்டு வணங்கினான்.

"கேட்கக் கூடாத வார்த்தைகளைக் கேட்டேன். கடைசியாக நீங்களிட்ட கட்டளையையும் நிறைவேற்றிவிட்டேன். பதவியிலிருந்து விலகிக் கொள்கிறேன்!"

முதலமைச்சர் குறுக்கிட்டார். "தளபதி! இது தகாது. குழப்பம் மிகுந்த இந்தச் சூழலில் நாற்படை நாயகன் பதவியிலிருந்து நீ விலகிச் செல்வது நல்லதல்ல."

சக்கரவர்த்தி உறுமினார்: "இவன் ஒருவன் பதவி விலகுவதால் காஞ்சி மாநகரமே காணாமல் போய்விடுமா? போகட்டும் விடுங்கள்!"

அதிர்ச்சிமேல் அதிர்ச்சியடைந்த அவையினர் செய்வதறியாமல் சிலைகளாய்ச் சமைந்தனர். மண்டபத்திலிருந்து அமைதியாக வெளியேறினான் தளபதி இருசப்ப பூபதி. அவன் சென்ற வழியில் நின்ற வீரர்களெல்லாம் பயபக்தியுடன் வழிவிட்டதுடன் பணிந்து வணங்கினர்.

கம்பவர்வமரும் சாருமதியும் மகாமண்டல சபையிலிருந்து வரக்கூடிய செய்திக்காகக் காத்திருந்தனர். பதற்றத்துடன் உள்ளே நுழைந்த வீரன், "இளவரசர் சிறைப்படுத்தப்பட்டார்" என்றான். "அப்படியா.." என்று அதிர்ச்சியடையாமல் கேட்டார் கம்பவர்மர்.

"தளபதி இருசப்ப பூபதி பதவியிலிருந்து விலகிவிட்டார்."

"அப்படியா!" என்று கேட்ட கம்பவர்மரின் குரல் இப்போது வியப்புடன் வெளிப்பட்டது.

"நீ போகலாம். மாளிகையைச் சுற்றிலும் நம்முடைய வீரர்களே இருக்கட்டும். மற்றவர்கள் கலந்துவிடாமல் கவனித்துக் கொள்" என்றார் கம்பவர்மர்.

"எதிர்பார்த்ததும் நடந்திருக்கிறது. எதிர்பாராததும் நடந்திருக்கிறது" என்றாள் சாருமதி.

"இருசன் பதவியில் இல்லாவிட்டால் காஞ்சியின் வீரர்களைக் கட்டுப்படுத்துவது கடினம். கண்ணியம் தவறாத அந்தக் கடமை வீரன் பதவி விலகியிருப்பதானது நம் வெற்றியை மேலும் விரைவுபடுத்தும்" என்ற கம்பவர்மர், "அதோ வீசத் தொடங்கிவிட்டது.. காஞ்சியின் புரட்சிப் புயல்" என்றபடி சாளரத்தின் அருகே நகர்ந்தார்.

"சக்கரவர்த்தி ஒழிக!"

"அபராஜிதனை விடுதலை செய்!"

மக்களின் ஆரவாரம் கேட்டுக் கொண்டிருந்தது மாநகர வீதிகளில்.

மண்டபம் காலியாகியிருந்தது. மகாமண்டல சபைக் கூட்டத்திற்கு வந்திருந்தவர்களெல்லாம் குழப்பத்தோடு வெளியேறியிருந்தனர்.

சக்கரவர்த்தி நிருபதுங்கவர்மர் மட்டும் அமைச்சர்களோடு ஆலோசனை நடத்திக் கொண்டிருந்தார். "அபராஜிதனை சிறைப்படுத்தியிருக்கக் கூடாது" என்றார் முதலமைச்சர் பிரம்மராய நம்பன் இறையூர் உடையார்.

"நடந்ததைப் பற்றிச் சொல்லாதீர்கள். இனி நடக்க வேண்டியதைச் சொல்லுங்கள்" என்று சீறினார் சக்கரவர்த்தி. பிரம்மராயரையே அவர் எடுத்தெறிந்து பேசிவிட்டதால், வாய்திறக்கும் தைரியம் அங்கிருந்த

யாருக்குமே வரவில்லை. "இருசன் இப்படிச் செய்வான் என்று எதிர்பார்க்கவில்லை" என்று மௌனத்தை உடைத்தார் மன்னர்.

"இளவரசரைச் சிறைப்படுத்தியதை இருசன் விரும்பவில்லை போலிருக்கிறது" என்றார் அதிகரண போஷகர்.

"போகட்டும். நாற்படை நாயகனாக யாரை நியமிப்பது?" என்று கேட்டார் நிருபதுங்கவர்மர்.

சுற்றியிருந்த யாரும் பதில் சொல்லவில்லை.

"புரவிப் படைத்தளபதியாக இருக்கும் உம்முடைய மகன் வீரசிம்மனை நியமித்துவிடட்டுமா?" என்று முதலமைச்சரை நோக்கிக் கேட்ட போது, "அவன் சிறுவன். அனுபவமற்றவன்" என்று அவசரமாக மறுத்தார்.

"வேறு யாரை நியமிக்கலாம்?" என்ற வினாவிற்கு எவரிடமிருந்தும் விடை கிடைக்கவில்லை.

"கொஞ்ச நேரத்தில் நகரம் கொந்தளிக்கப் போகிறது. என்னென்ன நடவடிக்கை எடுக்கலாம் என்பதையாவது சொல்லித் தொலையுங்கள்" என்று எரிந்து விழுந்த சக்கரவர்த்தி, அனைவரும் அமைதியாக இருக்கவே, "உங்களிடம் பேசி ஒரு பயனுமில்லை.." என்று எழுந்தார்.

மண்டபத்தினுள்ளே வேகமாக நுழைந்த ஒற்றர் தலைவன் அவரை நெருங்கித் தணிந்த குரலில் காதோடு கூறினான்.

"பாண்டிய நாட்டு அமைச்சர் தங்களைப் பார்ப்பதற்காகக் காத்திருக்கிறார். வரகுண பாண்டியரிடமிருந்து வந்திருக்கிறாராம்."

"அப்படியா..!" என்ற நிருபதுங்கவர்மர், "அவர் பெயர் என்ன?" என்று கேட்டார்.

"ஏனாதி பாண்டிய கோச்சடையார்."

"கேள்விப்பட்டிருக்கிறேன்.. சந்தித்ததில்லையே!" என்ற சக்கரவர்த்தி, "பரிசோதனை முடிந்ததா?" என்று கேட்டார். தலைதாழ்த்திய ஒற்றர் தலைவனிடம், "அரை நாழிகை கழித்து அரண்மனைக்கு அழைத்து வா!" என்று ஆணையிட்டார்.

காற்று சற்று வேகமாக வீசியது. அதன் கை விரல்களில் காத்திருந்தது ஒரு புயலின் அறிவிப்பு. தொலைதூரத்திலிருந்து அந்த அறிவிப்பின் அடையாளங்கள் கேட்டன.

"அநீதி ஒழிக!"

"அபராஜிதர் வாழ்க!"

"அரசர்க்கரசர், அவனிநாயகர், பல்லவ மாமன்னருக்குப் பாண்டிய நாட்டின் வணக்கம்!" என்று கூறியபடி உள்ளே நுழைந்த மனிதரை, "மதுரைத் தமிழ் மணக்கிறது. வாருங்கள்!" என்று வரவேற்றார் நிருபதுங்கச் சக்கரவர்த்தி.

வந்தவர் வயதானவராக இருந்த போதிலும், வாலிபம் நடந்த சுவடுகளின் வனப்பு அவருடைய மேனியெங்கும் மிளிர்ந்து கொண்டுதான் இருந்தது. தாடையில் குறுந்தாடி நீண்டு கூர்மையான குச்சியைப் போல் முடிந்திருந்தது. உதடுகளின் இருபுறமும் நரைத்திருந்த அடர்த்தியான மீசை கேள்விக்குறி போல் வளைந்து, செவிகளைத் தீண்டிக் கொண்டிருந்தது. தலையில் தலைப்பாகையும், மேனியில் வெள்ளை அங்கியும் காட்சியளித்தன.

இருக்கையில் அமரும் முன், இடுப்புக் கச்சையிலிருந்து வரகுண பாண்டியனின் முத்திரை மோதிரத்தை எடுத்துக் காட்டினார் ஏனாதி பாண்டிய கோச்சடையார். அதைத் தன் கைகளில் வாங்கிப் பரிசோதித்துப் பார்த்த நிருபதுங்கவர்மர், "எதையோ கொடுக்கிறீர்கள் என்று நினைத்தேன். கடைசியில் முத்திரை மோதிரம்.." என்று சிரித்தபடி திருப்பிக் கொடுத்தார். "கொடுப்பதற்கு வேறு கொண்டு வந்திருக்கிறேன்" என்று புன்னகைத்தார் கோச்சடையார்.

வீரர்கள் இருவரும் தூக்கிக் கொண்டு வந்து வைத்த பரிசை வியப்புடன் பார்த்தார் நிருபதுங்கர். கொற்கை முத்துக்களினால் செய்யப்பட்டிருந்த காஞ்சிக்கோட்டை அவரது கண்களைக் கவர்ந்தது.

வீரர்கள் வெளியேறிய பின், கோச்சடையார் கூறினார்: "தந்தையைப் போல் கருதும் தங்களுக்கு எங்கள் வரகுண பாண்டியர் அனுப்பிய அன்பின் அடையாளம்."

"விலைமதிப்பு அதிகமிருக்குமே..?" என்று மகிழ்ச்சியைத் தெரிவித்தார் மாமன்னர்.

"விலை மதிக்கவொண்ணாத் தங்கள் உதவிகளுக்கு ஓர் எளிய பரிசு இதுமட்டுமல்ல. பல்லவ நாட்டின் நாற்படையில், தேவைக்கேற்ப வளராமற் போனது *தேர்ப்படையே என்பதைத் தெரிந்து கொண்டு, ஐம்பது தேர்களைத் தங்களுக்காக அனுப்பி வைத்துள்ளார் எங்கள் அரசர். ஆயிரம் புரவிகளும் வந்துள்ளன. அவையெல்லாம் காஞ்சிக் கோட்டையின் வாயிலில் தங்கள் அனுமதிக்காகக் காத்திருக்கின்றன."

"அப்படியா..!" நிருபதுங்கர் நெகிழ்ந்தார்.

"கொற்கைத் துறைமுகத்தில் உங்களுக்காக ஒரு பிரும்மாண்டமான மரக்கலம் தயாராகிக் கொண்டிருக்கிறது. உங்கள் உல்லாசத்திற்காகவே அது உருவாக்கப்படுகிறது. இயல்தளம், இசைத்தளம், கூத்துத்தளம் என மூன்று தளங்களைக் கொண்ட முத்தமிழ் மரக்கலம் அது.

ஒரு தளத்தில் உங்களைப் புகழ்ந்து பாடிய கவிதைகளோடு புலவர்கள் காத்திருக்க, இன்னொரு தளத்தில் உங்களைப் பற்றிய பாமாலைகளைப் பண்ணோடு பாடிப் பரவசமூட்ட இசைவாணர்களும் இளம்பெண்களாகிய ஏழிசை வல்லபிகளும் நிறைந்திருப்பார்கள். சங்கீதபோஷகராகிய உங்களுக்காக யாழ், குழல் முதலிய

---

*1.தேர்ப்படை பல்லவரிடம் இருந்ததென்பதை மெய்ப்பிக்கக் கல்வெட்டு– பட்டயச் சான்றுகளோ, ஓவிய–சிற்பச் சான்றுகளோ இதுகாறும் கிடைத்தில்லை.

– டாக்டர் மா.இராசமாணிக்கனார்–பல்லவர் வரலாறு (மே 1968) பக் 226.

2.பல்லவர் தேர்ப்படையைப் பயன்படுத்தவில்லை என்ற கருத்து பொதுவாக நிலவி வந்தது. இக்கூற்றினை ஏற்றுக் கொள்ள இயலவில்லை. ஏனெனில் இந்தியாவில் படைகளின் பிரிவில் தேர்ப்படையும் ஒன்றாக நீண்டகாலம் விளங்கியுள்ளது. மேலும், பல்லவர்க்குச் சம காலத்தவரான பாண்டியர்கள் தேர்ப்படையினைப் பயன்படுத்தியுள்ளனர் என்று தெரிகிறது. பாண்டிய மன்னன் ஒருவன் பெயரே 'தேர்மாறன்' என்று வழங்கியுள்ளமை இங்கு கருதத்தக்கது. எனவே பல்லவர் தேர்ப்படையினைப் பயன்படுத்தினர் எனக் கருத இடமுள்ளது– ந.க. மங்கள முருகேசன்– பல்லவர் ஆட்சி முறை (1989) பக் 66.

இசைக்கருவிகளெல்லாம் அங்கு இடம் பெற்றிருக்கும். மகேந்திரவர்மரால் பிரசித்தி பெற்ற பரிவாதினி வீணையும் அங்கு உண்டு. மூன்றாவது தளத்திலோ..” என்று நிறுத்திய கோச்சடையார், “நாட்டிய தாரகைகள்— நாடக மேனகைகள்— அடடா, ஆனந்த பேரிகைகள்” என்று கண்களை மூடிக் களித்தார்.

“ஆகா..!” என்று மகிழ்ச்சியடைந்த சக்கரவர்த்தி, “வரகுண பாண்டியனுக்கு என் மீது அளவில்லாத பாசம்” என்றார்.

“ஆமாம், தாய்ப் பாசத்திற்கு அடுத்தபடியான தந்தைப் பாசம்!” என்று கோச்சடையார் கூறிய வார்த்தைகள் நிருபதுங்கவர்மரிடம் ஓர் ஏக்கப் பெருமூச்சை எழ வைத்தன.

“பிள்ளை இல்லாததால் இந்தத் தொல்லை!” என்ற வார்த்தைகளும் அவருடைய உதடுகளிலிருந்து உதிர்ந்தன.

“செவியுற்றேன் மாமன்னரே! சிக்கலான நேரத்தில் வந்திருக்கிறேன். அபராஜிதனிடம் சற்றே அவசரம் காட்டிவிட்டீர்கள்.”

“சிறைப்படுத்தியது தவறென்றா சொல்கிறீர்கள்?”

“தூக்கி வளர்த்த பிள்ளை துரோகம் செய்த பிறகு, சக்கரவர்த்தி அதைச் சகிக்க முடியுமா? சிறைப்படுத்தியது சரிதான் சிறுவனை. ஆனால்..” என்று நிறுத்தி, “கடைபிடித்த முறைதான் கலகத்தை உண்டாக்கும்” என்று கூறிய கோச்சடையாரை, நிமிர்ந்து பார்த்தார் நிருபதுங்கவர்மர்.

“அவை நடுவே சிறைப்படுத்தியிருக்கக் கூடாது. இரவோடிரவாக எவருக்கும் தெரியாமல் இழுத்துப் போயிருக்க வேண்டும். பாதாளச் சிறையில் பூட்டி வைத்துவிட்டு, ‘பாண்டிய நாட்டுக்குத் தூது போயிருக்கிறான்’ என்று பரப்பியிருக்க வேண்டும் செய்தியை!”

“ஆகா! இந்த அரிய யோசனையைச் சொல்ல ஆளில்லாமல் போனேனே! இப்படிச் செய்திருந்தால் குடிமக்களின் கொந்தளிப்பைத் தவிர்த்திருக்கலாமே!” என்று வருந்தினார் நிருபதுங்கர்.

“குடிமுழுகிப் போய்விடவில்லை இப்பொழுதும்! கையில் அதிகாரம் இருந்தால் கடல் அலைகளையும் கட்டுப்படுத்திவிடலாம். மக்கள் அப்பாவிகள்! மரங்களைப் போன்றவர்கள். இலைகள், கிளைகள்

இவற்றின் எண்ணிக்கையைப் பார்த்து மலைத்துவிடக் கூடாது. வேர்களை மட்டும் வெட்டினால் போதும். வீழ்ந்துவிடுவார்கள்!

முழக்கம் போடுபவர்களைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்! அவர்களுக்கு முகம் கிடையாது. தூண்டிவிடுகிறவர்களைத் தேடி தொலைத்தால் போதும்" என்ற கோச்சடையார், "ஒரு நல்ல யோசனை சொல்லட்டுமா?" என்று கேட்டார்.

"சொல்லுங்கள் அமைச்சரே!"

"பதவி விலகிய தளபதி இருசனைப் பிடித்து பல்லவ நாட்டில் குழப்பம் ஏற்படுத்தினான் என்று பறை அறிவித்துப் பட்டப்பகலில் நட்ட நடுத்தெருவில் பகிரங்கமாக வெட்டிப் போடுங்கள். காண்பவர்களுக்குக் கலக்கம் வரும். வெட்டப்பட்ட தளபதியைப் பற்றி விவாதம் கிளம்பும். அவனைப் பற்றியே பேசிக் கொண்டிருப்பதில் அபராஜிதனை மறந்துவிடுவார்கள் அப்பாவி மக்கள்."

"அற்புதமான யோசனை!" என்று மகிழ்ந்தார்.

"படைத் தலைமைப் பொறுப்பில் ஏழாவது எட்டாவது இடத்தில் எங்கேயோ இருக்கக் கூடிய ஓர் இளைஞனைத் தேர்ந்தெடுத்து, 'நாற்படை நாயகன்' என்று பட்டயம் கட்டிப் பதவி உயர்வு கொடுங்கள். குழப்பங்களை அடக்கிவிட்டுத்தான் மறுவேலை என்று கொடி பிடிப்பான்! நாயைக் காட்டிலும் உங்களிடம் நன்றியோடு நடந்து கொள்வான்."

ஆனந்தப் பெருக்கில் அவரைக் கட்டித் தழுவிக் கொண்ட சக்கரவர்த்தி, "ஆகா! பாண்டிய அமைச்சரே! நீர் எமது பல்லவ நாட்டின் அமைச்சராய் இருந்திருந்தால் எவ்வளவோ உதவியாய் இருந்திருக்கும்" என்று பாராட்டினார்.

"குழப்பங்கள் ஓயும்வரை எம்முடன் கூடவே இருந்துவிடுங்களேன்.." என்றும் கோரினார்.

"இந்த நிலையில் உங்களை இப்படியே விட்டுவிட்டுப் போக எனக்கும் மனம் வரவில்லை. ஆனால் உடனே திரும்பும்படி பாண்டியர் உத்தரவு."

"அதை நான் பார்த்துக் கொள்கிறேன். வரகுணனுக்கு இன்றே ஓலை அனுப்புகிறேன்" என்று எழுந்தார் நிருபதுங்கவர்மர்.

கம்பவர்மர் மிகவும் கவலையோடு காணப்பட்டார்.

“சாருமதி! குமுறல்கள் ஓய்ந்துவிட்டன. கொந்தளிப்பு அடங்கிவிட்டது. ‘அபராஜிதன் வாழ்க.. அபராஜிதன் வாழ்க’ என்ற கோஷங்களும் குறைந்துவிட்டன. மக்கள் அவனை மறந்துவிட்டார்கள். ஆமாம். அவர்களுடைய ஆவேசம் விரைவில் அடங்கிவிடும் என்பது எத்தனை உண்மை!” என்று ஆதங்கமுற்ற கம்பவர்மர் தொடர்ந்து கூறினார்:

“மகாமண்டல சபை நாளை மறுபடியும் கூடுகிறது. விஜயாலயரிடமிருந்து இதுவரை எந்தச் செய்தியும் இல்லை. காஞ்சியில் நடந்த கலகங்களையெல்லாம் அடக்கிவிட்டான் என் அண்ணன். என்ன மாயம் செய்தானோ தெரியவில்லை. படை வீரர்களையும் பணிய வைத்துவிட்டான். நாம் தீட்டிய திட்டங்கள் நிறைவேறும் என்று நான் நினைக்கவில்லை. நிருபதுங்கன் அடிபட்ட வேங்கை! குதறிக் கிழிக்காமல் அவன் கோபம் தீராது. எந்த நேரத்திலும் எதுவும் நடக்கலாம்.”





“தந்தையே! நம்பிக்கையை இழந்துவிட வேண்டாம். இப்போது ஏற்பட்டுள்ள அமைதிகூட ஏதோ ஒன்றின் அறிகுறியாகத்தான் தோன்றுகிறது. கவலைப்படாதீர்கள். விஜயாலயர் நம்மைக் கைவிடமாட்டார். விரைவில் ஏதாவது நடக்கும்.”

சாருமதி பேசிக் கொண்டிருந்த போதே அந்தச் சம்பவம் நடந்தது. உடன்பிறந்தவனைப் பற்றிக் கம்பவர்மர் உரைத்தது எத்தனை உண்மை என்பதை அது உணர்த்தியது. கனவுகளும் திட்டங்களும் கைகெட்டாத தொலைவில் போய்விட்டன என்பதைக் கண்கூடாகவே அவர் காண நேர்ந்தது.

‘இனிமேல் விஜயாலயர் வந்தாலும் என்ன செய்துவிட முடியும்?’ என்ற அவநம்பிக்கையும் எழுந்தது— அவருடைய உள்ளத்தில். நல்ல சூழலை நழுவவிட்டதுடன், தவறாக வழிநடத்தித் தங்களை ஆபத்திற்கு ஆளாக்கிவிட்டாரே என்று நினைத்த போது—

விஜயாலயர் மீது அவர் இதயத்தில் முதல் முறையாக விழுந்தன வெறுப்பின் விதைகள்!









34



# 'அவரா இவர்?!'

'ஏதாவது நடக்கும்' என்று இளவரசி சொல்லிக் கொண்டிருந்த போதுதான் திடீரென்று புதிதாகப் புகுந்த வீரர்களால் கம்பவர்மரது மாளிகையைக் காவல் புரிந்து கொண்டிருந்தவர்கள் அகற்றப்பட்டனர்.

ஏற்கனவே நின்றிருந்த வீரர்களின் இடங்களில் புதிய வீரர்கள் நின்று கொள்ள, பழைய வீரர்கள் அங்கிருந்து அழைத்துச் செல்லப்பட்டனர்.

வெளியே நடந்த இந்த மாற்றம் மாளிகையின் உள்மண்டபம் வரை பரவியது உடனடியாக.

புதிதாக வந்த வீரர்களைப் பார்த்துக் கம்பவர்மர் கேட்டார். "என்ன இது..? காலையிலும் மாலையிலும்தானே வீரர்கள் மாறுவது வழக்கம்?"

"பணி மாற்றம் நடந்திருக்கிறது ஐயா!" என்று பதிலுரைத்தான் புதிய வீரன்.

"யாரைக் கேட்டு நடந்தது?"

"எங்களுக்கும் தெரியாது. எங்கள் பிரிவின் தலைவர் வெளியே இருக்கிறார்."

இரு தோள்களிலும் கட்டைகளை ஊன்றிக் கொண்டு எழுந்து நடந்த கம்பவர்மர், சீற்றத்துடன், மாளிகையின் வாயிலைச் சென்றடைந்தார்.

“எங்கிருக்கிறான் உங்கள் தலைவன்?”

“அதோ அங்கே..” என்று சுட்டிக்காட்டினான்.

வாயிலைத் தாண்டி அவர் நடக்க முற்பட்ட போது வழியை மறித்தன வீரர்களின் வேல்கள்.

“விலகுங்கள்..” என்று அவர் வெகுண்ட போது “மாளிகையின் வெளியே செல்லத் தங்களுக்கு அனுமதி இல்லை” என்றான் ஒருவன்.

“ஏன்..?” என்று கத்தினார் கம்பவர்மர்.

“நீங்கள் காவலில் வைக்கப்பட்டிருக்கிறீர்கள்” என்று பணிவுடன் அவன் பதிலுரைத்தான்.

கடுஞ்சினமுற்ற கம்பவர்மரின் கர்ஜனையைக் கேட்டு வீரர்களின் தலைவன் அங்கு விரைந்தோடி வந்தான்.

ஆறுதல் கூறி அவரை உள்ளே அழைத்துச் சென்றவன், குரலைத் தாழ்த்திக் கொண்டு ரகசியமாக அவரிடம் கூறினான். “ஐயா! மன்னித்துக் கொள்ளுங்கள். புதிய தளபதியின் கட்டளை இது! இங்கிருப்பவர்களில் நான் ஒருவன்தான் பல்லவ வீரன். ஏனைய அனைவரும் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளாம்.”

“என்ன?” என்று திடுக்கிட்டார் கம்பவர்மர்.

“ஆமாம் ஐயா! சக்கரவர்த்தியின் அரண்மனை, மகாமண்டல சபை கூடப் போகிற மண்டபம் மற்றும் முக்கியமான இடங்களிலெல்லாம் பாண்டிய ஆபத்துதவிகளே பாதுகாப்பு வீரர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இவை எல்லாமே ஏனாதி பாண்டிய கோச்சடையாரின் ஏற்பாடு! நம்ம பல்லவ வீரர்களை அவர் நம்பவில்லை.”

“யார் அந்த கோச்சடையார்?”

“பாண்டிய நாட்டு அமைச்சராம். வரகுண பாண்டியர் அனுப்பி வைத்திருக்கிறாராம். கலகத்தை ஒடுக்கியது, காஞ்சியில் அமைதியை நிலைநாட்டியது எல்லாமே அவர்தான்! சக்கரவர்த்தி இப்போது அவருடைய விருப்பப்படிதான் ஆடுகிறார். தயவுசெய்து பொறுமையாக இருங்கள். தப்பிச் செல்ல முயற்சித்தால் தலைகொய்ய உத்தரவு!”

"பாண்டியனுக்கு ஆதரவு காட்டுகிறான் என் அண்ணன் என்றுதான் நினைத்தேன். நாட்டையே பணயம் வைத்துவிட்டானே பாதகன்!" என்று குமுறினார் கம்பவர்மர்.

"ஐயா! இன்னொரு ரகசியம்.." என்றான் தலைமை வீரன் தணிந்த குரலில்.

"இன்று இரவு இளவரசர் அபராஜிதரைச் சிறைமீட்க ஒரு முயற்சி நடக்கிறது. தலைமறைவாக இருக்கும் பழைய தளபதி இருசப்ப பூபதியும், சோழ நாட்டு இளவரசரும் அந்த முயற்சியில் ஈடுபடப் போவதாகத் தெரிகிறது. அந்த முயற்சி வெற்றிபெற்றால், பல்லவ நாட்டின் இருள் விலகும். பொழுது புலரும். வெற்றிபெறாவிட்டால் நமக்கு விமோசனமே இல்லை. பாண்டிய நாட்டு அமைச்சரிடம் கைகட்டிப் பணிபுரிய வேண்டிய காலம் வந்துவிட்டது பல்லவ வீரர்களுக்கு" என்ற வீரன், "பரம ரகசியம் ஐயா! வெளியே தெரிந்தால் என் விதி முடிந்துவிடும்" என்றான் வேதனையுடன்.

"நான் போகிறேன், அவர்களுக்கு ஐயம் வந்துவிடும்" என்று அவசரமாகக் கூறிவிட்டு விரைந்தான் அங்கிருந்து.

"அன்றே சிறைப்படுத்தியிருக்கலாமே என் ஆருயிர்த் தம்பியை! கலகமெல்லாம் அடங்கிய பின் அவனைக் காவலில் வைக்க வேண்டிய காரணம் என்ன? பாவம். கால்களை இழந்தவன், கோட்டை மதிலேறிக் குதித்துவிடவா போகிறான்?" என்று குறும்பாகக் கேட்டார் நிருபதுங்கச் சக்கரவர்த்தி.

பதில் சொல்ல முடியாத புதிய தளபதி, பாண்டிய நாட்டு அமைச்சரைப் பார்த்தான்.

கோச்சடையார் கூறினார்: "கம்பவர்மருடைய நடமாட்டத்தை முன்பே கட்டுப்படுத்தியிருந்தால், அவர்களுடைய திட்டங்களை நாம் தெரிந்து கொள்ள முடியாமல் போயிருக்கும். அதுமட்டுமல்ல.." என்று தயங்கியவர், சக்கரவர்த்தியைப் பார்த்தார்.

புரிந்து கொண்ட சக்கரவர்த்தி, "நீ போகலாம்" என்றார். புதிய தளபதி அங்கிருந்து வெளியேறியவுடன் கோச்சடையார் கூறினார்:

"நாளை கூடுகிற மகாமண்டல சபைக் கூட்டத்தில் கம்பவர்மர் கலந்து கொள்ளக் கூடாது. அதற்காகத்தான் இந்த அவசர நடவடிக்கை."

"அப்படியா!" என்று மகிழ்ந்தவர், "காஞ்சியில் ஏற்பட்ட கலவரங்களை அடக்கிவிட்டீர்கள். குழப்பங்களைச் சரிசெய்து படைகளையெல்லாம் பணிய வைத்துவிட்டீர்கள்! மக்கள் அபராஜிதனை மறந்துவிட்டார்கள். கம்பவர்மனைப் பற்றி யாரும் கவலைப்படமாட்டார்கள். தக்க சமயத்தில் வந்து எனக்கு கைகொடுத்த பாண்டிய நாட்டு அமைச்சரே! உங்களுக்கு நானென்ன பதிலுதவி செய்வதென்றே தெரியவில்லை" என்றும் நெகிழ்ந்து பேசினார் நிருபதுங்கர்.

"எங்கள் வரகுண பாண்டியருக்கு நீங்கள் செய்திருக்கும் உதவிகளுக்கு இவையெல்லாம் ஈடாகுமா? உங்களுக்காக உயிரையே தருவதற்கும் நான் தயாராக இருக்கிறேன். நாளை கூடுகிற மகாமண்டல சபையில் எல்லாம் நல்லபடியாக முடிய வேண்டுமே என்பதுதான் என் கவலை இப்போது. அதைப் பற்றிதான் தீவிரமாக ஆலோசித்துக் கொண்டிருக்கிறேன். இனிமேல்தான் என்னுடைய அதிமுக்கியமான பணி ஆரம்பமாகிறது" என்று குறும்பாகச் சிரித்தார் கோச்சடையார்.

பொழுது விடிந்தது. அங்காடி வீதியில் அங்கங்கே நின்று ரகசியமான குரலில் பேசிக் கொண்டிருந்த மக்கள், காவல் வீரர்களின் தலை தெரிந்ததும் கலைந்து சென்றனர். காஞ்சிமாநகர் எங்கும் பாதுகாப்பு ஏற்பாடுகள் பலப்படுத்தப்பட்டிருந்தன. மகாமண்டல சபை கூடும் மண்டபத்தைச் சுற்றிலும் முற்றுகையிட்டது போல் வீரர்கள் மொய்த்துக் கொண்டிருந்தனர்.

மந்திரி மண்டலத்தாரும், பல்லவ நாட்டின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த மண்டலாதிபதிகளும், கோட்டத் தலைவர்களும், அரண்மனை அதிகாரிகளும் அவசரமாக சிம்ம விஷ்ணு மண்டபத்தின் உள்ளே சென்று கொண்டிருந்தனர்.

அவர்கள் அமர்ந்து வந்த பல்லக்குகள், புரவிகள் யாவும் மண்டபத்திற்கு வெகுதொலைவிலேயே தடுத்து நிறுத்தப்பட்டன.

மண்டபம் இருந்த இடத்திலிருந்து ஒரு காதத் தொலைவு வரை மக்கள் நடமாட்டம் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. சுற்றித் திரிவதற்குக் காக்கை குருவிகளுக்கு மட்டுமே சுதந்திரம் கொடுக்கப்பட்டிருந்தது.

பலத்த பாதுகாப்போடு காட்சியளித்த சிம்மவிஷ்ணு மண்டபத்தின் வாயிலில் துந்துபி ஊத, பேரிகை அதிர, திருச்சின்னங்கள் ஒலிக்க,

வாழ்த்து முழக்கங்களோடு பட்டத்து யானையில் வந்திறங்கினார்—நிருபதுங்கவர்மர்.

அவரைத் தொடர்ந்து, அடங்காமல் திமிறிய அரபுப் புரவியொன்றில் வந்தார் ஏனாதி பாண்டிய கோச்சடையார்.

முதலமைச்சர் பிரம்மராய நம்பன் இறையூர் உடையாரும், அதிகரண போஷகரும், உள்படு கருமத் தலைவன் முதலிய அரசாண்மை அதிகாரிகளும் நிருபதுங்கவர்மரையும் கோச்சடையரையும் எதிர் கொண்டு வரவேற்றனர்.

வெளியே நின்றிருந்த வீரர்கள் முழக்கமிடப் போவதைப் பார்த்த ஏனாதி பாண்டிய கோச்சடையார், தன் கைகளை மேலே தூக்கி அவர்களை அடக்கினார். மண்டபத்தின் உள் வாயிலில் நின்றிருந்த அறிவிப்பாளனையும், "விளக்கங்கள் பெறப் போகும் வேளை இது! முழக்கங்கள் வேண்டாம்" என்று தடுத்தார்.

"பிரம்மராயரே! எல்லாம் நல்லபடியாக முடிந்ததா?" என்று கேட்ட கோச்சடையாரிடம், "முடிந்தது.." என்று முகம் மலர்ந்தார் முதலமைச்சர்.

வாயிற் படிக்கட்டுகளில் ஏறப்போன நிருபதுங்கவர்மர், முதலமைச்சரையும் மற்றவர்களையும் முன்னே நடக்கவிட்ட பின், கோச்சடையாரை நோக்கிக் கூறினார்:

"என்ன அற்புதமான ஏற்பாடு! சூழ்நிலையை எவ்வளவு சுமுகமாக்கிவிட்டீர்கள்!"

கோச்சடையாரின் கைகளைப் பற்றிக் கொண்டபடி, "மகத்தான உதவி செய்தீர்கள்! மனப்பூர்வமான நன்றி!" என்று மேலும் கூறிய நிருபதுங்கவர்மர், "இன்று அரியணையில் அமர்ந்தவுடன் முதலில் நான் என்ன செய்யப் போகிறேன் தெரியுமா? பல்லவ நாட்டின் அமைச்சராக உம்மை நியமிக்கப் போகிறேன்" என்று சிரித்தார்.

"பாண்டிய மன்னரிடம் பணிபுரிகிறேனே!" என்றார் கோச்சடையார்.

"அங்கு வெறும் அமைச்சர்! இங்கு முதலமைச்சர்! எப்படி..?" என்று கேட்டுக் கண்களைச் சிமிட்டினார் நிருபதுங்கர்.

"ஏற்கெனவே பிரம்மராயர் முதலமைச்சராக இருக்கிறாரே..?"

"கீழே இறக்கினால் போகிறது.. கிழவரை!" என்று கோச்சடையாரிடம் கூறிய நிருபதுங்கர், தன்னுடைய நகைச்சுவையை தானே ரசித்தவராய் உரத்த குரலில் சிரித்தபடி உள்ளே பிரவேசித்தார்.

கொடிகட்டிப் பறந்து கொண்டிருந்த குதூகலத்தில் அவையில் இருந்த எவருமே எழுந்து நிற்காமல் இருப்பதை அவர் கவனிக்கவில்லை. கோச்சடையாரிடம் ஏதோ சொல்வதும் குலுங்கிக் குலுங்கிச் சிரிப்பதுமாய் நடந்து கொண்டிருந்தார்.

சபையில் இருந்தவர்கள் அவரை விசித்திரமாகப் பார்த்தார்கள். விநோதமான அவருடைய நடவடிக்கைகள் அவர்களுக்கு வியப்பூட்டியிருக்க வேண்டும்! கைகளை வேகமாக ஆட்டியபடி, தலையை மேலே தூக்கி விதானத்தை வெறித்துப் பார்த்தவராய், அடக்க முடியாத நகைப்பை இடையிடையே ஒரு கையினால் மறைத்துக் கொண்டவராய் அவர் நடந்து கொண்டிருந்தார்.

தங்கச் சிம்மாசனம் இருந்த மேடையின் படிக்கட்டுகளில் ஏறத்தொடங்கிய போதுதான் நெஞ்சு பகீரென்றது நிருபதுங்கவர்மருக்கு.

திரும்பிப் பார்த்தார். அவை முழுவதும் அவரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. மேலே பார்த்தார். அவர் உட்கார வேண்டிய அரியணையில் வேறு யாரோ அமர்ந்திருந்தார்கள்.

"ஆ! அபராஜிதன். இவன் எப்படி இங்கே வந்தான்? கைது செய்யுங்கள்" என்று கர்ஜித்தார். "எழுந்திரு என் இடத்தைவிட்டு" என்று அபராஜிதனைப் பார்த்து அதிகாரமாகக் கூறினார்.

"தளபதி.. ஓடிவிடப் போகிறான். உடனே கைது செய்!" என்றும் உத்தரவிட்டார்.

தளபதி இருசப்ப பூபதி நிருபதுங்கரை நோக்கி நெருங்கி வரவே, "ஆ..! நீயா? எங்கே ஒளிந்து கொண்டிருந்தாய் இதுவரை?" என்று சீறியவர், "அகப்பட்டுக் கொண்டான் அயோக்கியன்! கைது செய்யுங்கள் இவனையும்" என்று கட்டளையிட்டார்.

இடது ஓரத்தில் முதல் வரிசையில் எழுந்தது சிரிப்பொலி. திரும்பிப் பார்த்த நிருபதுங்கர் திடுக்கிட்டார்.

“ஆ.. கம்பவர்மன்! கூடப்பிறந்தே கொல்லும் வியாதி! வீட்டுக்காவலிலிருந்து எப்படி வெளியேறினாய்? அண்ணனைக் கவிழ்ப்பதற்கு ஆரூடம் பார்த்தவனே!”

அண்ணனின் வார்த்தைகளைக் கேட்டவுடன், அலட்சியமாக எழுந்து நின்ற கம்பவர்மர் மீண்டும் ஆர்ப்பாட்டமாக நகைக்கத் தொடங்கினார்.

“கைது செய்யுங்கள் கம்பவர்மனை!” என்று கத்தினார் நிருபதுங்கவர்மர்.

இத்தனை கலவரத்திலும் அரியணையைவிட்டு அபராஜிதன் எழாமல் இருப்பதையும், சிறிதும் அச்சமின்றி அவனும் சிரித்துக் கொண்டிருப்பதையும் பார்த்து ஆவேசமடைந்தவர், படிக்கட்டுகளில் தாவி ஏறி அவன் பக்கத்தில் நெருங்கினார்.

ஒரே சமயத்தில் அபராஜிதன், கம்பவர்மர், இருசப்ப பூபதி அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து சிரிக்கத் தொடங்கவே.

“அவனைக் கைது செய்! இதோ இவனைக் கைது செய்! அதோ அவனைக் கைது செய்!” என்று மூவரையும் மாறி மாறிச் சுட்டிக்காட்டி முழக்கமிட்டார் நிருபதுங்கவர்மர்.

“சிரிப்பவர்களைக் கைது செய்..” என்று சீறினார்.

அவை முழுவதும் சிரித்தது. “கைது செய் எல்லோரையும்!” என்று கத்தினார்.

முதலமைச்சர் பிரம்மராய நம்பன் இறையூர் உடையார், நிருபதுங்கவர்மரை நெருங்கி, “தயவுசெய்து அமைதியாக இருங்கள். உங்களுக்கு மனநிலை சரியில்லை என்று மற்றவர்கள் பேசிக் கொள்கிறார்கள்” என்றார்.

“யாருக்கு..? எனக்கா மனநிலை சரியில்லை?” என்று அமைச்சரைப் பார்த்து அதட்டிய நிருபதுங்கர், கோச்சடையாரை நோக்கித் திரும்பி “எங்கே நம் புதிய தளபதி? கைது செய்யச் சொல்லுங்கள் இந்தக் கயவர்களை” என்று கட்டளையிட்டார்.

“சீற்றம் வேண்டாம். அவர்களைச் சிறைப்படுத்த முடியாது” என்று இரக்கத்தோடு கூறினார் இறையூர் உடையார்.

“ஆணையிடுவது சக்கரவர்த்தி” என்றார் நிருபதுங்கவர்மர் ஆணவம் மிகுந்த குரலில்.

“நேற்று வரையில் நீங்கள் சக்கரவர்த்தி!”

“இன்று..?”

“நிருபதுங்கவர்மர்.”

“அப்படியானால் யார் சக்கரவர்த்தி?”

“அபராஜிதவர்மர்!”

“ஆ..! கோச்சடையாரே! என்ன நடந்தது.?” என்று நிருபதுங்கர் அலறவே, அவர் நின்றிருந்த இடத்தை நெருங்கிய கோச்சடையார், “ஆட்சி மாறிவிட்டது” என்றார் அமைதியாக.

“மாற்றியது யார்?”

“*மகாமண்டல சபை” என்று கம்பீரமாகக் கூறினார் கம்பவர்மர்.

அவரைப் பார்த்து ஆவேசத்துடன் “நீசனே! இதற்கெல்லாம் நீயா காரணம்?” என்ற நிருபதுங்கரின் தோள்களைத் தொட்டுத் திருப்பிய கோச்சடையார், துயரம் கலந்த குரலில் கூறினார்:

“ஒருவகையில் நானும் காரணம்.”

அதைக் கேட்டவுடன் நிருபதுங்கருக்கு ஆவேசம் அதிகமாகிவிட்டது.

---

*மரபு வழியே அரசுரிமை பெறுகின்ற முறையே பல்லவர் காலத்தில் வழக்கில் இருந்தது. அரசனுக்கு வாரிசு இல்லாவிடில் அரசனுடைய தம்பி மகன் பட்டத்தைப் பெற்றான். காசக்குடிச் செப்பேடுகளிலிருந்து சிம்மவிஷ்ணுவிற்குப் பின் அவர் தம்பி பீமவர்மன், மகேந்திரவர்மன் ஆட்சிப் பொறுப்பை ஏற்கும்வரை பதவி வகித்தார். அரசர், வாரிசு ஏதுமின்றித் தற்செயலாக இறந்துவிட்டால், அமைச்சர் முதலானோர் ஒன்றுகூடி அரசமரபில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து முடிசூட்டினர். தேர்தல் முறையும் பல்லவர் காலத்தில் இருந்தது. இரண்டாம் பரமேஸ்வரன் இறந்தபின் பொதுமக்கள் அரசனைத் தேர்ந்தெடுக்கக் கூடினர்.

—ந.க. மங்கள முருகேசன், தமிழ்நாட்டு வரலாறும் பண்பாடும் —முதற்பாகம், பக்—141.

“சதி.. சதி! நீ.. நீ.. நீயார்?” என்று உறுமியபடியே உறையிலிருந்த வாளைச் சரேலென்று உருவினார்.

தாவி ஓடிவந்த தளபதியையும் வீரர்களையும் தன் கையசைவால் தடுத்து நிறுத்திய கோச்சடையார், வாளோடு நின்ற நிருபதுங்கரை அலட்சியமாகப் பார்த்தார்.

“நானா..?” என்று கேட்டபடி ஏனாதி பாண்டிய கோச்சடையார் அவையின் பக்கம் முழுவதுமாகத் திரும்பி நின்று, வேடத்தைக் கலைத்துத் தன்னை வெளிப்படுத்தினார்.

நிருபதுங்கரின் கையிலிருந்த வாள் நடுக்கத்தில் கீழே நழுவி விழுந்தது.

“ஆகா..!” “ஆ..!” என்று ஆச்சரியத்துடன் கூவியது அவை! ‘அவரா இவர்?!’ என்ற கேள்வியும், ‘அடடே..! இவர்தானா அவர்!’ என்ற கிளர்ச்சியும் எல்லோருடைய உள்ளங்களிலும் எழுந்தன. அவையெங்கும் ஏற்பட்ட ஆனந்தப் பரபரப்பு நின்று அடங்குவதற்கு நீண்ட நேரம் ஆயிற்று.

சக்கரவர்த்தி அபராஜிதனே தாங்கவொண்ணா வியப்புடன் சிம்மாசனத்திலிருந்து எழுந்து நின்றான்.









35



# உலா வரும் ஒலி விழா!

ஏனாதி பாண்டிய கோச்சடையார் தன் வேடத்தைக் கலைத்த போது, அவை முழுவதும் பரவிய ஆனந்தப் பரபரப்பில், நிருபதுங்கரை யாரும் நினைத்துப் பார்க்கவில்லை. சிங்காதன மேடையிலிருந்து இறங்கித் தப்பிச் செல்ல முயன்றவர், தளபதி இருசப்ப பூபதியால் தடுத்து நிறுத்தப்பட்டார். வாளேந்திய வீரர்கள் அவரை வளைத்துக் கொண்டனர். வேடத்தைக் களைந்த கோச்சடையாரைப் பார்த்த அவையினர், "விஜயாலயர்! ஆ.. விஜயாலயர்!" என்று வியப்புக் குரல் எழுப்பினர்

"ஆம்! நான்தான் விஜயாலயன்!" என்று புன்னகை பூத்த சோழ மன்னர், மகாமண்டல சபையைத் தலை தாழ்த்தி வணங்கினார்.

அபராஜிதனைத் தன் அகன்ற மார்புடன் சேர்த்து அணைத்துக் கொண்டவர், "மகேந்திரவர்மரும், மாமல்லரும், நந்திவர்மப் போத்தரையரும் கோலோச்சிய நாட்டுக்கு மாமன்னராகி மணிமுடி சூடியுள்ளாய்! மனங்குளிர வாழ்த்துகிறேன்! பரந்து விரிந்த பல்லவ சாம்ராஜ்யத்தைத் தூக்கிச் சுமக்கும் தோள் பலம் உனக்குக் கிட்டட்டும். குடிமக்கள் உன்னைக் கொற்றவன் என்று எண்ணாமல், பெற்றவன் என்று பேசி மகிழட்டும்" என்று வாழ்த்தினார். கம்பவர்மரைத் தன் கைகளால் இழுத்துக் கட்டித் தழுவிக் கொண்டார்.

உள்படு கருமத் தலைவன், அபராஜிதனைப் பார்த்து உரத்த குரலில் கேட்டான்: "பாதாளச் சிறைக்கோட்டத்திற்கு அனுப்பி வைக்கலாமா பழைய சக்கரவர்த்தியை..?"

இந்தக் கேள்வி அபராஜிதனிடம் எரிச்சலை ஏற்படுத்தியது. உள்படு கருமத் தலைவனை முறைத்துப் பார்த்தவன், "எல்லா வசதிகளோடும் என் பெரிய தந்தையை வீட்டுக் காவலில் வையுங்கள்" என்று கூறிவிட்டுத் தளபதியை நோக்கிக் கட்டளையிட்டான்.

"இருசப்பரே! துரும்புகூட, அவரைத் தொடக்கூடாது."

காஞ்சியின் முகம் களை கட்டியிருந்தது. வீதியெல்லாம் மக்கள் வெள்ளம்! வாழ்த்தொலிகளும், வரவேற்பு முழக்கங்களும் காஞ்சி நகரத்தின் காதுகளைச் செவிடாக்கி கொண்டிருந்தன. அந்த ஓசையின் நடுவே, கம்பவர்மரின் மாளிகையில் இரு காதல் பறவைகளின் சிறகடிப்பும் சேர்ந்து கொண்டது.

"சிறை உடைத்த மாவீரரே வரவேண்டும்! என் அண்ணனை ஜெயிக்க வைத்த போர் வீரரே வரவேண்டும்" என்றாள் சாருமதி.

"சக்கரவர்த்தியின் தங்கையே வர வேண்டும்! எங்களுக்குச் சக்தி கொடுத்த மங்கையே வரவேண்டும்" என்றான் ஆதித்தன்.

"மாலை மயங்கியதும் வரவேண்டும்! எங்கள் மாளிகை நந்தவனம் வரவேண்டும்" என்று அழைப்புவிடுத்தாள் அவள்.

"பாண்டிய ஆபத்துதவிகள் என்ற பெயரில் சோழ வீரர்களைக் காஞ்சிக்குள் நுழைய வைத்த உங்கள் சாமர்த்தியத்தை என்னென்பது?"

"தந்திரசாலியான நிருபதுங்கரை எத்தனை எளிதாக முட்டாளாக்கிவிட்டீர்கள்!"

"இறுதிவரை எதிர்பார்க்கவே இல்லை. நீங்கள்தான் கோச்சடையராக இருப்பீர்கள் என்று!"

"அர்த்த ஜாமத்தில் அமைச்சர் குழுக் கூட்டம்! ஆரவாரமே இல்லாமல் அரியணை மாற்றம்.."

"ஒரே இரவில் நினைக்க முடியாத சாதனையை நிகழ்த்திவிட்டீர்கள்."

"வாயிலில் நின்ற காவலர்க்கும் தெரியவில்லை— மண்டபத்தின் உள்ளே மணிமுடி மாறியது. என்ன அதிசயம் இது!"

—விருந்து மண்டபத்தில் கம்பவர்மர், விஜயாலயரைப் பார்த்து வியந்து கொண்டேயிருக்க, எந்த பதிலும் சொல்லாமல் இளநகை செய்து கொண்டிருந்தார் சோழ மன்னர்.

"ஆதித்தனாலும், இருசப்ப பூபதியாலும் சிறை மீட்கப்பட்ட நான், அதிகாலையில் மகாமண்டல சபைக்கு அழைத்துச் செல்லப்பட்ட போது, நடந்தது எதையுமே நம்ப முடியவில்லை. எள்ளளவும் எதிர்ப்பின்றி என் தலையில் மகுடம் ஏறிவிட்டது" என்று அபராஜிதனும் தன் ஆச்சரியத்தை வெளியிட்டான்.

"பாதாளச் சிறையைத் தகர்த்து அபராஜிதனை மீட்டு வந்ததற்காகப் பரிசொன்று காத்திருக்கிறது ஆதித்தனுக்கு" என்றார் கம்பவர்மர்.

"எங்கே?" என்று குறும்பு விழிகளைச் சுழற்றினார் விஜயாலயர்.

"இடவையில்.." என்று குறுக்கிட்ட அபராஜிதன், "வேந்தே! எங்களுக்கு நீங்கள் செய்திருக்கும் உதவி இணையற்றது. பதிலுக்கு நாங்கள் சின்னஞ்சிறு உதவியேனும் செய்ய வேண்டாமா? இடவையை வென்று உங்களிடம் இப்போதே ஒப்படைப்பேன்" என்று சூளுரைத்தான்.

"அவசரப்படாதே அபராஜிதா..!"

"அப்படிச் சொல்லாதீர்கள். நிருபதுங்கனின் காலத்தில் நடந்த அநீதிக்குப் பரிகாரம் காண வேண்டிய பொறுப்பு அபராஜிதனுக்கு உண்டு."

"உண்மைதான். ஆனால் ஆட்சிப் பொறுப்பேற்றிருக்கும் அபராஜிதனுக்கு அவகாசம் வேண்டும். நாடும் உடன் கூட்டமும் அனுசரித்துச் செல்லும் நல்ல சூழல் உருவாக வேண்டும். ஆட்சியை அடைந்தது பெரிதல்ல! அசைக்க முடியாதபடி அதை நிலை நிறுத்துவதுதான் தற்போது உங்களுடைய தலையாய பணி!

அதுமட்டுமல்ல.. பாண்டியர்களுக்கும் பல்லவர்களுக்கும் நீண்ட காலமாக நடந்து வரும் போராட்டத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வர வேண்டும். ஒரே ஒரு போர்! அதில் ஒழிய வேண்டும் பாண்டியர்கள். தலையெடுக்க முடியாதபடி அவர்களைத் தகர்த்துவிட

வேண்டும். திட்டமிட்டு அதைச் செயல்படுத்துவோம். அதுவரை தேவையான ஏற்பாடுகளில் கவனம் செலுத்துவோம்” என்றார் விஜயாலயர்.

“நீங்கள் எப்படிச் சொல்கிறீர்களோ அப்படியே நானும், என் மகனும் நடந்து கொள்வோம்! பாருள்ள வரைக்கும், கடல் நீருள்ள வரைக்கும் நம் நாடுகளிடையே நட்பு நீடிக்கும்.”

கம்பவர்மர் பேசிக் கொண்டிருந்த போதே உள்ளே நுழைந்த ஆதித்தனைக் கட்டித் தழுவிக் கொண்டே அபராஜிதன் கூறினான்:

“வேண்டாம் அரசியல் என்று வெறுத்துப் போயிருந்தேன். ஆதித்தனின் நட்பினால் வாழ்க்கையில் எனக்கு வசந்தம் வந்தது. சபதம் செய்கிறேன் இன்று. என் உயிருள்ளவரை நானும் ஆதித்தனும் நண்பர்களாய் இருப்போம்!”

“உயிர்போன பிறகும், எங்கள் நட்பு பட்டயங்களிலும் கல்வெட்டுக்களிலும் பாராட்டப்படும். புலவர்தம் இலக்கியங்களில் புகழப்படும்” என்றான் ஆதித்தன்.

தோள்களைத் தழுவிக் கொண்டிருக்கின்ற தோழர்கள் இருவரையும் தட்டிக் கொடுத்தார் தஞ்சை வேந்தர்.

மெள்ள மெள்ளத் தொட்டுத் தழுவி பூமியைக் கட்டிபிடித்துக் கொண்டிருந்தது காரிருள். பறவைகள் தங்கள் கூடுகளுக்குள் புகுந்து கொண்டிருக்க, வானம் என்னும் நீலநிறக் கூட்டிலிருந்து நிதானமாக எட்டிப் பார்த்தது நிலவு.

நந்தவனத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தான் ஆதித்தன். மல்லிகை, முல்லை, இருவாட்சி, கொன்றை, மனோரஞ்சித மலர்கள் மணம் பரப்பிக் கொண்டிருக்க பூரித்துச் சிரிக்கும் ஒரு புதுமலரை நுகர்வதற்காக ஆசை கொண்டு அலைந்து கொண்டிருந்தது அந்த ஆண் வண்டு.

நீராழி மண்டபத்தைத் தாண்டி, நிலா முற்றத்தைக் கடந்து, பளிங்கு மண்டபத்திற்குப் பக்கத்தில் வந்தான் ஆதித்தன்.

“மாவீரரே! வருக!” மங்கையவள் குரல்தான் பளிங்கு மண்டபத்தின் பக்கத்திலிருந்துதான் உலா வந்தது அந்த ஒலி விழா.

பளபளவென்று மின்னிக் கொண்டிருந்த பளிங்கு மண்டபத்தின் விதானம் பொன்னால் வேயப்பட்டிருந்தது. நடனமாடிக்

கொண்டிருக்கும் தோற்றத்தோடு நின்றிருந்தன நான்கு நங்கையர் சிலைகள். சுற்றிலும் பளிங்குத் தூண்கள். மையப் பகுதியில் ஒரு மணி மண்டபம்.

‘எங்கிருக்கிறாள் இவள்..?’

பளிங்கு மண்டபத்தைச் சுற்றி வந்தான். உயிருள்ள பாவையர் ஒசிந்து நிற்பது போலவே பளிங்குச் சிலைகள் பாவம் காட்டின. அத்தனை சிலைகளும் பட்டுத் துகில்களை கட்டிக் கொண்டிருந்ததோடு, பூவேலைப்பாடு கொண்ட வண்ண வண்ண மேலாடையும் போர்த்தியிருந்தன.

‘சிலைகளில் கூட மங்கையர் சிலை என்றால் தனி மரியாதைதான்! எத்தனை அலங்காரங்கள். எத்தனை அணிமணிகள்..’ என்று எண்ணமிட்டவனாகப் பளிங்கு மண்டபத்தைத் தாண்டி அவன் நடக்க முற்பட்ட போது, “திரும்புங்கள்!” என்ற கட்டளை கேட்டது.

திரும்பினான்.

“பளிங்கு மண்டபத்திற்குள் வாருங்கள்.”

வந்தான்.

“வலதுபுறமிருக்கும் இரண்டாவது சிலையின் கழுத்திலுள்ள முத்துமாலையைக் கழற்றுங்கள்.”

கழற்றினான்.

“இடதுபுறமுள்ள சிலையின் கழுத்தில் சூட்டுங்கள்.”

சூட்டவில்லை.

நெருங்கி நின்றான்.

“முத்துமாலையை அணிவிக்கச் சொன்னேன். முறைத்துப் பார்த்துக் கொண்டிருக்கச் சொல்லவில்லை.”

அணிவித்தான்.

“வலதுபுறமுள்ள இரண்டாவது சிலைக்கு வலது கை விரல்கள் வலிக்கின்றனவாம். வருடிவிடுங்கள்.”

தாங்க முடியாத எரிச்சலடைந்தான் தஞ்சை இளவரசன். சினத்துடன் நெருங்கினான் சிலையை. விரல்களை

வருடிவிடவில்லை. வேகமாகப் பற்றி இழுத்து அதைக் கீழே தள்ளிவிட முயன்றான்.

பளிங்குச் சிலையா அது? கைகளில் ஏதோ குளிர்ச்சி. சில்லென்ற உணர்ச்சி. சிலையை இறுகப் பற்றி இழுத்த போதே, பளிங்குச் சிலை தன்னைப் பற்றிக் கொள்வதை உணர்ந்தான். சிலை சாய்ந்த வேகத்தில் சிலையோடு சேர்ந்து அவனும் சாய்ந்தான்.

சிலை சிரித்தது. பளிங்குச் சிலையல்ல. அது.. பருவச் சிலை! செதுக்கி வைத்த சிலையல்ல.. பருவ அழகுகளையெல்லாம் பதுக்கி வைத்த சிலை!

உணர்ச்சியற்ற சிலையாக அது இருந்திருந்தால் ஒன்றும் நடந்திருக்காது. உயிரும் உணர்ச்சியுமுள்ள சிலையாக இருந்ததனால் அது நெளிந்தது; வளைந்தது; குழைந்தது, எண்ணிப்பார்க்கவும் இயலாத ஓர் இன்ப மாருதம் எழுந்தது!

அபராஜிதன் கூறினான் ஆதித்தனிடம் "ஏழையின் மகனாகப் பிறந்தார். எளிய வீரனாக வளர்ந்தார். இன்று மாமன்னரின் மணிமகுடங்களையெல்லாம் தன் கண் பார்வைக்காக காத்திருக்க வைத்துவிட்டார்! உன் தந்தை ஓர் அதிசயமான மனிதர்!"

"அவரோடு நான் முரண்பட்ட சந்தர்ப்பங்கள் உண்டு. மோதிக் கொண்டதும் உண்டு. ஆனால், சோழ குலத்தில் அவருக்கு இணையாக இன்னொருவரைச் சொல்ல முடியாது. கரிகால் வளவனைக் காட்டலாம். ஆனால், அவர் மன்னர் குலத்தில் பிறந்தவர். அவர் வெற்றிகளை ஈட்டியதில் வியப்பில்லை. விஜயாலயர் என் தந்தை என்பதில் நான் பெருமை கொள்கிறேன்."

"நான் உன் நண்பன் என்பதற்காகப் பெருமை கொள்கிறேன்!"

"ஒரு சில நாட்கள் ஓய்வெடுத்துச் சென்றிருக்கலாம். உடனே புறப்பட்டுவிட்டார்."

"ஓய்வா..? உடலைவிட்டு உயிர் பிரிந்த பிறகல்லவா ஓய்வெடுக்க முடியும்! கை கால்கள் ஓய்ந்திருக்கலாம். கனவு காணும் மனத்தைக் கட்டிப் போட முடியுமா? ஓய்வென்பது கடமை வீரனுக்குத் தரப்படும் கடுமையான தண்டனை என்று சொல்லிச் சிரித்தாரே. அவருடைய வார்த்தைகள் அப்படியே என் இதயத்தின் ஆழத்தில் பதிந்துவிட்டன" என்றான் அபராஜிதன்.

ஆதித்தன் கவலையுடன் பேசினான்: "அந்த வார்த்தைகளை நினைத்துத்தான் அஞ்சுகிறேன். உள்ளம் ஓய்வை விரும்பவில்லை என்பது உண்மைதான். ஆனால் அவருடைய உடல் தளர்ந்துவிட்டது. அன்று மாளிகையில் பேசிக் கொண்டிருக்கும் போதே அவருக்கு மயக்கம் வந்துவிட்டது. ஒன்பது வயதில் உழைக்கத் தொடங்கிய உடம்பு. இன்னும் அவர் தன்னை இளைஞனாகவே எண்ணிக் கொண்டிருக்கிறார். ஆனால் இரும்பு இளகத் தொடங்கிவிட்டது."

"இந்நேரம் தஞ்சையை நெருங்கியிருப்பாரா?"

"அந்திப் பொழுதில் தஞ்சையை அடையக் கூடும்."

"சரி. புறப்படு! என் பெரிய தந்தையாரைப் பார்த்து வருவோம்" என்றான் அபராஜிதன்.

நிருபதுங்கவர்மர் காவலில் வைக்கப்பட்டிருந்த மாளிகைக்குள் அவர்கள் நுழைந்த போது, காஞ்சியின் பழைய சக்கரவர்த்தி கவலையுடன் அமர்ந்திருந்தார். தலையைக் குனிந்து நீண்ட நேரம் தரையையே பார்த்துக் கொண்டிருந்தவர், "வணங்குகிறேன் தந்தையே!" என்ற வார்த்தைகளைக் கேட்டு நிமிர்ந்தார். அபராஜிதனும் ஆதித்தனும் எதிரே நின்று கொண்டிருப்பதை உள்ளடங்கிய கண்களால் உற்றுப் பார்த்தார். திடீரென்று சிரித்தார்.

"அபராஜிதச் சக்கரவர்த்தி அவர்களே! வரவேண்டும். வரவேண்டும். ஆசனத்தில் அமர வேண்டும்" என்றார் கிண்டலாக.

"மன்னித்துக் கொள்ளுங்கள் தந்தையே!" என்றான் அபராஜிதன்.

"சாதாரணக் கைதியிடம் சக்கரவர்த்தி மன்னிப்புக் கோரலாமா?" என்று நகைத்தார் நிருபதுங்கர்.

"நீங்கள் கைதி அல்ல. ஆனால் தற்காலிகமாக உங்களைக் காவலில் வைக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது."

"ஆமாம். ஆமாம்.. நான் கைதி அல்ல. ஏனென்றால் இது சிறைக்கூடமல்ல.. மாளிகை!" என்று கூறிய நிருபதுங்கர், "ஓ! இவர்தான் சோழ நாட்டு இளவரசரோ?" என்று கேட்டார்.

"ஆமாம். இவன்தான் ஆதித்தன்."

"இவன் ஆதித்தன். இவன் தந்தை ஆதியிலிருந்தே எத்தன்" என்று கூறிய நிருபதுங்கர், எவரும் எதிர்பாராதபடி திடீரென்று

அருகிலிருந்த குறுவாளை எடுத்து ஆதித்தனின் மார்பை நோக்கி வேகமாக வீசினார். கூடவே, "அழியட்டும் சோழர் குலம்" என்று ஆவேசமாகக் கத்தினார்.

வீசி எறியப்பட்ட குறுவாள் ஆதித்தனின் நெஞ்சைப் பிளப்பதற்கு நெருங்கியது. சட்டென்று தன் நண்பனைப் பின்னே தள்ளி முன்புறமாய் வந்து நின்று கொண்டான் அபராஜிதன்.

குறுவாள் அவன் குருதியைக் குடித்திருக்கும்— அருகிலிருந்த குவளையை எடுத்து ஆதித்தன் அதைத் தட்டிவிடாதிருந்தால்.

மாளிகையின் வெளியே காத்திருந்த புரவிகளில் ஆதித்தனும், அபராஜிதனும் ஏறிக் கொண்ட போது, காவல் வீரனை அருகில் அழைத்துக் கட்டளையிட்டான் அபராஜிதன்: "பழம் நறுக்கும் கத்திகூடப் பக்கத்தில் இருக்கக் கூடாது. மாளிகையின் உள்ளிருக்கும் ஆயுதங்களையெல்லாம் அப்புறப்படுத்திவிடு."

வீரன் சென்றதும், ஆதித்தனிடம் விளக்கினான்: "ஆயுதங்களை அகற்றச் சொன்னது மற்றவர்களைக் குத்திவிடுவார் என்பதற்காக அல்ல. அவர் தன்னைத்தானே குத்திக் கொள்ளக் கூடாது என்பதற்காக! பித்துப் பிடித்துப் போயிருக்கிறார் என் பெரிய தந்தையார்."

"உன் உள்ளம் எத்தனை உயர்ந்தது!" என்று பாராட்டிய ஆதித்தன், "என்னைக் காப்பாற்றுவதற்காக வாளை உன் மார்பில் வாங்கிக் கொள்ள வந்தாயே! உன் அன்பு என்னை உருக வைக்கிறது" என்றான்.

"நண்பனே! நான் உன்னைக் காப்பாற்ற நினைத்தேன். கடைசியில் நீதானே என்னைக் காப்பாற்றினாய்!"

"உன்னைக் காப்பாற்றியது நானல்ல!"

"வேறு யார்?"

"தக்க நேரத்தில் என் கைக்குக் கிடைத்த தங்கக் குவளை!"

இருவரும் சிரித்தனர்.

காஞ்சியிலிருந்து திரும்பிய விஜயாலயரைப் பற்றிச் சோழ நாட்டு மக்கள் கதை கதையாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள். அண்டை அயல் நாடுகளிலெல்லாம் புயலாய்ப் பரவியது அவருடைய புகழ். இரண்டே நாட்களில், ஒரு சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியையே

மாற்றிவிட்ட அவருடைய சாமர்த்தியத்தையும், சாதுரியத்தையும் பற்றிக் கவிஞர் பொன்முடி எழுதிய கவிதையை முதியவர் முதல் குழந்தைகள்வரை முணுமுணுத்துக் கொண்டிருந்தனர்.

இளவேனிற் காலத்தின் முதுகில் ஏறிக் கொண்டு முதுவேனில் வந்தது. கார்காலத்தை வழியனுப்பி வைத்த பின் கூதிர் வந்தது. முன்பனிக் காலத்துக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டுப் பின்பனி பிரவேசித்தது. பருவங்கள் நடந்தன. பொழுதுகள் பறந்தன. காலம் யாருக்காகவும் காத்திருக்கவில்லை.

விஜயாலயரைப் பற்றிய வீரக் கதைகளைப் பேசிக் கொண்டிருந்த சோழ நாட்டு மக்கள், இப்போது அவரைப் பற்றி வேறொரு செய்தியை விவாதிக்கத் தொடங்கியிருந்தனர்.

காதோடு காதாகக்— காற்றோடு காற்றாக அது சோழ நாடெங்கும் சூழ்ந்து கொண்டது.

விஜயாலயர் நோய்வாய்ப்பட்டிருக்கிறார் என்ற செய்தியை செவியுற்றுத் திடுக்கிட்ட சோழ நாட்டின் பல்வேறு பகுதிகளைச் சார்ந்த கோட்டத் தலைவர்களும், வாரியப் பெருமக்களும், அரசியல் அதிகாரிகளும், தஞ்சை அரண்மனையை நோக்கித் தண்ணீராய்ப் பாய்ந்தனர்.

அரண்மனை முகப்பில் கவலை படிந்த முகத்துடன் அமர்ந்திருந்த கோட்டைத் தளபதி குன்றத்தூர்க் கிழார், “அரசரைச் சந்திக்க யாருக்கும் அனுமதி இல்லை” என்றார்.





# 36



# ஜெயிக்க முடியாத சிம்மாசனம்

பார்த்த முகங்களிலெல்லாம் சோகம் படர்ந்திருந்தது. புரிந்து கொள்ள முடியாததொரு மௌனம் சோழ நாடெங்கும் சூழ்ந்திருந்தது. அந்த மௌனத்தை அவ்வப்போது கலைக்க முயன்றன சில கண்ணீர்க் குரல்கள். அந்தக் குரல்களும் ரகசியமாகவே ஒலித்தன.

அந்திப் பொழுதில் ஐந்தாறு இளைஞர்கள் காவிரியின் கரையில் அமர்ந்து கவலையில் மூழ்கிக் கொண்டிருந்தார்கள்.

"என்ன செய்வது.. நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். மலை சாய்ந்தது போல் சாய்ந்து கிடக்கிறாராம் மன்னர்."

"நம்பவே முடியவில்லை! விஜயாலயருக்கா உடல் நலமில்லை?"

"பார்க்காத வைத்தியம் இல்லையாம். ஆனாலும் பலன் இல்லையாம்."

"உள்ளத்தில் இருக்கும் உறுதிதான் உயிரை நிறுத்தி வைத்திருக்கிறது என்று சொல்கிறார்கள்."

"அதெல்லாம் பொய்! இதில் ஏதோ அரசியல் சூழ்ச்சி இருக்க வேண்டும். அவரைப் பார்ப்பதற்கு ஏன் அனுமதி மறுக்க வேண்டும்?"

"குடிமக்களை அனுமதிக்காவிட்டால் கூடப் பரவாயில்லை. அரசாங்கத்தின் பெரிய பெரிய அதிகாரிகளைக்கூட திருப்பி அனுப்பிவிடுகிறார்களாமே!"

“இளவரசர் கூட ஊரில் இல்லையாமே!”

“இன்னும் சிறிது காலத்திற்காவது நன்றாக இருக்க வேண்டும் நம் அரசர்.”

“அவரைப் போல் இனி எவர் வர முடியும்? அந்த வீரமும் தியாகமும் ராஜதந்திரமும் யாருக்கு வரும்?”

“வேறொரு செய்தியையும் கேள்விப்பட்டேன்.”

“என்ன?”

“விஜயாலயர் யாரோ ஒரு பெண்ணைச் சந்திக்க விரும்புகிறாராம். அந்தப் பெண்ணைத் தேடிச் சோழ நாடெங்கும் ஒற்றர்கள் சுற்றிக் கொண்டிருக்கிறார்களாம்.”

“அப்படியா..! ஆச்சரியமாக இருக்கிறதே. யார் அது?”

“மன்னரின் காதலியாக இருக்குமோ?”

“மரியாதையாகப் பேசு. யாரைப் பற்றி என்ன பேசுகிறாய்? மனைவி இறந்த பிறகு எந்தப் பெண்ணையும் அவர் ஏறெடுத்தும் பார்த்ததில்லை.”

“ஒருவேளை மன்னருடைய மகளாக இருக்கலாம்!”

“இருக்காது! இளவரசர் ஆதித்தனைத் தவிர பெரிய தேவருக்கு வேறு பிள்ளைகள் கிடையாது.”

“இந்த நேரம் பார்த்து இளவரசர் எங்கே போனார்?”

“காஞ்சிக்குச் சென்றிருக்கிறாராம்.”

“எதற்கு?”

“பாண்டியர்களோடு பெரிய யுத்தம் வரப் போகிறதாம். அதைப் பற்றி பேசுவதற்காக அரசர்தான் அவரை அனுப்பி வைத்தாராம்.”

“அவர் சென்று ஒரு திங்கள் ஆகிவிட்டதாமே. இன்னுமா ஆலோசனை செய்து கொண்டிருக்கிறார்?”

“காஞ்சி இளவரசியோடு கதை பேசிக் கொண்டிருப்பார்!”

“சும்மா இரு! வாய்க்கு வந்ததையெல்லாம் சொல்லிக் கொண்டிருக்காதே. பல்லவ நாட்டின் சக்கரவர்த்தி அபராஜிதர் நம் ஆதித்தருக்கு நெருங்கிய நண்பர்.”

"உண்மைதான்! சக்கரவர்த்தியான புதிதில் அபராஜிதப் பல்லவர் இங்கு வந்திருந்தார். அப்போது நம் இளவரசரும் அவரும் தோள் மீது கை போட்டுக் கொண்டு சுற்றி வந்தார்களே.. அந்தக் காட்சி இன்னும் என் கண்களைவிட்டு அகலவில்லை."

"என்னதான் நட்பாக இருந்தாலும், உடல் நலமில்லை தந்தைக்கென்றால் ஓடி வர வேண்டாமா?"

"தகவல் தெரிந்தால்தானே. கோட்டைத் தளபதி கொஞ்ச நாட்களுக்கு முன்தான் ஆள் அனுப்பினாராம்."

"பாண்டியர்களோடு போர் வரப்போவது உண்மைதானா?"

"அப்படித்தான் பேசிக் கொள்கிறார்கள்."

"விஜயாலயர் இல்லாமல் வெற்றி பெற முடியுமா?"

"ஆதித்தரும் அபராஜிதரும் அறியாப் பிள்ளைகளா?"

"சரி.. சரி.. நாடெங்கும் ஒற்றர் நடமாட்டம். வரம்பு மீறிப் பேசி நாம் வம்பில் மாட்டிக் கொள்ளக் கூடாது."

"சரி. புறப்படலாம். ஏதோ புரவி வரும் ஓசை கேட்கிறது!"

தஞ்சை அரண்மனை கலகலப்பின்றி காட்சியளித்தது. கோட்டைத் தளபதி குன்றத்தூர்க் கிழார் அரண்மனையின் வெளியே சோகச் சிலையாய்ச் சோர்ந்திருந்தார். அரண்மனை அதிகாரிகளும், படைத்தலைவர்களும் அவரைச் சுற்றிக் கூடியிருந்தனர்.

ஒற்றர்களில் ஒருவன் உரைத்தான். "ஐயா! கோட்டத் தலைவர்கள் குமுறிக் கொண்டிருக்கிறார்கள். உடல் நலம் இல்லாத மன்னரைப் பார்ப்பதற்குக் கோட்டைத் தளபதிதான் குறுக்கே நிற்கிறார் என்று."

"நான் என்ன செய்வது? முதல் அமைச்சர் மாவலிவாணரையும் ஒற்றர் தலைவன் சாத்தன் பழியிலியையும், என்னையும் தவிர, வேறு எவரையும் அனுமதிக்கக் கூடாதென்று அரசரே உத்தரவிட்டுள்ளார். மருத்துவர்கள்கூட அரண்மனையிலேயே தங்க வேண்டும் என்று கட்டளை! மன்னருடைய கட்டளையை நான் எப்படி மாற்ற முடியும்? ஆதித்தர் காஞ்சியிலிருந்து வந்தவுடன் பொறுப்பை ஒப்படைத்துவிடுகிறேன். அவர் விருப்பம் போல் செயல்படட்டும். வீண்பழி எனக்கெதற்கு?" என்று வேதனையோடு பேசினார் குன்றத்தூர்க் கிழார்.

திடீரென்று அரண்மனை வாயிலில் ஏற்பட்ட பரபரப்பைத் தொடர்ந்து ஒற்றர் தலைவன் உள்ளே நுழைந்தான். கோட்டைத் தளபதியின் காதோடு கூறினான்: "இளவரசர் தஞ்சைக்குள் நுழைந்துவிட்டார்."

குன்றத்தூர்க் கிழார் நிம்மதியடைந்தார்.

"அந்தப் பெண்ணையும் அழைத்து வந்துவிட்டேன்" என்றான் ஒற்றர் படைத்தலைவன்.

"அப்படியா?" என்று பரபரப்புடன் எழுந்தார் கோட்டைத் தளபதி.

"ஆம்! பல்லக்கை அப்படியே அரண்மனைக்குள் அனுமதிக்க வேண்டும். அந்தப் பெண்மணி யார் பார்வையிலும்பட வேண்டாம் என்பது அரசர் உத்தரவு."

சரியென்று தலையசைத்தார்.

தஞ்சை அரண்மனையின் உள்ளே பிரம்மாண்டமான நான்கு மண்டபங்களும் வெறிச்சோடிக் கிடந்தன. பாதுகாப்பு வீரர்கள்கூட முதல் மண்டபத்தின் வாயிலிலேயே தடுத்து நிறுத்தப்பட்டிருந்தனர்.

வீராதி வீரர் என்று புகழ்பெற்ற விஜயாலயர் இளைத்துக் களைத்து இருமிக் கொண்டிருந்தார். அவருடைய பார்வை பதிந்திருந்த இடத்தில் அவரது துணைவி வள்ளியின் சித்திரம் சிரித்துக் கொண்டிருந்தது. மன்னரின் அருகே தளர்ந்து நின்றிருந்தாள் தாமரை.

மஞ்சத்தில் சாய்ந்து கிடந்த மன்னரைப் பார்த்ததுமே பாவையின் உள்ளம் பதறிவிட்டது. சோழர் குலத்தின் சுடர் விளக்கா இப்படிச் சோர்ந்து கிடக்கிறது? கற்சிலையைப் போல் காட்சியளிக்கும் அந்த கம்பீரம் எங்கே? புயல்களையும் அலட்சியப்படுத்தும் புன்னகை எங்கே?

விஜயாலயரின் இடது கையும் இடது காலும் அசைவின்றி உணர்விழந்திருந்தன.

தாமரையைத் தன் அருகே அழைத்தவர், பெருமுயற்சி செய்து பேசத் தொடங்கினார்.

"தாத்தா எப்படியிருக்கிறார்..?"

"படுத்த படுக்கையில் இருக்கிறார். இன்றோ நாளையோ.."

“கவலைப்படாதே! என்னை வழியனுப்பிய பிறகுதான் என் படையின் முதல் வீரர் கண்மூடுவார்.”

தாமரையின் விழிகளிலிருந்து வடிந்த நீர் அவளுடைய மார்பை நனைத்தது.

விஜயாலயர் வருத்தத்துடன் சிரித்தார். “பெண்ணே! உனக்கு நான் பெரும் பழி செய்தேன். உன் பாட்டனாரும் நானும் சேர்ந்தே அந்தப் பாதகம் புரிந்தோம். ஆதித்தனுக்கும் உனக்கும் நடுவே முளைத்த அன்பின் சிறகுகளை முறித்தோம்! இன்று நாங்களே அம்பு துளைத்த பறவைகளானோம்.”

“அமைதி கொள்ளுங்கள் ஐயா! நீங்கள் அதிகம் பேசக்கூடாது.”

“பேச வேண்டிய நேரத்தில் எப்படிப் பேசாதிருப்பது மகளே. கொஞ்சங் கொஞ்சமாக என் இதயத்தைக் குத்திக் கிழிக்கும் வேதனைக்கு நான் விடைகாண வேண்டாமா? எத்தனை முயற்சி செய்து உன்னை இங்கு அழைத்து வரச் செய்தேன் தெரியுமா?”

“தாத்தாவை இங்கே சரியாகக் கவனித்துக் கொள்ள முடியவில்லை. அதனால்தான் திருநல்லூருக்கு அழைத்துச் சென்றேன்.”

“என் ஆணவம் அடங்கியது. உனக்குச் செய்த அநீதி என்னை அசைய முடியாதவனாய் ஆக்கிவிட்டது. நீ மன்னிக்கவில்லையென்றால் மரணத்திற்குப் பின்னாலும் என் நினைவு நிம்மதி பெறாது!”

“அப்படியெல்லாம் சொல்லாதீர்கள் ஐயா. வெகு விரைவில் நீங்கள் உடல்நலம் பெறுவீர்கள்.”

“பெண்ணே! உளுத்துப்போன கட்டை இது. இனிமேல் உத்தரமாகாது!”

விஜயாலயருடைய சொற்களைக் கேட்டுத் தாமரை தேம்பினாள்.

“வஞ்சனை செய்து உங்கள் காதலைப் பிரித்தேன். எனக்காகவா? இல்லை. நாட்டிற்காக.. நம் இனத்தின் நலத்திற்காக. ஏழை வீரனாகவே நான் இருந்திருக்கலாம். எவருடைய குதூகலத்திலும் குறுக்கிட்டிருக்கமாட்டேன். ஆனால் மகுடத்தைச் சுமந்து கொண்டிருக்கும் மன்னன் நான். தளர்ந்து நிற்கும் ஓர் இனத்தின் தலைவன்!

மொழி, இனம், நாடு இவற்றின் முன்னேற்றமே என் மூச்சு! பிறந்ததிலிருந்தே இதுதான் என் பேச்சு! என் சுகதுக்கங்களையெல்லாம் இதை ஒட்டியே அமைத்துக் கொண்டேன். சோழர் குலம் பேரரசு நிறுவிப் பிரகாசிக்க வேண்டுமென்றால் அதற்கோர் ஆதரவு தேவை. அதனால்தான் பல்லவர்களுடன் உறவாடினேன். அந்த உறவு நிலைபெற வேண்டும் என்பதற்காக, ஆதித்தனுக்குப் பல்லவ இளவரசியை மணம் முடித்து வைக்கத் திட்டமிட்டேன். அதனால்தான் கண்களால் நீங்கள் வளர்த்த காதல் செடியை வெட்டிவிட்டேன். நான் செய்தது சரியென்று ராஜதர்மம் தலையாட்டுகிறது. மனித தர்மமோ நான் செய்தது தவறென்று சொல்லித் தலையில் குட்டுகிறது.”

பேச முடியாமல் இடையிடையே திணறினார் விஜயாலயர்.

“நலிந்து கிடந்த என் இனத்திற்கு ஒரு நாடு தந்தேன். ஆதித்தனுக்கு ஓர் ஆட்சி தந்தேன். அபராஜிதனுக்கோ பல்லவ சாம்ராஜ்யத்தின் மணிமகுடத்தையே பரிசாகத் தந்தேன்.

எல்லோருக்கும் நான் ஏதாவது கொடுத்தேன். ஆனால் இரண்டே இரண்டு பெண்களின் நிம்மதியைத்தான் பறித்தேன். ஒரு பெண் அதோ ஓவியத்தில் சிரித்துக் கொண்டிருக்கிறாள். இன்னொரு பெண் இதோ என் எதிரே கண்களாகிய சிலம்புகளை உடைத்து கண்ணீர்ப் பரல்களைத் தெறித்துக் கொண்டிருக்கிறாள்” என்று கூறிய மன்னர் மீண்டும், “மகளே! என்னை நீ மன்னிப்பாயா?” என்று தளர்ந்த குரலில் கேட்டார். தாமரை கண்ணீரைத் துடைத்துக் கொண்டு பேசினாள்:

“ஐயா! இமயம் போன்ற நீங்கள் ஓர் ஏழைச் சிறுமியிடம் மன்னிப்புக் கேட்பதா? வேண்டாம்! நீங்கள் செய்ததெல்லாம் சோழர்களின் நலத்திற்காகத்தானே தவிர, சுயநலத்திற்காக அல்ல. எங்கள் இனத்தின் தெய்வமே! உங்கள் கண்ணீரால் எங்களைத் தண்டித்துவிடாதீர்கள்! மகளே என்று பாசத்துடன் அழைத்தீர்களே.. அந்த வார்த்தை ஒன்றே போதும்! என் வாழ்க்கை நிறைவடைந்தது!”

ஆறுதலான அந்த வார்த்தைகளைக் கேட்டு நிம்மதியடைந்த விஜயாலயர், “உள்ளத்தினால் நீ உயர்ந்துவிட்டாய் அம்மா!” என்று கூறிவிட்டுக் கண்களை மூடிக் கொண்டார்.

"ஐயா! ஒரு காலத்தில் உங்கள் மகனை நான் காதலித்தது உண்மைதான். உணர்வுகளால் நான் ஊர்வலம் போன உல்லாச நாட்கள் அவை. உள்ளமெல்லாம் முல்லைப்பூப் பூத்துச் சொரிந்த மோகன வேளை அது. எண்ணச் சிறகுகளால் விண்ணிற் பறந்த ஓர் இளம்பெண்ணின் இன்பக்கனவு அது. கனவு இப்போது கலைந்துவிட்டது. காலம் என் கண்களைத் திறந்துவிட்டது. அப்பொதெல்லாம் என்னைப் பற்றி மட்டுமே நான் எண்ணிக் கொண்டிருந்தேன். இப்போது உங்களைப் பற்றி எண்ணுகிறேன். கலைந்து போகாமல் உங்கள் கனவுகளைக் காப்பாற்ற வேண்டுமே என்று கவலைப்படுகிறேன். சோழ நாடு பேரரசாக வேண்டும். அதற்குப் பல்லவர்களின் ஆதரவு வேண்டும். பல்லவ இளவரசியை உங்கள் மகன் மணந்து கொள்வதன் மூலம்— சோழர் குலத்திற்கு ஒரு சூரியோதயம் கிடைக்குமென்றால், அதற்காக இந்த அகல் விளக்கு அணைந்து போவதில் என்ன தவறு..?" என்றாள் தாமரை.

"ஆ..!" என்று பதறி எழ முயன்ற விஜயாலயர் எழுந்து உட்கார இயலாமல் மறுபடியும் சாய்ந்தார் மஞ்சத்தில்.

சரியாக அவரைப் படுக்க வைத்தபின் தாமரை பேசினாள் "கவலைப்படாதீர்கள் ஐயா! நானே என் உயிரை மாய்த்துக் கொள்ளமாட்டேன். எவருக்கும் தெரியாமல் சோழ நாட்டின் எந்த மூலையிலாது இருப்பேன். வீராதி வீரனாக என் தம்பியை வளர்ப்பேன். கடல் கடந்த நாடுகளிலெல்லாம் உங்கள் மகன் படை நடத்திப் போகும் போது, காற்றுக்கூட அவரைக் காயப்படுத்திவிடாதபடி என் தம்பியைக் காவல் நிழலாய் அனுப்பி வைப்பேன். எங்கெல்லாம் புலிக்கொடியை ஏற்றி வைத்தோம் என்று திரும்பி வந்து தெரிவிப்பான் என் தம்பி! அந்த வீரக்கதைகளைக் கேட்டபடி கண்களை மூடிக் களிப்பேன்.

தங்கள் சேனையில் முதல் வீரராகச் சேர்ந்தார் என் தாத்தா. தங்களுடன் போராடி நாட்டிற்காக உயிர் நீத்தார் என் தந்தை. தங்கள் மைந்தருக்காக வாளேந்துவான் என் தம்பி!

எங்கள் குடும்பத்தின் கடைசிக் கொழுந்தையும் உங்கள் இலட்சிய வேள்விக்காக அர்ப்பணிப்பேன். உங்கள் உதிரத்தைக் கொட்டி நீங்கள் உருவாக்கிய இந்தச் சின்னஞ்சிறு நாடு மாபெரும் சாம்ராஜ்யமாக மாறுவதைப் பார்த்துவிட்டுத்தான் நான் கண்மூடுவேன். உங்கள் மகனை என்னால் மறக்க முடியாது. என்

உள்ளத்தில் வைத்திருப்பேன்! ஆனால் சாகும் வரைக்கும் அவரை நான் சந்திப்பதில்லை என்று சத்தியம் செய்து கொடுக்கிறேன்."

விழிகளிலிருந்து புறப்பட்ட கண்ணீரை விஜயாலயரால் கட்டுப்படுத்த முடியவில்லை. கரைந்த குரலில் கூறினார்:

"ஜெயிக்க முடியாத சிம்மாசனம் அம்மா உன் இதயம்!"

ஆதித்தன் அந்தப்புரத்தை நோக்கி வந்து கொண்டிருப்பதாக அறிவித்தான் ஒற்றர் தலைவன்.

"நான் புறப்படுகிறேன் ஐயா!" என்று அவசரமாக எழுந்தாள் தாமரை. அடுத்த மண்டபத்தில் காத்திருந்த பல்லக்கில் ஏறித் திரைத் துகில்களை இழுத்து மூடிக் கொண்டாள்.

இரண்டாவது மண்டபத்தைத் தாண்டி வந்து கொண்டிருந்த ஆதித்தன், எதிரே வந்து கொண்டிருந்த பல்லக்கினை ஏறிட்டுப் பார்த்தான்.

"பல்லக்கில் போவது யார்? அந்தப்புரம் வரை பல்லக்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறதென்றால், உள்ளே மிக முக்கியமானவர் உட்கார்ந்திருக்க வேண்டும். யார் அது?"

பல்லக்கின் உள்ளே இருந்த சாளரத்தின் திரையைச் சற்றே விலக்கித் தன்னைக் கடந்து சென்று கொண்டிருக்கும் தன் உயிரைத் தாபத்துடன் நோக்கினாள் தாமரை.

பாவையின் நெஞ்சம் படபடத்தது. பல்லக்கிலிருந்து குதித்து ஓடோடிப் போய் அவனைக் கட்டி தழுவிக் கொண்டு கதறி அழ வேண்டும் என்று காரிகையின் உள்ளத்தில் காதல் ஆவேசம்!

கட்டுக்கடங்காத ஆசையை, விஜயாலயருக்குச் செய்து கொடுத்திருந்த சத்தியம் தடுத்தது. ஆமாம். சாகும்வரை ஆதித்தனைச் சந்திப்பதில்லையென்ற சத்தியம்! கடைசிவரை அதைத் தன்னால் காப்பாற்ற முடியுமா என்ற ஐயம் இளையவளின் மனத்தில் எழுந்தது இப்போது! பக்கத்தில் அவனைப் பார்த்தவுடனே உறுதியான தன் உள்ளம் ஊசலாடுவதை அவளால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

விரைந்து சென்று கொண்டிருந்த ஆதித்தன் தயங்கி நின்று, பல்லக்கின் பக்கம் பார்வையைத் திருப்புவதை அறிந்த தாமரை, திரைத்துகிலை நன்கு இழுத்துவிட்டுச் சாளரத்தை மூடிக் கொண்டாள்.

ஆதித்தன் தன்னை அழைத்துச் சென்று கொண்டிருந்த ஒற்றர் தலைவனிடம் அதிகாரமாகக் கேட்டான்.

“பல்லக்கில் போவது யார்?”

சாத்தன் பழியிலி சாமர்த்தியமாகப் பதிலுரைத்தான்: “கவிஞர் பொன்முடி மன்னரைச் சந்தித்துவிட்டுச் செல்கிறார்.”

“அப்படியா..! கவிஞரைப் பார்க்க வேண்டுமே” என்று சட்டென்று திரும்பிப் பல்லக்கை நோக்கி நடக்கத் தொடங்கினான் ஆதித்தன். தான் செய்துவிட்ட தவறை எண்ணிக் கைகளைப் பிசைந்து கொண்டான் சாத்தன் பழியிலி.









# 37



# சித்திரப் பலகை

தாமரை அமர்ந்திருந்த பல்லக்கை நோக்கி ஆதித்தன் நடக்கத் தொடங்கியதுமே திடுக்கிட்ட ஒற்றர் தலைவன் செய்வதறியாது திகைத்தான். தாமரையைச் சந்திக்கவிடாமல் இளவரசரைத் தடுப்பது எப்படி என்று தவித்தான். திடீரென்று ஒரு தீர்மானத்திற்கு வந்தவனாக ஆதித்தனின் கைகளைப் பற்றி இழுத்தான்.

“என்ன?” என்று சீறினான் இளவரசன்.

“மன்னருடைய உடல்நிலை மிகவும் மோசமாக இருக்கிறது. கவிஞர் பெருமானைப் பிறகு சந்திக்கலாம்.”

ஒற்றர் தலைவன் தந்தையின் உடல்நிலையைப் பற்றி உரைத்ததுமே கவிஞரைக் காணும் ஆசையைக் கைவிட்டான் ஆதித்தன். விஜயாலயர் படுத்திருந்த மண்டபத்தை நோக்கி விரைந்தான்.

பொன்முடி சென்று கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்ட பல்லக்கிலிருந்து பெண் முடி ஒன்று கூந்தலிலிருந்து பிரிந்து ஆதித்தன் சென்ற திசையை நோக்கி அசைந்து கொண்டிருந்தது.

நான்கைந்து நாட்களுக்குப் பின் ஒருநாள் பகற்பொழுதில் தஞ்சையின் வீதிகள் சற்றே கலகலப்பாகக் காட்சியளித்தன. ஆங்காங்கே கூடியிருந்த மக்கள் ஆர்வமாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

“பிழைத்துக் கொண்டாராம் மன்னர்!”

“ஆதித்தர் வந்ததிலிருந்தே அரசருடைய உடல்நலம் தேறத் தொடங்கிவிட்டதாம்!”

“இல்லை.. இல்லை. உடல்நலம் சரியில்லை என்று கேள்விப்பட்டதும் கவிஞர் பொன்முடி ஓடோடி வந்தாராம். அவர் கொண்டு வந்த அபூர்வமான மூலிகைதான் அரசரின் உயிரைக் காப்பாற்றியதாம்!”

“நலமடைந்துவிட்டது உண்மைதான். ஆனால் நடமாட முடியாதாமே?”

“பரவாயில்லை. உட்கார்ந்தபடியே அவர் உத்தரவிட்டுக் கொண்டிருந்தால் போதும்.”

மஞ்சத்தில் சாய்ந்திருந்தார் மன்னர்.

“ஐயா! இப்போது எப்படி இருக்கிறது?” என்று கேட்டான் அபராஜிதன்.

“பறவை கூடு சேர்த்துவிட்டது. ஆனால் சிறகடித்துப் புறப்படும் நாள் சீக்கிரம் வந்துவிடும்” என்று சிரித்தார் விஜயாலயர்.

“சும்மா இருக்கமாட்டீர்களா? உங்களுக்கு ஒன்றுமே இல்லை. ஓய்வெடுத்தால் போதும்” என்றான் ஆதித்தன்.

“இருந்தது ஒரு முள் இதயத்தில்! தானாகவே அது வெளியேறிவிட்டது. நெஞ்சமெல்லாம் இப்போது நிம்மதி!”

“நேற்று உங்களைப் பார்த்ததிலிருந்தே எங்கள் நிம்மதி போய்விட்டது” என்றான் அபராஜிதன்.

“ஒரு திங்களுக்கு முன் பார்த்திருக்க வேண்டும். உலர்ந்த சருகாய் உணர்வின்றிக் கிடந்தேன். இதயத்தில் தெளிவு, எண்ணத்தில் துணிவு எல்லாம் இப்போது வந்துவிட்டன. உடலில்தான் இன்னும் பழைய வலிமை வரவில்லை.”

“அதற்குள் ஏன் அவசரப்படுகிறீர்கள். போரைச் சிறிது காலம் தள்ளி வைத்தால் என்ன?”

“ஆதித்தன் சொல்வது சரிதான் ஐயா! பரிபூரணமாக நீங்கள் குணம் பெற்ற பின்னர் பாண்டிய நாட்டின் மீது படை எடுக்கலாம்.”

"முடியாது. முடிவதற்கு முன்பே கடமைகளை முடித்துவிட விரும்புகிறேன்" என்றார் விஜயாலயர்.

"நல்லது. நீங்களிடும் கட்டளை எதுவாயினும் நிறைவேற்றுவோம்" என்றான் அபராஜிதன்.

ஆதித்தன் குறுக்கிட்டான்: "ஆனால், ஒரு நிபந்தனை! போர்க்களத்திற்கு நீங்கள் வரக்கூடாது. வியூகம் வகுத்துத் தருவதுடன் உங்கள் வேலை முடிந்தது. வெற்றி தேடித் தருகின்ற பொறுப்பை எங்களிடம் விட்டுவிட வேண்டும்."

விஜயாலயர் புன்னகைத்தார். "காலமெல்லாம் கண்ட கனவு கைகூடும் நேரத்தில் நான் களத்திற்கு வரக்கூடாதா?"

"ஐயா! தங்கள் உடல்நிலையை எண்ணிப் பார்க்க வேண்டும்."

"ஏன்? என்ன ஆகிவிட்டது எனக்கு? இடதுகையும் இடது காலும் முழுமையாக இயங்கவில்லை. அவ்வளவுதானே. வாளைச் சுழற்ற வலது கை போதாதா?" என்று வீராவேசமாகக் கேட்டார் விஜயாலயர்.

"போரில் ஈடுபட்டால் கடுமையாக உடல்நலம் பாதிக்கப்படலாம் என்று மருத்துவர்கள் கருதுகிறார்கள்" என்றான் ஆதித்தன் பிடிவாதமாக.

பதிலேதும் சொல்லாமல் விஜயாலயர் சிரித்தார். அந்தச் சிரிப்பில் பரிகாசம் நிறைந்திருப்பதாக ஆதித்தன் நினைத்தான்.

மறுநாள் காலைப் பொழுதில் விஜயாலயருடைய மஞ்சத்தைச் சுற்றி நடந்து கொண்டிருந்தது ஒரு மந்திராலோசனை. அபராஜிதனும் ஆதித்தனும் கம்பவர்மரும், சாருமதியும் அமர்ந்திருந்தனர். வட்டங்களும் கோடுகளும் புள்ளிகளுமாய் வரையப்பட்டிருந்த மரப்பலகை ஒன்று அவர்களின் நடுவே வைக்கப்பட்டிருந்தது. அனைவருடைய பார்வையும் பலகையின் மீதே பதிந்து கிடந்தது.

விஜயாலயர் சற்றே நிமிர்ந்து பலகையைத் தன் வலது கையால் பற்ற முயன்றார்.

"நீங்கள் அப்படியே இருங்கள்" என்று கூறிய சாருமதி, ஓவியப் பலகையை எடுத்து அவர் அருகே சென்று பிடித்துக் கொண்டாள்.

விஜயாலயர், பலகையிலிருந்த புள்ளிகளையும் கோடுகளையும் சுட்டிக்காட்டிப் போர்க்களத்தின் வியூகத்தையும் திட்டத்தையும்

விவரிக்க.. சுற்றியிருந்த அனைவருடைய விழிகளும் வியப்பில் விரிந்தன.

கம்பவர்மர் கருத்துரைத்தார்: "வெல்லுதற்கரிய வியூகம். தீர்க்க தரிசனத்துடன் கூடிய திட்டம்! ஆனால், பாண்டிய நாட்டில் போர் நடைபெறுவதாகப் பலகையில் தீட்டப்படவில்லை. சோழ நாட்டில் நடப்பதாகச் சொல்லியிருக்கிறீர்கள்."

"ஆமாம்! பாண்டிய நாட்டை நோக்கி நாம் படை நடத்தப் போவதில்லை. சோழ நாட்டிற்குள் வரவழைத்துத்தான் அவர்களைச் சூறையாடப் போகிறோம்."

"அருகிலுள்ள கிராமங்களெல்லாம் அழிந்துவிடுமே.." என்று அதிருப்தியைத் தெரிவித்தான் ஆதித்தன்.

"உண்மைதான் வெற்றி எதுவாயினும் அதற்கொரு விலை உண்டு."

"இவ்வளவு பெரிய இழப்பை ஈடு செய்வது எது?"

"அபராஜிதனுடைய வாக்குறுதி! போரில் வெற்றி பெற்றால் பாண்டியர் வசமிருக்கும் சோழ நாட்டின் பகுதிகளை மட்டுமல்ல.. பல்லவர் வசமிருக்கும் சோழ நாட்டின் பகுதிகளையும் நமக்கு வழங்குவதாகப் பல்லவச் சக்கரவர்த்தி வாக்களித்திருக்கிறார்.." என்று ஆதித்தனை நோக்கிப் புன்னகைத்தார் விஜயாலயர்.

சாருமதி குறுக்கிட்டாள்: "ஐயா, சித்திரப்பலகை வேறொரு செய்தியையும் தெரிவிக்கிறது."

விஜயாலயர் அவளை ஏறிட்டுப் பார்த்தார்.

"வெற்றி பெறுவது உறுதி. ஆனால், அதை எளிதில் அடைய இயலாது."

"ஏன்?"

"பாண்டியர்களின் பலம் மிகுந்தும், நம்முடைய பலம் குறைந்தும் இருப்பதாகப் பலகை சொல்கிறது."

"ஆகா!" என்று பாராட்டிய விஜயாலயர், "சரியாகப் புரிந்து கொண்டாய் சாருமதி!" என்றார்.

ஐயத்துடன் தங்கையைப் பார்த்தான் அபராஜிதன். சாருமதி விளக்கினாள்: "அடர்த்தியாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது பாண்டியர்

அணிவகுப்பு. நம்முடைய அணி வகுப்போ கலைந்து கிடக்கிறது. புள்ளிகளுக் கிடையே ஏராளமான இடைவெளி.”

“நம் பலத்தைவிடப் பாண்டியனின் படைபலம் அதிகமா ஐயா?” என்று விஜயாலயரை வினவினான் அபராஜிதன்.

“சோழ நாட்டின் பிரசித்தி பெற்ற ஒற்றன் சாத்தன் பழியிலி அப்படித்தான் சொல்கிறான்.”

“பல்லவ சோழ நாட்டுப் படைகளுடன் இன்னொரு படையை நீங்கள் கணக்கில் சேர்த்துக் கொள்ள மறந்துவிட்டீர்கள்” என்றார் கம்பவர்மர்.

“ஆமாம்! அதையும் சேர்த்தால் நம் பலம் அதிகமாகிவிடும்” என்றான் அபராஜிதன்.

“அந்த மகாவீரரையும் சேர்த்துத்தான் நம் வலிமையை மதிப்பிட வேண்டும்” என்றாள் சாருமதி.

விஜயாலயர் சிரித்தார். அலட்சியமாக அவர்களைப் பார்த்துக் கேட்டார். “அபராஜிதனுடைய பாட்டன் கங்கமன்னன் பிருதிவீபதியைத்தானே சொல்கிறீர்கள்?”

“ஆமாம்.”

சித்திரப் பலகையை அருகில் கொண்டுவரச் சொன்னார் விஜயாலயர். பாண்டியர்களின் எதிரே நின்ற அணிவகுப்பின் முன்னணியிலிருக்கும் மூன்று பெரிய வட்டங்களைச் சுட்டிக்காட்டினார்.

“நடுவில் நாயகமாய் இருப்பது பல்லவநாட்டுச் சக்கரவர்த்தி. இடது புறத்தில் சோழர் படையின் தலைமைத் தளபதி. வலதுபுறமிருக்கும் வட்டம் யாரென்று நினைக்கிறீர்கள்..?” என்று புன்னகை செய்தார்.

“கங்க மன்னரிடம் இன்னும் நாம் உதவி கேட்கவில்லையே..” என்றான் அபராஜிதன்.

“பிருதிவீபதியின் முடிவு தெரியாமலேயே அவரை நம் அணியில் சேர்த்திருக்கிறீர்களே!” என்று வியந்தார் கம்பவர்மர்.

“கங்க மன்னரின் முடிவிற்காகக் காத்திருக்கத் தேவையில்லை. பேரனுக்காக ஓடி வருவார் பிருதிவீபதி.”

"உண்மைதான்!" என்று ஒப்புக் கொண்டார் கம்பவர்மர். விஜயாலயர் தொண்டையைச் செருமிக் கொண்டார். "பல்லவ நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் இடையே நடைபெற்றுவரும் பேரரசுப் போட்டியை முடிவுக்கு கொண்டுவரும் முக்கியமான போர் இது. நமது படைபலம் குறைவுதான். இருந்தாலும் களம் நம் கையில் இருக்கிறது. உணவு முதலிய தேவையான வசதிகள் இருந்த இடத்திலேயே நமக்குக் கிட்டும். பாண்டியர்களோ அனைத்தையும் மூட்டைக் கட்டிக் கொண்டு வரவேண்டும். சுற்று வட்டாரக் கிராமங்கள் எதிலும் அவர்களுக்கு ஒரு தானிய மணிகூடக் கிடைக்கப் போவதில்லை. சுதந்திர வேட்கை கொண்ட சோழ நாட்டுக் குடிமக்கள், சோதனை எது வந்த போதும் அதைத் தாங்கிக் கொள்ளத் தயாராக இருப்பார்கள்.

இவை எல்லாவற்றையும் சேர்த்துக் கணக்கிட்டால், பாண்டிய அணியின் பலமும் நமது பலமும் சமநிலையை எய்துகின்றன. இதற்கு மேல் போரில் அவரவர் கடைப்பிடிக்கப் போகும் யுத்த தந்திரமே எவர் பக்கம் வெற்றி என்பதை இறுதியாகத் தீர்மானிக்கும்" என்று முடித்தார் விஜயாலயர்.

சாருமதி சிரித்தாள். "விஜயாலயர் போர்க்களத்திற்கு வராவிட்டால் வெற்றி நிச்சயமல்ல."

ஆதித்தன் ஆவேசமுற்றான்: "அப்படியானால் அபராஜிதன், நான், கங்க மன்னர் மூவரும் கோழைகளா? வீரத்தில் குறைந்தவர்களா?"

கம்பவர்மர் குறுக்கிட்டார்: "ஆத்திரப்படாதே ஆதித்தா! இருக்கும் சூழ்நிலையை எண்ணிப் பார்க்க வேண்டும். விஜயாலயர் போர்க்களத்திற்கு வரவில்லை என்று தெரிந்தால், சோழ, பல்லவ வீரர்கள் சோர்வடைவார்கள். படைபலம் மிக்க மீன், துணிச்சல் மிகுந்து துள்ளிக் குதிக்கும்."

"அதற்காக.. படுத்த படுக்கையாய்க் கிடக்கும் என் தந்தையின் உயிரைப் பணயம் வைக்கச் சொல்கிறீர்களா?" என்று சீறினான் ஆதித்தன்.

"அவர்கள் சொல்லவில்லை. நான் சொல்கிறேன்" என்றார் விஜயாலயர்.

தந்தைக்கும் மகனுக்கும் நடந்த விவாதத்தில் தலையிட்டாள் பல்லவ இளவரசி.

“தஞ்சையிலிருந்து போர்க்களம் நோக்கிப் படை புறப்படும் போது விஜயாலயர் ரதத்தில் வீற்றிருப்பார். பட்டத்து யானைகளில் அபராஜிதனும் ஆதித்தரும் அமர்ந்திருப்பார்கள். ரதத்தின் உள்ளிருந்தவாறே வீரர்களிடம் உரையாற்றுவார் விஜயாலயர். பின்னர் ரதத்தின் கதவுகள் மூடப்படும். படை புறப்படும். வழியில் விஜயாலயர் கொற்றவை கோயிலுக்குள் செல்வார். ஆலயத்தினுள் விஜயாலயரின் ரதம் மட்டும் அனுமதிக்கப்படும். ஆதித்தரும் அபராஜிதனும் கோயில் முகப்பிலேயே காத்திருப்பார்கள். வழிபடச் செல்லும் விஜயாலயர், கொற்றவை கோயிலிலேயே தங்கிவிடுவார். வெறும் ரதம் வெளியே வரும். உள்ளே விஜயாலயர் இருப்பதாக எல்லோரும் நம்புவார்கள். உற்சாகத்துடன் படை புறப்படும். விஜயாலயர் என்ன கட்டளையிடுகிறார் என்பதை அவ்வப்போது ரதத்தின் சாரதி அறிவித்துக் கொண்டே வருவான்.

“போர்க்களத்திலும் இதே நாடகம் தொடரும். விஜயாலயர் பாசறையினுள் இருந்து போரை நடத்திக் கொண்டிருப்பதாக வீரர்கள் நம்புவார்கள். எந்த நிலையிலும் பாசறையின் உள்ளே எவரும் அனுமதிக்கப்படமாட்டார்கள். விஜயாலயர் களத்தில் இருக்கிறார் என்கிற பிரமையை ஏற்படுத்துவதன் மூலமே நாம் வெற்றி பெறலாம்.”

சாருமதியின் சமரசத் திட்டத்தைச் செயல்படுத்த அனைவரும் சம்மதித்தனர். வேறு வழியில்லாமல் விஜயாலயரும் அதை ஏற்றுக் கொண்டார். ஆதித்தன் மட்டும் அமைதியாய் இருந்தான். “என்ன யோசனை?” என்று ஆதித்தனைக் கேட்டான் அபராஜிதன்.

“ஒன்றுமில்லை” என்று ஆதித்தன் மழுப்பினான். சுற்றி இருந்தவர்களிடம் விஜயாலயர் சொன்னார்: “ஆதித்தனுடைய மனக் குழப்பத்தை என்னால் அறிந்து கொள்ள முடிகிறது. போருக்கு வராவிட்டாலும், புகழ் முழுவதும் எனக்கு வந்துவிடுமல்லவா? சரித்திரத்தில் தனக்கொரு தனியிடம் கிடைக்காதே என்றுதான் தயங்குகிறான் என் மகன்.”

அந்த வார்த்தைகள் அபராஜிதனையும் கம்பவர்மரையும் அதிர வைத்தன. என்ன சொல்வதென்று புரியாமல் எல்லோரும் திகைத்தனர். அப்போதும் வாய் திறக்கவில்லை ஆதித்தன்.

விஜயாலயரே பேசினார்.

"மாவீரனுடைய மகன் என்பதை ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஆதித்தன் உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறான். அபராஜிதனுடைய புகழையும் ஆதித்தனுடைய பெருமையையும் வரலாற்றில் இடம்பெறச் செய்வது என் கடமை. நல்லது. அபராஜிதன், ஆதித்தன், பிருதிவீபதி ஆகிய மூவரே போரில் பாண்டியர்களைப் புறங்கண்டவர்கள் என்று சாசனங்களைப் பேச வைக்கிறேன்? சரித்திரத்தில் பொறித்து வைக்கிறேன்*" என்று சிரித்த விஜயாலயர், "இப்போது திருப்திதானே?" என்று ஆதித்தனைப் பார்த்து கேட்டார்.

"எவ்வாறு அது இயலும்?" என்ற ஐயத்தை எழுப்பினார் கம்பவர்மர்.

"இயலும்! எதிரிகளை முறியடித்த பிறகு, போர்க்களத்தில் என்ன நடந்தது என்பதைக் களத்தில் இருக்கும் வீரர்களின் மத்தியில் அபராஜிதன் விளக்குவான். பாசறை பார்வையிடப்படும். அங்கு நான் இருந்ததாகச் சொன்னது பொய் என்பதை அனைவரும் அறிவார்கள்" என்றார் விஜயாலயர்.

சாம்ராஜ்யங்கள் இரண்டும் மோதிக் கொண்ட அந்தப் போர் சரித்திரத்திற்கே விடுத்த சவால்!

விஜயாலயர் வகுத்த வியூகத்தின்படியே போர் நிகழ்ந்தது. அபராஜிதன், ஆதித்தன் இருவரும் போர்க்களத்தை இரண்டாகப் பிளந்து சண்டமாருதமாய்ப் புகுந்து பாண்டிய வீரர்களைப் பதற வைத்துக் கொண்டிருந்தனர்.

---

*1.விஜயாலய சோழன் இப்போர் நிகழ்ந்த போது உயிர் வாழ்ந்திருந்தனன் என்பது ஒரு தலை. ஆனால், இதில் அவன் கலந்து கொள்ளவில்லை. அதற்குக் காரணம் அவனது முதுமை நிலையே எனலாம்.

(அறிஞர் சதாசிவப் பண்டாரத்தார்— பிற்காலச் சோழர் வரலாறு பக்—23)

2.அபராஜிதனே போருக்குச் சென்றான். அவனுக்குத் துணையாக அவனின் பாட்டனும் கங்க அரசனுமான, முதலாம் பிருதிவீபதி என்பவன் தன் படையுடன் சென்றான். இந்த நிலையில் விஜயாலயன் மகன் ஆதித்த சோழனும் பல்லவருடன் சேர்ந்து கொண்டான்.

(டாக்டர். மா. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு— பக் 212)

வரகுணப் பாண்டியனும் தன் வலிமையைக் காட்டிக் கொண்டிருந்தான்.

வெட்டப்பட்ட தலைகள் மலைகளாய்க் குவிய, கொட்டப்பட்ட குருதி குளங்களாய்ப் பெருக, வில்லும் வேலும் ஆயுத மழை பொழிய, குன்றுபோல் வந்த களிறுகள் குடைசாய, தேரும் ரதங்களும் சிதறித் தெறித்துத் தூள்பறக்க..

அங்கே— யுத்த வெறியின் நர்த்தனம் கொலை வெறியின் கும்மாளம்!

பொழுதுகள் மாறின. களங்கள் மாறின. ஒவ்வொரு நாளும் வெவ்வேறு கிழமைகளை உடுத்தி வந்தது. ஒவ்வொரு கிழமையும் தன்னை உதிரத்தில் தோய்த்து நொந்தது.

திரும்புறம்பியப் போர்க்களம் இறுதித் தீர்ப்பை எழுதியது.

பாண்டியர் படை தோற்கத் தொடங்குவதைப் போல் தோன்றியது. பல்லவ, சோழ, கங்க, வீரர்கள் வெற்றியடையப் போகும் களிப்பில் மிதந்து கொண்டிருந்தார்கள்.

திடீரென்று அந்தச் செய்தி பரவியது. “விஜயாலயர் போர்க்களத்திற்கு வரவே இல்லை!” என்றான் பாண்டிய நாட்டின் படைத்தலைவன் ஒருவன்.

“பாசறையில் விஜயாலயர் இல்லையாமே..” என்று சோகமான குரலில் கூறினான் சோழ நாட்டு வீரன் ஒருவன்.

பரபரப்பான அந்தச் செய்தி நெருப்பாய்ப் பரவியது. அவ்வளவுதான். போர்க்களத்தின் போக்கே மாறிவிட்டது!

பாண்டியர்கள் வெற்றி முழக்கமிடத் தொடங்கினார்கள். பல்லவருடைய நிலை பரிதாபமாகிவிட்டது. சோழர்கள் சோர்வடைய, கங்க வீரர்கள் கலங்கிக் கொண்டிருந்தார்கள்.

அப்போதுதான் அந்த ஆச்சரியம் நிகழ்ந்தது!








38



# போர்க்களத்துப் புயல்

கண்களால் தொட முடியாத தொலைவு வரை கடல் போல் பரந்து விரிந்திருந்தது பாண்டியர் படை. அபராஜிதனும் ஆதித்தனும் அந்தப் போர்க்கடலைக் கடைந்து வெற்றியெனும் அமுதெடுக்க விரைந்து கொண்டிருந்தனர்.

வரகுண பாண்டியன் சுற்றுத் திசையெங்கும் கலங்கரை விளக்காய்ச் சுற்றிக் கொண்டிருந்தாலும், அபராஜிதனும் ஆதித்தனும் இணைந்து காட்டிய வீரம் அவன் இருந்த திசையையே இருட்டாக்கிக் கொண்டிருந்தது.

ஆனால், ‘விஜயாலயர் போர்க்களத்தில் இல்லை’ என்ற செய்தி பரவியவுடன், போர்க்களத்தின் நிலைமை தலைகீழாகிவிட்டது. பல்லவர் பக்கமிருந்த வெற்றி பாண்டியர்களிடம் கைமாறத் தொடங்கியது.

“விஜயாலயர் இருந்தால் வெளியே வரச்சொல். பார்க்கலாம்” என்று வரகுண பாண்டியன் தோள் தட்டினான். பதில் சொல்ல வழியின்றி நின்றான் பல்லவ மாமன்னன்.

அப்போதுதான் அந்த ஆச்சரியம் நிகழ்ந்தது. “உன்னை எதிர்க்க விஜயாலயர் எதற்கு? இதோ என் வாள்— உன் கீர்த்தியைக் கிழிப்பதற்கு” என்று இடிக்குரல் எழுப்பியபடி கங்கமன்னர் பிருதிவீபதி பாண்டியனை நோக்கிப் பாய்ந்தார். ஒரே வீச்சில் வரகுண பாண்டியன் அமர்ந்திருந்த புரவியின் கழுத்தைத் துண்டாக்கி வீழ்த்தினார். பயந்து

போன பாண்டிய ஆபத்துதவிகள் சுவர் போல் வரகுணனைச் சூழ்ந்து கொண்டனர். அவர்களில் பலர் கங்கமன்னரின் வாள் முனைக்குத் தங்களைப் பலிகொடுக்கவே, வரகுணபாண்டியன் பின்வாங்கினான்.

பல்லவர் அணிவகுப்பின் பக்கத்தில் வந்த பிருதிவீபதி, “அபராஜிதா! உன்னை அபராஜிதனாகவே ஆக்குவேன். தோல்வி ஒருநாளும் உன் தோள் தொடவிடமாட்டேன்” என்று சூளுரைத்தார். பூகம்பமாய் எழுந்தார். புயலாய்ப் புகுந்தார். அவருடைய வேல்வீச்சில் இரண்டு களிறுகள் வீழ்ந்தன. அவருடைய கைவாள்பட்டுப் பரிகள் கதறின. கங்க மன்னரின் சங்கநாதம்* அபராஜிதனுக்கும் ஆதித்தனுக்கும் மகிழ்ச்சியளித்தது.

அவர்களுடைய மகிழ்ச்சி நீண்ட நேரம் நிலைத்திருக்கவில்லை. பாண்டிய நாட்டின் ஒரு படைப்பிரிவே கங்க மன்னரைச் சுற்றி வளைத்துக் கொண்டது. காற்றாடி போல் சுழன்று அத்தனை பேரையும் கலங்க வைத்தவர் மீது, களிறுகளின் மேல் அமர்ந்திருந்த பாண்டிய வீரர்கள் அடுக்கடுக்காக அம்பு மழை பொழிந்தனர். கண்ணிமைக்கும் நேரத்தில், கொத்துக் கொத்தாய் அம்புகள் குத்தித் தைத்த உடல் குருதிச் சுனையாய்க் கொப்பளிக்க, மண்ணில் வீழ்ந்தார் அந்த மாவீரர். உடலெங்கும் தைத்து ஊடுருவியிருந்த சரங்களே அவருக்கு சப்ரமஞ்சமாகி, மண்ணில்படாமல் அந்த மறவரின் உடலைத் தாங்கின. ‘வேங்கை பிருதிவீபதி வீழ்ந்துவிட்டார்’ என்று அபராஜிதனுக்குச் செய்தி சென்றது.

மின்னலாய் ஒளி வீசி மேகக் கூட்டத்தை நடுங்க வைத்தபின், ஓர் எரி நட்சத்திரம் போல் உதிர்ந்துவிட்ட சண்டமாருதத்தின் சடலத்தைப் புதைத்துவிட்டுப் பாசறைக்குள் புகுந்த அபராஜிதன், கரைந்த விழிகளால் கண்ணீர்க் கோலமிட்டுக் கொண்டிருந்தான்.

---

*கங்கன் பிருதிவீபதி கண்டவர் வியக்கும் வண்ணம் பாண்டியர் படைகளைக் கொன்று குவித்தான். கங்கரின் உதயேந்திரக் கல்வெட்டு இந்தச் செயலைப் பாராட்டிக் கூறுகிறது. ‘தன் உயிர்விட்டும், அபராஜிதனை (பகைவரால் வெல்லப்படாதவன் என்ற அப்பெயரின் பொருளுக் கேற்றபடி) அபராஜிதனாகவே ஆக்கிவிட்டான்’ என்று அது குறிக்கிறது.

பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார். தென்னாட்டுப் போர்க்களங்கள்– மூன்றாம் பதிப்பு–பக் 165.

“தோற்றுக் கொண்டிருக்கிறது நமது படை. கடைசிவரை கர்ஜித்த கங்க நாட்டின் கிழட்டுச் சிங்கமும் கண்மூடிவிட்டது. என்ன செய்வது இனி? பின்வாங்கிவிடலாமா?” என்று கேட்டான்.

“வீர சபதமிட்டு வந்தோம். வெறுங்கையுடன் திரும்ப முடியாது” என்று ஆவேசமாக உரைத்தான் ஆதித்தன்.

“விஜயாலயர் களத்தில் இல்லை என்ற செய்தி பரவிவிட்டது. இனிமேல் வெற்றியைப் பற்றிய நம்பிக்கை எனக்கு இல்லை. நிலைமையைப் புரிந்து கொண்டு நிதானமாகப் பேசு!”

“பின்வாங்குவது என்ற பேச்சுக்கே இடமில்லை. வெற்றி பெறுவோம். அல்லது வீழ்ந்து மடிவோம்.”

“ஆதித்தா! அர்த்தமற்ற உன் பிடிவாதத்திற்காக ஆயிரக்கணக்கான உயிர்களை அநாவசியமாகப் பலிகொடுக்க நான் விரும்பவில்லை.”

“அபராஜிதா! உன்னால் திட்டமிடப்பட்ட போரல்ல இது. உன் விருப்பப்படி முடிவு செய்ய முடியாது.”

“நானே இந்தப் போர்க்களத்தின் மாதண்ட நாயகன்! சூழ்நிலைக் கேற்ப அவ்வப்போது முடிவெடுக்கும் அதிகாரம் எனக்குண்டு.”

“உன் அதிகாரத்துக்கு நான் உட்பட்டவனல்ல. அவமானத்தைச் சுமந்து திரும்புவதைக் காட்டிலும் அழிந்து போவதையே விரும்புவான் ஆதித்தன்!”

“தளபதி இருசப்ப பூபதியோடும், படைத்தலைவர்களோடும் ஆலோசனை செய்த பிறகுதான் இந்த முடிவுக்கு வந்தேன். பேரிழப்பு— பல்லவர் படைக்கு! பேரனுக்காக ஓடி வந்த பாட்டன் பிருதிவீபதியையும் பறிகொடுத்துவிட்டேன். எஞ்சியிருக்கும் படைகளையாவது காப்பாற்ற வேண்டியது என் கடமை— விஜயாலயர் போர்க்களத்திற்கு வந்திருந்தால் நிலைமை வேறுவிதமாக இருந்திருக்கும்.”

ஆதித்தன் அதற்குப் பதில் சொல்லவில்லை. “போர்க்களத்திற்கு வரவேண்டும் என்பதில் உன் தந்தை உறுதியாய் இருந்தார். கூடவே கூடாது என்று நீதான் கொடி பிடித்தாய்! அவசரமான உன் முடிவின் பலனை நாம் அனுபவித்துக் கொண்டிருக்கிறோம்” என்றான்

அபராஜிதன். அபராஜிதனுடைய வார்த்தைகளைக் கேட்ட ஆதித்தனுக்குச் சினம் வந்தது.

"அபராஜிதா..! என் நண்பன் சேர மன்னன் தாணுரவியிடம் படை உதவி கேட்கலாம் என்றேன். என் தந்தையும் நீயும் ஏற்றுக் கொள்ளவில்லை. சேரர் படை நம்முடன் இருந்திருந்தால் இந்நேரம் ஜெயித்திருப்போம்."

சேரனைப் பற்றி ஆதித்தன் சிறப்பித்துப் பேசியவுடன் அபராஜிதனின் முகம் வாடியது. "சேரனின் உதவியுடன் ஜெயித்திருக்கலாம். ஆனால், பல்லவர்களை உலகம் பரிகாசம் செய்திருக்கும்."

"போர்க்களத்தில் பின் வாங்கினால் மட்டும் பல்லவர்களை உலகம் பரிகசிக்காதா?"

"அதைத் தாங்கிக் கொள்ள நான் தயாராய் இருக்கிறேன்."

"இப்போதுதான் எனக்குப் புரிகிறது."

"என்ன புரிகிறது?"

"நான் நினைத்தது தவறென்பது புரிகிறது."

"என்ன நினைத்தாய்?"

"பல்லவர்களை வல்லவர்கள் என்று நினைத்தேன்."

"அதிலென்ன ஐயம்?"

"பல்லவர்கள் வல்லவர்களும் அல்லர். நல்லவர்களும் அல்லர்."

"ஆத்திரத்தில் அளவு மீறுகிறாய்" —கர்ஜித்தான் அபராஜிதன்.

"தொடர வேண்டும் போர்!"

"சொல்வதைக் கேள்."

"முடியாது."

"நீ சொல்வதை நானும் ஏற்றுக் கொள்ள முடியாது. உன் நட்புக்காக எஞ்சியுள்ள படை வீரர்களையும் இழக்க முடியாது. ஆணையிடுகிறேன். இப்போதே பல்லவர் படை பின் வாங்குகிறது. வேண்டுமானால் உன் சோழ நாட்டுப் படையுடன் தொடர்ந்து நீ போரை நடத்து" என்று கூறிவிட்டு அங்கிருந்து வெளியேற முயன்றான் அபராஜிதன்.

"நில்!" என்ற கடுமையான குரல் காதில் விழுந்தது. அபராஜிதன் திரும்பிப் பார்த்த போது உறையிலிருந்த வாளை உருவித் தன் நண்பனின் நெஞ்சுக்கு நேரே நீட்டிக் கொண்டிருந்தான் ஆதித்தன். அளவிலா வியப்புடன் அபராஜிதன் சிரித்தான்.

"யார்? என் ஆருயிர் நண்பன் ஆதித்தனா என்னை நோக்கி வாளேந்தியிருப்பது?" என்று சிரித்தபடியே கேட்டான். "நல்லது நண்பனே! உன் வாள் எனது உடலை ஊடுருவட்டும். ஆனால் மார்பில் குத்திவிடாதே! ஏனென்றால் அங்குதான் இதயம் இருக்கிறது. அதில்தான் நீ இருக்கிறாய்" என்றான்.

சற்று நேரம் அபராஜிதனை முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்த ஆதித்தன் வாளைத் தூக்கி வாயிலில் எறிந்தான்.

சீற்றம் குறையாமல் திரும்பி நின்று கொண்ட நண்பனைக் கைநீட்டி இழுத்துக் கட்டித் தழுவிக் கொண்டான் அபராஜிதன்.

திடீரென்று போர்க் களத்திலிருந்து மாபெரும் ஆரவாரம் கேட்டது. சிறிது நேர இடைவெளியில் இரண்டு முறை அந்த ஒலி எழுந்தது. யுத்த பேரிகை சத்தமிட்டது! கடல் பொங்கி எழுந்தது போல் காதுகளைத் தாக்கிய அந்த ஓசையைப் புரிந்து கொள்ள முடியாத நண்பர்கள் ஒருவரை ஒருவர் உற்றுப் பார்த்தனர்.

கூடாரத்தின் உள்ளே வேகமாக நுழைந்த இருசப்ப பூபதி, "பல்லவ நாட்டின் சக்கரவர்த்தி அவர்களைப் பணிந்து வணங்குகின்றேன்" என்றான்.

"இருசப்பரே! என்ன ஓசை இது?"

"நம் வீரர்களின் ஆரவாரம்!"

"எதற்கு?"

"நம் படை முன்னேறிக் கொண்டிருக்கிறது."

"அப்படியா என்ன அதிசயம்" என்ற அபராஜிதன், "எப்படி நடந்தது இந்த மாற்றம்?" என்றும் கேட்டான்.

"அவர் போர்க்களத்திற்கு வந்துவிட்டார்" என்று கூறினான் இருசப்ப பூபதி குதூகலத்துடன்.

விஜயாலயர் போர்க்களத்திற்கு வந்துவிட்டார் என்ற செய்தி பரவிய சிறிது நேரத்தில், பாண்டியர்களுடைய படை பதறத் தொடங்கியது. பல்லவ, சோழ, கங்க வீரர்களுக்குப் புதிய பலம் வந்துவிட்டது.

அபராஜிதனும் ஆதித்தனும் போர் நடந்து கொண்டிருந்த இடத்திற்கு வந்து சேர்ந்த போது விஜயாலயரைப் பார்க்க முடியவில்லை. பாண்டியர்களுடைய படைக்கடலின் நடுவே ஊழிக்காற்றாய் அவர் உட்புகுந்திருந்தார். சோழ மன்னரின் பாதுகாப்புக்காக வில்லும் வேலும் ஏந்திய பத்து வீரர்கள் மட்டுமே அவருடன் சென்றனர். அணையை உடைக்கும் கோடரியாய் பாண்டிய வீரர்களின் அணிவகுப்பைத் தகர்த்து நொறுக்கித் தடுமாறச் செய்து கொண்டிருந்தார் விஜயாலயர்.

புரவியில் அவர் அமர்ந்திருந்த காட்சி, பொங்கி எழுந்த புயலொன்று கையில் வாளேந்திக் களம் வந்தது போலிருந்தது. இடதுகையும், இடதுகாலும் இன்னும் முழுமையாய் இயங்காத நிலையிலும், வலதுகையால் மட்டுமே பிரளயத்தை வரவழைத்துக் கொண்டிருந்தார் அவர். அவருடைய கையில் இருந்த வாள் சுழன்ற போது எதிரிகளின் படைகளெல்லாம் சிதைந்து, சிதறிச் சீர்குலைந்தன.

களம்— விஜயாலயருடைய கையில் வந்துவிட்டது. அந்த மாவீரரின் வீர விளையாட்டுக்களைப் பார்த்துப் போர்க்கள மங்கை பொங்கிச் சிரித்தாள்.. சிவந்தாள்.

கதிரவன் தன் தங்கக் கதிர்களாகிய கைவிரல்களை மடக்கிக் கொண்டு மேற்கு வானத்தின் கீழே நகர்ந்து கொண்டிருந்தான்.

அந்தி நேரம் முந்தியைப் பிடித்து இழுக்கத் தன் செவ்வந்திச் சிரிப்பைச் சிந்திக் கொண்டிருந்தது வானம்.

திருப்புறம்பியப் போர்க்களமெங்கும் தேங்கிக் கிடந்த குருதி வெள்ளம், சிதறித் தெறித்து அங்கங்கே அப்பிக் கொண்டது போல் வானம் காட்சியளித்தது.

இறந்தவர்களும் இறந்து கொண்டிருந்தவர்களும் போக, எஞ்சியிருந்த பாண்டிய வீரர்கள் புறமுதுகிட்டு ஓடிக் கொண்டிருந்தனர் போர்க்களத்திலிருந்து! வீரபேரிகை அதிர, வெற்றிச் சங்கு முழங்க, பல்லவ சோழ கங்க வீரர்களின் வெற்றி முழக்கம் விண்ணைத் தொட்டது.

அபராஜிதனும், ஆதித்தனும் தங்கள் புரவிகளைப் போர்க்களத்தின் மையப் பகுதியை நோக்கிச் செலுத்தினர்.

அவர் எங்கே? விஜயாலயர் எங்கே? களம் முழுக்கத் தேடியும் அவரைக் காணவில்லை. "இங்குதான் இருந்தார். என் கண்களால் பார்த்தேன்" என்றான் நாற்படை நாயகன் இருசப்ப பூபதி.



"விஜயாலயர், விஜயாலயர் என்று வீரர்கள் கூவியது கேட்டது. ஒரு மாவீரர் பகைவரிடையே புகுந்ததைப் பார்த்தோம். அவர் நம் அரசர்தானா என்று அனுமானிக்க முடியவில்லை" என்றான் சோழ நாட்டுப் படைத்தலைவன் ஒருவன்.

"விஜயாலயர் வந்துவிட்டார் என்ற சத்தம் கேட்டது. அவ்வளவுதான்.. வீறு கொண்டெழுந்தோம். பகைவர்களை நோக்கிப் பாய்ந்தோம். மன்னரைப் பார்க்க வேண்டும் என்று மனம் துடித்தாலும், நின்று பார்ப்பதற்கு நேரமில்லை."

"காற்றும் நடுங்கும்படி ஒரு கர்ஜனை தொலை தூரத்தில் தெரிந்தது. அந்த கம்பீரமான உருவம் கையசைத்தது. நாங்கள் களம் புகுந்தோம். அதன்பின் நடந்தது எதையுமே நம்ப முடியவில்லை. படபடவென்று சரிந்தது பாண்டியர் பட்டாளம்."

"ஓங்காரமிட்டபடி உள்ளே புகுந்தவர், பாண்டியர்களின் அணிவகுப்பிற்குள் பாய்ந்துவிட்டார். எதிரிகளின் நடுவேதான் இறுதிவரை இருந்தார்! அதனால்தான் அவரைச் சரியாக நாங்கள் கவனிக்க முடியவில்லை."

ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாய்க் கூறினர். போர்க்களத்திற்கு வந்தவர் விஜயாலயர்தானா என்ற ஐயம் எழுந்தது அபராஜிதனுக்கு.

ஆதித்தன் அவனை அழைத்துக் கொண்டு கங்க மன்னர் பிருதிவீபதியைப் புதைத்த இடத்திற்குச் சென்றான். போர்க்

களத்திலிருந்து விலகிச் சற்றுத் தொலைவில் அந்த மாவீரரைப் புதைத்த இடம் இருந்தது.

அந்த இடத்தில் அப்போதுதான் புதிதாக ஒரு வீரக்கல்* நடப்பட்டிருந்தது. அதன் மீது 'கங்கச் சிங்கம் பிருதிவீபதி' என்று குருதியைத் தொட்டு யாரோ விரலில் எழுதியிருந்தார்கள். எழுத்துக்களின் ஈரம் இன்னும் உலராமல் இருந்தது.

"அபராஜிதா! போர்க்களத்திற்கு வந்தவர் என் தந்தைதான் இந்த வீரக்கல்லை நட்டுவிட்டு இப்போதுதான் இங்கிருந்து புறப்பட்டிருக்கிறார். நான் அவரைத் தேடிச் செல்கிறேன். நீ படைகளுடன் வா" என்று கூறிய ஆதித்தன், தன் புரவியின் மீது தாவி ஏறினான்.

தஞ்சையை நோக்கி விரைந்து கொண்டிருந்த வெள்ளைப் புரவி தானாகவே ராஜபாட்டையிலிருந்து விலகி அந்த மண் சாலையில் நுழைந்தது. நீண்ட காலத்திற்குப் பின், தான் மிகவும் நெருங்கிப் பழகிய இடத்திற்கு வந்திருக்கும் தோரணை அதன் துள்ளலில் தெரிந்தது. பல்வேறு சிந்தனைகளுடன் அமர்ந்திருந்த ஆதித்தன், புரவி தாமரையின் வீட்டை நெருங்கிக் கொண்டிருப்பதை அறிந்து திடுக்கிட்டு, அதைத் திருப்ப முயன்றான்.





அப்போது–

தற்செயலாக அந்தக் காட்சி அவன் கண்களில் பட்டது.

---

*இப்போரில் இறந்த முதல் பிருதிவீபதியின் நடுகற் கோயில் ஒன்றும், உக்கிரப்பட்டி என்னும் பெயருடைய நிலப்பரப்பும், கச்சியாண்டவன் கோயில் என்ற நடுகற்கோயிலும் திருப்புறம்பியத்தில் இன்றும் உள்ளன.

– ஆராய்ச்சிப் பேரறிஞர் சதாசிவப் பண்டாரத்தார்– பாண்டியர் வரலாறு– பக்கம் 58.





# 39



# இதயப் போர்க்களங்கள்

கனவுகளின் சரணாலயமா இது? மலரம்புகளைத் தன் மீது பொழிந்த மாளிகையா இது?

களையிழந்து கிடந்தது வீடு. கதவுகளின் மீது கனத்த பூட்டுக்கள் தொங்கின. காதல் இதயத்தை யாரோ கசக்கிப் பிழிவது போல் இருந்தது.

மரங்களின் குப்பைக் கூடையாய் அந்த வீடு மாறியிருந்தது. உதிர்ந்த இலைகள் குவிந்து கிடந்தன. சுவர்களின் மீது படிந்திருந்த தூசியும் ஒட்டடையும் நீண்ட காலமாகவே அங்கு யாரும் குடியிருக்கவில்லை என்று குரல் கொடுத்தன.

'தாமரை எங்கே? தடாகத்தில் நீந்திவரும் என் தண்ணிலவு எங்கே?'

என்ன நடந்தது உனக்கு? எங்கிருக்கிறாய் நீ? என்னை வெறுத்தாய். சரி. காவிரி கொஞ்சி விளையாடும் இந்தக் காவியச் சோலையை ஏன் வெறுத்தாய்?

எங்கு சென்றாய்? நீயாகச் சென்றாயா அல்லது இங்கிருந்து போக வைத்துவிட்டார்களா? எவரிடம் கேட்பேன்? எவரிடம் சென்று இதைக் கேட்க முடியும்? இதில் ஏதோ சூழ்ச்சியிருக்கிறது. சக்தி வாய்ந்த எவரோ எங்கள் காதலில் தலையிட்டிருக்கிறார்கள். சக்தி வாய்ந்தவர்.. ஆ..

வீட்டுக்குள் புகுந்து பார்த்தால் விவரம் தெரியக் கூடும். ஆதித்தன் திடீரென்று ஆவேசம் கொண்டான். பூட்டியிருந்த கதவுகளை உடைத்துக் கொண்டு உள்ளே புகுந்தான்.

வீடு முழுக்கச் சுற்றி வந்தான். அடைத்துப் பூட்டியிருந்த மற்றொரு கதவையும் உடைத்து நுழைந்தான்.

சுவரில் மாட்டியிருந்த மான்கொம்பினைப் பிடுங்க முயன்றான். முடியவில்லை. திருகினான். தடதடவென்று விலகியது சுவர். உள்ளே படிக்கட்டுக்கள் தெரிந்தன. பாதாள அறை மங்கலான வெளிச்சத்தில் ஒரு பாதை தெரிந்தது.

தஞ்சையின் கோட்டை வாயிலில் அபராஜிதனுக்கும் ஆதித்தனுக்கும் குதூகலமான வரவேற்பு காத்திருந்தது. அபராஜிதன் மட்டும் அந்த வரவேற்பை ஏற்றுக் கொண்டான். காஞ்சிக்குச் சென்றுவிட்ட கம்பவர்மருக்கும் சாருமதிக்கும் வெற்றிச் செய்தியைத் தெரிவிக்க ஓர் ஒற்றனை அனுப்பினான். கோட்டை வாயிலின் வழியாக அவன் உள்ளே நுழைந்த அதே நேரத்தில், ஆதித்தன் ரகசியச் சுரங்கப் பாதையிலிருந்து வெளியேறினான்.

அவன் வந்து சேர்ந்த இடம் தஞ்சை அரண்மனையை ஒட்டியிருந்த 'மௌன மண்டபம்' என்பதை அறிந்தான். நெஞ்சில் பல்வேறு நினைவுகள். சட்டென்று ஒரு சந்தேகம்.

ஆத்திரமும் சீற்றமும் கொண்டவனாக மௌன மண்டபத்திலிருந்து வெளியே வந்த போது, மண்டபத்தின் வாயிலில் அவனுக்காகவே காத்திருப்பது போல் நின்றிருந்தான் ஒற்றர் தலைவன் சாத்தன் பழியிலி.

ஆவேசத்துடன் கேட்டான் ஆதித்தன்: "தாமரை எங்கே?"

அதிர்ச்சியடைந்த ஒற்றர் தலைவன் "எனக்குத் தெரியாது" என்றான்.

"உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. உண்மையைச் சொல். உயிரோடு இருக்கிறாளா?"

"ஆமாம்" என்று தலையசைத்தான் சாத்தன் பழியிலி.

"எங்கிருக்கிறாள்?" என்று ஒற்றர் தலைவனைப் பிடித்து உலுக்கினான் ஆதித்தன்.

"உயிரே போனாலும் என்னிடம் இருந்து ஒரு செய்தியும் வெளிவராது."

அரண்மனையின் உள்ளே பலத்த காயங்களுடன் படுத்திருந்த சோழ மன்னர் விஜயாலயர் மெள்ள முனகியபடி விழிகளைத் திறந்தார்.

"அசையவே கூடாதென்கிறார் அரச மருத்துவர்" என்றான் அபராஜிதன்.

விஜயாலயர் சிரித்தார். மெல்லிய குரலில் பேசினார்: "என் கடமைகளையெல்லாம் முடித்துவிட்டேன். இனி நான் அசைய வேண்டிய அவசியமே இல்லை."

"தேவையில்லாமல் உங்கள் உடல் நலத்தைச் சிதைத்துக் கொண்டீர்கள். திடீரென உங்களை யார் போர்க்களத்திற்கு வரச் சொன்னது?" என்று ஆத்திரத்துடன் கேட்டான் ஆதித்தன்.

"யாரும் வரச் சொல்லவும் இல்லை. திடீரென்று நான் வரவும் இல்லை" என்ற விஜயாலயர், "ஆரம்பம் முதல் போர்க்களத்திலேயே இருந்தேன்" என்று புன்னகை பூத்தார்.

"ஆமாம் அபராஜிதா! திட்டமிட்டபடி கொற்றவை கோயிலில் ரதத்திலிருந்து நான் இறங்கிக் கொள்ளவில்லை. களத்திற்கு வந்தேன். பாசறையில்தான் இருந்தேன். போரின் நிலைமை சரியாக இருந்திருந்தால் தலைகாட்டாமலே தஞ்சை திரும்பியிருப்பேன். நம் படை தோல்வியடையத் தொடங்கிய போதுதான் நான் வேறு வழியின்றிப் பாசறையைவிட்டு வெளியேறினேன்."

"அப்படியானால் ஆரம்பத்திலேயே எங்கள் ஆற்றலை நீங்கள் நம்பவில்லை அல்லவா?" என்றான் ஆதித்தன்.

"முழுமையான நம்பிக்கையும் வேண்டும். முன்னெச்சரிக்கையும் வேண்டும். உங்களை நம்பினேன். அதே சமயத்தில் எதிர்பாராதது நடந்தால் என்ன செய்வது என்ற எச்சரிக்கையோடும் இருந்தேன்."

"எத்தனையோ சமயங்களில் நீங்கள் என்னை ஏமாற்றியிருக்கிறீர்கள்" என்றான் ஆதித்தன் அழுத்தமாக.

அந்தக் கேள்வியில் வேறு ஏதோ பொருள் பொதிந்திருப்பதைப் புரிந்து கொண்ட விஜயாலயர், ஆறுதலாக அவனிடம் கூறினார்:

"மன்னித்துக்கொள் மகனே! நான் எது செய்திருந்தாலும் அதை நாட்டுக்காகச் செய்தேன் என்று நம்பு."

"வெற்றி கிடைத்த பிறகு களத்திலிருந்து நீங்கள் மறைந்தது ஏன்?" —வெறுப்புடன் ஒரு கேள்வியை வீசினான் ஆதித்தன்.

"*உன்னையும், அபராஜிதனையும் வரலாறு வணங்க வேண்டுமென்பதற்காகத்தான்."

"புரிந்து கொள்ள முடியாத புதிர் நீங்கள்! உங்கள் நடவடிக்கை ஒவ்வொன்றும் ஒரு நாடகம்" என்று குமுறிய ஆதித்தன், "போர்க்களத்திற்குப் புறப்படும் முன், ஐம்பெருங்குழுவையும் எண்பேராயத்தையும் கூட்டி அரச அதிகாரங்களை எல்லாம் எனக்கு வழங்கினீர்கள். நினைவிருக்கிறதா?" என்றும் கேட்டான்.

விஜயாலயர் பதிலுரைக்காமல் புன்னகைத்தார்.

"அந்த அதிகாரத்தை முதல் முறையாகப் பயன்படுத்தப் போகிறேன்" என்று விடுவிடுவென்று அங்கிருந்து வெளியேறினான்.

ஒற்றர் தலைவன் சாத்தன் பழியிலியைப் பதவியிலிருந்து நீக்கி உத்தரவிட்டதற்காக ஆதித்தனைக் கடிந்து கொண்டான் அபராஜிதன்.

"இது தந்தைக்கும் மகனுக்கும் நடக்கும் தகராறு. சக்கரவர்த்தி அவர்களே! நீங்கள் இதில் தலையிட வேண்டாம்" என்றான் ஆதித்தன்.

செய்தியைச் செவியுற்ற விஜயாலயர் சினம் கொண்டார். சாத்தன் பழியிலியைத் தன்னிடம் அழைத்துவர ஆணையிட்டார். அவன் தஞ்சையைவிட்டே வெளியேறிவிட்டதாகத் தகவல் கிடைத்தது.

'வெளியேறிவிட்டானா. அல்லது ஆதித்தனால் சிறைப்படுத்தப்பட்டானா?' —மஞ்சத்தில் அசையாமல் கிடந்த விஜயாலயரின் நெஞ்சத்தை அசைத்தது இந்த நினைவு.

---

*அபராஜிதவர்மனும், ஆதித்த சோழனும் போரில் வெற்றி பெற்று வெற்றிவாகை சூடினர்.

—அறிஞர் சதாசிவப் பண்டாரத்தார் (பாண்டியர் வரலாறு பக்—57)

—சாத்தன் பழியிலி.. சின்னஞ்சிறுவனாகத் தன்னிடம் சேர்ந்தவன். ஒவ்வொரு படியாக உயர்ந்து, ஒற்றர் தலைவனாய்த் திகழ்ந்தவன். இன்னலுற்ற போதெல்லாம் தன்னோடு இருந்தவன்.

‘சாத்தன் பழியிலி எங்கே?’ என்று மைந்தனைக் கேட்க நினைத்தார் தந்தை.

‘தாமரை எங்கே?’ என்று தந்தையைக் கேட்க நினைத்தான் மகன்.

தயக்கம் இருவரையும் தடுத்தது.

நகரெங்கும் தோரணம்! ஊரெங்கும் உற்சவம்!

திருப்புறம்பியப் போர்க்களத்தில் பெற்ற வெற்றிக்குத் திருவிழாக் கொண்டாட்டம். அபராஜிதனும், ஆதித்தனும் தஞ்சை மாநகரின் வீதிகளில் பட்டத்து யானைகளில் பவனி வந்தனர்.

விஜயாலயர் நலம் குன்றிய நாளிலிருந்து விரித்துப் போட்ட கூந்தலாய் வெறிச்சோடிக் கிடந்த தலைநகரம் அன்று தலைவாரிப் பூச்சூடத் தயாரானது.

மலை நாட்டிலிருந்து வருகை புரிந்திருந்தான் சேர மன்னன் தாணுரவி. சேர நாட்டுப் பேரழகி சேல்விழியும் அவனுடன் சேர்ந்து வந்திருந்தாள்.

மண்டபம் கொள்ளாத மக்கள் கூட்டம். ஆடை சூடிய மயில் அரங்கேறியது. துகிலுடுத்த மின்னலொன்று துள்ளிப் பாய்ந்தது. நட்சத்திரத் தோரணங்கள்— நடுவே ஓர் வெள்ளிநிலா! சங்கு முழங்க. சலங்கை குலுங்க. கண்கள் மயங்க.. காலம் தயங்க. சேர நாட்டுப் பேரழகி ஆடிக் கொண்டிருந்தாள்.

மண்டபத்தின் மேல்மாடத்தில் அபராஜிதனுக்கும் தாணுரவிக்கும் நடுவே அமர்ந்திருந்தான் ஆதித்தன்.

தாணுரவி கூறினான். “சேர நாட்டின் சிங்காரச் சிலை இது. மாமல்லைச் சிற்பம் மங்கையாய் வந்ததோ. அஜந்தா ஓவியம் ஆடல் தந்ததோ.. என்று நானே பல சமயங்களில் வியந்திருக்கிறேன்.”

ஆதித்தன் உற்சாகமாய்ப் பதிலுரைத்தான். “அழகிய அபிநயம்! அனைத்தும் கவிநயம்! சேர நாட்டுப் பெண்களுக்கே ஒரு செழுமை.. அதிலும் இது முழுமை! பார்க்கத் திகட்டாத பருவப் பதுமை!”

சேரமான், ஆடலழகியின் நாட்டியத்தில் ஈடுபாடு கொள்ளாமலிருந்த அபராஜிதனைச் சீண்டினான். “ஆதித்தனின்

உற்சாகம் எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. கவலைகளை மறப்பதற்குத்தான் கலைகள்.”

“உண்மைதான். ஆனால் கலைகள் நம்மைக் கவர்ந்திழுக்கும் வலைகளாய் ஆகிவிடக் கூடாது” என்றான் அபராஜிதன்.

“பல்லவச் சக்கரவர்த்தியின் பதில், அவருக்கு வயதாகிவிட்டதை வலியுறுத்துகிறது” என்றான் சேர மன்னன்.

“உன்னைவிட வயதில் மூத்தவன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். அதற்காக முதியவன் என்று நினைத்துவிட வேண்டாம்” என்று சிரித்தான் அபராஜிதன்.

மண்டபத்திற்குள் நுழைந்த குன்றத்தூர்க் கிழார் ஆதித்தனிடம் ஏதோ கூறினார்.

“தந்தை அழைத்திருக்கிறார். இதோ வந்துவிடுகிறேன்” என்று சேரமானிடமும் அபராஜிதனிடமும் கூறிவிட்டுச் சென்றான் ஆதித்தன்.

ஆதித்தன் சென்றபின், அபராஜிதன் கூறினான் “பெரிய தேவருக்கு அடிக்கடி மயக்கம் வந்துவிடுகிறது. ஓரிரு நாட்களாகிறது உணர்வு திரும்ப. உடல்நிலை மிகவும் நலிவடைந்துவிட்டது”

“கேள்விப்பட்டேன். பணிகளையெல்லாம் முடித்துவிட்டார் பரகேசரி! பயணத்தைத் தொடங்கப் பாதை பார்த்துக் கொண்டிருக்கிறார்.”

“அப்படிச் சொல்லாதே! அவர் நீண்ட காலம் வாழ்வார்; வாழ வேண்டும்!”

“உண்மைதான், திருப்புறம்பியப் போர்க்களத்திற்கு வந்ததனால்தான் பெரிய தேவரின் உடல்நலம் பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆனால், அவர் வராமல் இருந்திருந்தால்..”

“பாண்டிய ராணிக்குப் பல்லக்குத் தூக்கப் போயிருக்கும் பல்லவர் பட்டாளம்!”

சொற்களால் சேரன் சுட்ட போதிலும் அபராஜிதன் அதை வெளியே காட்டிக் கொள்ள விரும்பவில்லை.

நீண்ட நேரம் அமைதி நிலவியது.

"அபராஜிதா! உன்னைப் பார்த்துப் பார்த்துப் பொறாமைப்படுகிறேன்" என்றான் சேரன்.

"ஏன்?"

"உன்னைப் போல் பெறற்கரிய பேறு பெற்றார் யாருமில்லை."

அபராஜிதன் சிரித்தான். சேரன் உரைத்தான். "பாதாளச் சிறையில் கிடக்க வேண்டிய நீ– பாராளும் மன்னன்! பாண்டியர்களிடம் தோற்க வேண்டிய நீ– நாளைய வரலாற்றின் நாயகன்!"

"எல்லாமே விஜயாலயர் எனக்களித்த பெருமை!"

தழுவிய கைகளைத் தள்ளிவிட்டான் தாணுரவி.

"பெருமையென்று சொல்லாதே!"

"வேறு எப்படிச் சொல்வது?"

"பிச்சை என்ற சொல். பொருத்தமாக இருக்கும்" –சேரமான் ஏளனமாய்ச் சிரித்தான்.

சினத்தில் அபராஜிதன் முகம் சிவந்தது. சவுக்கடி விழுந்தது அவன் இதயத்தில்! யாராவது தங்களைக் கவனித்துக் கொண்டிருக்கிறார்களா என்று பார்த்தான்.

மாடத்தில் யாருமில்லை. கீழே மண்டபத்தில் கூடியிருந்தோர் சேர நாட்டு அழகியின் ஆடலில் சித்தம் பறிகொடுத்துப் பித்தம் பிடித்திருந்தனர். திரும்பினான்.. சேரன் இன்னும் சிரித்துக் கொண்டிருந்தான்.

அபராஜிதனின் கை உடைவாளை நோக்கி ஓடியது. உதடுகள் துடித்தன!

"தகாத வார்த்தைகளைப் பேசினாய். நட்பின் தகைமைக்கே நீ தகுதியானவனல்லன். தன்மானம் உள்ளவன் எவனோ, அவன் பிறரை அவமானம் செய்யமாட்டான். தமிழ் வேந்தரை இகழ்ந்தோர் தார்வேந்தர் என்பதனால், பகைவேந்தர் தலை மீது கல்லேற்றிய செங்குட்டுவனின் பரம்பரையா நீ? குடவாயிற் கோட்டத்துச் சிறையில் மான உணர்விற்காய் மரணத்தைத் தழுவிய *கணைக்கால் இரும்பொறையின் மரபிற்கே உன்னால் களங்கம்! என் நண்பனின் விருந்தினன் என்பதால் தப்பியது உன் தலை" என்று சீறிவிட்டு வெளியேறினான்.

மாடத்திலிருந்து அவன் வெளியே வந்த போது, உள்ளே நுழைந்து கொண்டிருந்த ஆதித்தன் கேட்டான், "அபராஜிதா! ஏன் புறப்பட்டுவிட்டாய்? நடனம் பிடிக்கவில்லையா?"

"நடனம் பிடிக்கிறது. நடவடிக்கை பிடிக்கவில்லை!"

'ஆடலைப் பற்றிப் பேசாமல் ஆடியவளின் அழகைப் பற்றிப் பேசியது அபராஜிதனுக்குப் பிடிக்கவில்லையோ? அல்லது தந்தையிடம் நான் கொண்டிருக்கும் கருத்து வேறுபாடு தவறென்று சுட்டுகிறானோ?'

நீலவானத்தின் மேகக் கடலில் நிலவு நீந்தத் தொடங்கியிருந்தது. நளின மயிலின் நாட்டியம் முடிந்தபின், நண்பன், தாணுரவியுடன் அரண்மனைக்குத் திரும்பிய ஆதித்தன், "அபராஜிதன் எங்கே?" என்று கேட்டான் —அவனை ஆற்றுவிப்பதற்காக.

"காஞ்சிக்குப் புறப்பட்டுவிட்டார்" என்று பதில் வந்தது.

"சொல்லிக் கொள்ளாமல் போய்விட்டானே!" என்றான் வருத்தத்துடன்.

"சொல்லாமல் சென்றது தவறுதான்" என்றான் சேரமான்.

"என்ன சொல்கிறாய்?"

"போரில் வெற்றி பெற்றால்— சோழ நாட்டிற்குரிய பகுதிகளை வழங்குவதாக வாக்குறுதியளித்தது குறித்து ஒன்றுமே சொல்லாமல் சென்றது தவறுதான்" என்று தோழனின் சினத்தைத் தூண்ட முயன்றான் தாணுரவி.

"நாணயமற்றவனல்லன் என் நண்பன்."

"நா நயம் உள்ளவன்தான்" என்று நகைத்த சேரன், "வாக்களிப்பது. பிறகு அதை மறந்துவிடுவது. இதெல்லாம் பல்லவ நாட்டுப் பழக்கம்! நிருபதுங்கன் உன் தந்தையை ஏமாற்றவில்லையா?"

---

*மதுகை இன்றி, வயிற்றுத் தீத் தணிய, தாம் இரந்து உண்ணும் அளவை ஈன்மரோ இவ்வுலகத் தானே!

—புறநானூறு (74—ஆம் பாடல்) (இகழ்ச்சியாய்த் தரப்பட்ட நீரை ஏற்காது உயிர்விட்ட போது இரும்பொறை பாடியது)

“நிறுத்து! எல்லா மனிதர்களையும் ஒரே துலாக்கோலில் எடைபோடக் கூடாது.”

“எடைபோடவில்லை. விடை தேடுகிறேன். பகலில் புறப்பட்டிருக்கலாம், பல்லவச் சக்கரவர்த்தி! இரவோடு இரவாக எவரிடமும் சொல்லாமல் காஞ்சிக்குப் புறப்பட வேண்டிய காரணமென்ன?”

விஜயாலயர் அப்போது விழித்துக் கொண்டிருந்தார். உள்ளே நுழைந்த ஆதித்தன்,

“ஒன்றுமே சொல்லாமல் ஊருக்குப் போய்விட்டானே..” என்றான் எரிச்சலுடன்.

விஜயாலயர் விவரித்தார்: “அபராஜிதன் உன் நண்பன் மட்டுமல்ல. நாடாளும் மாமன்னன். பல்லவப் பெருநாட்டின் இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்ள வேண்டியவன். திருப்புறம்பியப் போரில் ஏராளமான இழப்பு! அதோடு பாட்டன், பிருதிவீபதியையும் பறிகொடுத்துவிட்டுப் பதைத்து நிற்கிறான். அவசரத்தை விடு; அவனுக்கு அவகாசம் கொடு!”

“ஆமாம். நிறைய அவகாசம் கொடு. அப்போது தானே சொன்னதை எல்லாம் மறப்பதற்குச் சுலபமாக இருக்கும்” என்று சூடேற்றினான் தாணுரவி.

ஆதித்தனின் நெஞ்சிலும் எழுந்தது அந்த ஐயம். சினத்தை மனத்தில் வளர்க்கும் சீரிய முயற்சியில் சேரனின் ஏளனச் சிரிப்பும் சேர்ந்து கொண்டது.







40



# பேதை நெஞ்சம்

காஞ்சி அரண்மனையில் கவலையின் நிழல்கள்!

முதலமைச்சர் பிரும்மராயரின் முகம் சோர்ந்திருந்தது. தளபதி இருசப்ப பூபதி தளர்ந்திருந்தான். அபராஜிதனையே பார்த்துக் கொண்டிருந்தனர் அதிகாரிகள்.

"அபாரமான விளைச்சல். ஆனால் அறுவடை நமக்கல்ல!"

"மாபெரும் வெற்றி. ஆனால் மகிழ முடியாது!"

"வெற்றிக்கு மிக அதிகமான விலை கொடுத்தவர் நாம்! திருப்புறம்பியத்தில் திருவிழாக் கொண்டாட வேண்டியவர்கள் சோழர்களே!"

"எடுத்திருக்கும் முடிவு சரிதானா என்பதைச் சக்கரவர்த்தியவர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும்" என்று பலரும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

முதலமைச்சர் மட்டும் வாய் மூடியிருப்பதைப் பார்த்த அபராஜிதன், "பெரியவர் பிரும்மராயரே! பேசுங்கள் வாய்திறந்து. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்றான்.

"பெரிய தேவர் விஜயாலயருக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால் கடன்படவில்லை" என்றார் முதலமைச்சர்.

“கடன்படவில்லையென்றா சொல்கிறீர்கள்?” என்று சிரித்தான் அபராஜிதன். “விஜயாலயருக்கு நன்றிக் கடன்பட்டிருக்கிறேன். ஆதித்தனுக்கு நட்புக் கடன்பட்டிருக்கிறேன்” என்றான்.

“பல்லவ நாட்டிற்கு அடுத்த நிலையில் தஞ்சை இப்போது தலை நிமிர்ந்திருக்கிறது! பல்லவரால் சோழர் பெற்ற பயன் இது. இதன் பிறகும் நம் ஆதிக்கத்தில் இருக்கும் பகுதிகளை அவர்களுக்கு வழங்கினால், அது நம் வலிமையைக் குறைக்கும்” என்று முத்தாய்ப்பு வைத்தார், முதலமைச்சர்.

“அபாரமான விளைச்சல். இன்னும் அறுவடை நடக்கவில்லை!” என்று சிரித்தான் சேரமான்.

“என்ன சொல்கிறாய்?” என்று ஏறிட்டுப் பார்த்தான் தஞ்சை இளவரசன்.

“திருப்புறம்பியப் போரின் வெற்றி, சோழர்களின் வெற்றி! விஜயாலயரின் வெற்றி! வெற்றிக்குரிய வெகுமதி கிட்டவில்லை. சோழ நாட்டிற்குரிய பகுதிகள் இன்னும் உனக்குச் சொந்தமாகவில்லை.”

ஆதித்தன் பதில் பேசவில்லை.

“பல்லவர்களின் கருணையை எதிர்பார்த்து நீ காத்திருக்க வேண்டாம்” என்றான் சேரமான்.

“என்ன செய்வது?”

“கைப்பற்றிக் கொள்! வழங்குவதாக அவர்கள் வாக்களித்த பகுதிகளை நோக்கி உன் படைகளை அனுப்பு.”

“கொடுக்கமாட்டோம் என்று அவர்கள் கூறவில்லையே..”

“கொடுப்பதற்கு அவர்கள் யார்? நீயே எடுத்துக் கொள்.”

“கொடுக்கத் தயாராய் இருக்கும் போது எதற்காக நானே எடுத்துக் கொள்ள வேண்டும்?”

ஆதித்தனைப் பார்த்துச் சிரித்தபடி உரைத்தான் சேரமன்னன். “கொடுத்தால் காஞ்சிக்குப் பெருமை! எடுத்தால் தஞ்சைக்கு வலிமை!”

“தஞ்சைக்கு வலிமை தற்போதைய காஞ்சியின் நிலைமை” என்றார் முதலமைச்சர் பிரம்மராயர்.

வெள்ளூர்க் கோட்டத்துத் தலைவன் சோலைநாதன் எழுந்தான்: “சோழர்களின் வலிமையை நாமே அதிகரிப்பதானது, தேவையில்லாமல் ஓர் எதிரியைத் தேடிக் கொள்வதாகும்!”

முதலமைச்சர் மொழிந்தார். “சோலைநாதன் சரியாகச் சொன்னான். பாண்டியர் அழிந்தனர். பல்லவர் பலமிழந்தனர். *திருப்புறம்பியப் போரின் வெற்றி சோழர்களைத் திமிற வைத்துவிட்டது. சோழ நாட்டிற்குரிய பகுதிகளை வழங்குவதைச் சூழ்நிலைகள் தடுக்கின்றன.”

அபராஜிதனுக்கு ஆவேசம் வந்தது. “வாக்குறுதியை மீறியவன் என்று வரலாறு என்னை வசைபாட வேண்டுமா?”

“நாட்டுக்காக ஏற்றுக் கொள்ளும் களங்கம்கூடக் கௌரவமானது” என்றார் பிரம்மராயர்.

“முடியாது! நான் முடிவெடுத்துவிட்டேன்.”

“சக்கரவர்த்தி தன்னிச்சையாக முடிவெடுத்தால் அதைத் தடுப்பதற்கு எங்களுக்கு அதிகாரம் ஏது?” என்றார் முதலமைச்சர் வறண்ட குரலில்.

அரண்மனைக்குள் நுழைந்த போது கம்பவர்மரும், சாருமதியும் வழியிலேயே அவனை எதிர் கொண்டனர். அவையில் நடந்ததை விவரித்தான் அபராஜிதன்.

“காஞ்சியின் வலிமை குறைந்துவிடுமே என்று அவர்கள் கவலைப்படுகிறார்கள். காப்பாற்ற வேண்டுமே வாக்குறுதியை என்று நான் கவலைப்படுகிறேன்.”

“அவர்களுடைய கவலையும் நியாயமானதுதான்” என்றார் கம்பவர்மர்.

---

*பாண்டியன் தோற்றோடினான், அபராஜிதன் வெற்றி பெற்று மீண்டான். எனினும், அவனுடன் இருந்த ஆதித்த சோழனே நன்மை அடைந்தவன் ஆனான்.

அறிஞர். இராசமாணிக்கனார்– பல்லவர் வரலாறு–பக்.213.

"பல்லவ நாட்டைப் பலப்படுத்துவதற்குரிய பணிகளைத் தொடங்கிவிட்டேன். அதே நேரத்தில், சோழ நாட்டிற்குரிய பகுதிகளை வழங்கும் சாசனமும் ஆதித்தனுக்கு அனுப்பப்பட்டுவிட்டது."

"நிருபதுங்கனுடைய ஆதரவாளர்கள் நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். துரோகிகளை அவர்கள் தூண்டிவிடலாம்."

"எதிரிகளைச் சமாளித்துக் கொள்ளலாம். இதயத்தைச் சமாளிக்க முடியுமா? எனவேதான் வலிய தடைகளையும் மீறி வாக்குறுதியைக் காப்பாற்றினேன்."

"வாக்குறுதியை மட்டுமல்ல, ஆதித்தனின் நட்பையும் காப்பாற்றிவிட்டாய்."

"அதுமட்டுமல்ல.." என்று தங்கையைப் பார்த்த அபராஜிதன், அவளுடைய காதருகில் வந்து மெள்ள முணுமுணுத்தான். "உன் காதலையும் காப்பாற்றிவிட்டேன்."

நாணத்தில் தலைகவிழ்ந்தாள் நங்கை.

திடீரென்று உள்ளே நுழைந்தான் ஒற்றன் ஒருவன். அவன் கூறியதைக் கேட்டுக் கொண்டிருக்கும் போதே அபராஜிதனின் முகம் மாறியது.

"அடடா! அவசரப்பட்டுவிட்டானே ஆதித்தன்" என்று வருத்தத்துடன் கூறியவன், "சரி, நீ போகலாம்" என்று ஒற்றனை நோக்கித் தலையசைத்தான்.

"என்ன நடந்தது?"

"சாசன ஓலை தஞ்சைக்குப் போய்க் கொண்டிருக்கிறது. கையில் ஓலை கிடைக்கும் முன்பே அந்தப் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டுவிட்டான் ஆதித்தன்."

செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்ட கம்பவர்மர், "இது என்ன விபரீதம்?" என்றார்.

"விபரீதமல்ல! விளையாட்டு. புலிக்கொடி, நந்திக்கொடியோடு விளையாடத் தொடங்கியிருக்கிறது" என்றாள் இளவரசி சாருமதி.

வருத்தத்துடன் சிரித்தபடி ஆறுதல் கூறினான் அபராஜிதன். "பரவாயில்லை. இதைப் பெரிதுபடுத்த வேண்டாம். ஆதித்தன் நடத்தியிருப்பது ஆக்கிரமிப்புதான். ஆனால், என் சாசன ஓலை

அவன் கைகளில் கிடைத்தவுடன், அதுவே அன்பளிப்பாக மாறிவிடும்.”

“கொடுத்தபின் எடுத்துக் கொள்வதுதான் அன்பளிப்பு. கொடுக்குமுன் பறித்துக் கொள்வது அபகரிப்பு. சோழ இளவரசரின் செயலை மன்னிக்க முடியாது” என்று சீறினாள் சாருமதி.

“என்ன செய்வது?”

“ஆக்கிரமித்த பகுதிகளிலிருந்து சோழர் படையை அகற்ற வேண்டும்.”

“போர் தொடுக்க வேண்டும் என்றா கூறுகிறாய்?”

“வேறு வழியில்லை! அறியாதது போல் இதை அனுமதித்தால், காஞ்சியில் கலகம் வரும். சக்கரவர்த்தியின் செயல் தவறென்று சொல்லி, சாதாரண மக்கள்கூட எள்ளி நகையாடும் இழிநிலை ஏற்படும்.”

“உண்மைதான்..” என்று கவலை கொண்டார் கம்பவர்மர்.

“நாடும் வேண்டும். எனக்கு நட்பும் வேண்டும்! போர் தொடுத்தால் நட்பை இழப்பேன். பொறுத்திருந்தால் என் மணிமகுடத்தின் மரியாதையை இழப்பேன்” என்ற அபராஜிதன், வெகுநேரமாக விதானத்தையே வெறித்து நோக்கிக் கொண்டிருந்தான்.

“ஏதாவது செய்ய வேண்டும். நான் என்ன செய்வது?” என்றான்.

நீண்ட நேரம் கழித்து நேரிழை கூறினாள்: “அண்ணா! நம் மனப் போராட்டத்தைத் தீர்க்க ஒரு மார்க்கம் இருக்கிறது.”

சேர மன்னன் தாணுரவி சிரித்தான். “கொடியில் நந்தி! குணத்தில் நரி! முட்டாள் அபராஜிதனுக்குக் கூட மூளை இருக்கிறது.”

“வாயில் வந்தபடி பேசுவதே உன் வழக்கமாகிவிட்டது. இப்போது என்ன செய்வதென்று சொல்” என்று ஆத்திரத்துடன் கேட்டான் ஆதித்தன்.

“வைகறையில் புறப்படுகிறேன் வஞ்சிக்கு. அதற்குள் வழி என்ன என்று சிந்திக்கிறேன்.”

நான்கைந்து நாட்களாகவே உணர்வின்றிக் கிடந்த விஜயாலயர், அன்று காலையில்தான் கண் திறந்தார். கோட்டைத் தளபதியிடம் அவர் பேசிக் கொண்டிருந்த போது, ஆதித்தன் உள்ளே நுழைந்தான்.

குன்றத்தூர்க் கிழார் விடைபெற்றுக் கொள்ள, அருகில் வந்தமர்ந்த ஆதித்தன் ஏதோ கேட்க முயன்ற போதே, "கேள்விப்பட்டேன்.." என்றார் விஜயாலயர்.

"அற்புதமான திட்டம்! அவளுடையதாகத்தான் இருக்கும் இந்த அரிய யோசனை!" என்று ஆதித்தனைப் பார்த்துச் சிரிக்கவும் செய்தார்.

"பல்லவ இளவரசியைப் பாராட்டியது போதும். இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?"

விஜயாலயர் விவரித்தார். "அப்போதே சொன்னேன்— அவரசப்படாதே என்று. ஆக்கிரமிப்பு நடத்தினாய். சாதாரண அறிவுடையவர்களாக இருந்தால், நீ கைப்பற்றிக் கொண்ட பகுதிகளை நோக்கிப் படையனுப்பியிருப்பார்கள். பல்லவர்கள் அவ்வாறு நடந்து கொள்ளவில்லை. *விருப்பத்தோடு உனக்கு வழங்கியதாகவே இருக்கட்டும் என்று விட்டுவிட்டார்கள்.

அதே சமயம் அநியாயமான உன் செயலையும் அவர்கள் அனுமதிக்கவில்லை. அதன் அடையாளம்தான் காவிரிக் கரைக்குக் காவல்படை அனுப்பப் போவதாய்க் காஞ்சியிலிருந்து வந்திருக்கும் ஓலை!

"பாண்டிய நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் குறுக்கே பல்லவர் படை நிற்கும். பாண்டியர்களிடமிருந்து சோழர்களை நிரந்தரமாகப் பாதுகாப்பதே நிலைப்படையின் நோக்கம் என்று ஓலை உரைக்கிறது. பாதுகாப்புப் படையென்று பெயர் உண்மையில் அது பயமுறுத்தும் படையாகும்.

"மோதக் கூடாது. ஆனால் உன்னை முறைப்படுத்த வேண்டும்!

---

*அபராஜிதவர்மன், தன்னாட்சிக்கு உட்பட்டிருந்த சோழ நாட்டுப் பகுதியையும் ஆதித்தனுக்கு வழங்கியிருத்தல் வேண்டும் என்று கருதுவதற்கு இடம் உள்ளது. அறிஞர் சதாசிவப் பண்டாரத்தார்— பிற்காலச் சோழர் வரலாறு— பக்.23.

எதிர்க்க விரும்பவில்லை. ஆனால், எச்சரிக்க வேண்டும்– இதுதான் அபராஜிதன் அனுப்பியுள்ள ஓலையின் உட்பொருள்.”

“அப்படியானால் பாதுகாப்புப் படை அனுப்புவது சரியென்று சொல்கிறீர்களா?”

“அனுப்புவது சரி.. அவர்களைப் பொறுத்தவரை! ஆனால், நாம் அனுமதிக்க முடியாது.”

“என்ன செய்யலாம்?”

“சொன்னால் கேட்கவா போகிறாய்?” என்று புன்னகை பூத்தார் சோழ மன்னர்.

“சொல்லுங்கள்.”

“வெகு காலத்திற்கு முன் நான் நடத்தியது போல், தஞ்சையில் ஒரு வீர விழாவிற்கு ஏற்பாடு செய். நீ கைப்பற்றிக் கொண்டிருக்கும் பகுதிகளிலிருந்து உன் படைகளை விலக்கிக் கொள். சாசனம் பண்ணிக் கொடுத்த சக்கரவர்த்தி அபராஜிதனே வீர விழாவிற்கு நேரில் வந்து, சாசன ஓலையை உன்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்று ஓலை அனுப்பு. பாதுகாப்புப் படை அனுப்பி வைக்கும் யோசனையைப் பல்லவர்கள் கைவிடுவார்கள்.”

“படைகளை விலக்கிக் கொள்ள முடியாது. சோழ நாட்டின் கௌரவம் காணாமல் போய்விடும்.”

“சின்னஞ்சிறு சோழ நாட்டின் கௌரவம் சேதப்படுமென்றால், பரந்து விரிந்த பல்லவ சாம்ராஜ்யத்தின் கௌரவம் மட்டும் பழுதுபடாதா?”

விஜயாலயர் மீண்டும் விளக்கினார். “நல்லவர்களாக நடந்து கொள்ளும்வரை, பல்லவர்களை நாம் பகைக்க வேண்டியதில்லை.”

“உங்கள் கனவு நனவாக வேண்டாமா? சோழ நாடு பேரரசாக மாற வேண்டாமா?”

“வெற்றி முக்கியமானது! அதை அடையும் வழி அதைக்காட்டிலும் முக்கியமானது” என்றார் விஜயாலயர்.

“தந்தையே! உங்கள் வாழ்க்கையை நான் வழிபடுகிறேன். ஆனால், என்னால் உங்களைப் பின்பற்ற இயலாது. ஒன்பது வயதில் உங்கள் லட்சியத்தைக் கனவு காணத் தொடங்கினீர்கள். நீங்கள்

உருவாக்கியதென்ன? ஒரு சின்னஞ்சிறு நாடு. உங்கள் வழிமுறைகளையே நானும் பின்பற்றினால், உங்கள் பேரனின் காலத்தில்கூட இந்த நாடு பேரரசாய் மாறாது.

கனவு மெய்ப்பட வேண்டும். கடல் கடந்த நாடுகளெல்லாம் நம் கைப்பட வேண்டும். எழ முயன்று கொண்டிருக்கும் என் தேசத்தின் எழுச்சிப் பதாகை, தொலை தூர தேசங்களிலும் சுடர்வீச வேண்டும். அநாதைகளைப் போல் நாடு நாடாக அலைந்து கொண்டிருந்த நம் இனம், பாரெங்கும் கொடி உயர்த்திப் பவனி வரவேண்டும்! வெற்றி பெற வேண்டும்! அதையும் விரைவில் பெற வேண்டும்" என்று ஆவேசத்துடன் முழங்கினான் ஆதித்தன்.

"மகனே! நீ வெற்றி பெறுவாய் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. உன் வீரம் என்னைத் தலை நிமிர வைக்கிறது. ஆனால், நியாயம் என்னைத் தலைகுனியச் செய்கிறது."

"தந்தையே! மகத்தான உங்கள் இலட்சியத்திற்காகத்தான் நானும் உழைக்கிறேன். பந்த பாசங்களையெல்லாம் மறந்துவிட்டுப் பணியாற்றுகிறேன். நம் பயணம் ஒன்றுதான். ஆனால், என் பார்வை வேறு. என் பாதை வேறு" என்று எழுந்தான் ஆதித்தன்.

மீண்டும் கூறினான். "தாய்க்குத் தாயாய், தந்தைக்குத் தந்தையாய்த் தொட்டுத்தழுவி தூக்கி வளர்த்து, இரவு பகலாய் என் இதயத்தில் இலட்சிய விதைகளைத் தூவிய நீங்களே என் கொள்கைப் பாதையில் குறுக்கிட வேண்டாம்"

"மகனே! இறுதியாக உன்னை ஒன்று வேண்டிக் கொள்கிறேன். அன்பு காட்டுகிறவர்களின் மீது மட்டும் அம்பு வீசாதே!" என்றார் விஜயாலயர்.

"இந்த வார்த்தையைத் தாங்கள் சொல்லக் கூடாது" என்று விரக்தியாகச் சொல்லிவிட்டு வெளியே நடந்தான் ஆதித்தன்.

அவன் வெளியேறிச் செல்வதையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த விஜயாலயர், தனக்குள் முணுமுணுத்துக் கொண்டார். "தாமரை என்னை மன்னித்துவிட்டாள். ஆதித்தன் தண்டித்துக் கொண்டிருக்கிறான்!"

காஞ்சி அரண்மனையில் ஏற்றப்பட்ட மங்கள தீபங்களும் மங்கலாகவே எரிந்து கொண்டிருந்தன— அங்கிருந்தவர்களின் மனதினைப் போலவே!

"ஆதித்தனிடமிருந்து ஓலை" என்றான் அபராஜிதன்.

"வந்துவிட்டதா?" என்று துள்ளினாள் பல்லவ இளவரசி. "என்னைப் பற்றி விசாரித்திருக்கிறாரா? உடன்பாட்டுக்கு வர ஒப்புக் கொண்டுவிட்டாரா?" என்று கேட்டாள்.

"சூழ்நிலை இனிமேல் சுமுகமாகிவிடுமா அண்ணா?" என்று இளையவள் கேட்ட போது, அதில் ஏக்கம் இருந்தது.

எத்தனை மதிநுட்பம் இருந்தாலும், பெண் என்பவள் காதல் உணர்வில் பேதையாகிவிடுகிறாள் என்பதை, அன்பு கொண்ட அண்ணனால் அறிந்துகொள்ள முடிந்தது. ஏமாற்றமளிக்க வேண்டியிருக்கிறதே என்ற தயக்கத்துடன் ஓலையைப் படித்தான்.

"பல்லவர் படை சோழ நாட்டைப் பாதுகாக்கத் தேவையில்லை. தஞ்சைக்கு வேண்டியதில்லை உன் தயவு. முடிந்தால், காஞ்சியை நீ காப்பாற்றிக் கொள்!"

துள்ளல் நின்றது. தோகைமயிலின் அழகிய முகத்தில் துயரம் ஆரத்தி சுற்றியது. திடீரென்று கண்களில் பறந்தது கனல்.

"அன்பையும் நட்பையும் மட்டுமல்ல, சகல வல்லமை படைத்த நம் சாம்ராஜ்யத்தையே துச்சமென அவமதித்துத் தூக்கியெறிந்துவிட்டார் சோழ இளவரசர். இனியும் பொறுத்திருந்தால் மகாமண்டல சபை உன் மணிமகுடத்தைப் பார்த்து நகைக்கும். அண்ணா! பாசத்திற்கு விடைகொடு! பலத்தைக் காட்ட படை எடு!" எனச் சீற்றத்துடன் முழங்கிய சேயிழையாள், திடீரென்று தேம்பத் தொடங்கினாள்.

போர்க்களத்தின் நடுவே, தோற்றுப் போனவர்கள் தூக்கி வந்த கொடி போல் அவள் துவண்டாள். விருட்டென்று அங்கிருந்து வெளியேறிச் சென்று, வெட்டுண்ட வாழைத் தண்டாகக் கட்டிலிலே விழுந்தாள். நங்கையின் நயனங்களிலிருந்து இரண்டு நதிகள் புறப்பட்டன.

அந்த ஆற்று வெள்ளம் தன் அன்பு மகளின் வாழ்வையே அடித்துச் சென்றுவிடுமோ என்று கவலைப்படத் தொடங்கினார் கம்பவர்மர்.





41



# துடித்த தோள்கள் துவண்டன!

தஞ்சை அரண்மனை தவித்துக் கொண்டிருந்தது. விஜயாலருடைய மஞ்சத்தின் அருகே கவலையோடு அனைவரும் காணப்பட்டனர்.

திடீரென்று விழித்துக் கொண்ட வேந்தரின் விழிகள் வாட்டத்துடனிருந்த கோட்டைத் தளபதியையும், மாவலிவாணரையும் வலம் வந்தன. கிணற்றுக்குள்ளிருந்து பேசுவது போல் கேட்டது குரல், "ஆதித்தன் எங்கே?"

தொலைவில் ஒதுங்கி நின்றிருந்த ஆதித்தன் அருகே வந்ததும், அமருமாறு சைகை செய்தார் அரசர். மகனிடம் தனிமையில பேச விரும்புகிறார் என்பதைப் புரிந்து கொண்டு கோட்டைத் தளபதியும் முதலமைச்சரும் வெளியே சென்றனர்.

"வந்துவிட்டது பார்த்தாயா?" என்றார் வருத்தத்துடன் விஜயாலயர்.

"எது?"

"பல்லவர் படை."

"உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்று ஆதித்தன் கேட்டான் ஆச்சரியத்துடன். ஏனென்றால் சற்று முன்தான் அவனுக்கே தகவல் வந்திருந்தது.

விஜயாலயர் சிரித்தார். “கண்ணில் தூசி விழுந்தால் கைக்குத் தெரியாதா? கண்ணுக்குக் கண்ணாய் நான் காப்பாற்றி வந்த என் மண்ணின் மேல் அந்நியர் படை கால் வைத்தால் என் உள்ளம் அதை உணர்ந்து கொள்ளாதா?”

திடீரென்று கனவு காண்பவர் போல் பேசினார். “இதோ.. என் மார்பில் காதுகளை வைத்துக்கேள். பல்லவர்களுடைய புரவிப் படையின் குளம்படி ஓசை.”

“இதோ.. இரும்புத் துண்டங்களை அடித்து தரையில் இறக்கிக் கொண்டிருக்கிறார்கள். பல்லவ வீரர்கள் தங்கியிருப்பதற்குப் பாசறைகள் தயாரகின்றன.”

ஆதித்தன் அவரை அமைதிப்படுத்த முயன்றான். “என்னை மன்னியுங்கள் தந்தையே! ஏமாற்றப்பட்டேன். கொட்டாவிவிட்டுக் கொண்டிருக்கும் நம் ஒற்றர் படை என்னைக் குப்புறத் தள்ளிவிட்டது. காஞ்சிக்கு ஓலை அனுப்பினேன். பதில் வந்த பிறகுதான் படைவரும் என்று நம்பினேன். பதில் வரவில்லை. படை கொண்டு வந்துவிட்டான் அபராஜிதன்.”

“கவலைப்படாதீர்கள். விரைவில் அவர்களை விரட்டுவேன். தொண்டை மண்டலம் வரை துரத்தியடிப்பேன் என்று சூளுரைக்கிறேன். புறப்படுகிறேன் போர்க்களத்திற்கு! அமைதி கொள்ளுங்கள். தந்தையே அனுப்பி வைக்கிறேன் வெற்றிச் செய்தியை.”

“கேட்பதற்கு நான் இருக்கமாட்டேன்” என்றார் விஜயாலயர்.

“அப்படிச் சொல்லாதீர்கள்.”

“இது தேவையற்ற போர். உன்னால் திணிக்கப்பட்ட போர். ஆனாலும் போர் என்று வந்த பிறகு விஜயாலயன் களத்தில் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவன் உடலில் உயிர் இல்லாமல் இருக்க வேண்டும்” என்று கூறிய தந்தையைத் தழுவிக் கொண்டு கண் கலங்கினான் ஆதித்தன்.

விஜயாலயர் திணறியபடியே பேசினார்!

“மகனே! என் வாழ் நாளெல்லாம் உழைத்து ஒரு சிறிய நாட்டைத்தான் உருவாக்கினேன் என்று உரைத்தாயே. அது உண்மைதான்! அசுர பலம் பொருந்திய பல்லவர் ஒரு பக்கம். அரக்க

பலம் பொருந்திய பாண்டியர் ஒரு பக்கம்— நடுவில் நான் உருவாக்கிய நாடு. ஆனாலும் நடுங்கவில்லை நான். பகைவரின் பாதங்கள் என் மண்ணில் பட்டதில்லை! தோழர்கள் கூட அலட்சியமாய் இந்த மண்ணைத் தொட்டதில்லை. ஆனால்— இன்றுதான்— இந்த நாட்டிற்குள் அச்சமின்றிப் புகுந்திருக்கிறது அடுத்த நாட்டின் படை" என்று கூறிவிட்டு "ஆ..!" என்று ஆவேசத்துடன் முழங்கியவாறே எழ முயன்றார்.

"என்னுடைய மண்ணில் இன்னொருவர் படையா?" என்று கர்ஜித்தார்.. இடி முழக்கம் போல். விஜயாலயரின் கர்ஜனை எதிரொலித்துக் கொண்டிருந்த போதே, துடித்த தோள்கள் துவண்டன. துள்ளிய மேனி தொய்வடைந்தது சரிந்தது. அவர் உடல் சாய்ந்தது! வீராதி வீரரின் உயிர் இப்பூலவுகிலிருந்து விடைபெற்றுக் கொண்டது.

வரலாறு காணாத மாவீரரின் வாழ்க்கை முடிந்துவிட்டதை அறிந்து, கூடியிருந்தவர்களெல்லாம் குமுறி அழுத குரல், கோட்டைச் சுவர்களையும் குலுங்க வைத்தது.

மன்னருக்கு இறுதி மரியாதை செலுத்திக் கொண்டிருந்த மக்கள் கூட்டம் கண்ணீரும் கம்பலையுமாகக் காட்சியளித்தது. அரண்மனையின் முன்வாயில் முகப்பில் அவருடைய பூத உடல் வைக்கப்பட்டிருந்தது.

மணிமாலைகளும் முத்து வடங்களும் மலர் மாலைகளும் மறைக்க முயன்ற போதும், அவர் மார்பிலிருந்த விழுப்புண்களை அவற்றால் விழுங்க முடியவில்லை.

பகைவர்தம் வாள்களும், வேல்களும் அவருடைய உடம்பெல்லாம் உழுதிருக்க, விதைக்கப்பட்ட விதைகளாய் அந்தப் விழுப்புண்கள்!* இணையற்ற மாவீரரின் உடலை ஏறிட்டுப் பார்த்தான் ஆதித்தன். தந்தை! என் தந்தை! எவருக்குக் கிடைப்பார் இத்தகைய தந்தை?

---

*"சீறுஞ் செருவிற் திருமார்பு தொண்ணுாறும்
ஆறும் படுதழும்பின் ஆரத்தோன்."

—குலோத்துங்கசோழன் உலா.

"தொழும்புடைய ஆகத்துத் தொண்ணுாறும் ஆறும்
தழும்புடைய சண்டப்ரசண்டன்."

சின்னஞ்சிறியவனாய் இருந்த போதே என்னைச் சிநேகிதனாய் நடத்தியவர்.

வாட்போர் கற்றுத் தருகிறார்.

ஒருமுறை அவருடைய வாள் உயரே பறக்கிறது. இல்லை— பறக்கவிடுகிறார்! "உன்னைப் போல் ஒருவனுமில்லை! நீ என்னையே ஜெயித்தவன்" தோள் மீது தூக்கி வைத்துத் துள்ளுகிறார்.

தாய் ஒருபுறம். தந்தை ஒருபுறம். கைப்பிடித்து நடத்திச் செல்கிறார்கள்.. காவிரி மணலில் கால் பதிகிறது.

பிஞ்சுக் கால்களால் பதித்த தடயங்களை அவர் பார்வையிடுகிறார்.

"ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள்?" என்று அன்னை கேட்கிறாள்.

சிரித்தபடி பதிலுரைக்கிறார்: "சரித்திரத்தில் சுவடு பதிக்கப் போகிறவன் என் மகன்! அவனுடைய பாதச்சுவடுகளை மணல் பத்திரப்படுத்தி வைக்கிறதா என்று பார்க்கிறேன்."

"தந்தை ஒரு பைத்தியம்! மகன் ஒரு பைத்தியம்!" என்று கூறிவிட்டுக் குலுங்கிக் குலுங்கிச் சிரிக்கிறாள் அன்னை.

"ஆமாம். நீதான் எங்கள் வைத்தியம்!" என்று அன்னையைப் பார்த்துப் புன்னகை செய்கிறார்.

"வரலாறு உன்னை வணங்கும்! சரித்திரம் உன் தாள் பணியும்" என்று ஓயாமல் உரைப்பார்.

ஓய்ந்துவிட்டார், ஓய்வின்றி உழைத்த என் தந்தை ஓய்ந்துவிட்டார்.

அவல ஓவியமாய் அமர்ந்திருந்த ஆதித்தனிடம் கோட்டைத் தளபதி குன்றத்தூர் கிழார் கூறினார்.

"வடக்குக் கோட்டை வாயிலில் ஐம்பது வீரர்களோடு காத்திருக்கிறார் அபராஜிதச் சக்கரவர்த்தி. மரணமடைந்த மன்னருக்கு மரியாதை செலுத்த வேண்டுமாம்."

முறைத்துப் பார்த்த ஆதித்தன் கூறினான்:

"முதலைகள் கண்ணீர்விடத் தேவையில்லை!"

அபராஜிதன் செய்தியனுப்பினான்: "அவர் ஆதித்தனின் தந்தை மட்டுமல்ல. என் போன்ற இளைஞர்தம் இதயங்களில் வாழும் ஏந்தல்! இறுதி மரியாதை செலுத்தும் வாய்ப்பை எதிரிக்குக்கூட மறுக்கலாகாது!"

ஆதித்தன் கூறினான்: "என் தந்தையின் இறப்புக்குக் காரணமானவனே அவன்தான்.."

அபராஜிதன் பதில் அனுப்பினான்: "விஜயாலயரைக் கொன்றது அவருடைய கடுமையான உழைப்பு. கட்டுப்படுத்த முடியாத முதுமை. அதோடு.. ஆதித்தனின் ஆணவம்."

ஆதித்தன் சீறினான்: "என் தந்தைக்கு மரணமில்லை. அவருடைய புகழ் ஒருபோதும் அழியாது."

கோட்டை வாயிலில் அபராஜிதன் கூறினான்: "அந்தப் புகழில் நான் பங்கு கேட்க வரவில்லை. பக்தி செலுத்தவருகிறேன்."

முதலமைச்சர் மாவலிவாணர் தலையிட்டார். ஆதித்தனை அமைதிப்படுத்த முயன்றார். அபராஜிதனை அனுமதிக்குமாறு வேண்டினார்.

ஆதித்தன் செய்தி அனுப்பினான்: ஒரு பல்லவ வீரன்கூட உள்ளே வரக்கூடாது. அபராஜிதன் மட்டும் தனியே வரலாம்.

சக்கரவர்த்தி தனியாகப் போவதை உடனிருந்த படைத்தலைவர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. தடைகளை மீறிக் கொண்டு அபராஜிதன் தன்னந்தனியாய் நுழைந்தான் தஞ்சைக் கோட்டைக்குள்.

கூடியிருந்த மக்கள் வெள்ளம் அவனை எதிர்த்துக் குரல் எழுப்பியது. கோட்டைத் தளபதி குன்றத்தூர்க் கிழார், பல்லவ நாட்டின் சக்கரவர்த்தியைப் பாதுகாப்புடன் அழைத்துச் சென்றார்.

விஜயாலயரின் உடலை நெருங்கிய அபராஜிதன், அவருடைய காலடியில் நின்று கதறினான். அவன் சிந்திய கண்ணீர்ப் பூக்கள் பரகேசரி விஜயாலய சோழ தேவருக்குப் பாத காணிக்கை ஆயின. குழந்தையைப் போல் குமுறி அழுத வண்ணம் விஜயாலயரது உடலின் அருகிலேயே உட்கார்ந்துவிட்டான்.

குன்றத்தூர்க் கிழார் அவனை நெருங்கினார். "புறப்படுங்கள் சக்கரவர்த்தி! குடிமக்களின் கோபத்துக்குக் குறி தெரியாது."

அங்கிருந்து புறப்படும் முன் அபராஜிதன் கேட்டான்: "ஆதித்தன் எங்கே?"

"உங்களைப் பார்க்க விரும்பவில்லை என்று சொல்கிறார்."

"சந்திக்க வேண்டும் நான்."

"போர்க்களத்தில் சந்திக்கிறேன். போ"— ஆத்திரத்துடன் குரல் கொடுத்தான் ஆதித்தன்.

போர்க்களத்தில் சந்தித்துக் கொண்ட நண்பர்களின் போக்கே புதிராய் இருந்தது. வாயாலும் பேசிக் கொள்ளவில்லை. அவர்கள் வாளாலும் பேசிக் கொள்ளவில்லை. முன்னணிப் படைகள் மோதிக் கொண்டனவே தவிர முழுமையான யுத்தம் நடைபெறவில்லை.

போர் தொடங்கி நான்கைந்து நாட்களுக்குப் பிறகும் எவ்வித முன்னேற்றமும் ஏற்படவில்லை. அளவில் பெரியதாயிருந்தாலும் பல்லவர் படையும், சிறிய சோழர் படையும் கைகளில் வாளேந்திக் களத்தில் நின்று கொண்டு கண்ணாமூச்சி ஆடுவது போல் காட்சியளித்தன. சேர நாட்டுப் படைக்காகக் காத்துக் கொண்டிருந்தது சோழர் படை.

செவ்வெண் கதிர் சுருக்கிச் செங்கதிரோன் சென்றவுடன், 'பூம்பூம்' என்று ஒலித்தது போர்க்களத்துச் சங்கு. அத்துடன் முடிந்தது அன்றைய யுத்தம்.

பாசறைக்குத் திரும்பியவுடன் வீராவேசமான விவாதம் நிகழ்ந்தது. நாற்படை நாயகனான தளபதி இருசப்ப பூபதியைச் சந்தித்தனர் பல்லவ நாட்டுப் படைத்தலைவர்கள்.

இரும்புக் கவசத்தைக் கழற்றிக் கொண்டிருந்த இருசப்பப் பூபதி, படைப்பிரிவுகளின் தலைவர்களைப் பாசத்துடன் கேட்டான்: "சேர்ந்து வந்திருக்கிறீர்களே. ஏதாவது செய்தி வந்திருக்கிறதா?"

"சக்கரவர்த்தியை நாங்கள் சந்திக்க வேண்டும்."

"எதற்காக?" என்றான் இருசன்.

"சக்கரவர்த்தியவர்கள் காஞ்சிக்குத் திரும்ப வேண்டும். போர்க்களத்தின் பொறுப்பை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்போதுதான் 'போர்' நடக்கும்."

"இப்போது போர் நடக்கவில்லையா?"

"இங்கு நடந்து கொண்டிருப்பது போரல்ல! பொம்மை விளையாட்டு! கத்திகள் இங்கே முத்தமிட்டுக் கொள்கின்றன. புரவிகள் புல் மேய்கின்றன. களிறுகள் களைப்பாறுகின்றன."

"தாக்குதல் நடத்தும் வீரர்களை யாரும் தடுக்கவில்லையே."

“வாயைத் தைத்துவிட்டு வழக்காடச் சொன்னால் முடியுமா? அபராஜிதச் சக்கரவர்த்தியின் கட்டளைகள் கட்டிப் போடுகின்றன! விநோதமாக இருக்கிறது அவருடைய வியூகம்! புதுமையாக இருக்கிறது அவருடைய போர்முறை. பல்லவர்களின் பலத்தில் பாதிகூட இல்லாத சோழர் படை முன்னேறி வருகிறது. நாமோ காவிரிக்கரையிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாய் பின்வாங்கித் தொண்டை மண்டலத்தின் எல்லையைத் தொட்டுவிட்டோம். வீர விளையாட்டு விளையாடலாம். ஆனால் வீரர்களை வைத்து விளையாடிக் கொண்டிருக்கக் கூடாது.”

“இப்போது என்ன செய்ய வேண்டும்?”

“மாதண்ட நாயகராக நீங்கள் பொறுப்பேற்க வேண்டும். பாய்ந்து சீற வேண்டும் பல்லவர் படை! தஞ்சைக் கோட்டையைத் தரைமட்டம் ஆக்க வேண்டும்.”

நீண்ட நேரம் சிந்தனையில் ஆழ்ந்த இருசப்ப பூபதி இறுதியில் கூறினான். “மாதண்ட நாயகனாக நான் பொறுப்பேற்கமாட்டேன். அது, அன்பிற்குரிய நம் அபராஜிதச் சக்கரவர்த்தியை அவமதிப்பதாகும்! ஆனால் தாக்குதலைத் தீவிரப்படுத்தி சோழர்களை முறியடிப்போம்! வேண்டுமானால் சக்கரவர்த்தியுடன் அதைப் பற்றி விவாதிப்போம்.”

பாசறையில் நள்ளிரவில் படைத்தலைவர் கூட்டம். அரிமாவெனக் கர்ஜித்துக் கொண்டிருந்தான் ஆதித்தன்.

மறுநாள் காலையில் பல்லவர் படை பலத்த தாக்குதல் நடத்த போவதாகத் தகவல் கிடைத்திருந்தது. ஆதித்தனைச் சிறைப்படுத்திக் காஞ்சிக்குக் கொண்டு போகத் திட்டமிட்டுள்ளனர் என்ற திடுக்கிடும் செய்தியையும் ஒற்றர்கள் தெரிவித்தனர்.

உறையூர்ச் சிற்றரசர் உத்தமசிலர் கூறினார்: “ஐயுற்றேன் அப்போதே! பலத்த வலிமையுடைய பல்லவர்படை பின் வாங்கிய போதே பேசினேன். சினத்தில் நீங்கள் செவிமடுக்கவில்லை. பல்லவர்கள் பாதுகாப்பான பகுதிக்கு வந்துவிட்டார்கள். அவர்களுடைய ஆதிக்கத்திலிருக்கும் இடத்தில் நாம் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம்.”

உத்தமசிலர் மீண்டும் உரைத்தார். "போர் தொடங்கிய போதே நாம் புலியாய்ப் பாய்ந்திருக்க வேண்டும். தாமதம் செய்தது தவறு."

ஆவேசத்துடன் பற்களைக் கடித்தான் ஆதித்தன். "தானுரவியின் பேச்சை நம்பி தாமதப்படுத்தினேன். சேரர் படை நம்முடன் சேர்ந்து கொண்ட பிறகு சீறிப்பாயத் திட்டமிட்டேன்."

"கைப்பற்றிய பகுதிகளில் காவலிருக்கும் நம் படைகளையாவது களத்திற்கு வரவழைக்கலாமா?"

"வேண்டாம்! நாளை உச்சிப் பொழுதுக்குள் விக்கியண்ணன் தலைமையில் அனுப்பப்பட்டுள்ள சேரர் படை இங்கு வந்து சேர்ந்துவிடும்."

"இப்போதைக்கு நம் படைபலம் குறைவு. அதுமட்டுமல்ல.. நம் வீரர்கள் தொடக்கத்தில் காட்டிய உற்சாகமும் உணர்ச்சியும் படிப்படியாகக் குறைந்துவிட்டன."

"சேரர் படை வந்து சேரும்வரை எதிர்த்து நிற்க இயலாதா?" என்று கேட்டான் ஆதித்தன்.

"ஐயம்தான்! ஆனால் முழு பலத்தையும் பிரயோகித்து முயன்று பார்ப்போம்" என்ற உறையூர் சிற்றரசர் தயக்கத்துடன் கூறினார்.

"ஒரே ஒரு வழி இருக்கிறது. உறுதியாய் வெற்றிபெற. ஆனால், அதை நீங்கள் ஒப்புக் கொள்ளமாட்டீர்கள்."

"சொல்லுங்கள்."

"போர்க்களத்துக்குக் காலையில் புறப்படும் போது சொல்கிறேன்."

உறையூர்ச் சிற்றரசரின் திட்டம் என்னவென்று தெரியவில்லை. ஆனால், போர்க்களத்தின் நிலைமை தமக்குச் சாதகமாக இல்லை என்பதை மட்டும் ஆதித்தனால் புரிந்து கொள்ள முடிந்தது.

"சேரன்— வெறும் வாய்ச்சொல் வீரன்! தக்க சமயத்தில் படையனுப்பியிருந்தால் பல்லவர்களைத் தகர்த்திருக்கலாம். தாமதப்படுத்திவிட்டானே.. கைப்பற்றியுள்ள பகுதிகளில் காவலுக்கு நிற்கும் நம் படைகளைக் களத்திற்கு வரவழைத்தால்.. அதுவும் கௌரவக் குறைவாகிவிடும்.

என்ன செய்வது இப்போது? சிற்றெறும்பைப் போல் சிறிது சிறிதாகத் தந்தை சேர்த்து வைத்த பெருமைகளெல்லாம் தன்னால் சிதைந்துவிடுமோ..?"

உள்ளத்தில் மூண்ட கனல் அவனை உறங்கவிடவில்லை.

ஆனால், காற்றும் கண்ணுறங்கிக் கொண்டிருந்தது. வேலேந்தியபடி உலவிக் கொண்டிருந்த வீரர்களும் அடுக்கடுக்காய் வெளிவந்த கொட்டாவிப் படைகளை அடக்க முடியாமல் கைவிரல்களைச் சொடுக்கிக் கலைக்க முயன்று கொண்டிருந்தனர்.

அப்போதுதான்—

திரும்பிப் படுத்த ஆதித்தன் திடுக்கிட்டான்— ஓரத்தில் நின்று கொண்டிருந்த உருவத்தைப் பார்த்து வியப்பில் விரிந்தன அவன் விழிகள்! கனவோ என்று கண்களைக் கசக்கிக் கொண்டான்.

எண்ணெய் தீர்ந்து போயிருந்த தீபங்களின் வீரமற்ற வெளிச்சத்திலும், பாசறையின் ஒரு மூலையில் நின்று தன்னையே பார்த்துக் கொண்டிருந்த அந்த உருவம் யாரென்று அவனால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

நம்புவது கடினமாய் இருந்தது. நம்பாமலிருக்கவும் முடியவில்லை.








42



# கரை தேடும் கனவுகள்

பாசறையில் எரிந்து கொண்டிருந்த தீபத்தின் வெளிச்சத்தைக் காட்டிலும் அதன் நிழலே அவ்வுருவத்தின் மீது அதிகமாய் விழுந்திருந்த போதும், பார்த்துப் பார்த்துப் பழகிய அந்தத் தோற்றத்தை ஆதித்தன் மிக எளிதாகவே அடையாளம் கண்டு கொண்டான். எதிரியின் பாசறைக்குள் தன்னந்தனியனாய் இரவிலே நுழைந்து அச்சமோ, பதற்றமோ இல்லாமல் புன்னகைத்துக் கொண்டிருந்த அபராஜிதனைப் பார்த்து ஆச்சரியமும் கொண்டான்.

"நீயா?" என்று கேட்டான்.

"ஆம் நான்தான்!" என்று அருகில் வந்த அபராஜிதன், "ஆதித்தா..!" என்று அன்பொழுக அழைத்தபடி தன் நண்பனைக் கட்டித்தழுவிக் கொண்டான். "அபராஜிதா!" என்று குரல் கொடுத்த ஆதித்தனும் தன் இனிய நண்பனை இறுகப்புல்லினான்.

உள்ளங்களில் ஏற்பட்ட உணர்ச்சிக் கொந்தளிப்பு அவர்களை ஊமையாக்கியிருந்தது. நீண்ட நேரத்துக்குப் பின் அபராஜிதனின் பிடியிலிருந்து மெதுவாகத் தன்னைவிடுவித்துக் கொண்ட ஆதித்தன், "எங்கே வந்தாய்?" என்றான்.

அவன் குரலில் வெறுப்புத் தெரியவில்லை. வியப்பே மிகுந்திருந்தது.

புன்னகை மாறாமலே அபராஜிதன் பதிலுரைத்தான். "என் நண்பனைப் பார்க்க வந்தேன்!"

"இது பகைவனின் பாசறை!"

"அல்ல. என் நண்பனின் இருப்பிடம்."

"நண்பனா..? நமக்குள் இன்னுமா நட்பு வாழ்கிறது?"

"வாழ்கிறது. இறந்த பின்னாலும் நம் நட்பு வாழும். இலக்கியங்களில்!"

"இறப்பைப் பற்றி ஏன் பேசுகிறாய்?"

"இல்லை. நான் இறவாமையைப் பற்றிப் பேசுகிறேன்."

"எதிரிகளாய் நிற்கிறோம் போர்க்களத்தில்! நமக்குள் எப்படி நட்பிருக்க முடியும்?"

"இணைபிரியாத நண்பர்களுக்குள் போர் எதற்காக என்றுதான் நானும் கேட்கிறேன்!"

"தொடங்கியவன் நீ..!" என்ற ஆதித்தனின் குரலில் கோபம் தெரிந்தது.

"தூண்டியவன் நீ" என்ற அபராஜிதனின் குரலில் குற்றச்சாட்டு இருந்தது.

"ஆம்! நான்தான் தூண்டினேன். என்ன சொல்கிறாய் இப்போது?"

"தவறுகளைத் திருத்திக் கொள்வோம். சண்டையை நிறுத்திக் கொள்வோம்."

"சண்டையை நிறுத்த முடியாது. என் சபதம் நிறைவேறும்வரை.."

"உன் சபதம் எது?"

"பல்லவர் படையைக் காவிரிக் கரையிலிருந்து தொண்டை மண்டலம் வரை துரத்தியடிப்பது."

"அதுதான் நிறைவேறிவிட்டதே!" என்று சிரித்த அபராஜிதன், "காவிரிக் கரையிலிருந்த பல்லவர் படை இப்போது தொண்டை மண்டலம் வந்துவிட்டது. உன் சபதம் நிறைவேறிவிட்டது" என்றான்.

"நான் துரத்தியடிக்கவில்லை. நீ பின்வாங்கினாய்."

“எதற்காகப் பின் வாங்கினேன்? பெரும் படையை வைத்துக் கொண்டு, நான் பின் வாங்க வேண்டிய காரணம் என்ன?”

“ஆளுகைக்கு உட்பட்ட பகுதிக்குள் வரவழைத்து எங்களை அழித்துவிடத் திட்டமிட்டாய்.”

“தவறு நண்பா! தவறு! உன் அத்துமீறலை எதிர்க்கும் அடையாளமாக வந்த காவல்படையை நீதான் போர்ப்படையாக்கினாய். எதிர்ப்புத் தெரிவிக்க வந்தவர்களை எதிரிகளாக்கினாய்! ஆனாலும், சோழ நாட்டுக்குள் என் படை நுழைந்ததும், அதைத்தாங்கிக் கொள்ள முடியாதவராய் உயிர்விட்டார் உன் தந்தை. எவருடைய உதவியால் என் தலையில் மகுடம் ஏறியதோ அவருடைய மரணத்திற்கு நானே காரணமாகிவிட்டேனோ என்று கலங்கினேன். அதனால்தான் பெரிய படை என்னிடத்திலிருந்தும் பின் வாங்கினேன். சோழ நாட்டின் எல்லையையேவிட்டு வெளியேறினேன்.”

“நல்லது. உன் நன்றியுணர்வைப் பாராட்டுகிறேன்.”

“ஆதித்தா! நினைவிருக்கிறதா உனக்கு? காஞ்சியில் ஒரு மாலைப் பொழுது. மகேந்திரத் தடாகத்தின் படிக்கட்டுகளில் நாம் அமர்ந்திருக்கிறோம். இருவரும் சேர்ந்து உறுதி எடுத்துக் கொள்கிறோம்..”

“ஒருவரையொருவர் உள்ளன்போடு நேசிப்போம்; உற்ற நண்பர்களாக இருப்போம்; துன்பத்திலும், துயரத்திலும் தோள்கொடுப்போம்” என்று விரக்தியாக முழங்கிவிட்டுச் சிரித்தான் ஆதித்தன்.

“அந்த நட்பை நாம் காப்பாற்ற வேண்டாமா?” என்றான் அபராஜிதன்.

பிடிவாதமாக ஆதித்தன் பேசாதிருந்தான்.

“அதுமட்டுமல்ல.. உன்னைப் பிரிந்து என் தங்கை உயிர்வாழமாட்டாள்.”

“சாருமதியைப் பற்றி நீ கவலைப்பட வேண்டியதில்லை. பல்லவ நாடும், சோழ நாடும் பகை கொண்டால் நாம் இருவரும் நண்பர்களாக இருக்க முடியாது. ஆனால் காதல் கொண்ட இதயங்களைப் பிரிக்கக் கல்லும் கள்ளியும் நட்டுப் பிரித்து வைத்த எல்லைகளால் இயலாது.”

“மகிழ்ச்சி! என் தங்கையின் காதலையேனும் காப்பாற்ற இசைந்ததற்கு.”

“நட்பையும் காப்பாற்றுவேன், உன் படைகளை வெற்றி கொண்ட பிறகு!”

“ஆதித்தா! அவசரக்காரனே! அவமதிக்காதே என் ஆற்றலை! பாதிப் படைகளை வைத்துக் கொண்டு நீ எங்களோடு மோத முடியாது. வெற்றி, தோல்வி யாருக்கும் வேண்டாம், நிறுத்திவிடலாம் போரை– ஒரு நிபந்தனையோடு.”

“நிபந்தனையா?” என்று நிமிர்ந்தான் ஆதித்தன்.

“நீ கைப்பற்றிக் கொண்ட பகுதிகளிலிருந்து உன் வீரர்களைத் தற்காலிகமாக விலக்கிக் கொள். காஞ்சியில் மாபெரும் விழா நடத்தி உரிமையை நான் ஒப்படைக்கிறேன். களத்திலேயே நாளை கையெழுத்திட்டுக் கொள்வோம்.”

“மாவீரன் விஜயாலயனின் மகன் முன் வைத்த காலைப் பின் வைப்பதில்லை” என்று சிரித்தான் ஆதித்தன்.

“இந்த நிபந்தனை எனக்காக அல்ல. நான் சூடியிருக்கும் மணிமகுடத்தின் மரியாதைக்காக. காஞ்சியின் மானத்தைக் காப்பாற்றுவதற்காக.”

“காஞ்சியின் மானத்தைக் காப்பதற்காகத் தஞ்சையின் மானத்தைத் தாரைவார்க்கச் சொல்கிறாயா?” என்று ஆதித்தன் கேட்ட கேள்வி அபராஜிதனிடம் எரிச்சலை ஏற்படுத்தியது.

“குற்றம் செய்தவன் நீ. குறை சொல்லாதே என்னை!”

“முற்றும் துணிந்தவன் நான். முறைக்காதே என்னை!”

“சாதாரணமான சோழ நாட்டிடம் சாம்ராஜ்யம் சரணடையாது.”

“போர்க்களம் அதைத் தீர்மானிக்கட்டும்.”

“இதுதான் உன் முடிவா?”

“முடிந்த முடிவு!”

“சிந்தித்துப் பேசு!”

“போர்க்களத்தில் சந்தித்துப் பேசுகிறேன்.”

"பேச வேண்டிய அளவு பேசிப் பார்த்துவிட்டேன். இனிமேல் பேச வேண்டிய முறையில் பேசுகிறேன்."

"என்ன செய்துவிடுவாய்?" என்று ஆதித்தன் ஏளனமாய்க் கேட்டவுடன், அபராஜிதனின் சினம் எல்லை மீறியது.

"நாளை சோழ நாட்டுப் படைகளைத் தொலைத்துக் கட்டுவேன். அடக்கமில்லாத உன் ஆணவத்தை அடக்கிக் காட்டுவேன். களத்தில் சிறைப்படுத்துவேன். கைதியாக உன்னைக் காஞ்சிக்குக் கொண்டு செல்வேன்."

"அபராஜிதா..!" என்று சீறினான் ஆதித்தன்.

"ஆதித்தா!" என்று உறுமினான் அபராஜிதன்.

பேரிருளைப் பிளந்து கொண்டு ஆதவன் பிரவேசித்த போது பொங்குமாங் கடல் போல் காட்சியளித்தது போர்க்களம். இரு திறத்துப் படைகளும் நதிகளைப் போல் நகர்ந்து கொண்டிருந்தன. சங்கு ஊத வேண்டியதுதான். சமுத்திரத்தில் சங்கமமாகிவிடும்.

பட்டத்து யானையின் அம்பாரியில் அடலேறு போல் அமர்ந்திருந்தான் அபராஜிதன்! புரவியின் மேல் புயலென வீற்றிருந்தான் ஆதித்தன்.

தளபதி இருசப்ப பூபதியிடம் அபராஜிதன் கட்டளையிட்டான்: "புலிக் கொடி ஏந்தியவர் புறமுதுகிட்டு ஓட வேண்டும். உச்சிப் பொழுதிற்குள் ஆதித்தனைச் சிறைப்படுத்த வேண்டும்."

பணிந்து வணங்கிய படைத்தளபதியிடம் தணிந்த குரலில் கூறினான்: "சிறைப்படுத்துவதுதான் நம் நோக்கம். சேதப்படுத்துவது அல்ல. ஆதித்தனின் உயிருக்கு ஆபத்து வரககூடாது."

சோழர் படையின் அணிவகுப்பைச் சுற்றி வந்த உறையூர்ச் சிற்றரசர் ஆதித்தனின் அருகில் வந்தார்.

"சேரனின் படை உரிய நேரத்தில் வந்து சேராவிட்டாலும் நாம் ஜெயிக்க முடியும்" என்றார்.

"எப்படி?"

"நீங்கள் நினைத்தால்.."

"நான் என்ன நினைக்க வேண்டும்?"

"நட்பு பெரிதல்ல. நாடுதான் பெரிது என்று நினைக்க வேண்டும்."

“நாடு பெரிதென்று நினைத்ததால்தான் காஞ்சியின் சக்கரவர்த்தியைக் களத்தில் சந்திக்கிறேன்.”

“சந்தித்தது போதாது. சாதிக்க வேண்டும்.”

“என்ன செய்ய வேண்டும்?”

“போர் தொடங்கப் போகிறது. சங்கு முழங்கியவுடன், பல்லவச் சக்கரவர்த்தியின் மீது நீங்கள் வெறி கொண்டு பாய வேண்டும்.”

அமைதியாய் இருந்தான் ஆதித்தன்.

“திரும்பிப் பார்க்குமுன் அவரைத் தீர்த்துக்கட்ட வேண்டும்.”

“என்ன..?”

“வேறு வழியே இல்லை. நீங்கள் இதைச் செய்யவில்லையென்றால், சேரர் படை மட்டுமல்ல, எத்தகைய வீரர் படை வந்தாலும் நாம் வெற்றி பெற முடியாது” என்று வேதனையுடன் கூறிவிட்டு விரைந்தார் உத்தமசிலர்.

சங்கு முழங்கியது!

சூரிய வெளிச்சம் சுற்றிலுமிருந்த மரம் செடி கொடிகளையெல்லாம் சூடாக்கிக் கொண்டிருந்தது. பரபரப்பாக ஓடி வந்து கொண்டிருந்த புரவியொன்றில் அமர்ந்திருந்தார் பல்லவ நாட்டு முதலமைச்சர். பத்துப் பன்னிரண்டு புரவிகள் அவருக்குப் பாதுகாப்பாக வந்து கொண்டிருந்தன. போரை நிறுத்திவிடவேண்டுமென்று புறப்பட்டு வந்திருந்தார் அவர்.

இடுப்புக் கச்சையிலிருந்த ஓலைக் குழலின் மீது அவருடைய பார்வை படர்ந்தது.

கடுமையான முயற்சியின் பேரில் கம்பவர்மர் மகாமண்டல சபையைக் கூட்டி ஒருமித்த கருத்தினை உருவாக்கி அனுப்பிய ஓலை அது.

“காவிரிக் காவலனை இழந்து கலங்கும் சோழ நாட்டின் துக்கத்தைப் பல்லவநாடும் பகிர்ந்து கொள்கிறது. தந்தையை இழந்து தவிக்கும் ஆதித்த சோழருக்கும், தலைவனை இழந்து தளர்ந்திருக்கும் குடிமக்களுக்கும் பல்லவ நாட்டின் மகாமண்டல சபை ஆறுதல் கூறுகிறது.

துயரமான இந்தச் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு போரினை நிறுத்திவிட்டு, படையுடன் காஞ்சிக்குப் புறப்படுமாறு பல்லவநாட்டின் சக்கரவர்த்தி அவர்களைப் பணிந்து வேண்டுகிறது!"

—ஓலை இவ்வாறு உரைத்தது.

அபராஜிதச் சக்கரவர்த்தி மகாமண்டல சபையின் முடிவை ஏற்காவிட்டால்.. போரை நிறுத்த உடன்படாவிட்டால்...? உடன்படுவார்! ஆதித்தனுடைய நட்பை அவர் அலட்சியப்படுத்தமாட்டார்!

ஆதித்தன் இணங்க வேண்டுமே.

அதற்கும் வழி இருக்கிறது! கம்பவர்மர் அனுப்பியுள்ள திருமணத் தூது! போரினைக் கைவிட்டுச் சாருமதியைக் கைப்பிடிக்க மறுக்கவா போகிறார்?

முதலமைச்சரை அனுப்பி வைத்ததோடு திருப்தியடையாத கம்பவர்மர், அவரைத் தொடர்ந்து தன் அருமை மகள் சாருமதியையும் அனுப்பியிருந்தார்.

பல்லவ இளவரசியைச் சுமந்து கொண்டு வந்த ரதம் பறந்து கொண்டிருந்தது. ரதத்தில் அமர்ந்திருந்த இளவரசியின் எண்ணங்களில் ஓர் அமைதி படர்ந்து கொண்டிருந்தது.

'இனி— கண்ணீர்விடும் வேலை கிடையாது கண்களுக்கு! காதலா, தேசமா என்று கலங்கும் நிலை கிடையாது நெஞ்சத்திற்கு! அவருக்கும் எனக்கும் திருமணம்.'

போர்க்களத்தில் அபராஜிதனுடைய படைகளும் ஆதித்தனுடைய படைகளும் ஆவேசமாய் மோதிக் கொண்டிருந்தன. உண்மையான போரைக் கண்டதும் வீரர்களுக்கு உற்சாகம் பிறந்துவிட்டது. ஆவேசமாய்ப் பாய்ந்தார்கள், ஆனந்தமாய் மாய்ந்தார்கள். குருதி வெள்ளத்தில் களம் குளமாகிக் கொண்டிருந்தது.

சோழர் படையில் ஒரு பகுதி சோர்வடைந்து பின் வாங்கத் தொடங்கவே, காரணம் புரியாமல் திகைத்த ஆதித்தனிடம், விரைந்து வந்த படைத்தலைவன் விவரம் கூறினான்: "வீரமரணம் அடைந்துவிட்டார் உறையூர்ச் சிற்றரசர்."

"ஆ!" என்று கர்ஜித்தவாறே திரும்பிய ஆதித்தன், அபராஜிதனை நோக்கிப் பாய்ந்தான். பக்கத்திலிருந்த பல்லவ வீரர்களின் தலைகள் பறந்தன. அவன் வாள் இரத்த வெறியோடு நர்த்தனம் புரிந்தது.

சோழ வீரர்கள் வியப்படையுமாறும், பல்லவ வீரர்கள் திடுக்கிடுமாறும் அந்தச் சம்பவம் நடந்தது.

அபராஜிதனின் அருகில் நெருங்கிய ஆதித்தன், சட்டென்று தன் புரவியின் முதுகில் ஏறி நின்றான். எவரும் எதிர்பாரா வண்ணம் ஓங்கிய வாளை உயர்த்திப் பிடித்தபடி, அபராஜிதன் அமர்ந்திருந்தது பட்டத்து யானையின் மேல் தடாலென்று தாவினான்.

“நெருங்கிவிட்டது போர்க்களம்..” என்றார் பல்லவ நாட்டு முதலமைச்சர்.

“நெருங்கிவிட்டது என் கனவுகள் நிறைவேறும் நேரம்” என்று முணுமுணுத்தாள் இளவரசி தன் இதயத்திற்குள்.

தான் அமர்ந்திருந்த களிற்றின் மேல் தாவிக் குதித்த ஆதித்தனின் வாள் வீச்சைத் தடுக்க முயன்றான் அபராஜிதன். ஆதித்தனின் முகத்தில் தென்பட்ட ஆவேசமும், வெறியும் அவனைத் திகைக்க வைத்தன. சுற்றிச் சுழன்ற ஆதித்தனின் வாள், சற்று நேரத்திலேயே அபராஜிதனின் வாளை ஆகாயத்திற்கு அனுப்பியது. கண்ணிமைக்கும் நேரத்தில் அபராஜிதனின் கழுத்திலும் பாய்ந்தது.

வெட்டுண்ட கழுத்து, துள்ளி விழுந்து துடித்தது தரையில். பல்லவ நாட்டுச் சக்கரவர்த்தி தலையறுக்கப்பட்டு தரையில் விழவே, பட்டத்து யானை பெருங்குரலெடுத்துப் பிளிறியது.

அபராஜிதச் சக்கரவர்த்தியின் மரணச் செய்தியை அறிந்து பல்லவர் படை பதறியது. இணையிலா வீரனான இருசப்ப பூபதியும் இடிந்து போனான்.

இந்நிலையில் *விக்கியண்ணன் தலைமையிலான சேர நாட்டுப் படையும் வந்து சேர்ந்து கொள்ளவே, சோழர் படை பல்லவ வீரர்களைத் துவம்சம் செய்தது.

ஆருயிர் நண்பனின் உடலை மடியில் போட்டபடி அழுது கொண்டிருந்தான் ஆதித்தன். என் நண்பனைக் கொன்றேன்” என்று தலையிலடித்துக் கொண்டான். சுற்றிலும் நின்றிருந்த சோழ நாட்டு வீரர்கள் செய்வதறியாது நின்றனர்.

பின்புறமிருந்து ஒரு பிளிறல் கேட்டது. வெறி கொண்டது போல் ஓடி வந்தது அந்த வேழம். பல்லவ நாட்டின் பட்டத்து யானைக்கு மதம் பிடித்துக் கொண்டது என்று அஞ்சிய வீரர்கள், அங்கிருந்து விலகி ஓடினர்.

கண்ணிமைக்கும் நேரத்தில் நெருங்கிவிட்டது களிறு. ஆதித்தனோ எதையுமே அறியாதவனாய்த் தன் நண்பனின் சடலத்தைக் கண்ணீரினால் கழுவிக் கொண்டிருந்தான். என்ன நடக்கப் போகிறதோ என்று எல்லோரும் திகைக்க, குறுக்கே பாய்ந்து ஆதித்தனைக் காப்பாற்ற முயன்றனர் சிலர்.

அருகில் வந்துவிட்ட களிறு, ஆங்காரக் குரல் எழுப்பியது. துதிக்கையைத் தூக்கியது. அபராஜிதனின் உடலை வணங்குவது போல் துதிக்கையை அசைத்தது. துடித்தது. மலை சாய்ந்தது போல் மண்ணில் சாய்ந்துவிட்டது. அர்த்தம் புரிந்து கொள்ள முடியாத ஓர் அலறலோடு அதன் மூச்சும் அடங்கிவிட்டது.

அந்திச் சூரியன் செந்நிறக் கதிர்கள்கூட, ஆறாய்ப் பெருகியிருந்த குருதி வெள்ளத்தைப் பார்த்து அஞ்சி ஓடத் தொடங்கின. போர்க்களத்துச் சங்கு முழங்கியது.

பட்டத்து யானையைக் கட்டிக் கொண்டு அலறினான் ஆதித்தன். "உனக்கிருக்கும் பாசம்கூட இல்லாமல் போய்விட்டதே என் இதயத்தில்!"

---

*கிபி 891–ஆம் ஆண்டிலாதல், அதற்கடுத்த ஆண்டிலாதல் ஆதித்தன் அபராஜிதவர்மனை வென்று, தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றித் தன் ஆட்சிக்கு உட்படுத்தியிருத்தல் வேண்டும் என்பது நன்கு வெளியாகின்றது.

–அறிஞர் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார்.

கன்னியாகுமரிக் கல்வெட்டு கூறுவதாவது: யானை மேல் இருந்து கொண்டு போர் புரிந்த அபராஜிதவர்மன் மீது ஆதித்தன் பாய்ந்து அவனைக் கொன்றான்.

ஆதித்த சோழனும் சேரமான் தாணுரவியும் அந்நாளில் உற்ற நண்பர்களாக இருந்தனர் என்பதும், இருவரும் சேர்ந்து விக்கியண்ணன் என்ற தலைவன் ஒருவனுக்கு அவன் புரிந்த அருந்தொண்டைப் பாராட்டி 'செம்பியன் தமிழவேள்' என்ற பட்டமும், தவிசும், சாமரையும் இறையிலி நிலமும் வழங்கினார்கள் என்பது திருநெய்த்தானக் கல்வெட்டால் தெரிகிறது.

–அறிஞர் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, பக்.27.

திடீரென்று குறுவாளை உருவித் தன்னைத்தானே அவன் குத்திக் கொள்ள முயன்ற வேளையில், குறுக்கிட்டது ஒரு கரம். ஏறிட்டுப் பார்த்தான். எதிரே நின்று கொண்டிருந்தாள் பல்லவ நாட்டின் இளவரசி. இறுகிப் போயிருந்தது அவள் முகம். ஆதித்தனின் கையிலிருந்த குறுவாளைப் பிடுங்கி வீசியவள், தன் அண்ணனின் முகத்தைக் கைகளில் ஏந்திக் கொண்டு கண்ணீர் வடித்தாள்.

"அண்ணா!" என்று அலறினாள்.

ஆதித்தனை நெருங்கிய பல்லவ நாட்டு முதலமைச்சர், "அவசரப்பட்டுவிட்டீர்களே!" என்றார்.

"கம்பவர்மரிடமிருந்து மணச்செய்தி கொண்டு வந்தேன். மகனுடைய மரணச் செய்தியையா அவருக்குக் கொண்டு செல்வது?" என்று கேட்டவர், சக்கரவர்த்தியின் காலடியில் நின்று கண்ணீர் மல்கினார்.

தளபதி இருசப்ப பூபதி தன் வீரர்களுடன் வந்து அபராஜிதனின் சடலத்தைக் கொண்டு சென்றான். முதலமைச்சரும் அங்கிருந்து நகர்ந்தார்.

கன்னங்களின் இருபுறமும் உதிர்ந்த கண்ணீர்ப் பூக்களால் தன் அன்பான அண்ணனுக்கு அஞ்சலி செலுத்திய சாருமதியும், தான் அமர்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்தாள்.

"என்னை மன்னிப்பாயா?" என்று கேட்ட ஆதித்தனை அவள் ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

சோகச் சிற்பமாய் நடந்து சென்றவள், தொலைவில் அவளுக்காகக் காத்திருந்த ரதத்தில் ஏறாமல் பல்லவ வீரன் ஒருவன் பிடித்துக் கொண்டிருந்த புரவியில் ஏறினாள்.

முதலமைச்சரும், இருசப்ப பூபதியும் வீரர்களுடன் முன்னே செல்ல.. அவர்களைத் தொடர்ந்து சென்றது இளவரசியின் புரவி.

திரும்பிக்கூடப் பார்க்காமல் சாருமதி சென்ற காட்சி என்னவோ செய்தது, ஆதித்தனின் இதயத்தை. தான் மட்டும் இந்த உலகத்தில் தன்னந்தனியனாய் நிற்பது போல் ஒரு தவிப்பு!

"சாருமதி..!" என்று அலறினான். "எல்லோரையும் இழந்துவிட்டேன்! நீயும் என்னைவிட்டுப் போய்விடாதே!" என்று புலம்பினான்.

"சாரு.."

போர்க்களத்திலிருந்து வெளியேறிச் சாலையை நெருங்கிக் கொண்டிருந்த புரவி, ஆதித்தனின் குரல் கேட்டுத் தயங்கியது. தடுமாறியது. திரும்பியது.

அருகில் வந்த சாருமதி, ஆதித்தனை நிமிர்ந்து பார்த்தாள்.

"எனக்குத் தெரியும். என்னிடம் நீ வந்துவிடுவாய் என்று!"

எதுவும் பேசவில்லை இளவரசி.

"பேசு.. சாருமதி பேசு! நான் செய்தது பிழை என்றாவது பேசு!"

கண்களில் நீர்வடியப் பேசினாள் சாருமதி: "கனவுகளைச் சுமந்து வந்தேன்.. காஞ்சியிலிருந்து! அன்பான அண்ணனின் சடலத்தைச் சுமந்து கொண்டு திரும்புகிறேன்."

"என்னை மன்னித்துவிடு! வேண்டுமென்றே என் நண்பனைக் கொல்லவில்லை. வேறு வழி தெரியவில்லை— என் நாட்டின் மானத்தைக் காப்பதற்கு!"

"என் காதலும் காயம்பட்டுக் கிடக்கிறது— இந்தக் களம் போல.." என்ற இளவரசி, குருதி வெள்ளத்தில் துள்ளித் துடித்துக் கொண்டிருந்த உடல்களைச் சுட்டிக்காட்டிக் கேட்டாள்: "இந்தப் பிணங்களை என்ன செய்வீர்கள்?"

"புதைத்துவிடுவோம்.." என்று புரியாமல் கூறினான் ஆதித்தன்.

"புதைத்துவிடுங்கள் நம் காதலையும்!" என்று கூறிவிட்டுப் புரவியைத் திருப்ப முற்பட்டாள்.

"சாரு..!" என்று கூவியபடியே புரவியின் பிடரியைப் பற்றி அதைத் தடுத்தான் ஆதித்தன்.

மெள்ள அவன் கைகளை விலக்கியபடியே பேசினாள் இளவரசி:

"நாட்டுக்காக நீங்கள் கொலை செய்தீர்கள். நண்பனை மட்டும் கொல்லவில்லை. நட்பையே கொன்றீர்கள். நானும் என் இதயத்தில் வளர்த்த காதலைக் கொன்றுவிட்டேன். நாடு, இனம், நாட்டுப்பற்று என்பதெல்லாம் ஆண்களுக்கு மட்டும்தானா? பெண்களுக்கும் உண்டு. நட்பைவிட நாடு பெரிது உங்களுக்கு. எனக்கும் காதலைவிட நாடுதான் பெரிது!"

“குறுவாளால் என்னை நானே குத்திக் கொள்ள முயன்ற போது தடுத்தாய். கூர்மையான வார்த்தைகளால் ஏன் என்னைக் கொல்கிறாய்?” என்று கேட்டான் ஆதித்தன்.

“நீங்கள் உயிரோடு இருக்க வேண்டும் என்பதால் தடுத்தேன்! ஏன் தெரியுமா? பல்லவ நாட்டிலிருந்து மறுபடியும் ஒரு படை வரும். பாயும் பெண் புலியாய் நான் வருவேன். கையில் வாளேந்தி உங்களைக் களத்தில் சந்திப்பேன்..” என்றவள், உறைவாளை உருவி உயர்த்திப் பிடித்தபடி, “இது என் சபதம்..” என்று முழங்கினாள்.

பல்லவ இளவரசி சென்ற பாதையையே பார்த்துக் கொண்டிருந்தான் ஆதித்தன்.

கிழக்கு வானத்திற்குக் கிரீடம் சூட்டியது போல் முழுநிலா வானத்தில் முளைத்திருந்தது.

பௌர்ணமியின் கதிர்கள் பல்லவ இளவரசியின் பட்டுமேனியில் பட்டுத் தெறித்தன. பொங்கி எழப்போகும் புரட்சியின் விதைகளாய் வீழ்ந்து கொண்டிருந்தது அவள் விழிநீர்.

வாழ்வே பறிபோய்விட்டதைப் போல் வருந்திய ஆதித்தனின் கண் மதகுகளும் கதவுடைத்துக் கொண்டன.

புரவியின் மீது அவள் போய்க் கொண்டிருந்தாள். ஆதித்தனோ தாங்கொணாத் துயருடன் தரையில் நின்று தள்ளாடிக் கொண்டிருந்தான்.

திடீரென்று தன் வலிமையெல்லாம் தன்னைவிட்டுப் போய்விட்டதைப் போலவும், தடாலென்று தான் தரையில் சாய்ந்துவிடப் போவதையும் போல் உணர்ந்ததனால் அவன் உணர்விழந்து கொண்டிருந்தான்.

பூங்கொடி பார்வையிலிருந்து மறைந்ததும் திரும்பினான்.

புலிக்கொடி பறந்து கொண்டிருந்தது!*

---

*ஏறக்குறைய கி.பி. 250–இல் சோழரைத் துரத்திவிட்டுத் தொண்டை நாட்டையும், பிறகு சோழ நாட்டையும் கைப்பற்றிக் கொண்ட பல்லவர், ஏறத்தாழ 650 வருடம் தமிழ்நாட்டை ஆண்டனர். அதன் பிறகு அச்சோழ மரபினரே பல்லவரைப் பழிதீர்த்துக் கொண்டனர் என்பது வரலாறு கூறும் உண்மை ஆயிற்று! என்னே உலகப் பேரரசுகளின் தோற்றமும், மறைவும்! – டாக்டர். இராசமாணிக்கனார்– பல்லவர் வரலாறு. பக்கம் 214.

பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருக்கும் அதைப் பார்த்தவுடன், ஆதித்தனின் உடலெங்கும் ஓர் ஆனந்த ஆவேசம்! வலிமையெல்லாம் மீண்டும் வந்துவிட்டது போலிருந்தது.

'காதலோடும் கண்ணீரோடும் வாழ்க்கை முடிந்துவிடுவதில்லை. கடமைகள் காத்திருக்கின்றன. பாதைகளும் காத்திருக்கின்றன— உன் பாதங்களுக்காக!' என்று விஜயாலயர் எப்போதோ கூறியிருந்த வீர வாசகங்கள் இப்போது அவன் செவிகளில் எதிரொலித்தன.

கண்ணீரின் ஈரம் காயாத அவனுடைய கண்களுக்குள் ஒரு கனவு விரிந்தது.

கடலை அடைத்துக் கொண்டு கலங்கள் புறப்படுகின்றன. ஆயிரமாயிரம் புலிக்கொடிகள் அசைகின்றன. புலியின் உருவம் திடீரென்று விஜயாலயருடைய புன்னகை முகமாகிவிடுகிறது. அலை அலையாய்க் கொடிகள் அசைந்து கொண்டிருக்கும் காட்சி, அந்த வீரமாமன்னரே விரல்களை அசைத்து விடை கொடுப்பது போல் தோன்றியது.

*(நிறைந்தது)*

# தாமரைக்காக வழக்காடுகிறார்
## வை.மூர்த்தி

வெற்றிகளைக் குவித்த விஜயாலயனின் வீர வரலாற்றையும் அருஞ்சமர் புரிந்த அவரது மைந்தன் ஆதித்த சோழனைப் பற்றியும் கூறுவதுதான் எங்கள் இதயக் கவிஞர் அவர்கள் எழுதிய 'மகுட நிலா' ஆகும்.

ஆனந்த விகடன் வார இதழில் தொடர்ச்சியாக வந்த மகுடநிலாவைத் தொடர்ந்து படித்தவன் நான். பாத்திரங்கள் ஒவ்வொன்றையும் துருவிப் பார்த்துத் தொட்டுப் பார்த்தவன். வெள்ளிக் கிழமை தோறும் வந்த இந்த வீரவரலாற்றைப் படித்துவிட்டு என் கருத்துகளை கவிஞரிடத்திலே தொடர்ச்சியாகக் கூறி வந்தவன் என்ற முறையில், இந்த வரலாற்று இலக்கியத்தின் வரிகள் ஒவ்வொன்றும் எனக்கு மனப்பாடம்.

இந்த நூலாசிரியரைத் தமிழே அறிமுகம் செய்துவிட்ட போது– ஆம் தமிழினத் தலைவரே இந்நூலில் அறிமுகம் செய்துவிட்ட போது– இவரை நான் அறிமுகப்படுத்த நினைப்பது எனக்கு வெளிச்சம் தேடுவது போலாகும்.

எனவே, இந்த வரலாற்று நாவலைப் பொறுத்தவரை பாத்திரப்படைப்பில் எனக்குள்ள மாறுபட்ட கருத்துகளை நான் மனந்திறந்து பேசுகிறேன்.

- இலக்கியப் பாத்திரங்கள்– எழுதுகிற விதத்தால் செறிவடைகின்றன! வரலாற்றுப் பாத்திரங்களோ ஒரு காலத்தில் வாழ்ந்த பாத்திரங்கள் ஆதலால் அவை நடைபெற்ற நிகழ்ச்சிகளையொட்டிப் பொலிவுறுகின்றன. இலக்கியத்தில் நல்லவரைத் தீயவரென்றும் வல்லவரைப் பொல்லாதவரென்றும் உரைக்கலாம். ஆனால், வரலாற்று நிகழ்ச்சிகளில் ஒருவரின் வசந்த காலத்தை, வாழ்வின் கசந்த காலமாகக் காட்டக் கூடாது.
- வரலாற்றுச் சான்றுகளைப் பார்க்கின்ற போது, ஆதித்த சோழன் இரண்டு மனைவிகளுக்குச் சொந்தக்காரன். ஆனால், 'மகுடநிலா'வில் அவனுடைய பாத்திரப் படைப்பு முரண்பட்டதாகக் காட்டப்படுகிறது.

- அந்த இளம் நங்கைகளில் ஒருத்தி– தாமரை! இவளோ விஜயாலயச் சோழனுடைய படையின் முதல் வீரனுடைய மகன் வயிற்றுப் பெண்! நாட்டுப்பற்றால் ஊட்டி வளர்க்கப்பட்டவள். ஆதித்தனை இளவரசன் என்பதற்காக அல்லாமல், இனமான வீரன் என்பதற்காகக் காதலித்தவள்! ஆசைக்காக அல்லாமல் அன்பிற்காக விரும்பியவள்! இவனுக்காகப் போராட வந்தவள்! இவன் உயிர் காக்கத் துணிந்தவள்! துன்பம் வரும்போதெல்லாம் துயர் துடைக்க முனைந்தவள்!
  ஆதித்தன் அவளுக்கு வாழ்வு தராதுவிட்டதுதான் வருந்தத்தக்கது.
- சாருமதி யார்? பகட்டிலே வளர்ந்த பல்லவ இளவரசி! பல்லக்கில் பவனி வந்த பாவை! அவள் அரச பரம்பரையில் வந்தவள் ஆதிலினால், தன் நாட்டிற்குக் களங்கம் வருமென நினைத்த போது, ஆதித்தனை தூக்கி எறிய நினைத்தவள். பதவியே பெரிதெனப் பாடுபட்டவள்! எனவே, அவள் பாசத்திற்கு அப்பாற்பட்டவள்! அவளை ஆதித்தன் ஏற்காமல் இருந்தது பற்றி எவரும் இங்கே கவலைப்படமாட்டார்கள்.
- ஆனால் ஒப்புயவர்வற்ற சித்திரப் பெண்ணாம் தாமரையைத் தவிக்கவிடப் போகிறார்கள் என்று கதையின் போக்கை அறிந்து கொண்ட நான், கெஞ்சினேன்! ஒரு வழக்கறிஞனைப் போல் வாதாடிப் பார்த்தேன். பெண்ணினம் உங்களைத் தூற்றப் போகிறது– என்று பயமுறுத்திப் பார்த்தேன். என்னுடைய வேண்டுதல்கள் எல்லாம் விருப்பத்தோடு மறுக்கப்பட்டன.
- கவிஞர் ஒரு சொட்டுக் கண்ணீராவதுவிட்டிருப்பாரா? தாமரை– அந்தச் சுந்தர தேவதை சுகம் பெறாமலேயே, சாம்பல் நிறத்தோடு சாய்ந்து போனதுதான் நெஞ்சு பொறுக்கவில்லை! தியாகங்கள்– திக்கற்றவர்களுக்கு மட்டுந்தான் சொந்தமா?
- ஒட்டு மொத்தமாகப் பார்க்கிற போது ஆதித்தன் ஒரு சபலக்காரனாகவே ஆசிரியரால் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளான். தாமரையை ஆதித்தன், கிள்ளி உருவத்தில்

கிறங்க வைத்ததாகட்டும். பல்லவ அரசியின் பள்ளியறையை நோட்டம்விட்டதாகட்டும்— இவன் மனத்தளவில் ஒரு சறுக்கு மரம்.

- தந்தை சொல் தட்டாத தனயன் என்று இவன் காட்டப்படவில்லையாதலால் 'காதலை மற' என்ற தந்தையின் சொல் மந்திரமில்லை என இவன் மறுத்திருக்கலாமே! அரசன் என்ற நிலையில் உள்ள ஆதித்தன், ஓர் அபலையைக் கைபிடிப்பதாகக் காட்டியிருந்தால், இந்த வரலாற்று நூலின் சமுதாயப் பார்வையே சிறப்பாக இருந்திருக்கும். ஆனால் சிம்மாசனம் ஆதித்தனைச் சிறைப்படுத்திவிட்டது!
- போரில் அபராஜிதன் வெட்டப்படுகிறான். மரணம் அவளது அண்ணனைத் தழுவிவிட்டது. அவளோ ஆளாத் துயரில் அதிர்ந்து கிடக்கிறாள். அந்த நேரத்தில் ஆதித்தன் பல்லவ இளவரசியிடம், 'என் காதலை ஏற்றுக்கொள்' என்று கழல்வது என்ன மனிதாபிமானம்? அரசைப் பலப்படுத்தும் எண்ணமா? பரப்பளவைப் பெருக்கும் நோக்கமா? ஏற்க வந்த ஏழையை இடறிவிட்டு, காதல் எனும் போர்வையில் எதிரியை இறைஞ்சுவதுதான் அரச தர்மமா?
  அரசன் இரத்தம் அரசிக்காக மட்டுந்தான் துடிக்குமா? அபலைக்காகத் துடிக்காதா?
  இப்படிப்பட்ட பாத்திரப்படைப்பினால் வாசகர்களின் வசவுக்கு ஆளாவது ஆசிரியரா, அல்லது ஆதித்தனா? எப்படியிருப்பினும்— ஆசிரியர் செய்தாலும் ஆதித்தன் செய்தாலும் சரி குற்றம் குற்றமே!
- என்றாலும்— தமிழக வரலாற்றில் என்றென்றும் நிலைத்து நின்ற சோழப் பேரரசைப் போல், கவிஞரின் 'மகுடநிலா' எஞ்ஞான்றும் இந்நிலத்தில் நின்று, தஞ்சையின் தரத்தையும் தமிழரின் மறத்தையும் முரசொலிக்கும்.

சென்னை
24—9—1990

**வா.வை. மூர்த்தி**

# தாமரையை வாழ்த்துகிறார் சுந்தரேசன்

இன்று காலை மகுடநிலா படித்தேன். தாமரையும் விஜயாலயரும் உரையாடும் பகுதி என்னை அழ வைத்துவிட்டது.

- சிவகாமி சபதம் கதையில் மகேந்திர பல்லவர் சிவகாமியிடம் "ராஜ்யத்தின் நலன் கருதி மாமல்லனை மறந்துவிடு" என்று கெஞ்சுவார். அதற்கு சிவகாமி "உங்கள் கை வாளினால் என்னை வெட்டிவிடுங்கள். ஆனால் உங்கள் மகனை மறக்கும்படி சொல்லாதீர்கள்" என்று கதறுவாள்.
  "நான் தோற்றேன்" என்று பல்லவச் சக்கரவர்த்தி சொல்வார். அமரர் கல்கி அவர்களின் படைப்பு.
  அதையும் மிஞ்சும் ஒரு படைப்பை இன்று உணர்ந்தேன்.
- இன்று வெளிவந்த விகடன் 'மகுடநிலா' பகுதி ஒப்பு உயர்வு இல்லாதது. வாழ்த்துகிறேன்.

தஞ்சை,
9–3–1990

எம். சுந்தரேசன்.
3,வடக்குத் தெரு,
செல்லம் நகர்,
தஞ்சாவூர்–7

